தரு, இராகம்-தோடி, ஆதிதாளம்.

பல்லவி.

நந்தகோபருடனே சுந்தரமுள்ளஆய ர்
பிருந்தாவனத்தில் வந்தா ரோ

அநுபல்லவி.

செந்தாமரைக்கண்ணனென்மு குந்தர்மாயையினால் வ
ருந்தாமற்பெரியவ னந்தனிலேயிருந் து (நந்)

சரணங்கள்.

க. சட்டமுள்ளதேவர்கள்முச் சட்டையாய்ச் சகடைக ள்
கட்டிவீட்டினிலுள்ள திட்டமுள்ள சாமான்க ள்
மட்டுமிதமில்லாதை யிட்டு விடாமற்கொண் டு
அட்டதிசையும்பரவவெகு கட்டுமுட்டாகவிர வ
அட்டியில்லாமலே விருத்தரும் பாலரும்
ஆயராச்சியரும் ஆமனு கூலரும்
இட்டமாகநந்தன் கட்டளைப்படி யே
கொட்ட மிட்டுக் கூடி அனேகவேடிக்
கைகளை நாடிச் சீராடி (நந்)

உ. நல்லயௌவனமுடன் வல்லமையுள்ளஆய ர்
சொல்லுஞ்சிலபேர்கையில் வில்லும்நாணேற்றிக்கொண்
டொல்லையிற்கொம்புகள் உல்லாசமாயூதக்கொ ண்
டெல்லையின்றிப்பண்டைகள் பசும் புல்லுண்ணும்பசுக்கிடைக ள்
செல்லமுன்னேசாரி சாரியாய் நடக்கச்
சிறந்தபேரியோசை வேலையை யடக்க
முல்லைக்காணியுள்ளோரா எல்லோருக்குருவை ச்
சல்லாபமாம் முந்த நடத்தியந்த
அருச்சி உந்த நிறைந்த (நந்)

ந. சுந்தரகோபியர்க ளுந்தேரிலேறிக்கொண்டு
விலையாய்த்தனங்களி லுந்தான்குங்குமங்கள் தி
மிர்ந்துகொண்டுகழுத்திற் சந்திரஆரமனை ய
அந்தமுள்ளபட்டாடையுடுத்திக்கொண் டுந்தர்த்துயர்வா டை
சந்தோஷங்களாகத் தம்புரு மீட்டிச்
சரசமாகக்கிருஷ்ண லீலைபா ராட்டித்
தொந்தமாகப்பாட மந்தமாருதங் கு
ளிர்ந்து வந்து மேவ மயிலுலாவக்
குயில்கள் கூவக் குலாவ (நந்)

ச. கோதைமார்களானவ சோதைரோகிணியும ப்
போதினிலொருதேரின் மீதேறிராமகிருஷ்ண ர்
ஆதரவுடன்வர மாதராம்இடைச்சிக ள்
நாதக்கட்டுகள்கூடவே கிருஷ்ணலீலைசாதித்தர்த்தமாய்ப்பாடவே

காதுக்கின்பமாகக் கொண்டொயி லாகக்
கனமிருந்தநல்லபவனி கொண் டேக
ஆதிமூலமொன்ற வேதவேதா அரி
பாதபக்தி மீறித் துதிகள்கூறிச்
சகண்ட யேறி மெய்தேறி (௩௩)

## இராமகிருஷ்ணர்கள் பிருந்தாவனத்தில் விளையாடல்.

### விருத்தம்.

சருவகாலங்களிலுஞ் சவுக்கியத்தைத்
தரும்பிருந்தாவனஞ்சேர்ந்து மகிழ்ந்துமங்கே
மருவும்அர்த்த சந்திரன்போ லிடையர்சேரி
வளமாகக் கட்டியதில் வாசஞ்செய்து
வருவர்பிருந் தாவனமும் மலையதாங்கோ
வர்த்தனமும் எமுனைமணற் குன்றுங்கண்டு
திருவுள்ளங் கொண்டதையே இராமர்கண்ணர்
தேடுவார் மிகவிளையாட் டாடுவாரே.

### திபதை, இராகம்-மத்தியமாவதி, ஏகதாளம்.

### கண்ணிகள்.

க. ஏர்வையாய்ப்பிருந்தா வனமுங்கோவர்த்தன ம்
எமுனாநதிமணற் குன்றுசகுனங்கண டு
கோர்வையாய் ராமகிருஷ்ணா விளையாடி னா
சோலம் எம்மை யாளும் அரியிந்திர
ஜாலங் கலைக் கேளும்

உ. அற்புதமாகிய பாலலீலைகண் டே
ஆச்சியராயாக ளாச்சரியங்கொள் ளச்
சொற்பிரியாமல் மதுரங்களாயாரு ந்
சுழலும் படி வெல்லுவார் ராமகிருஷ்ணர்
மழலை மொழி சொல்லுவார்

௩. திட்டமாய்க்கன்றுக் குட்டிகள்மேய்த்திடை ச்
சேரிசமீபக்காட் டோரத்திலேசென் று
சட்டமாய்க்கோப குமாரருடன்கூட ச்
சாமிகன்று யேய்த்தார் அசுரனா
நேமிநின்றே யேய்த்தார்

ச. தானேபலவிளை யாட்டுக்குதவி னா
சாமானெல்லாங்கொண்டு ராமகிருஷ்ணனா யா
ஆனினங்கன்றுகள் மேய்த்ததுங்கோலகொண் ட
அச்சனாயி ருலே அரிதிருச்
சக்கரக்கையி னுலே

ரு. வேணுகானங்களைச் செய்துகொண்டுங்கன் றை
மேய்க்கின்றதால்மேனி வேர்க்கின்றதோர்புற ம்
பாணிகளாற்கவான் கற்கொறிந்நங் கே

பந்துமடிப் பாரோ ஒருபுறங்
குந்துப்பிடிப் பாரோ *

௬. ஆனைமேற்பந்தை யெறிந்துங்கிட்டிப்புள்ளு ம்
ஆடிச்சிலுப்பாண்டி நாடிக்கண்ணும்பூச் ஓ
யானதெல்லாம்ஆடிக் காலிற்கச்சைகட் டி
ஆட்டங்க ளாடுவரோ யெல்லோருமாய்க்
கூட்டங்கள் கூடுவரோ *

௭. காளைமாடுகளுடன்கூடத் தாங்களு ங்
காளைமாடுபோற்கர்ச் சித்துக்குதிப்பர் ரோ
தோளதுதட்டிக்கொண் டங்கேகைச்சண்டையை த்
தோழரோ டாடுவரோ வந்துவந்து
சூழக்கொண் டாடுவரோ *

௮. காட்டிலுண்டாகிய பட்சிமிருக ங்
களைப்போலச்சத்தம் விளைத்துமவைகளை க்
கூட்டிவரவழைத் ததுகளுட னே
கூடிவிளை யாடுவார் பண்ணுடனே
நாடியிசை பாடுவார் *

## வத்ஸாசுரனைக் கண்ணன் வதைத்தல்.

விருத்தம்.

இளசென்றகன்று தனைமேய்க்குநாளி லெமுனைநதிக்கரையிலே
எழிலாம்பசுக்க ளொடுகன்றுமேய்த்தும் இசைராமர்கண்ணர்மற்றும்
உளதோழமார்க ளிவர்தங்களாவி யுணவேணுமென்றோரசுரன்
ஒருகன்றுரூப மொடுவந்துமங்கும் உயர்கன்றொடொன்றதாக
வளைகின்றவஞ்ச மறிகண்ணருந்த மையனுராமனுக்கே
வகைகாண்பிவித்து மறியாதுபோல வனமாலிதானிருந்து
அளவங்கவஞ்ச ரிதைதீமையென்றும் அரிகண்டுகாலும்வாலும்
அதிரச்சுழற்றி விளமேலெறிந்து மவனாவியுண்ணுவாரோ.

தரு, இராகம்-பியாகடை, ஆதிதாளம்.

பல்லவி.

கண்ணன் விளாவெறிந்தாரோ கன்றைச்சுழற்றிக்
கண்ணன் விளாவெறிந்தாரோ *

அநுபல்லவி.

கண்ணன்வெண்ணையுண் டுரலிற்கட்டுண்டாரோ
கன்றுருவாய்வந்த அசுரனைக்கொன்றாரோ (கண்)

சரணங்கள்.

௧. மாயமாகவந்த கன்றினுடபின் காலும்
வாலும்பிடித்துச்சுற்றி விளவின்மரத்தின் மேலும்
மாயவனெறிந்திடப் பெரியமரமா னும்
மளமளமளவென்று சாய்ந்ததுமலை போலும் (கண்)

ட. சல்லிவேர்முதற்கொண்டும் அற்றந்தமரம் பூமி
தனில்விழுககன்றினுயி ரதையமனுக்கு நேமி
செல்லவனுப்பக்கன்றும் விழுந்ததுகண்டா ரோமித்
திரராங்குமாரர்களுஞ் சந்தோஷமாகச் சாமி (கண்)

கூ. ஆகாசத்திலிருந்து தேவர்கள்புஷ்ப மாரி
யாகவருஷித்தார்க ளற்புதமான பேரி
வாகாய்முழக்கினர்க ளிப்படியிடைச் சேரி
வாசஞ்செய்துவுளரும் வாஸுதேவமு ராரி (கண்)

இராமகிருஷ்ணர் கன்றுமேய்த்தல்.

விருத்தம்.

கன்றெடுத்து விளாமரத்தி லெறியவீழ்ந்து
கன்றிறந்தும் அசுரன்பே ரிலாமற்போச்ச
தென்றெடுத்தும் அமரர்சொன்னார் சகலலோக
ரட்சகராம் இராமகிருஷ்ண ரிருவருங்கோ
லொன்றெடுத்துங் கன்றுகளை ரட்சிக்கின்றார்
ஒருநாளி ரவியுதயத் தமுதுகொண்டு
சென்றெடுத்த தொருஓடைக் கரைமேற்கன்று
திருப்பினார் விளையாடும் விருப்பினரோ.

கண்ணன் பகாசுரனை வதைத்தல்.

விருத்தம்.

நலங்காட்டிப் பலராம னுடனேஆயர்
நன்குமர ரொடுங்கன்று மேய்த்தும்ஓடைச்
சலங்காட்டித் தாங்களுந்தா கங்கள் தீர்த்த
தன்கரைமே லேறும்போ தங்கேவந்து
பலீங்காட்டிக் கஞ்சனே வற்குள்ளான
பகாசுரனுங் கொக்கினைவாய் பிளந்துமவன்
தலங்காட்டி விட்டகண்ணன் விளையாட்டெல்லாந்
தவர்சொல்வார் சுகமாமு னிவர்சொல்வாரோ.

தரு-இராகம், சாவேரி, சாபுதாளம்.

பல்லவி.

அசுரன்கொக்குவேடத்தையெடுத்தானே கண்ணன்
அவன்வாய்பிளக்கஉயிர் விடுத்தானே *

அநுபல்லவி.

பசுவின்கன்றுகள்மேய்த்துஞ் சலங்காட்டோடையில்நின்றும்
பலராமன்சகோதரன் தன்னுயிர்கொல்ல வென்றும் (அசு)

சரணங்கள்.

க. வச்சிரம்பிளந்திட்ட மலைக்கொடி முடியே
வருக்குமுடலுள்கொக் காய்வந்தப் படியே

அச்சுதனைமூக்காலே பிடிக்கின்ற பிடியே
அறிந்துராமன்முதலோர் துடிக்கின்ற துடியே (அச்)

உ. ஓடைக்கரையினின்றும் பகாசுரன் தாவி
யும்பிடிக்கக்குமா ரர்களுந்தங்க ளாவி
கூடுவிட்டுப்போனது போற்றம்ப மேவிக்
கொளவுந்துன்பத்தைச்செய் தானந்தஅரும் பாவி (அச)

ங. பண்ணவரும்அரிக்கீ தென்னபிர யாசம்
பகாசுரன்கடைவாயை நெருப்பாக்கவே செங்
கண்ணனைப்பூமியிலே கக்கிமூக்கா லேசங்
காரஞ்செய்குவேனென்று கொண்டானு வேசம் (அச)

ச. கிளம்பிக்கொத்தவந்தோனைப் பெரியோர்க்குங் கெதியாங்
கிருஷ்ணனெண்ணிறுரிது வுங்கஞ்சன விதியாங்
தளம்பஅடித்தாலாயர் குமாரர்சம் மதியாஞ்
சந்தோஷந்தேவர்க்குண்டா மென்றெது பதியாம் (அச)

ரு. அதிககம்பீரமான விளையாட்டி னாலே
அசுரன்கொக்கானவனைச் சீவீர்க்குப் போலே
மதுசூதனன்கிழித்தெறிந் தாரவர் மேலே
வானவர்பூச்சொரிந்து மகிழ்ந்தாரொருக் காலே (அச)

## கண்ணன் லீலைகண்ட ஆயர்கள் வியப்படைதல்.

விருத்தம்.

பகாரியரி மேல்நசர வனத்துண்டாம்
பாரிஜாத மலர்களை வாரித்தூவி
முகாரிமுத லானபண்கள் பாடிப்பேரி
முழக்கினுர் வானுலகத் தார்களெல்லாஞ்
சுகாரியங்கள் கண்டாயர் குமாரருஞ்சந்
துட்டிஒட்டி ரெட்டியாய் வளர்ந்திருந்தார்
மகாரிஷிகளுந்துதிசெய் யும்பிருந்தா
வனங்கண்டாய் அரியருள தனங்கண்டாயே.

தரு, இராகம்-துசாவந்தி, ஆதிதாளம்.

பல்லவி.

இன்னமின்னங்கேளு மன்னு கிருஷ்ணலீலையை
என்னசொல்வேன்ஞானசம் பன்னு *

அநுபல்லவி.

தன்னைநம்பினவர் தேற அன்னவரானந்த மீறப்
பொன்னுலகங்குடி யேறப் பின்னைகேள்வன்செயல்கூற (இன்)

சரணங்கள்.

க. பகாசுரன் உயிரை யுண்டும் விளங்குங்கிருஷ்ணன்
முகாரவிந்தந் தன்னைக் கண்டும் *
சகோதரராமன்முதலாய்ச் சகாவானகோபகுமார ர்
மகாசந்தோஷமாயுடலா விகூடினதுபோலேசேர்ந்தா ர் (இன்)

உ. கட்டியன்பு காட்டினாரோ குமாரர்கன்றுக்
குட்டிகளை யோட்டினாரோ *
கிட்டியிடைச்சேரிசேர்ந்து மட்டில்லாஆச்சரியத் தை
விட்டுச்சொன்னார்கோகுலத்தார் சட்டமாயறிந்தாரெல்லா ம் (இன்)

௩. செத்துப்பிழைத்தது போலே வந்தகிருஷ்ணனை
முத்தமிடடுக்கொண்டன் பாலே *
எத்தனையதிசயமென் றுத்துணைசெய்வோங்குழந்தை க்
கித்தனைதத்துகளுந்து ரத்திவிட்டாரரியென்று ர் (இன்)

௪. எதெதுவந்துபய முறுத்தி வளைந்துகொண்டு
ததனைச்சந்திகளில் நிறுத்தி *
விதிமுகிர்ந்துபோனபோது அதிகொரமானதிவ ர்
எதிர்வராமலிருக்கவில்லை யதினுயிர்தப்பவுமில் லை (இன்)

௫. உருப்பட்டிவர்மேலே பாய்ந்ததே வந்துவிழுந்து
நெருப்புவிட்டிற்போலே மாய்ந்ததே *
பரப்பிரமத்தையறிந்தார்க்கர் உணர்ப்படியனுபவித்தோ ம்
வரப்பிரசாதந்தருமஅரியே யிருப்பார்நந்துணையாயென்றார் (இன்)

இதுவுமது.

வெண்பா.

நந்தன்முத லாயுளோரெல்லாம் நாடியிவை சொல்லிக்கோ
விந்தனொடு ராமர்விளை யாட்டைச் - சந்ததமுந்
தானந்தம் பாடிச் சமுசார வேதையின்றி
ஆனந்த மாகவிருந் தார்.

கக-ம் அத்தியாயம் முற்றிற்று.

கண்ணன் திருவடிகளே சரணம்.

---

# கஉ-ம் அத்தியாயம்.

## அவதாரிகை.

---

விருத்தம்.

அசுரனைப்பெரியபாம்பன் அகன்விழுங்கியதாமரைப்
பசுபாலமைந்தனையுங்கன்றின டணிலையுங்காத்துமங்கே
விசையிலப்பணியைவீட்டி விந்தைசெய்அரியின்லீலை
யிசையும்பன்னிரணடி வியம்புவதியம்புவாமே.

## கண்ணன் கன்றுகள் மேய்த்தல்.

---

குறுவிருத்தம்.

களங்கனியின் வண்ணன
களங்கனுயா கன்றுகள்
தளங்கொடு புரந்தமை
வளங்கதைகள கேளோ.

தரு. இராகம்-தோடி, ஆதிதாளம்.

பல்லவி.

சன்றுமேய்த்துத் திரிந்தாரோ கிருஷ்ணன்
கருணை ஆயர்மேற புரிந்தாரோ

அநுபல்லவி.

குன்றுங்கோவர்த்தனத்தும் பிருந்தாவனத்துங்கு மு
குமெனுந்துளபத்தோனே யமுனைதீரத்திற்று னே (கன்)

சரணங்கள்.

௧. விளையாடுகிறதிபித் தியம்ரவியுத ய
வேளை கொம்பூதிச்சன்னை காட்டி
வளையவுங்கன்றுகள் மேய்க்கவருந்தோ ழ
மாரையெல்லாம்வரக் கூட்டி
இளைதுகளாகிய வளர்புல்லுமேய்ந்திடு ம்
எழிலுள்ளகன்றையெல்லாம் ஓட்டி
வெளியினிலேவிட்டும் ஒருவர்க்காயிரத்துக் கு
மேலானபடிகன்றுக கோட்டி

தளராமல்மேய்த்து வருமவர் கும்புஞ்
சாதத்தூக்குகளி ஞேடுபி ரம்புஞ்
தெளிவதாகிச்சத்தப் பூரிகருங் கொம்புந
திவ்யமானவேணு காளஞ்செய் சம்புக்

தேட்டுகளும்நல்ல பாட்டுகளுங் கூடு
கூட்டுகளும்விளை யாட்டுகளும் ஆடிக் (கன்)

௨. கன்னனுந்தம்மதாம் எண்ணிக்கையில்லா த
கன்றுகளுந்தானே சேரப்
பண்ணிக்கொண்டுங்குழுந் தைவிளையாட்டிறு ற்
பரிந்துமங்கங்சேசஞ் சார
கண்ணிக்கூட்டங்கூட்ட மாகமேய்த்துக்கொண் டு
நல்லோராங்கோபகு மார
ரொண்ணரியபேர்க ளெல்லாமவரவ ர்
இசைந்தமணிசொர்ணைலங் கார

வண்ணமாயிருந்த போதுமக் காட்டு
மலர்மலர்க்கொத்துப் பழவகைதளிர் சூட்டு
கண்ணிசைந்தமயி லிறகுக ளீட்டு
கருகமணிகுன்று மணிகள்பறித் திட்டு

கதிப்புகளுஞ்சொல்லுங் துதிப்புகளும் மணி
விதிப்புகளும்பண்ணிக் பதிப்புகளுஞ் செய்து (கன்)

௩. ஒருவர்க்கொருவர்சாதத் தூக்குமுதலாய்முன்ன ம்
உரைத்தசொன்னைறந்திருடி யொளிப்பாரோ
வருமதையாராவது கண்டாலுடனேகாட்டி ல
மறையவெறிந்துபோட்டு டெளிப்பாரோ
திருடிமறைத்ததனை யொருவர்கண்டுகைகொட்டி ச்
சிரித்துக்கொண்டெடுத்துமெக களிப்பாரோ

திருமாலதனைக்கண்டும் பிருந்தாவனத்தினு
சிங்காரம்பார்த்தானந்தந் துளிப்பாரோ
புருஷோத்தமரந்தக் காட்டினில்வெகு தூரம்
போனால்நான்முன்னே நான்முன்னேயென்றந் நேரந்
துருசாயோடிப்பிடித்து விளையாடுங்கம் பீரஞ்
சொலப்போமோகிருஷ்ணன் லீலாவினோத சாரஞ்
சுறுக்குகளும்பாட்டின் முறுச்சுகளுங்கச்சை
பிறுக்குகளுங்கோல்கொண் டுறுக்குகளுங்காட்டிக் (கன்)

௪. காட்டுமிருகமெல்லாம் பயங்கும்படிக்குவேஷ
கானஞ்செயத்தடுவார் சிலபேர்கள்
வாட்டமில்லாமற்கொம் பூதுவார் சிலபேர்கள்
வண்டுடன்பாடுவார் சிலபேர்கள்
கூட்டமாய்ப்பட்சியுடன் பறப்பார் சிலபேர்கள்
குயிலுடன்கூவுவார் சிலபேர்கள்
நாட்டுமன்னங்களுடன் நடப்பார் சிலபேர்கள்
நலகொக்காய்க்கிளம்பி யுடகாருவார் சிலபேர்கள்
கோட்டியாய்மயிலுடன் கூத்தாடுவார் சிலர்
குரங்குக்குட்டியைப்பிடித் திழுப்பார்சிலர் சிலர்
ஆட்டிவைப்பார்மரத்தின் மேலேசிலர் சிலர்
அந்தக்குரங்கினுடன் தாவுவார்சிலர் சிலர்
அமட்டுவருங்கண்ணைச் சிமிட்டுவருஞ் சந்தே
திமட்டுவருங்கையிற் சிமிட்டெவருங்கொண்டு (கன்)

௫. ஜலங்களிற்றவளைகள் தத்தும்போதுகுமார
தாங்களும்அத்துடனே தத்துவார்கள்
துலங்கப்பர்தயம்போட்டு ஒருவர்கத்துவதைப்போ ற
றுடியாய்மற்றொருவருங் கத்துவார்கள்
இலங்கும்பிரமசுகானு பவத்தாலேஆரிதொண்ட
இருக்கும்பெரியோர்போலே நத்துவார்கள்
தலங்களில்மாயையால் மறைந்திருக்கும்பரதே வ
தாரூபபாலகிருஷ்ணனைச் சுற்றுவார்கள்
பலவும்புண்ணியம்பண்ணி யிருந்தனரோ ஆயர்
பக்தபராதீனர் செங்கனி வாயர்
குலவும்வேணுகோபாலர் கூடிய நேயர்
குறைதீர்த்தருள்செய்குவா ரவரொன்ச சாயர்
கொடுத்திடுவாரருள் தொடுத்திடுவார்வி னை
விடுத்திடுவாராழ் யெடுத்திடுவாராவி ன் (கன்)

கண்ணனிடம் அகாசுரன் வரல்.

விருத்தம்.

யாதொருபரமபுருஷர் பாதந்தூளி
யாவரதனை சஞ்சன்மம் வருந்திபோக

சாதனைசெய் பெரியோர்க்குந் துர்லபங்காண்
தானந்தப் புருஷர்மூர்த் திகரங்கொண்டு
மேதினியி லிடையர்கள்தன் கண்முன்னின்ற
விளையாட்டை யென்னவென்று யான்வர்ணிக்கப்
பாதநடை கொண்டுசென்று மேய்க்கும்போது
பகனென்பான் றம்பிவந்தான் அகனென்பானே.

தரு, இராகம்-மத்தியமாவதி, ஆதிதாளம்.

பல்லவி.

வந்தானே அகாசுரன் வந்தானே.

அநுபல்லவி.

வந்தானேயுக்கிர சேனன்கு மாரன்
வஞ்சநெஞ்சக்கஞ் சனுக்குப காரன்
நந்தனன்குமாரன் நவநீத சோரன்
நடத்தும்லீலைக்குநேரன் றெருடுத்தபொறுமைக் காரன் (வந்)

சரணங்கள்.

க. அமுதமுண்டுநரைதிரை மாற்றிச் சாகாமலே பு
விமீதுநெடுநாளிருந்து போற்றி *
சமுகமாகலீலை காணவொண் ணுமல்
தூய்யமுனிவர்தேடு கிறலைதயுமெண் ணுமல்
சமுகங்கிடைத்துமதைப் பரவைபண் ணுமல்
சகிக்காமலெவ்வளவும் பொறுமைநண் ணுமல் (வந்)

உ. பகாசுரன்றுணைவனதி கோவி கஞ்சனனுப்பு ம்
முகாமையுள்ளவன் கொடிய பாவி *
அகாசுரனவன் கிருஷ்ணனை யாதி
யானகோவலனைக் கண்டுமு பாதி
மகாகொடுமைசெய்ய வேண்டிய சேதி
மனதுட்கொண்டுவந்த தாலென்ன மீதி (வந்)

ங. தமயனைக்கொன்றனவன்முன் செல்வேன் பலபத்திரரா ம
சகிதகிருஷ்ணனையிப்போதே கொல்வேன் *
அமையுமாகிலிது கோகுல முந்தான்
ஆச்சுதென்பதைப் பார்க்கவுமதி கந்தான்
எமன்பிராணன்கொண்டு போயுட லந்தான்
இநந்துகாரியம தென்னவென் றுந்தான் (வந்)

அகாசுரன் மலைப்பாம்புருவெடுத்தல்.

---

விருத்தம்.

பகாசுரனைக் கொன்றகண்ண னுடனேயின்னம்
பலராம னுடன்கோப குமாரர்தன்னை
அகாசுர னுங் கொல்லவென்றே யாலோசித்தான்
அரிகிருஷ்ண யன்றியனு வசையாதய்யா

சகாயமது சுரர்மேலும் வேதர்மேலுந்
தானமொடு தவஞ்செய் சத்துக்கள்மேலுந்
மிகாரம்பஞ் செய்திரடசிக் கின்றோர்மேலும்
வீடபாளுன் அசுரன்மலைப் பாம்பாளுனே.

திபதை, இராகம்-புன்னாகவராளி, சாபுதாளம்.

பல்லவி.

பாம்புருவை யெடுத்தானே கிருஷ்ணனோடகன்
வீழ்புசெய்யத் தொடுத்தானே *

அநுபல்லவி.

தீம்பைவிலக்கித்தொண்ட ராம்பெரியோரைக்காரி
தாம்பரதரரான பாம்பணையான்முன்மலைப் (பாம்)

சரணங்கள்.

க. ஒருயோசனைமி னீளம் பெருமலைபோற்
பருமனுளவி யாளம் *
பெரியகுகைபோல்வாயைப் பரவித்திறந்துகொண்டு
பருவதங்கீழுதடுங் சருமேகம்போலுதடாய்ப் (பாம்)

உ. கொடிமுடிபல தாயும் இருள்நிறைந்து
குடியிருக்கும்உள் வாயும் *
நெடிதாம்விஸதாரநாவுந் துடிசண்டமாருதம்போல்
விடுமூச்சுக்காற்றுங்காட்டிற் படுதீப்போற்கண்களுள்ள (பாம்)

ங. திருந்துங்கோபால ருற்றுத்தான் பாம்பதனையும்
பிருந்தாவனமும் பத்துத்தான் *
பொருந்துமிதென்றெண்ணியும் இருந்தும்பாம்பினுடலம்
பரந்துவழியடைத்து நிரம்பப்பார்வைக்கற்புதப் (பாம்)

மலைப்பாம்பைக்கண்டு ஆயர்குமாரர்களுரைத்தல்.

---

விருத்தம்.

வளந்தரும்பிருந்தா வனத்தி னடுவேசெல்லும்
வழியடைத்துக் கொண்டுமலைப் பாம்புவாயைப்
பிளந்துகொண்டு கிடப்பதைக்கண் டங்கேகண்ணன்
பின்செல்ல முன்வந்த தோழரெல்லாம்
உளந்துணிவாய்க் கொண்டுவிளை யாட்டினாலே
யும்பார்த்தாச் சரியங்கொண் டவரியெல்லாம்
அளந்தவர்க்கு சகாவாவா ரிதென்னவென்றே
யறைகுவா ருள்ளன்பு நிறைகுவாரோ.

தரு, இராகம்-கல்யாணி, சாபுதாளம்.

பல்லவி.

இங்கேநமக்குமுன்னோர் பெரிய ஜீவன்கிடக்கு
தென்னென்றுபாருங்கள் தோழரே.

அநுபல்லவி.

வங்கணக்காரரோ யதுநம்மைவிழுங்கவும்
வாயைப்பிளந்துகொண்டிருக்கின்றபாம்பல்லவோ (இங்)

சரணங்கள்.

க. சாயங்காலமேகம்போற் சிவந்திருக்கும்மேலுதடுஞ்
சாயையாலாகாசத்தைச் சிவக்கச்செய்யுங்கீழுதடுஞ்
சரிதாமே உடலுந்தானும்
பெரிதாமே கண்டதில்லையீ
தரிதாமே மிகப்
பெரிதாமே * (இங்)

உ. குன்றமும்இதின்வயிறும் நீபெரிதுநான்பெரிதாம்
என்றுசொல்லிக்கொள்கிறப்போற் கடைவாயசைகுதுபார்
ஏதையா இதுவுமென்ன
சூதையா காணவுஞ்சகிக்க
காதையா இதனை
ஓதையா * (இங்)

ங. இப்பெரியவழியைபார் வால்நிறைத்திரையிதுசிங்
கப்பல்லுப்பருவதக்கொடுமுடிபோலிருக்குது
காணலாம் ஆர்க்குமேபயங்
தோணலாங் கம்பீரமெங்கே
பூணலாம் எமனும்
நாணலாம் * (இங்)

ச. இப்பொழுதுவருங்காற்றுங் காட்டுத்தீபோற்சுட்டுக்கொண்டு
இப்படிக்கோரமான இதனுடமூச்சுக்காற்றுய்
ஏர்க்கலாம் எல்லோருநின்று
பார்க்கலாம் யோசனைபண்ணி
தீர்க்கலாம் உயிரைக்
சார்க்கலாம் * (இங்)

ரு. இதுதின்றுசீரணமாயிருக்கும்பிராணிகள்நாற்றம்
இதனுள்மாங்கிசநாற்றமாகுமுள்வாயிருள்மூடி
யிருக்குதே மெத்தவும்அரு
வருக்குதே பயமும்நெஞ்சை
யுருக்குதே வயிற்றிற்
சுருக்குதே * (இங்)

சா. இம்மட்டிலகப்பட்டுக்கொண்டிதனுள்ளேபுகுகின்ற
நம்மையுஞ்சீரணஞ்செய்ய நினைத்தால்முன்கொக்கைப்போலே
நசிக்குமே எமனுக்கிப்போ
பசிக்குமே இதனுயிரைப்
புசிக்குமே நன்றாய்
ருசிக்குமே * (இங்)

எ. நல்லதுடந்தபடி நடக்கட்டுநகணத்துக்கு ள
வல்லவன்சொக்கினுடைய வாய்கிழித்தகிருஷ்ணனிங் கே
வருவ ரோ களங்கனியின்
உருவ ரோ யிதனுடனே
பொருவரோ ஐயந்
தருவ ரோ * (இங்)

## கண்ணன் கோபகுமாரர்களை இரட்சிக்க நினைத்தல்.

விருத்தம்.

மலைப்பாம்ப டியுமிவ்வா ருயரிங்கு
மாரர்சொல்லி நகைத்துக்கை தட்டிக்கொண்டு
மலைப்பாம்பின் வாய்க்குள்ளே நுழைந்தாரிந்த
வார்த்தையைப்பின் னுகவருங் கண்ணன்கேட்டு
மலைப்பாம்பு னிதநதிசேர் தாளாலெட்டி
வந்துமறி யாப்பிள்ளை மாணக்காக்க
மலைப்பாம்பம் மென்றாதுஞ் சங்கத்தானும்
மனம்வைத்தான் கிருபாந யனம்வைத்தானே.

தரு, இராகம்-மத்தியமாவதி, ஆதிதாளம்.

பல்லவி.

ரட்சிக்கமனதுவைத்தார் கோபாலகிருஷ்ணன்
ரட்சிக்கமனதுவைத்தார் *

அநுபல்லவி.

கட்சிகட்டுங்கஞ்சனைச் சிட்சிக்கவேபிறந்தா ர்
பட்சிக்கவந்தபாம்பின் குட்சிக்குட்போனபே ரை (ரட்)

சரணங்கள்.

க. சருவப்பிராணிகளின் இருதயங்களில்வாச ந்
தானேசெய்திடக் கண்டார் தம்மைச்
சார்ந்தசோழமானா சேர்ந்துவிழுங்கினுன்ரா ட்
சதனென்றறிந்து கொண்டார் *
வருவதற்குட்கன்றும் பாலரு மாகவே
மலைப்பாம்பசுரனுட வயிற்றுக்குட் போகவே
சரிமானங்களோ வில்லையேயதின் முன்னே
சாமிதிருவுளத்தி லறிந்தாரென்பதுஞ் சொன்னேன் (ரட்)

உ. அந்தஅகனைவன் தன்றலையனைச்சொன் ற
அரிவருவதை நோக்கிக் கொண்டு
ஆருமவன்வாய்க்குள்ளாய்ச் சேருங்குமாரர்க ளை
யணைத்தும்வயிற்றிற் றேக்கிச் *
சந்துபார்ப்பவனைக் கண்டுமெம்பெரு மானே
சகலபேணயுரட்சிக் கின்றவர் தன்னைத் தானே
சிந்தைதனிற்கதியா யெண்ணம்பெருக்கின் றேனைச்
சேருந்தன்மையைவிட்டு நழுவியிருக்கின் றேனை (ரட்)

ங. தெற்குத்தியானுக்குப் பசிக்கிலையாகலின் ற
தீனகோபாலர் மீதே நல்ல
சிந்தையிரங்கிவிதி விந்தைக்குஆச்சரிய ஞ்
செங்கண்ணர்கொண்டப் போதே *
மிக்கவெறிந்துபோட்ட இவன்ஜீவன மென்ன
வியர்த்தமானநடத் தையிதுவெண்ப துன்ன
இக்குவலயத்திற்சத் துக்களைக்கொன் று தின்ன
இவன்வயிறுவளர்க்கிறு னென்றெண்ணியு மன்ன (ரட்)

ச. மலைநாகமாயிவனைக் கொலவேணுமிவனு ள
வயிற்றுக்குள்ளேபோ யிருக்கும் இந்த
வாலவயதுள்ளகோ பாலர்பிழைத்துமிங் கே
வாழ்வதாந்கீர்த்தி பெருக்கும் *
நலதென்றெல்லாந்தெரிவார் விசையதாக வந்தார்
நாகநாகத்தின்வாய்க் குள்ளேஅரி புகுந்தார்
அலையும்நெஞ்சாய்வானி லமரர்கள்பயங் கொண்டு
ஆகாகாரமாசக் கதறுவதுங் கண்டு (ரட்)

கண்ணன் பாம்பின்வாயில் நுழைதல்.

விருத்தம்.

மாதவன்பணிப் பணத்துயில் பவன்பெரு
வாய்பிளந்திடு மலைப்பணி யுளுஞ்செல
ஏதுசஞ்சனுமெனச் சொலுங் கவுணப
ரோயகன்றனக கிசைபொருந் துறமுறை
போதுமென்றிடக் களிப்புறுந் திடமதைப
பூரணன்கருத் தனிற்சொளுந் திறமிகுசந்
தோதுகன்ெறுநிம் இடைப்பிளை சளைப்பொடி
யேசெயும்படி நினைப்பது மொழிந்ததே.

கண்ணன் பாம்பினைப் பிளத்தல்.

வெண்பா.

இம்பகனுஞ் செய்தாயா செல்வமெலாந் தன்னுக்கு
மாம்படிசெய் திட்டான துகண்டப் - பாம்புடலத்
தன்னுடைய தொணடையி னடுவினிலே கண்ணா
தனதுடதே கத்தைவளர்த் தார்.

தரு, இராகம்-நாதநாமக்கிரியை, ஆதிதாளம்.

பல்லவி.

வளர்ந்தாரோ கண்ணனுர் மலைப்பாம்புநெஞ்சைப்
பிளந்தாரோ கண்ணனுர் *

அநுபல்லவி.

வளர்ந்தனரோயுல களந்தவராயர்க ள்
உளர்ந்துமொறு மல் வளர்ந்தேறவேதா ன (வள)

சரணங்கள்.

| | | | | |
|---|---|---|---|---|
| க. | இருண்டகானகத்திலே | வரும்பிராணிகளெல்லா | ம் | |
| | மருண்டிடச்சுருக்காக | மறிந்திடும்பாம் | பு | |
| | முரண்டடங்கிச்சுருண்டு | சுருண்டுவிழிபுதுங்கி | ப் | |
| | புரண்டும்எமனுக்குஉல் | விருந்தாகச்செய் | து | (வளா) |
| உ. | இப்படியேயவ | திப்படுவோன்சி | ர | |
| | சைப்பிளாந்தேயும்வ | ளிப்படலாறை | ர் | |
| | அப்படியுந்த | டப்பிலெல்லோரும் | வெ | |
| | ளிப்படவேயரி | யிப்புறம்வரவு | ம் | (வள) |
| ங. | தோழரெல்லாமுயிர் | வாழவும்வெளிவ | ன | |
| | நீழலிலேவர | ஆழியன்கண்டா | ன் | |
| | ஏழைபங்கரரு | ளாழியின்மூழ்கியு | ஞ் | |
| | சூழுங்கோபாலரோ | வாழிவாழியென் | ன | (வள) |
| ச. | பத்துத்திசைகளையும் | மெத்தப்பிரகாசஞ்செ | ய் | |
| | துத்தமரானதேவர் | சுத்திப்பார்த்திருக் | க | |
| | முத்திமுதலாங்கிருஷ்ண | னைத்தேடிவர்சரி | யி | |
| | டத்துலயித்தசோதி | யைத்தானேகொண்டு | ம் | (வள) |
| ரு. | முந்திவெளிவந்துமு | குந்தர்வரவுபார்த் | தி | |
| | ருந்துபாம்பின்சோதிவை | குந்தர்பாலயிக் | க | |
| | அந்தஅற்புதங்கண்டு | சந்தோஷமாயமர | ர் | |
| | நந்தனவனத்திற்சு | கந்தங்கள்சொரி | ய | (வள) |
| சு. | நாட்டியம்பாட்டுரம்பை | கூட்டுமேளங்கள்மே | க | |
| | நாட்டிந்துதிமுனிவர் | கோட்டிகள்செய்தா | ர் | |
| | மீட்டுஞ்செயசத்தங்கள் | காட்டுபூதகணங்க | ள் | |
| | சூட்டுமங்களஞ்சொல்லிக் | கேட்டுமகிழ்ந் | து | (வள) |
| எ. | அதிவிததுதிமேள | மதுரகீதவிஜ | ய | |
| | முதலானதையறிந்து | விதிவானில்வந் | து | |
| | சதியானபூமிதேவி | பதியானகிருஷ்ணனைய | ற் | |
| | புதமாகவேகண்டிந்தப் | புதுமைமையபபார்க் | க | (வள) |

அகாஸுரன் ஸாயுச்சிய மடைதல்.

---

விருத்தம்.

வளர்ந்திந்தப் படிகண்ணன் மலைநாகத்தின்
மண்டையைப்பி ளந்துவெளி வந்தார்தோழர்
தளங்களொடு கன்றுகளும் அர்சமார்க்கஞ்
சாலையாய் வெளிவந்தெல் லாருங்கூடிக்
களங்கனிவண் ணனைமிகவும் வாழ்த்தினார்கள்
கண்டாயி தாச்சரிய மொன்றுகேளாய்
உளந்தனிலே யிரக்கமில்லா அகன்றீங்கெல்லாம்
உடைந்திட்டான் ஸாயுச்சிய மடைந்திட்டானே.

தரு, இராகம்-சுருட்டி, ஜம்பைதாளம்.

பல்லவி.

இந்தஅகாசுரனுக்கும் வாதசேஸாயுச்சியம்
இதுவேயாச்சரியமய்யா.

அநுபல்லவி.

தந்தையாயுலகமெல்லாந் தந்தபரப்பிரம்மரூபர்
அந்தமுகுந்தர்பிளந்த தாச்சரியமோ (இந்)

சரணங்கள்.

க. தேவதேவமாயவன் மேவுபிர்ம்மதூயவன்
பூவில்நரக்குழந்தையானான் யாவனவன்பால் (இந்)

உ. செல்லக்கிருஷ்ணன்தொடவுமே அல்லலெல்லாம்விடவுமே
நல்லவர்க்குந் துர்லபமாய்ச் சொல்வதல்லவோ (இந்)

ந. ஒருகணமாம்நேரத்தில் அரியுடசரீரத்தில்
வருபாகவதசம்பந்தப் பெருமைகிடைத்தது (இந்)

ச. பாமரன்பாம்பாய்வந்தான் தீமைகளெல்லாந்தீர்ந்தான்
தாமோதரன்தேகத்தில்ம ஞமயமதாய் (இந்)

ரு. அரிநித்தியானந்தசுகர் வருமாயையில்லார்நிகர்
பரமபுருஷர்க்கிதென்ன பெரிதுகாணும் (இந்)

ஆயர்களுக்குக் குமாரர்கள் அகாஸுரவதமுரைத்தல்.

---

விருத்தம்.

பகையாய்வந் தவனுஞ்சா யுச்சியம்பெற்றான்
பாம்பின்றோல் சாய்ந்துபிருந் தாவனத்தில்
மிகையான இடையர்கட்கும் வெகுநாள்மட்டும்
வேணபடி விளையாடித் திரிவதற்சோர்
குகையாக விருந்ததுகோ விந்தன்றானே
குமாரத்திற் பாம்பைவென்ற தனையேபாலர்
வகையோராண் டதின்மேற்பவு கண்டகத்தில்
வரைசெய்தார் ஆயருக்கு முரைசெய்தாரே.

சுகப்பிர்ம ரிஷியைப்பரிட்சித்தரசன் வினவல்.

---

விருத்தம்.

முராரிவிசித் திரசரித்திரந் தேவராத
முனிசுகரீவ் வாறுசொல்ல விண்டுராதர்
சராகமாய்க் கேட்டுமின்னஞ் சொல்லவென்பார்
சற்குருவே புண்ணியபா கவதசாதை
நிராமயரோ யென்று துதி செய்துமிந்தி
ரியநிக்கி ரகசாலி பரிட்சித்தங்கே
கராமடியச் சக்கரந்தொட் டவனைநெஞ்சிற்
கருதுவார் மனதையொன்றாய்ப் பொருதுவாரே.

தரு-இராகம், சாவேரி, சாபுதாளம்.

பல்லவி.

வாதராயணியே வேதராயா.

அநுபல்லவி.

ஆதிமூலகிருஷ்ணன் காதையின்னஞ்சொல்லய்யா (வாத)

சரணங்கள்.

க. அரிகுமாரப்பருவந் தனிலேபிர — சன்ன
மாகமலேப்பாலைபைக்கொன் றதையெங்கு — மின்ன
வருஷமொன்றுசென்று பவுகண்டகத் — தின்ன
வகையென்றிடையர்க்கிந்த மைந்தர்சொன்ன — தென்ன (வாத)

உ. அதுகேட்கிறதற் கடியேனுக்கா — னந்தம்
அதிகங்கொடுக்குதரி பாதார
மதுசூதனராம்விஷ்ணு மாயையின் — பந்தம
வகையதுவென்பதுமென் மனதின்சித் — தாந்தம் (வாத)

௩. க்ஷத்திரியபந்துவாம் நாங்களும் — ஞானந்
தனைழக்குந்தேவரீர்முகத் தாமரைக் — கானம்
மெத்தப்பெருகுங்கிருஷ்ணன் கதாமுத — பானம்
வேண்டியதுகொண்டதா லேதன்னியர்க — ளானோம் (வாத)

சுகப்பிர்மரிஷி பரிட்சித்தாசனுக் குரைத்தல்.

---

விருத்தம்.

பாகவதோத் தமோத்தமராந் தேவராதர்
பகவானும் அனந்தனையே நினைப்பதாலே
ஏகமா யிந்திரியங்க ளரியிடத்தி
லேலயித்துத் தான்வேறி லாமலொன்ற
தாகியரி யேதானே தானுகிப்பிர்ம்
மானந்தந் தனில்மூழ்கி மெள்ளமெள்ள
யோகமனந் திரும்பிவந் திராஜனைப்பார்த்
தோதுவார் பவயிருளை மோதுவாரே.

கஉ-ம் அத்தியாயம் முற்றிற்று.

கண்ணன் திருவடிகளே சரணம்.

---

## கரு - ம் அத்தியாயம்.

அவதாரிகை.

———o———

விருத்தம்.

திரயத்தோடு தசத்தில்விதியப
கரணஞ்செய்பாலர் கன்றுகட்கீடாகிச்
சருவருபந்தரித் துக்கொண்டாடினார்
ஒருவருஷம தோதுவதுண்மையே.

## சுகப்பிர்மரிஷி பரிட்சித்தரசனைப் புகழுதல்.

தரு, இராகம்-ஆனந்தபைரவி, சாபுதாளம்.

பல்லவி.

பாரதா பரிட்சித்துமன்னனே கேளும்
பாரதா *

அநுபல்லவி.

பாரதாமனதொன்றாய்ப் பண்ணிக்கொண்டிருங்கோ
பாலகிருஷ்ணன்செய்த லீலையையறிவீரோ (பார)

சரணங்கள்.

க. தரணியில்மகாபாக்கிய சாலிபாகவத
தாமுதத்தையேயுண்டீர்
புருஷோத்தமர்கதை நீர்கேட்டுவந்தபோதும்
புதிதுபுதிதாய்ப் பண்ணுறீர்
அரிகதைவாய்சொல்லக் காதுகேட்கமனதும்
அதைநினைப்பதென்றெண்ணுறீர்
இரசிகராயிருக்கும் பெரியவர்தமக்கிதும்
இயற்கைகக்குணந்தானென்றுநீர் ஒன்றுயெண்ணுறீர் (பார)

உ. பெண்டுசெல்வார்த்தையை விடபுருஷருடனே
பேசப்பேசப்பெருக்கும்
மண்டலந்தனிலிந்த வழக்கஞ்சரிதானந்த
வகைபோல்மனதையுருக்கும்
புண்டரீகாட்சர்கதை அடிக்கடிகேட்கும்போதும்
புதிதுபுதிதாயிருக்குங்
கொண்டல்வண்ணர்மகிமை யறிந்துகேட்பதினாலே
கொடியவினையைநெருக்குங் கருக்கும் (பார)

ங. மதுரமயமதான பாகவதகதைதா
மனதினிலென்றுஞ் சுமக்கும்
நிதியமிதனையண்டர் முனிவருங்காணார்கள்
நேர்ந்துவினையையமுக்கும்
அதிகரகசியங்களை யுஞ்சொல்வார்குருமார்கள்
அன்புள்ளசிஷ்யர் தமக்கும
எதுநந்தனர்விளையாட்டிதுரகசியமாக
விருந்தாலுஞ்சொல்வேனுமக்கும் ரமிக்கும் (பார)

## கண்ணன் தோழரை யமுதுண்ண வழைத்தல்.

கலித்துறை.

கணத்துக்குட்டானும் அகன்வாய்ச்செல்பாலரைக் கன்றுகளோ
டிணைக்கங்களாக விரட்சித்தவ்வோரடையி டத்திலுயர்
மணற்றிட்டிலேவந்து சேரவழைப்பித்தும் வங்கணராங்
குணக்கட்டிதங்களைப் பார்த்தரியானவர் கூறுவரோ.

தரு, இராகம்-மோகனம், ஆதிதாளம்.

பல்லவி.

வாரீர்தோழமாரே யெல்லோருமுண்ண
வாரீர்தோழமாரே

அநுபல்லவி.

பாரீரினிமேற்காட்டிற் கன்றின்பின் னோடாமற்
பகலுச்சியில்வந்ததே பசியினால் வாடாமல் (வாரீர்)

சரணங்கள்.

க. ஆச்சரியமாய்ரம்மியமாய்விளையாடமெது
வாமணற்றிட்டுமணற் கண்டு
வாச்சுதிந்தவோடையின் றாமரைப்பூமுதலா ம
லர்வாசனையைவாங்கிக் கொண்டுங்
கூச்சாய்மூச்சுவிடாமல் ஜும்மென்றுபாடிவருங்
குழந்தைப்பேடுகளான வண்டும்
பாச்சலுடனேயாடும் மரங்கள்நிறைந்தவனம்
பாருமிந்தவோடையின் ஜலம்போலெங்மன முண்டு (வாரீர்)

உ. ஓடைச்சலத்தருகே மணல்மேலிருந்துகொண்டும்
ஊறுகாயுடன்சட்ட முறையே
கூடிக்குலாவிக்கொண்டும் அடிக்கடிஜலத்துடன்
கொள்ளும்ருசியைக்கண்டா லதையே
தேடிக்கொண்டுவருவார் தேவர்கள்கூடவினித்
திரும்பச்சொல்லுவதென்ன ய
வாடிப்பசித்திராமலமுதுங்கொண்டிங்கமுகின்
மரநிழலிலிருந்து சொல்லுவோம்நல்ல கதையே (வாரீர்)

ங. இந்தக்கன்றுகட்குத்தண் ணீர்காட்டிச்சமீபத்தில்
இளம்புல்லுகளின்மேய விடுவீர்
சொந்தச்சாதத்துக்கெல்லாம் அவரவர்கொண்டுவந்து
சுறுக்காகவிங்கேயவிழ்த் திடுவீர்
எந்தெந்தவூறுகாயும் அன்னமுமவரவர்
எடுத்துக்கொண்டிருந்துசாப் பிடுவீர்
சுந்தரமுள்ளபிருந்தா வனமுங்கோவர்த்தனமுஞ்
சூழுமெமுனதீர வளமுங்கண்டுண் டிடுவீர் (வாரீர்)

கண்ணன் தோழருடன் அமுதுண்ணல்.

---

விருத்தம்.

எம்பெருமா னிந்தவகை யமுதுசெய்வோம்
எனத்திருவு ளம்பற்ற விடையர்பாலர்
கும்பல்கும்ப லாயோடைத் தண்ணீர்காட்டிக்
குழக்கன்றெ லாம்புல்லை அருந்தவிட்டுச்
சம்பிரமமாய் அவரவர்கள் சாதத்துக்கைத்
தானெடுத்துக் கொண்டுவந்து மிருந்தாரங்கே

உம்பர்பிரா னுஞ்சரியா யிருந்துகொண்டே
உண்ணுவார் விநோதங்கள் பண்ணுவாரே. (௨)

தரு, இராகம்-கலியாணி, ஏகதாளம்.

பல்லவி.

பிருந்தாவனத்தோடை யிற்கூடியேஆதி மூலர் ஆயர்
பிள்ளைகளோடிருந் துண்டாரோவேணுகோ பாலர் *

அநுபல்லவி.

பெருந்தாரணிமீது தேவகிகர்ப்ப த்
திருந்தார்பிறந்தும் எசோதைக்குச்சேயா ய்
வருந்தாரகநவ நீதசோரன் தே
வருந்தானறியாத மாயாவிநோத ர் (பிரு)

சரணங்கள்.

க. தாமரைப்புஷ்பதளங்கள் போலாயர்கு மார கிருஷ்ண
ஸாமிகர்ணிகையாம் நடுநாயகம் நேரப் *
பூமேலரிக்குஈரா லு திக்கும்யண்டலா கார மாகப்
போதமலர்ந்தகண்க ளுள்ளபிள்ளைகள் சேரப் *
பூமிதிலைமீ திளந்தளிர்மீதுலு ந
தாமேஅருப்புபழ வகையின்மீது ம்
நேமகத்தூக்குக் கமுகின்பாளைபட் டை
கோமளக்கல்லின் மேலும்அன்னம்வைத் து (பிரு)

௨. ஊறுகாய்களமுத லாமவரவர்ப தார்த்தங்
உன்னதென்னதுநன் றுயிருக்கென்றுமெ தார்த்தங் *
தேறும்ஒருவர்க்கொரு வர்கொடுத்துஞ்சங் காத்தம் ஆகச்
சிலர்நகைத்துநகைக்கப் பண்ணிப்பர மார்த்தம் *
மீறும்பரிகாஸம் பண்ணிக்கொண்டேயுமி வ்
வாறுமுராரி பகாரிஅகாரியாய் க்
கூறும்பசுவகோசு வரரிவரல்லாம ல்
வேறில்லையென்றுசொ லும்பிர்ம்மந்தா னே (பிரு)

௩. பீதாம்பரந்தரிக் கின்றமடியினில் வேணு நல்ல
பிரம்புங்கொம்புங்கக்கத் தில்வைத்துக்கொண்டார்காணும் *
வேசாந்தரூபரிடக் கைதத்தியோதனம் பூணும் அரி
விரலிடுக்குகளில் ஊறுகாய்களை பூணும் *
நாதாந்தச்சோதியுந் தோழர்நடுநின் று
மேதானேசெல்லஞ்சொல் லுக்கஞ்சானென்பதா ம்
ஈதாம்பரிகாசத் தால்நகைப்புமிஞ் ச
வேதாவைப்பெற்றார் விளையாட்டைநா டி (பிரு)

௪. யாகத்திலேஅவிர்ப் பாகம்வாங்கும்யாக ரூபர் கண்ணர்
எவ்வளவேனும்மாச் சரியமில்லாச்சல் லாபர் *
ஏகப்பொருளாயிருப் பார்எதுகுல தீபர் தாமே
இடையர்பிள்ளைகளோ டிருந்துண்டார்பிர தாபர்

யோகப்பயிற்சி செய்வாரும் அறியா த
நாகத்தணையானுட னிருந்துண்ண அ
ரேகப்பிரகாரம் இடையர் தவஞ்செய் வை
போகத்தையென்னென்று சொல்லுவேன் அய்யாநான் (பிரு)

கண்ணன் கன்றுகளைக்காணமல் வருந்தியதோழருக்கு உரைத்தல்.

கலித்துறை.

அளைவெண்ணெய்க்கலந் தாச்சிகள்சட்டி யளித்தஅன்னங்
களையாயர்மைந்தருங் கண்ணனுமாயுண்ணுங் காலத்திலே
இளைதானபுல்லை விரும்பி அக்காட்டினி லேகுங்கன்று
களைநாடிவாடிய தோழருக்கேஅரி கட்டுரையே. (உ)

திபதை, இராகம்-எதுகுலகாம்போதி, ஏகதாளம்.

கண்ணிகள்.

கன்றுகளைநாமெங்கே காண லாந் தோழமாரே
கன்றுகளைநாமெங்கே காண லாந் (கன்று)

ஒன்றுகூடிக்கல்லி பேசுவீர் தாய்தகப்பன்முன்
நின்றென்னவகைசொல்லி வீசுவீர் (கன்று)

உ. இடக்குச்சொல்லிக் கொண்டு தின்னவோ வந்ததிங்கனே
நடுக்காட்டிலேபோய்விட்டதோ யென்னவோ (கன்று)

ந. காக்கைபிடிக்கிபோலே ஓடுங்கிறீர் நீங்களெல்லாம்
ஏக்கம்பிடித்தாப்போலே நடுங்கிறீர் (கன்று)

சு. மணத்திட்டிப்படியிங்கே வாய்த்ததே தந்தைதாயர்
பிணத்திட்டப்படியங்கே வாய்த்ததே (கன்று)

௬. உளம்பித்தேறியிங்கே குதிப்பீரோ விட்டிலடிக்க
இளம்பிக்கிளம்பியங்கே குதிப்பீரோ (கன்று)

எ. சிமிண்டாம்பழங்களிங்கே தின்பீரோ வீட்டிற்போனல்
நிமிண்டாம்பழங்களங்கே தின்பீரோ (கன்று)

அ. ஓடைச்சலத்தில்அன்னங் களைப்பரோ வளவிற்சென்றாற்
கூடிக்கொண்டுகன்னங் களைப்பரோ (கன்று)

௯. சாப்பிடுங்கள்செலவு தருகிறேன் ஒருவர்க்கொருவர்
கூப்பிடாதீர்கொண்டு வருகிறேன் (கன்று)

கன்றுகளையுந் தோழரையும் பிரமன் மறைத்தல்.

விருத்தம்.

அச்சுதச்சொரூபர்களா யிருக்குமந்த
ஆயர்குமா ரர்க்கெல்லாம் இதனைச்சொல்லி
அச்சமது தீர்ந்திருங்கள் கன்றையெல்லாம்
யான்கொண்டு வருகிறே னென்றஞ்சாமி
பச்சைமால் கையுஞ்சா தமுமாய்ச் சென்றார்
பருவமதை யறிந்தங்கே மால்செய்லீலை

உச்சிதத்தைப் பார்க்கவென்றே பிரமர்நெஞ்சம்
உறைத்திட்டார் கன்றொடுசேய் மறைத்திட்டாரே (௩)

தரு-இராகம்-முகாரி-ஜம்பைதாளம்.

பல்லவி.

பிர்ம்மதேவர்மறைத்தார் பிள்ளையொடுகன்றுகளைத்தானே
பிர்ம்மதேவர்மறைத்தார் *

அநுபல்லவி.

மர்ம்மம் அறிவோமென்று மறைப்பொருளதாகின
மாயனுடலீலைகாணத் தானே (பிர்)

சரணங்கள்.

க. பருவதக்குகைகளிலுஞ் சருகுசெடியுமுள்ள
பெரியகுழிகளைமுதலாய்க் கூட
காரமும்அன்னமுந்துலங்கும் இருடிகேசன்வேகமாய்
வருமிளங்கன்றுகளைத் தேட (பிர்)

உ. அரிகன்றுகளினைத்தேடி வருவதன்முன்னே அந்தப்
பிரிவுசருணமறைப்பார்த்திட்டாரே
திருமன்விளையாடலைத் தெரிந்துகொள்ளவேண்டியே
கருமுகில்வண்ணனுக்கு நேரே (பிர்)

௩. ராக்ஷசனும்அகனுசகருமுன் மோக்ஷமதுகொடுத்ததையே
சாக்ஷிகண்டார்வானில்வந்தப்போதே
தீக்ஷித்துக்கொண்டேதிட்டி லேஆக்ஷியாம்மைந்தருடனே
சூக்ஷஞ்செய்துகன்றையும் அப்போதே (பிர்)

ச. வாய்ப்பாய்வாழ்க்கைப்படும்பெண்ணுக்குச் சீப்பையெடுத்தொளித்தாற்போ
லாய்ப்பரமபுருஷர்மாயை முன்னே
தாழ்ப்பரியங்கொண்டுகன்றோ டாய்ப்பாடிப்பிள்ளைகளையும்
ஏய்ப்பதுவாயெண்ணங்கொண்டு மன்னே (பிர்)

கண்ணன் கன்றுகளையுந் தோழரையுங் காணாமல் யோசித்தல்.

விருத்தம்.

காட்டிலே சென்றகன்று களையும்ஓடைக்
கரையிருந்த பிள்ளைகளை யும்பதுக்கிப்
போட்டும்அந்தர்த் தானத்தை யடைந்தார்வேதன்
புருஷோத்த மனும்வனத்திற் கன்றைக்காணார்
மீட்டுமனை றிட்டிலுந்தோ ழரையுங்காணார்
விரைந்தடவி நாலுதிக்கும் ஓடித்தேடி
ஓட்டமதில் முரளிவைப்பா ரென்னவென்று
யோசிப்பார் தொண்டரிடம் நேசிப்பாரே. (ச)

கண்ணன் கன்றுகளுந் தோழருமாதல்.

விருத்தம்.

யோசிக்க வேணுமோ சகலமான
உலகினையும் அறிந்தஜகன் னாதகிருஷ்ண

னேசிக்கெனவறிந்தார் பிரமன்செய்த
நிமிட்டுவிஷமமிதென்றே குளுமையாக
வாசிக்கும் முரலியுளார் தாய்களுக்கும்
வருங்கன்றை யீன்றபசுக் களுக்கும்லீலை
யாசிக்கும் அயனுர்க்குங் களிப்புமீற
அடுக்கின்ற ரததினுரு வெடுக்கின்றுரோ. (ரு)

தரு, இராகம்-தோடி, ஆதிதாளம்.

பல்லவி.

தானே தானுனர்
ஙங்குளைறயெம்பெருமா னேகன்றுங் குமாரருந் (தானே)

அநுபல்லவி.

வானபன்மாயையினுல் மறைத்ததெண் ணி
வாலகிருஷ்ணஸாமி லீலாவினோதர் அ ரி (தானே)

சரணங்கள்.

க. எவ்வளவுகன் றீட்டமோ பிள்ளை
யெவ்வளவுதான் கூட்டமோ பின்னும்
அவரவருடல் நாட்டமோ கைகால்
அவயவங்குறுகல் நீட்டமோ *
கரத்திற்றரிக்கும்பி ரம்பும் ஓசையெங்கு ம்
திரப்பப்பிடிக்குங் கொம்பும் உதட்டில்வைத்து ச்
சுரத்தைப்பலுக்கிப் பண்பும் பெறவாசிக்கு ந்
தரித்தவேணுவின் கம்பும் அன்னத்துறியு ம்
உடுத்துஆடைகளின் கனமும் அவரவர்
தொடுத்துப்பூண்டிடுபூ ஷணமும் அங்கே
நடக்கும்நடத்தையுங் குணமும் எங்கும்
எடுத்துச்சொல்லும்பெரு வணமும் *
உடலம்அகலம் நீளம் படர்கின்றஅடை யாளந்
திடவிளையாட்டு மேளம் அடவுஞ்சரியாய்த் தாளந் (தானே)

உ. சேயர்படிப்பும்பேச்சுங் காட்டியே அரி
ஆயர்குமாரராகிச் சூட்டியே வந்து
சாயங்காலத்திலே கூட்டியே திரு
மாயன்தானுங்கன்றை யோட்டியே *
தானுனதன்னை மேய்த்தவே தற்சொரூப மே
யானபாங்கருஞ் சுற்றவே விளையாடிக்கொ ண்
டேநவநீதம் பற்றவே திருடியுண் டா
ஞானசர்வாத்ம கர்த்தாவே கிருஷ்ணனவ ர்
இடைச்சேரிக்குச்சென்ற ந்த மட்டிலே அவ
ரிடத்துங்கன்றுகளாகக் கொட்டிலே வாச
நடத்தியாச்சியர்மடித் தொட்டிலே கண்டு
படுத்துவிளையாடிய மெட்டிலே *

அன்னையர்வாஞ்சை மீறச் சொன்னகும்பப்பா லூறப்
பின்னும்உண்டுண்டு தேற நன்னயமொழி கூறத் (தானே)

௯. மாலைநேரநி தானமும் அனு
கூலமாய்த்தின மானமும் ஆயர்
பாலரோடுச மானமும் வெகு
மேலதாய்வேணு கானமும் *
கன்றுகளையும் வீட்டுக் கோட்டி வரு
கின்றமுழக்கங் கேட்டு அந்தர்த்தாய ர்
சென்றெதிர்கொண்டு மீட்டுக் காட்டினிலு ம்
நின்றபிள்ளைகள் கூட்டுக் கூடிக்கொண் டு
வந்திடுவார்களையுங் கிட்டியே அவர்
மைந்தரைத்தானெடுத்துத் தட்டியே முத்தந்
தந்துமார்போடணைத்துக கட்டியே யுஞ்சு
ரந்தமுலைப்பால்வாயிற் கொட்டியே *
அங்கும்பிரமமாய் நண்ணத் தங்கள்பிள்ளையாயெண்ணப்
புங்கமாயையைப் பண்ணப் பங்கயநளக் கண்ணர் (தானே)

கண்ணன் இடையர்கள் வீடுதோறும் மைந்தராகி
உபசரிக்கப்பெறல்.

---

கலித்துறை.

படைப்பவனைப் படைத்தான் பாஞ்சஜன்னிய பாணியினுஞ்
திடச்சித்தராம் வசுதேவர் தேவகி சேயனுமாய்
நடப்பனத்தைச்சொல் லெசோதைக்கு மற்புத நந்தனராய்
இடைச்சியர் வீட்டுக்கெல்லா மைந்தராகி யிருந்தனரே.

தரு-இராகம்-ஆனந்தபைரவி-சாபுதாளம்.

பல்லவி.

ஆயர்மனைதோறுஞ் சேயராயிருந்தரி
மாயவன் விளையாடினார் *

அநுபல்லவி.

மாயஞ்செய்துபிர்ம்மதேவர் மறைத்ததறிவார் யாவர்
தாவரஜங்கம மாவர் தாந்தானும்வாஸு தேவர் (ஆயர்)

சரணங்கள்.

க. பரப்பிர்ம்மமயமான பாலர்க்குநீ ராட்டி
விருப்பாய்க்கைகால்பிடித்து விழிக்குமை திட்டி
மருப்பரவியசெஞ் சந்தனங்கியைப் பூட்டி
நிரப்பமகரகுண்ட லாரங்கள் சூட்டி
திருத்திதிட்டிசு முட்ட வரத்திரகைஷயுங் கட்டப்
பொருத்திதிலத மிட்டக் காத்தைச்சொல்லவுஞ்சட்டம் (ஆயர்)

௨. அன்னம்பக்ஷணமுத லானதையுங் கொடுத்தும்
என்னையாதிருமாலே யரியென்றே யெடுத்தும்

கன்னல்மொழியார்கோவிகைகளெல்லோருமடுத்தும்
என்னவிதம்பிள்ளைகட் கின்றபேர் நடத்தும்
உன்னதப்படியே விண்டு தன்னைப்பிள்ளையாகக் கண்டுந்
தன்னியங்கொடுக்கவுண்டு சொன்னயமறிந்து கொண்டும் (ஆயர்)

ரு. இப்படியேதினந்தோறு மிளங்கன்று மேய்த்து
அப்படியேசாயங்கால மதைவேளை பார்த்துச்
செப்பமாகவிடைச்சேரி சேரும்வகையாய்ச் சேர்த்து
மெய்ப்பரமபுருஷர்க்கு விளையாட வாய்த்து
அற்புதந்தேவகி மைந்தர் மெய்ப்பொருளானமுகுந்தர்
ஒப்புமையில்லாவை குந்தர் கற்பனைசெய்துகோ விந்தர் (ஆயர்)

கண்ணன் பசுவின் கன்றாதல்.

வெண்பா.

கோவலர்கள் வீட்டுக் குமாரராயும் எங்கள்
மாவலவ னணவன மாலி - காவலனே
எல்லாமாய்நின்ற விருடீகேசன் றானே
நல்லாவின் கன்றுகளா னார்.

தரு-இராகம், சங்கராபரணம், சாபுதாளம்.

பல்லவி.

பசுவின்கன்றானார் கோபாலகிருஷ்ணன்
பசுவின்கன்றானார் *

அநுபல்லவி.

நிஜமாய்ப்பசுக்கள்காண நெஞ்சிலன்புபூண (பசு)

சரணங்கள்.

க. ஆனிரைசாயங்காலங் கொட்டிலில்வந்து நின்றும்
அரிபரப்பிர்ம்மமய மாகவிருக்குங் கன்றும்
ஆனைத்தன் றன்கன்று களைக்கண்டங்கனே சென்றும்
அயற்கன்றுகளையுங்கா ரித்துத்தள்ளிவிட வென்றும் (பசு)

உ. துடிப்பாய்வந்துதன் றன் கன்றுகளை நாவாலே
துளாவிக்கொடுத்துமடி யிற்பெருகும் பாலை
அடிக்கடிபானம்பண்ணக் கொடுத்துமென் மேலே
அதிகவாஞ்சையுண்டாக வரிதிரு மாலே (பசு)

ந. எங்குந்தானவனுகி யிருப்பதுஞ் சரியே
யேந்திழைதேவகிக்கு மைந்தரான ரரியே
மங்கைக்கரசெசோதை மகனுஞ்ச வுரியே
மனைதோறுங்கோபியர்க்குப் பிள்ளையாயு பரியே (பசு)

கண்ணன் கன்றுகளாகியும் பாலர்களாகியும் விளையாடல்.

கலித்துறை.

கோவர்த்தனத்தும் பிருந்தாவனத்துமக் கோகுலத்தும்
மேவித்திருவடி சங்கொடுசக்கர மேபதியத்

தாவித்திரிந்திளங் கன்றுகள்மேய்க்கின்ற தாரகராய்க்
கூவிக்குலாவி விளையாடினாரெங்கள் கோவிந்தனே.

தரு; இராகம்-கல்யாணி, ஆதிதாளம்.

பல்லவி.

மெத்தவிளையாடினார் வேணுகோபாலர்
விந்தைவிந்தையாய்க்கோகுல பிருந்தாவனந்தன்னை நாடி (மெத்த)

அநுபல்லவி.

உத்தமியாகுமெசோதை புத்திரரொடீர்வேவந்து
தந்தைமொழியாச்சியர்க ளத்தனைபேரும்
முத்தமிட்டுபசரிக்கப் பெத்தவிளையாகவந்தும்
சுத்தியபசுக்கள்வாஞ்சை வைத்திடுங்கன்றுகளாயும் (மெத்த)

சரணங்கள்.

க. அருமைபெருமையா யொருவருஷமாகும்
வரையுந்தங்கள்சொந் தப்பிள்ளையிடத்திற்
பரவுங்காதல்போலப் பரப்பிரம்மமயபுத்
திரர்மேற்கோவியர் பிரீதிவளரவும் (மெத்த)

உ. மாயவனுக்குமவ் வாயர்மாதர்பசும்
வாயதெனவும்வருந் தாயரிடத்தும்
மாலையில்லாமலும் நேயமானதுவளர்ந்
தேயரியாஞ்செங்கனி வாயர்வேடிக்கையாக (மெத்த)

ங. நாடியாயர் பாடியாரெங்கும்
கூடிக்கிருஷ்ணனையேகொண் டாடித்தினமுந்
தேடிவாஞ்சையென்பது நீடியிருக்கவந்தக்
காடுகொட்டிலுடனே வீடுகளெங்குஞ்சுற்றி (மெத்த)

கண்ணன் பலராமனுடன் கன்றுமேய்க்குங் காலையில்
விசித்திரஞ்செயல்.

---

விருத்தம்.

கங்குலிலே கொட்டிலிலும் ஆயர்பாடிக்
கனங்குழையன் னையரிடத்துப் பகலதெல்லாங்
குங்குமென்று வாசிபிருந் தாவனத்துங்
குலவிவிளை யாடியொரு வருஷமென்ற
பங்கிலந்தா றுதினமிருக் கும்நாளொன்றிற்
பலராம னுடன்சென்று கன்றுமேய்த்தார்
அங்குமொரு விசித்திரஞ்செய் தார்மன்னநீ
யத்தைக்கேள் கண்ணனற்பு தத்தைக்கேளே.

திபதை, இராகம்-பூரிகல்யாணி, ஏகதாளம்.

கண்ணிகள்.

கோகுலத்தின்றோரக் காட்டிலே நல்ல
கோவர்த்தனகிரி மேட்டிலே

ஏகத்திற்புல்மேயு மாட்டிலே நின்றும்
இடையர்கள்மேய்க்கின்ற தாட்டிலே *

௨. அந்தமலைத்தாழ் வரையிலே கண்ணர்
ஆயர்குமாரர் நிரையிலே *
விந்தையாய்ப்புல்லுத் தரையிலே கன்று
மேய்க்கின்றபோது துரையிலே *

௩. தங்கள்தங்கள்கன்றைக் கண்டுமே வாஞ்சை
தன்னால்விளிப்பது கொண்டுமே *
அங்குமேயும்புல்லை விண்டுமே மலை
யடிவாரத்தில்வந் தண்டுமே *

௪. மனமதுதானே யுருகத் தந்தன்
மடியிற்பாலது பெருக *
கனவேகத்துடன் வருகக் கன்று
கண்டுமுலைப்பாலைப் பருக *

௫. முலைமறுத்திருந் தாலும் அந்த
முன்னிலைபின்னிலை போலுஞ் *
சொலுவதென்னமென் மேலுந் தானே
சுவைத்ததையனே பாலும் *

௬. இளங்கன்றிருந்த போதும் பசு
வெல்லாமிக்கன்றுகள் மீதும் *
உளங்கனிந்தலை மோதும் பாலை
யூட்டவும்நாவாலே கோதும் *

௭. அந்தப்பசுக்களைக் குறித்தே மேய்க்கும்
ஆயரெல்லாங்கூடி மறித்தே *
வந்ததிலும்மாடு தெறித்தே வர
மற்றவரையடை முறித்தே *

௮. ஆயாசந்தன்னோடு முரட்டுத் தன
மதிகவெக்கமும் மிரட்டும் *
ஆயர்க்கதிகோபஞ் சரட்டு மென
வாகியுங்கையிலே தொரட்டுங் *

௯. கொண்டும்உளசி நுழையாத காட்டுக்
குள்ளேவெகு பிரயாதங் *
கண்டுமலைச்சாரல் மீதப் பசுக்
களுந்தன்கன்று சமேதம் *

௧௦. ஆகசிறப்பதுவுந் தோண வங்கும்
அவரவர்பிள்ளையைக் காண *
ஆகஞ்சிலிர்த்தன்பு பூண மக்க
ளாசையதிகமா யூண *

௧௧. பாலர்கள்மேலன்பு கூர்ந்தார் ஆயர்
பசுக்கள்மேற்கோபந் தீர்ந்தார் *

கோலக்குமாரனை நேர்ந்தார் தூக்கிக்
கொண்டனைத்துச்சிலை மோர்ந்தார் *

௩உ. ஆனந்தஸந்தோஷம் மீறவே அந்த
ஆயர்பசுக்களுந் தேறவே *
நானுந்திரும்பவென் கூறவே ஹரி
நாரயணன்லீலை மீறவே *

கண்ணன்மகிமையைப் பலராமன்பார்த்தல்.

விருத்தம்.

ஆனினாயு மாயர்களும் வாஞ்சைமீறி
யருமைசெய்து வெகுபிரயா ஸத்தினாலே
தானந்த முலைமறுத்த குழந்தைமாரைத்
தான்பிரித்து விட்டானந்த பாஷ்பமீற
வேனடந்து பக்கத்திற் சென்றுநிந்த
விதம்பலரா மனுங்கண்டற் புதமீதென்றும்
மனிந்த வாஞ்சையிவர்க் கென்றேயெண்ண
மேற்கின்றார் கண்ணனையும் பார்க்கின்றாரே.

பலராமன் கண்ணனைப் புகழ்ந்துரைத்தல்,

விருத்தம்

தாசார்க வைகுண்ட வரியங்காயர்
தங்களுக்கும் பசுக்களுக்குஞ் சேயர்மேலிவ்
வாசாபா சமுண்டான தாரகமாயை
யமரரொடு மஸுரஜகந் நாதனொன்றும்
ஈசேசர் மாயைகளோ மோகஞ்செய்வ
திதுவன்றி வேறிலையென் றேமற்றென்றும்
பேசாமற் குமாரர்கன்றுக் கருள்மாமாரி
பெய்கின்ற ரிராமனுமை செய்கின்றாரே.

தரு, இராகம்-பிலகிரி, ஆதிதாளம்.

பல்லவி.

எல்லாம்உமதுரூப மல்லவோகிருஷ்ணகிருஷ்ண.

அநுபல்லவி.

சொல்லாமலிங்கேயொன்றுந் தோணார்போலிருக்கிறீர் (எல்)

சரணங்கள்.

௧. தேவரிஷிகளென்னும் யாவருந்தானேவேறு ண்
டாவதோகோவிந்த மாயாவினோதமுகுந் தா (எல்)

௨. பின்னும்பின்னமாய்லோக மென்னமா யிருந்தாலு ம்
நின்னையல்லாதிருப்ப தின்னவகையென்றேனு ம் (எல்)

௩. கேசவனேவேறான யோசனையேன்வர த
ராஜனேயரியரி யீசுரோதமா லே (எல்)

## பிர்ம்மதேவர் கண்ணன் லீலையையறியாமற் சிந்தித்தல்.

### விருத்தம்.

பலராமன் கண்ணனைப்பார்த் திவையுரைக்கப்
பரமபுருஷரும்பண்டின் விருத்தாந்தத்தைச்
சொலவிதுவிப் படியிருக்க வயனார்க்கங்கோர்
துடிநேரம் புவியிலொரு வருஷமாக
அலகில்விளை யாடல்புரி யரியைக்கண்டும்
ஆயர்குமாரருஞ்சன்று களும்நிறைந்த
நிலையதனை யறிவதற்கு வகையேதென்று
நிறுக்கின்றார் நெஞ்சகுறு குறுக்கின்றாரே.

தரு, இராகம்-சுருட்டி, ஜம்பைதாளம்.

பல்லவி.

கன்றுகளும்பிள்ளைகளு மெங்கிருந்துண்டாச்சு து
கண்ணனுடன்விளையாட வெண்ணிக்கையில்லா த (கன்று)

அநுபல்லவி.

ஒன்றல்லரெண்டல்ல ஒருவகை யல்ல
ஒருவராலுமிதை யுண்டாக்குவ தல்ல (கன்று)

சரணங்கள்.

இம்மட்டென்றில்லாத வகைகள் தாச்சே
நம்முடமாயையா லதுமறைந்து போச்சே (கன்று)

௫. என்னவிதங்களோ விதுவெகு தொல்லையே
யின்னமுமவைகள் வெளிப்பட வில்லையே (கன்று)

கள்ளனைக்குள்ளன்பாய்த் தாற்போ லிருக்குதே
உள்ளபடியிதுவென் னெஞ்சை யுருக்குதே (கன்று)

இதுவுமது.

விருத்தம்.

ஒருவருஷம்வரைக்கு முண்மையாயரியைக்கூடி
வருகுமாரருமான்கன்றும் மருவியேநிறைந்துமிந்தத்
திருவிளையாட்டுச்செய்யுஞ் செயலென்னவெனவேநெஞ்சிற்
கருதியேபிரமர்செய்யுங் காரியமிதனைக்கேளே.

திபதை, இராகம்-பந்துவராளி, ஆதிதாளம்.

கண்ணிகள்.

௧. இப்படிப்பிரமர்சிந்தித் தேதும்பிரியாமலே விண்டுராதா விது
எப்படிப்பேதித்துக்காணு தென்றறியவேண்டியுந்தான் விண்டுராதா

௨. சித்துருவத்தைத்தியானஞ் செய்துமந்தப்பிரமரும் விண்டுராதாபின்னும்
இத்தனைஜீவராசிக ளிங்குண்டானவகையதை விண்டுராதா

௩. இன்னவிதமென்றறிய வேதமக்குஞ்சத்தியில்லை விண்டுராதா துய்ய
அன்னவாகனனும்மோக மாகினதையென்னசொல்வேன் விண்டுராதா

ச.மோகரகிதராஞ்செகன் மோகஙவிஷ்ணுவைத்தானே விண்டுரோதா அயன்
மோகம்பண்ணிவைக்கவந்த முன்னிலையையென்னசொல்வேன்விண்டுரோதா

ரு.தமதுமாயையிலேதாந் தானேமோகமடைந்து விண்டுரோதா அய
ருமயங்கினரோபுரு ஷோத்தமன்மாயையிலே விண்டுரோதா

சு.பயமுறுத்தப்போய்த்தானே பயந்துகொண்டவாராச்சு விண்டுரோதாவென்ன
பயனந்தகாரத்தின்முன் பனியிருட்சோபிக்குமா விண்டுரோதா

எ.மின்மினிச்சோதிபகலில் விளங்குமாசொல்லுமையா விண்டுரோதா நல்ல
நின்மலாத்துமஞானிமுன் நிற்குமாபிரபஞ்சமாயை விண்டுரோதா

அ.ஜகத்தைமாயையால்மோகஞ் செய்யும்விராட்புருஷ விண்டுரோதா அவர்
மகத்துவம்பிரமனை மயக்கிப்போட்டதுகேளும் விண்டுரோதா

## பிர்ம்மதேவர் யாவையும் அரியினுருவாகக் காணல்.

---

விருத்தம்.

பங்கயமேலவ னிவ்வகைசிந்தை படர்ந்ததனையறியா
தெங்குநிறைந்த பிராணிகளானதை யெண்ணுறுமெல்லையிலே
அங்குளகன்றுக ளோடுகுமாரரும் யாவருநீனிறமாய்
அங்கையிலாழியுஞ் சங்கமுமேந்தரி யாகவேகண்டனரே.

தரு, இராகம்-கல்யாணி,ஆதிதாளம்.

பல்லவி.

பரப்பிர்ம்மஸ்வரூபமாகவே பார்த்தாரேகன்றுகளையும்பாலனையும் வேதாஞா
பன்னனே மன்னனே யோகப்பிர ஸன்னனே. (ப

அநுபல்லவி.

வரப்பிரஸாதம்பெற வேணுமென்றுய ர்
வானவரானவர் ஞானமுனிவர்க ள்
விருப்பமாய்த்தேடக் கோகுலத்தில்வந் து
வேடிக்கைநீடிக்கொண் டாடித்திரி வாளைப் (பரப்)

சரணங்கள்.

க. நீலமேகவண்ணர்பீ தாம்பரதா ரி
நாலுகையிற்சங்கஞ் சக்கரங்கதாபத்ம ங்
கோலமிகுந்த கிரீடமக ர
குண்டலமுஞ்சொர்ண ஆர பதக்கமணி
மாலையுடன்முத்து மாலைகளும்வ ன
மாலையலங்கிருத மாலைதிருவுக் கு
மாலைதருமார்பு மேலும்மறுவுள் ள
வாமாபிராமநி ராமயபூமராய் ப் (பரப்)

உ. அங்கதங்கள்தரித்த தோள்களும்ரத் தி
னங்கள்பதித்த சங்கம்போற்கழுத்து ம்
வங்கியத்தகடை யங்களணாநூ ல்
மாலைதண்டை சிலம்பனாஞாண் மோதிரம்

புங்கமுள்ளபுண்ணி யங்கள்பண்ணுந்தொண் ட
ரங்கங்கள்மேற்றுள வங்களர்ச்சிக்கு ம
லங்கிருதமுந்திங்க ளின்கதிர்போல்மந் த
காஸவுல் லாஸர மேசநீ ளேசராய் ப் (பரப்)

செக்கச்சிவந்த கடைக்கண்பார்வைக ள்
தக்கராஜஸ ஸாத்துவிககுணங்க ள்
பிக்கில்லாதவுலக ரக்ஷகராக ப்
பிபீலிகாதி பிர்ம்மவரை சராசரங்கள்

தக்கிடதார்தரி திக்கிடதோமெ ன
வைக்குமாடல்பாட லுக்கிசைமேள மு
ழக்கிஞெடுமாரா திக்கும்மகிமை சே
ரந்தமி குந்தமு குந்தவை குந்தராய் (பரப்)

ச. அணிமாதியான வஷ்டயிசுவரிய ங
குணமுள்ள குபேராதிஸம்பத்துக்க ள்
இணையிருபத்து நாலுதத்துவ மு
மேற்கின்ற காலஸ்வபாவ காரியங்கள்

வணிதகாமாதி குணமூன்றிதெல்லா ம்
அணியணியாகப் பணியவேநா ரா
யணபுராணநிர்க் குணநிராம ய
ஆதியாஞ் சோதிப்பிரக் கியாதிசு காதீத ப் (பரப்)

ரு. ஸத்தியஞானனந்த மயராயுப நி
ஷத்துக்களாலே யறியக்கூடாத ம
கத்துவமுள்ளவ ராகத்தாவரஜ ங
கத்தினிலெங்கும் விளங்கும் மூர்த்தியினை

நித்தநிரஞ்சன சுத்தசைதன்னி ய
நித்தையகண்டாகா ரத்தைச்சச்சிதான ந்
தத்தையகிலாதா ரத்தைநிறைந்தெங்கு ந்
தானவ ஞனவ ஞனந்தத் தேஞ ன (பரப்)

பிர்ம்மதேவர் மோகித்தல்.

---

விருத்தம்.

பாலரொடு கன்னறவிண்டு மயமாய்த்தானே
பார்ப்பானும் பார்த்ததியாச் சரியங்கொண்டு
சாலவிந்திரி யங்கள்பதி ஞென்றுந்தானே
தம்பித்துப் பொம்மையைப்போ லசைவில்லாமல்
மாலினுட சோதியினுல் மயங்கிநின்றார்
மற்றொருத்த ராலும்நிச் சயிக்கக்கூடா
மூலமொன்னு மீசுவரோ சுவரரிவ்வாறு
முடிக்கின்றா ரென்றுமின்னம் படிக்கின்றாரே.

## கண்ணன் பிர்ம்மதேவர்மோகத்தை நீக்கல்.

---

விருத்தம்.

ஸமரஸசு பாவமகி மையுடன்கூடும்
ஸர்வக்ஞர் பிரமசிருஷ் டியினைத்தள்ளித்
தமதுருவாய்க் கன்றென்றுங் குமாரரென்றுந்
தானுகி னதைப்பின்னும் மறைத்துநின்ற
கமலாக்ஷர் தமக்குநா யகர்வேறில்லாக்
சர்த்தரிடத் திதென்னவாச் சரியமென்றும்
அமிதமாய்ப் பிரமனுக்கு மோகந்தானு ண
டாக்கினர் மறைவையும்பின் னீக்கினரோ.

திபதை, இராகம்-ஸவுராஷ்டகம், ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. பிரமன்மோசமடைந் ததுகண்டுவாஸுதேவ ர்
பிரமன்தன்மறைநலையும்வாங்கிப் போட
இரணியகருப்பரா மெண்கண்ணரங்குபிழை த்
தெழுந்ததுபோலவந்தறிவு கூட

உ. நிரம்பப்பிரயாஸத்தாற் பதிஞேரிந்திரியங்களு ம்
நிலையில்வந்ததாத்துமஞானத் துடனே
பரம்பநாலுதிஸையும் பிருந்தாவனத்தையுமு ன்
பார்க்கும்படியானதுநல்ல திடனே

ங. ஜனஸஞ்சாரங்களுடன் மரங்கள்நிறைவனத்தி ற்
சகலபிராணிகளுமொன்று கூடி
மனதில்வயிரமின்றிப் புலியும்பசுவுங்கூ டி
வாழ்வதையுங்கண்டாரேயன்பு நீடி

ச. அவடத்திலாயர்குலக் குழந்தையாய்த்திருவி ளை
யாடும்பரப்பிர்ம்மபரம புருஷர்
கவடநாடகசூத்திர தாரியத்துவயரா ங்
கண்ணரனந்தரென்னுங்கிருபா வருஷர்

ரு. அளவில்லாஞானமயர் கன்றுசளையுந்தோ ழ
ரையுஞ்சாதமுங்கையுமாய்த்தேடிக் கொண்டும்
உளவறியாதவர்போற் பிருந்தாவனத்தைச்சுற் றி
யோடிவருவதைப்பிரமர் கண்டும்

சு. ஆதிமூலமேயென்று தமதுதானத்தைவிட்டு ம்
அவனிதனிலிறங்கிவந்து மீட்டுச்
சாதரூபதண்டம்போ லிருக்கின்றசரீரத்தை ச்
சாஷ்டாங்கமாசப்பூமிதன்னிற் போட்டு

எ. நாலுகிரீடநுதிகளி னலேயரிகிருஷ்ண ன்
நாராயணன்றிருவடியைத் தொட்டு
மாலேயென்றுநமஸ்காரஞ் செய்துமானந்தபா ஷ
பங்களாற்றிருமஞ்சனஞ்செய் திட்டு

அ. எழுந்திருந்தெழுந்திருந் துகிருஷ்ணன்றிருவடி க
ளினில்வெகுநாழிகைவந்தனம் பண்ணித்
தொழுந்தோறுந்தொழுந்தோறும் முன்னேயனேகவிஷ் ணு
ஸ்வரூபமாகக்கண்டதையெண்ணி யெண்ணி

க. அடிக்கடிஸ்தம்பமாக நின்றுபின்னும்நமஸ் கா
ரஞ்செய்துபெள்ளவுமெழுந் திருந்தும்
அடக்கக்கூடாவானந்தக் கண்ணீரைத்துடைத்துக்கொ ண்
டரிமுகுந்தனைப்பார்த்துமிகத் திருந்தும்

ய. தலைதணிங்கியஞ்சலி பண்ணிவணக்கத்துட ன்
ஸாவதானமானசித்தமதை நண்ணுவார்
வலியவுடம்புகம்பமெடுத்துப்பிரமதேவ ர்
வாய்தழுதழுத்துத்தோத்திரம் பண்ணுவார்

யஎ-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன்றிருவடிகளே சரணம்.

---

## யஅ-ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

---

விருத்தம்.

மறையவனும் மறைத்திருக்க விங்கேது கன்றுகளும் மைந்தர்மாரும்
நிறைவாக வந்ததென்ன வென்றுமதி மோகமுற்றும் நீலமேனி
யிறையுருவே யெல்லாமாய்க் கண்டதனு லற்புதமீ தென்றுகொண்ட
துறையகாணு மயனம்மது ரைக்கண்ணனைத் துதிப்பதனைச் சொலுமீரோழே.

பிரம்மதேவர் கண்ணனைத்துதித்தல்.

---

விருத்தம்.

சுதரிசன மொடுபாஞ்ச ஜன்னியஞ்சார்ங்கஞ்
சொலுங்கவுமோ தகியுமநந்த கழுஞ்சூழ்ந்தேயற்
புதமுறுமார் பினிற்கவுஸ்து பமணியாரம்
பூண்டிடையிற் பொன்னுடை யிலங்கவேயுச்
சிதமலர்ம கனும்மகிப்பி ராட்டியாருந்
திருவடிவ ருடப்பயோ ததியின்மீது
சதம்துபத் தாம்பணத்தைப் படைத்தசேஷ
சாயிநீ நந்தாங்க சாயிநீயே.

தரு, இராகம்-கௌளிபந்து, ஆதிதாளம்.

பல்லவி.

பகவன்பரமபுருஷரோ வந்தனம் பக
பாங்கஜபாலகிருஷ்ணனே வந்தனம் ❋

அநுபல்லவி.

நிகமாந்தரூபயோக நீலமேகதே க
நித்தியானந்தவை போகனேவந்தனம் அரி (பகவ)

சரணங்கள்.

க. மகத்துவமுள்ளவ ரோமின்னற் போலே யாடை
விருத்துக்குன்றின்மணி சேர்கொண்டை மேலே *
வருத்துமயிலிறகு தொகுத்துவிளங்குகின் ற
முகத்துடன்கூடினவ ரேவந்தனம் அரி (பகவ)

உ. நலதுளஸிமாலிகை மாதவரே காட்டு
மலர்வகைசூட்டிக்கொண்ட யாதவரே *
மலையாங்கோவர்த்தனங் கோகுலமும்பிருந்தாவன த்
தலமதிலும்விளை யாடுவீர்வந்தனம் அரி (பகவ)

ந. இடதுகையிற்சாதமும் பிரம்புங் கொம்புங் கக்கத்
திடையில்வைத்துமடி யில்வேணுவின் கம்புந் *
திடமாய்வைத்தீர்மெதுவா மடியிணையுள்ளவ ரோ
வடபத்திரசாயி யுமக்குவந்தனம் அரி (பகவ)

இ துவு ம து.

விருத்தம்.

அடுத்தவெனக் கனுக்கிரக ரூபராயும்
அரியேநீர் நினைத்தபடி யெல்லாம்ரூபம்
எடுக்குந்தே வாபூத மயமில்லாநின்
னிந்தத்தே காத்மசுக வனுபூதிக்குப்
படிக்குமன தைத்தவிர வொருவருக்கும்
பரிபக்குவ மாகாது வோவனந்தா
தொடுத்துஞா னத்தில்வருந் துவதைவிட்டுத்
தொடர்குவா ருன்றுதிப்பிற் படர்குவாரோ.

திபதை, இராகம்-ஆஹிரி, சாபுதாளம்.

கண்ணிகள்.

க. வேதத்திலேயிருக்கு மெல்லோருஞ்சொல்லலாகும் வாசுதேவா வுந்தன்
விளையாடற்கதைகளை மனோவாக்காயங்களினால் வாசுதேவா *
யாதொருத்தர்நினைத்துஞ் சொல்லியுமிங்கிதமாய் வாசுதேவா அபி
நயம்பண்ணியுங்கால க்ஷேபம்பண்ணுவார்களோ வாசுதேவா *

உ. அஞ்ஞானமயமான மூன்றுலகத்தினிலும் வாசுதேவா அவர்க
ளத்தியர்தஞ்செயசீல ரென்பதுஞ்சரிதானே வாசுதேவா *
மெஞ்ஞானச்சுடராகும் விபுவேநன்மையான வாசுதேவா மந
மீதும்மைநினைப்பதுமு மதுபக்தியேமேலாம் வாசுதேவா *

ந. வனமாலியேயோக மதுஸித்திக்கும்பொருட்டு வாசுதேவா எவர்
வருத்தங்கொண்டுமுமது பக்தியைவிடுவார்கள் வாசுதேவா
கனவுமியடித்தாலும் உமிமூக்கேமிச்சமாகும் வாசுதேவா அந்தக
கதையாயனேகதுக்க மேமிச்சமாகுமரி வாசுதேவா *

ட. சுபாவகர்மத்தையடைந் தனேகயோகியருந்தான் வாசுதேவா ஈ
சுராம்பண புண்ணியத்தால் லபித்துன்கதையைக்கேட்பார்வாசுதேவா *
தபோதனரானவரு முமதுகதையைக்கேட்டும் வாசுதேவா வந்
தனபக்தியதிகமென் றேதான்விழித்துக்கொண்டு வாசுதேவா *

௬. அச்சுதனே அஜனே யுந்தன்பரமபதம் வாசுதேவா நின்மே
லதிகபக்தியுள்ளவ ரடைவார்பூமனேமாலே வாசுதேவா *
இச்சையில்லாமற்பர கதியடையோகியரும் வாசுதேவா அரி
யேயுந்தன்குணமகி மையைப்பிறர்க்குப்போதிப்பார் வாசுதேவா *

௬. விகாரமில்லாதசுவானு பவமேயரூபராம் வாசுதேவா பின்னும்
வேறொருதெய்வமுண்டென் பதுமில்லாப்பிரமமே வாசுதேவா *
மகாபெரியவர்களாம் விமலமனதுள்ளபேர் வாசுதேவா சிஷ்ய
வர்க்கங்களுக்குமது கதையைப்போதிக்கும்யோக்கியர் வாசுதேவா *

எ. நலபேரவர்களல்லாற் போதிப்பவர்வேறில்லை வாசுதேவா ஆதி
நாராயணமுகுந்த மாதவவனமாலி வாசுதேவா *
உலகோபகாரமா யவதாரம்பண்ணினீர் வாசுதேவா வேதத்
துட்பொருளேகுண ரூபராயிருக்கின்ற வாசுதேவா *

அ. அனந்தகல்யாணகுணங் களையளவிடுதற்கு வாசுதேவா தானே
யனேகவருஷம்நல்ல கணக்குப்பிள்ளையானவன் வாசுதேவா *
கனர்தரும்பூமியிலே யுண்டாம்புழுதிகளும வாசுதேவா உயர்ந்தா
காசத்திலுண்டான நக்ஷத்திரங்களையும் வாசுதேவா *

௯. கணிதம்பண்ணினாலுமுன் குணங்கள்கணிக்கொணாது வாசுதேவா வுந்தன்
கருணைகடாக்ஷம்வரும் வழிபார்த்துக்கொண்டிருந்து வாசுதேவா *
பணிவாய்த்தான்பண்ணாநின்ஞ்சுபா சுபங்களனுபவித்தும் வாசுதேவா மனம்வாய்
சரீரங்களாலுமக்கு வந்தனம்பண்ணிக்கொண்டு வாசுதேவா *

௧0. எவனொருத்தன்பிழைத்து வருவானவனேயரி வாசுதேவா மோக்ஷ
மெனுமிடத்தினிலொரு பங்குளளவனுமாவன் வாசுதேவா *
புவனகோடிகளெல்லாம் படைத்துக்காத்தழிக்கின்ற வாசுதேவா பரம
புருஷனேயீசனே யனந்தாவாதிமூலமே வாசுதேவா *

௧௧. அடியேனெறிந்துபோட்ட நடத்தையைப்பாருமையா வாசுதேவா வகண்டா
காரசச்சிதானந்த பரமாத்துமாநீயே வாசுதேவா *
முடிவில்லாநின்மாயையால் மூடப்பட்டவனானேன் வாசுதேவா முத்தி
முதல்வாமுகுந்தாவுன்றன் பாதத்தடிமையாவேன் வாசுதேவா *

௧௨. மாயைபண்ணுமபேனா மாயையால்மயக்கஞ்செய வாசுதேவா வுன்றன்
மாயைமுன்னமேநானும் மாயைவிஸ்தாரஞ்செய்தேன் வாசுதேவா *
வாயைத்திறந்துமும்மை வழுத்துவதையேவிட்டு வாசுதேவா வாஞ்சை
வைத்தேவருத்தமுற்று வந்தனுதியுமின்றி வாசுதேவா *

௧௩. விருப்பாயுன்விளையாட்டைப் பார்க்கின்றநிமித்தியம் வாசுதேவா இந்த
வினையஞ்செய்தவகைக்கு நானென்சொலப்போகிறேன் வாசுதேவா *
நெருப்புக்கோட்டையின்முன்னே திரிகொளுத்திகாட்டினேன்வாசுதேவா இந்த
நினைவுநினைத்தநானுந் தேவரீர்க்கெவ்வளவு வாசுதேவா *

இ து வு ம து.

விருத்தம்.

அரியரியே யறிவில்லா வடியேன்றனே
யதிரஜோ குணத்திலுண்டாய்க கருவமென்னும்
பெரியவிரு ளால்மறைபட் டிருக்குங்கண்கள்
பெறுகின்றே னெங்குநிறைந் திருக்குமும்மைத்
தெரியாம லுமிருக்கு யிந்தநானே
தேவரீ ளாடிம்பி னவன்வேறில்லேன்
உரிமையாய்த் தயவுசெய் திரக்ஷிப்பீரென்
ரேதுவார் பிரமரின்னம் ஓதுவரே.

இ து வு ம து.

விருத்தம்.

ஒருபரமா ணுவைப்போ லும் நான்றனெங்கே
யுயர்மகத கங்காரப் பிரதிவியப்பு
வருதேயு வாயுவாகா சாதியேழா
வரணங்க ளால்வளையப் படுமோரண்டம்
அரியிந்த வண்டம்போல் மயிர்க்கால்தோறும்
அனேகாண்டங் கொண்டதே வரீதானெங்கே
தருணாக ரனேயனந்தா வதோக்ஷஜப்போக்
காரணா வகண்டபரி பூரணாவே.

தரு, இராகம்-அஸாவேரி, ஆதிதாளம்.

ப ல் ல வி.

அரிநாராயண பரிபூர்ணானந் த
அனந்தாவுனேநினே மனந்தா அரி.

அ நு ப ல் ல வி.

பரிபாலனஞ்செய்யும் பரமபுருஷசக்க ர
பாணிமுகுந்தாவுன்றன் பாரங்காநீலகாரங்கா அரி (அரி)

ச ர ண ங் க ள்.

க. கருப்பத்திலேயிருக்குங் குழந்தையின்வா ம
காலுதைததாயாருக்குக் குறறமு மாமா
ஒப்புருபட்டுமும்முடைய வயிறறினில்நா ம
வுருவப்பிரபஞ்மெல்லாந் தானபி ராமா
ரிரப்பவுமெதிருப்ப தெதில்லைமா தவனே
நிர்க்குணனேயெத் தனைசங்கைகே சவனே
பரப்பிரமமேஜகந் நாதமா தவனே
பரநதாமனேயதோ க்ஷஜனேவை பவனே
திருப்பயில்மறுமார்ப ஸ்ரீதராதாமோதரா வரி (அரி)

உ. மூவுலகும்பிரளைய காலத்திற் சலத்தில்
முழுகினபோதுமச் சலத்தின்முன் னலத்தில்
மேவிப்படுத்தநா ராயணனுந்தித் தலத்தில்
விளங்குந்தொப்புட்கொடியின் வழியாயின் னிலத்தி

லேவிதிவெளிவந்தா லொன்றசொல் லொன்றே
யேற்றுக்கொண்டதல் லாமற்பொய்யென்ப தன்றே
தேவதேவேசுவரரா மும்மிடத்தினிலும் நின்றே
சிறியேன்பிறக்கவில்லை யாவின்ன தென்றே
நாவினுலுயைந்த நாரணனும்நீரல்லோ அரி(அரி)

ங. சகலதேகியர்கட்கு மாத்மஸ்வருபர் நீரோ
சகலலோகஸாக்ஷியா யிருக்கின்றவரும் நீரோ
பகவனேயதீசனே முனிதர்பூமியும் நீரோ
பரவுமிவ்வைகைமூன்று முறையுந்தானமும் நீரோ
மகிமைக்களவில்லாத நாராயணராம் நீரே
மாயையினாலேமறைத் துக்கொண்டிருக்கி றீரோ
அகரமுதலாகிய வக்ஷரமாகி னீரோ
யகிலாண்டகோடிக்கு நாயகராகு வீரோ
பீகருங்கீதவேணுகோ பாலரோயாதிமூலரோ யரி (அரி)

இ து வு ம து.

விருத்தம்,

ஜகத்திலே பிரமமது மிருக்குமாறுற்
சகமெல்லா மும்முடைய தேகமாறுற்
றெருத்தடியேன் கண்ணாலே காணப்பின்னுஞ்
சொல்லுமென்றன் சித்தமத்தி தனிலுங்காணப்
பீகுத்ததனை யடியெற்குக் காண்பித்தீரிப்
பாரதனில் மாயையினை யடியாகின்ற
மகத்துவஞ்சேர் கிருஷ்ணவ தாரமாக
வருகின்றீர் கருணையென்மேற் பெருகின்றீரோ.

தரு, இராகம்-மோகனம், ஆதிதாளம்.

ப ல் ல வி.

மாயனேகிருஷ்ணவதார மாயனே.

அ நு ப ல் ல வி.

தூயபிரகாச மாயப்பிரபஞ்சத்தி ற்
றுயர்வயிற்றிலும் மாயைசெய்தீ ரே (மாய)

ச ர ண ங் க ள்.

க. இருடிகேசனே யென்பிரமை யகல
விங்குன்கருணை புரிந்திட திகல
ஒருவர்வயிற்றி னுக்குள்ளே சகல
வுலகமுமிருக்குதென் றெங்கிலும் புகல
பரமாத்துமசொருப மாலே
பரவிவிளங்குவதது போலே
வரிசைவரிசையாய்ப் பிரபஞ்சங்கள் தோணுது
மாயையில்லாய லும்மிடத்தினிற் காணுது (மாய)

உ. இப்போதானும்மை யல்லாமல் வேறு
யார்மாயைகாண்பி வித்தானையா கூறு
தப்பாமலொருவரா யிருந்துபின் மீறு
தனையருங்கன்றுக ளாகிய வீறு
இப்படிநாலுகையுண் டாயும்
எல்லோருமோருருக்கொண் டாயும்
செப்பமாயென்னு லுபாஸிக்க வாச்சுதே
ஜகந்தன்மயமா யப்பின்னும் நீயொருவ ராச்சுதே (மாய)

ந. அரியுந்தன்மார்க்கத்தைத் தெரியாதாரோ
யர்த்துமஞானத்தைத் தரியாதாரோ
சரியாமுன்மாயைவிட்டுப் பிரியாதாரோ
தான்ருனென்னுமக மரியாதாரோ
விரிவாயிப்படிநாடு வீரோ
விளையாட்டனேகமாயாடு வீரோ
அருள்மாகடலே யாதிய ஞுதியே
யங்கையிலங்கிய சங்குள ஜோதியே (மாய)

இ த் வு ம து.

விருத்தம்.

இந்தச் செகத்தையுண் டாக்கவும்நா
ணிதையிரக்ஷிக் கவுந்தேவ ரீர்தானென்றே
அந்தத்துக் கேமுக்கண் பரமனென்று
மாம்மூன்று பேராய்நீர் விளங்குவீரோ
சிந்திப்பார் துயர்நீக்குந் தேவதேவே
தேவரிஷி நரர்மிருகம் நீரில்வாழுஞ்
செந்துக்களாய்ப்பிறந்தும் துஷ்டர்தம்மைச்
சிக்ஷிப்பீர் சிஷ்டர்களை ரக்ஷிப்பீரோ.

தரு, இராகம்-பைரவி, ஆதிதாளம்.

ப ல் ல வி.

இந்தமூவுலகிலு மும்மையறியும்பேர் க
ளொவரிருக்கிருனையா அரியே

அ நு ப ல் ல வி.

விந்தையுன்யோகமாயை விஸ்தரித்துமென்னென்ன
விதமாயெங்கெங்கும்விளை யாடுவதுமெப்ப வோ (இந்த)

ச ர ண ங் க ள்.

க. அஞ்ஞானம்மூடி யிந்தச் செகத்தெல்லாம்ஸ்வப்பனம் போலே
யதிமந்தபுத்தியாய்த்துக்க பரம்பரையாய்மென் மேலே
மெஞ்ஞானசித்தியசுகபோ தமயருந்தன்மாயை யாலே
விளங்குதேபிரபஞ்சம்நிஜம் போலேதானெடு மாலே
மஞ்ஞையிறகுகொண்டை மீதுபரிப் பவரோ
வந்தனைசெய்குவார்கள் வினையைப்பிரிப் பவரோ

அஞ்ஞிமிறுசூழ்துளவாரந்தரிப் பவரோ
யசபகமுரருட லஞ்சங்கரிப் பவரோ (இந்த)

ஏகரோயான்மாவேபுருஷோத்தமபுராணர் நீரோ
யென்றுஞ்சத்தியஜோதிர்மய ரேயனந்தரா வோரோ
யோகீசுவரேசுவரரோயாதி மூலநித்தியரா ஞோரோ
யுண்மையக்ஷரரேநித்தியசு கநிரஞ்சனரோன் போரோ

மெய்பூரணரோ துன்பமில்லா தவரோ
யமிர்தரோயத்துவயரோ யானந்தவை பவரோ
தேகியருக்குமான்ம ரூபருமா னவரோ
ஜகத்தும்மையிப்படிக்குச் சொல்வதுமா தவரோ (இந்த)

ரு. குருவென்னுஞ்சூரியனிடத்தி லேநின்றுமுப தேசங்
கொண்டவுடநிடஞானக் கண்ணர்க்குன்மேல்விசு வாசம்
பெருகியிந்தப்பொய்யா யிருக்கின்றதுமாயா பாசம்
பெலத்தஸமுஸாரஸமுத் திரத்தைத்தாண்டுறார்பிர காசம்

பரமபுருஷஜகந் நாதசச்சிதா னந்த
பணபணியணைத்துயில் பவனேஜயமு குந்த
நரவரிதிரிவிக்கிரம மாலேவை குந்த
நலமுககரவிழி பதவுந்தியர விந்த (இந்த)

இதுவுமது.

விருத்தம்.

ஆன்மாவை யான்மவுரு வாயறிந்தாற்
கனையபிர வஞ்சமுமவ் வான்மாவாலே
தான்மருவி யுண்டாயும் ஞானத்தாலே
தான்லயித்து முற்பத்தி நாசமொண்டும்
நான்மறையும் பயில்பதனே ரஜ்ஜுஸர்ப்ப
ஞாயமதா யிருக்கும்பந்த மோக்ஷமொண்டாய்
ஊன்மருவுங் கண்ணருக்கு ஞானமின்றி
யுண்டாகு தரியர்நீர் விண்டாவீரோ.

தரு, இராகம்-கௌளிபந்து, ஆதிதாளம்.

பல்லவி.

உம்மைப்பரப்பிர்ம்மமென் றுணரவில்லைஜனங்கள்.

அநுபல்லவி.

செம்மையில்லாதவஞ்ஞா னம்மூடிவெளியி லே
நெம்மதியின்றிப்பல்வி தம்மாகத்தேடுகிறு ர் (உம்மை)

சரணங்கள்.

க. சிந்தையிலெப்பொழுதுஞ் சேர்பிர்ம்மவிசார மி
ருந்தாவிரவியையெப் படிப்பசலொட்டிக்கொண் ட
தந்தவகைபரப்பிர்ம் மந்தனிலேலயித்து ப்
பந்தமோக்ஷபேதமென்ப தில்லாமற்போய்விடு ம் (உம்மை)

உ. ஆச்சரியமிதுவே யானந்தரேயனர் தா
வாச்சதோர்ஸம்ஸார மாத்தியில்விஸ்தரித்து ம்
ஓச்சலில்லாமறபெரியோ ரும்மைத்தேடுகின்ற ர்
மாச்சக்கரகையனே மாயனேகிருஷ்ணகிருஷ் ண (உம்மை)

ங. முதுமறைமுடிவான முகுந்தனேவைகுந் த
பதிபரமபுருஷ பயோததிசயன னே
மதுஸூதனனுவுன்றுண்டா மத்தியிலடியேனு ம்
பதுமநாபனின்பாத பல்லவத்தைச்சேவிக்கிறே ன் (உம்மை)

இ து வு ம து.

விருத்தம்.

அகோவாயர் பெண்டுகளும் பசுக்களுந்தா
னதிபுண்ணிய சாலிகளதென்னென்றலோ
மகான்மாக்க ளவர்கள்முலைப் பாலைநீருகு
மாரர்களாகியுங்கன்று களாயுமுண்டா
சிகாவாணிற் றேவாதரு மவிர்ப் பாகத்தைத்
தெவிட்டவுண்ணும் திருவாயா செங்கண்மாலே
விகாரமில்லாப் பரப்பிர்ம்ம மேயானந்த
விதாதாவே யருளம்பு திதாதாதாவே.

தரு, இராகம்-பரசு, ஆதிதாளம்.

ப ல் ல வி.

பாக்கியமஹோ பாக்கியம ஹோ
பாக்கியமாயா பாக்கிய மே.

அ நு ப ல் ல வி.

அக்கமிருக்கின்றமாராப னே
யாரணனேபரி பூரணனேய கோ (பாக்கிய)

ச ர ண ங் க ள்.

க. கோகுலத்திலேயிருக்கும நந்த
கோபனைமுதலாய் வந்த
தேகமாகியவாயர்களு ட
னேசோதைமுதலாமிடைச்சியர்த வ
மென்னவென்ன பசுகனறு
முன்னமுன்ன விதையென்ன
பன்னபன்ன விவாகளோ
டேபரானந்த ஸநாதனபூர ண
மேபரப்பிர்மம மிணைதோழனை து (பாக்கிய)

உ. இந்தவிடையர்பாக்கிய மிருக்க
விந்திரியம்பதினொன்றும் பெருக்க
வுந்திரளானபுண்ணியம்பண் ணி
யுனதழகாமுகத்தைப்பருகவு ம

யோக்கியமே யானசி
லாக்கியமே வேதாந்த
வாக்கியமே யரியரி
யுன்பாததீர்த்தமெனுந்தேனைச்சருவ ரா
மும்பருங்கொண்டிருக்கின்றமகிமை யே (பாக்கிய)

ங. அரிபாதத்துளைப் படைத்ததே
யடவிக்குங்கூடக் கிடைத்ததே
தெரியவேயிடைச்சேரியிலுள் ள
ஜீவன்களுக்குப்பிழைப்புப்பகவா ன்

ஸ்ரீதரனே யுலகுக்
காதரனே சாமிதா
மோதரனே வேதங்கள்

தேடுவதின்னமுன்பாததூளையாய ர்
பாடிக்குநீர்விளையாடக்கிடைத்தது ம் (பாக்கிய)

ச. விரோதிபோலப்பூதனை யடுத்தாளே
விஷமுலைப்பாலைக் கொடுத்தாளே
சுராளுக்கும்முனி சுராளுக்கும்வெ கு
துர்லபமாமுந்தன் ஸாயுச்சியம்பெற்றது ம்

ஸாக்ஷைமையா வதல்லோ
மோக்ஷைமையா வுமாதக
டாக்ஷைமையா வாயர்

ஸொந்தவீடுதேக மிஷ்டாள்தேகசம்பிராண ன்
மைந்தராசையெல்லாந் தேவரீக்கர்ப்பித்தா ர் (பாக்கிய)

இ து வு ம து.

விருத்தம்.

எவ்வளவு காலமிரா கத்துவேஷ
மிருக்குதோ வதுவரையிற் காவத்கூடந்
திவ்வியசர ணரவிந்த கிருஷ்ணபக்தி
சிநதையிலுண் டாகாதெவ் வளவுகாலம்
அவ்வளவு மோகமா கும்விலங்கும்
அவனைவிடா திச்சகத்துக் கதிதார்நீரோ
இவ்வகையாய்ப் பிறப்புமுதல் நீர்காணமித்தும்
ஏய்க்கின்றீர் கன்றுகளை மேய்க்கின்றீரோ.

தரு, இராகம்-கேதாரிகௌளை, ரூபகதாளம்.

ப ல் ல வி.

மாதவனே மாதவனே மாதவனேசரணம்.

அ நு ப ல் ல வி.

யாதவகு லாம்போதிபூ ரணசந்திரனேசரண ம் (மாத)

ச ர ண ங் க ள்.

க. அரியேயுந்தன் சரணைநம்பு ம்
அடியார்களினுடன் கூடுநீர்

விரிவானந்தஸந்தோஷத் தை
 விளைத்தும்நன்றாய்விளை யாடுநீர் (மாத)

உ. எனசொல்வதும்மையறிந்த பே
 ரேயறியட்டும் விபுவே
மனவாக்காயங் கட்குமுன்வை ப
 வங்கிடைத்ததேபி ரபுவே (மாத)

௩. எல்லாந்தெரிந்தவராகும் நீ
 ரெனையும்பாருஞ்செகந் நாதரோ
உல்லாஸமாயிந்தச்செக த்
 துமக்கர்ப்பணம்வேத வேதரோ (மாத)

௪. நேமியேயதர்ம்மவிருட்டுக் கு
 நிலையில்லாமலுந் தாழ்விப்பீர்
பூமிதேவர்கள்வேதியர்ப சு
 புசுவுமிவைகளை வாழ்விப்பீர் (மாத)

௫. கலகஞ்செய்யும்ராக்ஷதரை க்
 களையுஞ்சக்கரதர வருள்புரி
உலகபூஜிதரோபகவ னே
 யுமக்குவந்தனம் அரிஅரி (மாத)

பிர்ம்மதேவர் தன்னுலகமடைதல்.

வெண்பா.

பிரமன் றுதித்துப் பிரதக்கணஞ் செய்
தரியரியென் றேநேமி யத்தன் - றிருவடிமேற்
றத்துவமாய்த் தெண்டன் சமர்ப்பித்து மேவிதியுஞ்
சத்தியலோ கத்தையடைந் தார்.

பிர்ம்மதேவரால் மறைபட்ட பிள்ளைகள்
கண்ணனைக்கண்டுரைத்தல்.

விருத்தம்.

பிரமனையே யனுப்பியும்முன் றோழரான
 பேரிருந்த மணற்றிட்டிற் பிரமன்விட்ட
வரிசையுள்ள கன்றுகளை யோட்டிவந்தார்
 வருஷமொன்று சென்றும்அரி மாயைதானே
பெருகியந்தக் குமாரர்களுங் கண்ணரான
 பிராணநா தனைக்கண்டுங் கணிகமென்ற
வனையில்லை யாகவெண்ணி னூர்மற்றெல்லாம்
 மறந்திட்டார் கோபரிடம் பிறந்திட்டாரே.

தரு, இராகம்-ஸாவேரி, ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவுலகிலே மாயாயோகிதசித் த
ரெதையெல்லாம் மறக்கமாட்டார்.

அநுபல்லவி.

உந்திபூத்தவன்மாயைக் குள்ளாஞ்சகலஜ க
முந்தானெல்லாத்தையும் மறந்திருக்குதேமன் ளு (இந்த)

சரணங்கள்.

ந. நண்பரானவாயகு மாரர்கள்கிருஷ்ண னே
நல்வரத்தாகவந் தீரா
பண்பனேயதிவேகந் துடனேநீருமொரு க
பளங்கூடவுண்ணுமற்போ ளீரா
உண்பதற்கிங்கேவாரும் நாங்களெல்லோருமின்ன ம்
ஒருவாயுமுண்கலேபார்த் திரா
விண்பரவியதேவ தேவனைத்தோழனென் று
விளம்பினரிமன்கு மாரா (இந்த)

உ. இருடீகேசனுங்கிருஷ்ணன் ஜேழராகியவந் த
விடையர்குமாரர்சொல்லைக் கேட்டு
சரிதானென்றுநகைத்துக் கொண்டவருடனும் போ
சனம்பண்ணிக்கொண்டுந்தானே மீட்டு
பெரிதாமந்தமலைப்பாம் புலர்ந்துகிடப்பதையு ம்
பிள்ளைகட்குக்காண்பிவித்துங் காட்டுப்
பரவிலிருந்துமாயர் பாடிக்குத்திரும்பினார்க ள்
பகவன்கதையைநெஞ்சில் நாட்டு (இந்த)

ங. மயிலிறகுடன்காட்டு மலரும்நற்சந்தப்பொ டி
வகைகளலங்காரசி தானம்
ஒயிலாமவயவங்க ளுடனதிகெம்பீர மா
யூதுங்கொம்புடன்வேணு கானந்
செயுமொலிபரவவே தேவரிஷிகள்பாடு ஞ்
செயகீர்த்திமார்க்கெவர்ஸ மானம்
பொய்யெனுஞ்செகத்தைமாயை பூட்டியரிமயக்கி ப்
போட்டாலெவருக்கென்ன ஞானம் (இந்த)

கண்ணன் கோகுல மடைதல்.

விருத்தம்.

மங்கையராங் கோவியர்கண் களுக்கேதிவ்ய
மங்களதே கராங்கண்ணர் வரிசையாக
வுங்கன்றுங் கலேயோட்டி யாயர்பாடி
யுட்புகுந்தா ரெசோதாகந் தரின்சேயின்றும்
அங்கிருந் தாவனத்திற் பெரியதான
அஜகரத்தை யுஞ்சங்க ரித்துந்தானே
யெங்களைரட் சித்தாரென் றுரைசெய்தாரவ்
விடையர்தா முறியவந்த விடையர்தானே.

பரிக்ஷித்ராசன் வினவலுக்கு சுகப்பிர்ம்மரிஷி விடையுரைத்தல்.

விருத்தம்.

குருவான சுகமுனிவரிவைகள்சொல்லக்
கோவியர்க்குத் தாங்கள்பெற்ற குமாரர்மீது
பரவுவாஞ் சையைப்பார்க்கக் கண்ணன்மாயை
பண்ணவுண்டாங் குழந்தைகள்மே லதிகப்பிரேமை
வரவென்ன வகையென்று விண்டிராத
மன்னவனும் வினவுவது கேட்டுமங்கே
பிரமரிஷி யானவரும் நன்றாய்ந்தாலோ
பேசுவார் ஞானமெய்வாள் வீசுவாரே.

திபதை, இராகம்-கௌளிபந்து, ஆதிதாளம்.

கண்ணிகள்.

௧. அன்னமயமுதலானபி ராணிகளுக்கெல்லாந்தன்
னான்மாபிரியம் பரிக்ஷித்துமன்னே
அன்னியங்களாயிருக்கும் புத்திரதனாதிகளும்
அப்படியாகுமே பரிக்ஷித்துமன்னே

௨. எப்படித்தேகிகளுக்கு நானென்கிறஅனவம்
இசைந்திருக்குதோ பரிக்ஷித்துமன்னே
அப்படியேபெண்பிள்ளை பண்டபதார்த்தாங்கிரக
மதைத்தம்மதென்பார் பரிக்ஷித்துமன்னே

௩. தேகமேயான்மாவென்கிற புருடற்கெப்படியிஷ்டந்
தேகமோவப்படி பரிக்ஷித்துமன்னே
ஆகுமேபுத்திராதிகளும் இஷ்டமென்பதறிந்திடும்
அபிமன்குமார பரிக்ஷித்துமன்னே

௪. தேகத்தில்நானென்பதில் லாதபேர்க்குத்தேகம்புத்
திராதியிஷ்டமன்றோ பரிக்ஷித்துமன்னே
தேகமானதுஜீரணத் தையடைந்தாலும்பிழைப்பைத்
தேடும்ஆசைமீறும் பரிக்ஷித்துமன்னே

௫. ஆகையாற்சகலமான தேகியர்க்கும்இஷ்டமென்ப
தான்மாவாகுமே பரிக்ஷித்துமன்னே
தேகமதற்கெல்லாம்ஆன்ம ரூபிகிருஷ்ணனென்றுமுன்றன்
சிந்தையுட்டெளிவாய் பரிக்ஷித்துமன்னே

௬. சராசரத்துடன்கூடுஞ் சகலஜகத்துங்கிருஷ்ணன்
றன்மயமென்றறி பரிக்ஷித்துமன்னே
புராணரந்தக்கிருஷ்ணனுஞ்செகத்துக்குநன்மையுண்டாம்
பொருட்டாய்வந்தாரே பரிக்ஷித்துமன்னே

௭. மாயையினாலேதேகி போல்விளங்குமூர்விசாரிய
மானத்திற்கேளும் பரிக்ஷித்துமன்னே
ஸ்தாவரசரங்கள் முழுவதும்அரிகிருஷ்ணனிடத்திலேகாணும் பரிக்ஷித்துமன்னே

இதரவ்மது.

விருத்தம்.

எலாமரிபகவச் சொரூபமேயாகு மினியொருவஸ்துவே றில்லை
யிப்பொழுதுநடக் கின்றதுதெரியு மெவ்வகைப்பூதங் களுக்கும்
அலாமல்முன்போன துடன்வரப்போகி றதுமெண்டுவகைகளுந் தெரியா
தவ்வர்த்தமானுர்த் தங்கிருஷ்ணகாரி யம்வேறுமெனதவெளி யிடலாம்
விலாசமுறமுராரி யுடபுண்ணியமான விளையாடலதனையே கேட்டு
மிக்கதர்ம்பரம பதத்தையேகொடுக்கும் மெல்லடிப்பல்லவம் நம்பச்
சலாபமாய்க்கன் றின் குளப்படிபோலச் சமுசாரசமுத்திர மதனைத்
தாண்டுவோர்மனதில் வேண்டியவரமுந் தரும்அரிகருணையா வதுவே.

கவிக்கூற்று.

விருத்தம்.

அன்னியதரும மனுஷ்டான்மார்க்கர்க் கமையுமேசுவர்க்காதி லோகம்
அரிபக்தருக்கு வரும்பரமபத மாகையால்நீரொது கேட்டீர்
அன்னதுமுழுவ துஞ்சொல்லலாச்சு தையாகுமாரப் பருவத்தில்
அனந்தர்செய்லீலை பவுகண்டகத்தி லவனியிற்பாடினுர் தோழர்
இன்னதாய்ச்சொல்லு மகாசுரமோக்ஷ மெனும் லீலையொடுகன்று மைந்த
ரொலாமிளம்புல்லின் மோகனஞ்செய்த லீலையுமிவைகண் ணனான
உன்னதம்பிரம துத்தியமிவைக ளோதுவார்தியானமுஞ் செய்வோர்
உத்தமரவரோ புருஷார்த்தமெல்லா முறுதியாய்ப்பெறுவது பேறே.

யச-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன் றிருவடிகளே சரணம்.

---

யரு-ம் அத்தியாயம்.

அவதாரிகை.

---

விருத்தம்,

நரசிங்கசாமி திருவடித்தாம ரைக்குவண்டானஸ்ரீ தானுர்
நல்லபாகவத கதையிலேகாந்து நான்செனுமத்தியா யத்திற்
பிரமதுத்தியவி யாக்கியானத்தைப் பேசினுபதினைந்தா மிவையிற்
பிரபுவாங்கண்ண னினாமேய்த்தும் பின்பொருதேனுக னுடனே
பரவியகழுதை களையெலாம்வதைத்தும் பாம்புகாளியன்விஷ ஜலத்தைப்
பானமுஞ்செய்தே பிரேதமாயிடையர் பலரொடுபசுகிளை யான
வரிசைகளதனை யிரக்ஷித்தும்பாம்பு வாய்க்குளாய்முன்சென்ற தோழன்
மார்களுக்கினிமை யாகவேபனையின் மாககனிகொடுத்தது முரைப்பார்.

கண்ணன் அனிரை மேய்த்தல்.

---

விருத்தம்.

மலரவன்சன்று கவர்ந்ததும்விட்டுச்
சலசநயனனைத் தான்றுதிசெய்த

பலமுமுரைத்த பரிக்ஷித்தருக்கே
நலசுகரின்னம் நயந்துரைப்பாரே.

தரு, இராகம்-புன்னாகவராளி, ஆதிதாளம்,

பல்லவி,

ஆனிரைகாத்தும்இராமகிருஷ்ணர்ள்வி ளை
யாடியகதைகேளு ம்

அநுபல்லவி.

மானிலமதிற்கன்றின் வரிசைமேய்ப்பதை விட்டுங்
கானகமலைநதிக் கரைசுற்றித்திரிந் திட்டும் (ஆனி)

சரணங்கள்.

க. அந்தராமகிருஷ்ணர்கள் பவுகண்டப்பருவத் தி
லதிகப்பெலனை யோர்த்து
நந்தகோகுலத்துள்ள விடையர்களெல்லாங்கூ டி
நயந்திவர்களைப் பார்த்து
இந்தப்பிள்ளைகளிளங் கன்றுகளைரக்ஷித்தா ர்
இனிப்பசுக்களைக் காத்து
முந்தியனுப்பலாமென் றுரைக்கவிவர்களந் த
மொழியைத்திருவுள்ளத்துக் குவப்பென்பதுவே சேர்த்து (ஆனி)

௨, வங்கணக்காரருடன் கூடித்தங்கள்கால டி
வைப்பதற்கேயி சைந்தார்
பங்கயநயனர்க ளவர்கள்பிருந்தாவனத்தை ப்
பரிசுத்தமபண்ணி வந்தார்
அங்கொருநாட்கிருஷ்ண னவர்புள்ளாங்கு ழ
லதைவாசித்துந டந்தார்
இங்கிதமாகவும்விளை யாடும்நிமித்திய ம்
எவர்க்கும்பெலமிகுந்து கீர்த்தியெங்கும்நி றைந்தார் (ஆனி)

௩. பசுக்கள்பலுகிநல்ல மலருங்கனிவலகையு ம்
பரவும்பிருந்தா வனத்தில்
இசைக்கும்வண்டுகளுடன் பறவைமிருகஞ்சூ ழ
வேபெரியவர் மனத்தில்
அசைக்கும்சிரம்மலமான நீருள்ளவோடைகளு ம்
அந்தவோடையி னினத்தில்
திசைக்குள்ளெங்கும்பரவும் பரிமளம்வீசி ய
செந்தாமரைமுதலாய்ச் சேர்ந்திருக்குங் கனத்தில் (ஆனி)

கண்ணன் பிருந்தாவனத்திற் றோழருடன் விளையாடல்.

---

விருத்தம்.

மலர்ந்ததா மரைப்புஷ்ப பரிமளத்தை
வாரிக்கொண் டதினாலே வாசமாகிச்
சலந்தனிலே படிந்துவரு கின்றதாலே
தான்குளிர்ச்சி யாயடவி நெருக்கத்தாலே

நிலந்தனில்மங் திகரித்துங் காற்றுவீசும்
நேர்மைகண்டு பிருந்தாவ னத்தைப்பார்த்து
நலம்பொருந்திக் கண்ணன்விளை யாடலங்கே
நாடினார் தோழருடன் கூடினாரே.

கண்ணன் பிருந்தாவனச்சிறப்பைப் பலராமருக்குரைத்தல்.

விருத்தம்.

விரிவாகிச் சிவந்ததளிர்க் காந்தியெங்கும்
வீசால்ல கனிகளொடு மலர்கள்மீறிப்
பெரிதான பாரமதால் வணங்கிவந்தெம்
பெருமானின் றிருவடிகளைத் தொட்டுக்கொண்டே
வருகிளையி னுனியுடனே கூடுகின்ற
மரங்களைப்பார்த் தரியுமந்த காலஞ்செய்து
பிரியமுள்ள தமையனிரா மனுக்கேசொல்லும்
பெருமைதா னதுமிகவு மருமைதானே.

தரு, இராகம்-ஸாவேரி, ஆதிதாளம்.

பல்லவி.

ராமய்யாவென்பிரியமுள்ள அண்ணாவே நித்தியா
னந்தானந்தஸங்க ருஷ்ணாவே *

அநுபல்லவி.

தாமரையின்வாசந் தாமருவோடைசேர்பிரு ந்
தாவனமாகும்பூங் காவனமீதி லே
நேமயாய்விளையாட லாமிதனுக் கு
நிகரெங்கேயுண்டுநீர்தான் பகருங்காண்பலபத்தி ர (ராமய்)

சரணங்கள்.

க, சிறப்பாயிந்தமரங்கள் தேவர்பூஜிக்குமுந்த ந்
திருவீடித்தாமரைகள் மீதே
பொறுப்பாய்க்கிளைநுனிக ளாலேதொட்டுக்கொண்டேதா ம்
பூவுங்கனிகளுந்தப் பாதே
நிறைத்துமும்மைப்பூஜிக்கும் நிமித்தியமெடுத்துக்கொண்டு ன்
னிதமாய்நமஸ்கரித்தப் போதே
பிறப்பாமிந்தவிருக்ஷ ஜன்மபாபத்தைநீக்கு ம்
பெருமானேயென்றுதானோ பின்னொன்றுஞ்சொல்லொ ணாதே (ராமய்)

உ. அல்லதுபெரியோர்கட் கெல்லாம்நிழலுண்டாயு ம்
ஆராதனம்பண்ணவுங் கண்டும்
நல்லமலர்கொடுத்தும் பகவதர்ப்பிதஞ்செய் து
நாடியவர்போசித்துக் கொண்டும்
வல்லமையாய்த்தவஞ் செயக்கந்தமூலங்க னி
வகைதருமுபகார மண்டும்
அல்லோவிருக்ஷஜன்மஞ் சிலாக்கியமாயிருந்தாலு ம்
அஞ்ஞானபாவந்தீர்த்தற்கோ வும்மடியைக் கண்டும் (ராமய்)

௩. சகலவுலகும்பரிசுத் தம்பண்ணுமுங்கீர்த் தி
தனைப்பாடிக்கொண்டுவண்டுக் கூட்டம்
மகிமையுள்ளபுருஷோத் தமராமுந்தம்பின்னு லே
வருவதுமேனென்றுற்சி ரோஷ்டங்
தகுமுமக்கன்பரான முனிக்கூட்டங்களுக்கெல்லா ந்
தங்கள்தெய்வமாமும்மேல் நாட்டம்
வகைநீர்பிருந்தாவனத்தில் நரவேடத்தால்மறைந் து
வரவவரும்வண்டாக வந்தும்மைச்சேர்கொண் டாட்டம் (ராமய்)

௪. கூத்தாடுமயில்கள் மான்கள்பார்ப்பதுமும்மை க்
கோபக்கன்னிமார்பார்க்கிறப் போலே
நேத்தியாய்க்குயில்கள்கூப் பிடுதுமிருகபட் சி
நிறைந்திருக்கும்வீடான தாலே
வாய்த்ததிவ்வனத்துக்கு மகத்தாயிருக்கின்றநீ ர்
வந்தீரொன்றுதானொருக் காலே
சாத்துமுபசாரங்கள் செய்குதுபெரியவ ர்
ஸஹவாஸம்நல்லகுணத்தை யுண்டாக்கும்மென் மேலே (ராமய்

௫. கேவலம்மூடங்களா மிந்தமிருகபட்சியு ங்
கிருதார்த்தங்களாச்சுதே யண்ணு
தேவரீர்பாதம்வைக்கப் பிருந்தாவனபூமியு ஞ்
செடிபுல்லுகளுந்தன்னியம் நன்னை
மேவுங்கொடிமரங்களையுந்தங்கைதொட்டதா ல்
மேன்மையாச்சுதுவெள்ளை வண்ணு
தாவுபட்சிமிருகங்கள் மலைநதிகளையும்நீ ர்
தயவாய்ப்பார்ப்பதினாலே தன்னியமிதுசொல் லொண்ணு (ராமய்

௬. அய்யாவுந்திருமார்பை லெக்ஷ்மிதேவிசேர்ந் தே
ஆசைகொள்ளுமதனை நேரும்
மெய்யாவும்மார்பினடு விளிலிடைச்சியர்சேர்ந் து
மிகவுங்கிருதார்த்தானாலுர் பாரும்
ஒய்யாரமாகவிங்கே தேவரீர்திருவுள்ள ம்
உவக்குந்தோழரையெல்லாஞ் சேரும்
நெய்யாறுந்தயிராறும் பாலாறுமாகவுண் டு
நிதமும்விளையாடலாம் நேர்மைகொண்டிங்கே வாரும் (ராமய்

## இராமகிருஷ்ணர்கள் பிருந்தாவனத்திற் றோழருடன் விளையாடல்.

---

விருத்தம்.

சந்தோஷத் துடன்பிருந்தா வனவர்ணிப்பைச்
கக்கரபா ணியுந்தமையற் குரைத்துக்கொண்டே
விந்தையுடன் கோவர்த்த னமலைச்சாரல்
மிசையுமெமு னாநதிதீ ரத்துஞ்சென்றே
பைந்துளவ நெடுமாலும் பசுக்கள்மேய்த்தே
பரவிவரு மிடையருடன் கூடிக்கூடிச்

செந்தாம ரைக்கணரும் பலருஞ்சேர்ந்த
திண்ணனந்தான் விளையாடும் வணணந்தானே.

வண்ணத்தரு, இராகம்-கவரோசு, ஆதிதாளம்.

ஜதி.

தாந்தனந்த தனத்தனதன ன
தாந்தனந்த தனத்தனதன னா
தனதத்தந்தன தனதத்தந்த ன
தனனத்தனனத் தனனத்தனன த்
தனதனந்த தனதனந்த தான னா
தானத்தனைய தனதான ன

கலைகள்.

தேன்கருண்ட மதத்திலுமிகவு ம்
ஓங்கிவண்டத டார்த்தியாகவி சை
தனதத்தந்தன தனதத்தந்த ன
வெனவிப் படிசெப் பவுமற் புதகிரு ஷ்
ணனுமவண் டினுடனிசைந்து பாடுவ ர்

பாங்கனங்கள் பலுக்கவேயரிய ம்
ஆங்கதன்குர லுக்குநேர்சொலுவ ர்
சிலபக்ஷங்களில் மயில்நர்த்தம்பு ரி
வதையொத் துநடித் திடுமுத் தமனா ப்
பிரியமிகுந்து நகைபுரிந்து தோழர்க ள்

சேர்ந்துகண்டு துதிக்கவானிரையு ம்
ஏங்கிசைதிடை யர்க்குமேரமி ய
முறுசத்தங்கரு முகிலொத்துங்க ன
த்திலையிற் சுரபிக் குழுவச் சுதர்கி ட்
டிவரவென்று மததுகொண்ட பேர்சொல்வ ர்

வானுட்டர் சொல்லுமிரு பாதனு ர் (பது)

தேர்ந்திடுஞ்சொ லிசைச்சகோரமொ டு
தான்கிரவுஞ்சம்நல சக்கரவாகமயி ல்
வலியற்குஞ்சரி யொலியிட்டும்பு லி
கயசத் துருகத் துவதிற் பயமு ற்
றவொணும்ப டியுமிகுந்த லீலைய ர்

கான்றிரிந்த விளைப்பிலாயன்ம டி
சார்ந்திடுந்தலை வைத்துமேசய னா
மிசைமிக்கன்புறு தமையற்கும்பத ம்
வருடிக் களைவிட் டகலப் புரிமெய் ப்
பொருளனந்தர் துளவணிந்த மாயவ ர்

தீங்ககன்ற குணத்தராமிடைய ர
சேர்ந்திருந்து பலுக்குபாடலொ டு
நடனத்தின்கதி தனைமெச்சும்பினு ம்
அதிசப் பெலமுற் றொருவர்க் கொருவர் க்
கிணைவுசண்டை யிடுதல்கண்டு நாடுவ ர்
வாதாட்ட மன்னிவிளை யாடுவா ர் (௵)

பாங்கரங்கவ ரிட்டகோடதுக ள்
தாண்டிநின்று சமத்தரானவ ரா
வருவித்துங்கர மதுதொட்டுங்க ன
வலுமைக் கொருதுத் தியமிட் டவரை த்
தழுவுசெங்கை யணைகொடுங்கு லாவுவ ர்

தான்கைகொண்டு முயுத்தமாடியொ ரு
சோம்பலின்றி வருக்குநேர்மைபெ ற
விளைமைச்செந்தளி ரணையிட்டுந்த லை
யணியப் பசுபர்க் குளொருத் தனின ற்
றுடைவிளங்கு சயன்முஞ்செய் வார ரி

பாங்கிருந்து பிடிப்பர்கால்கள்சில ர்
வாய்ந்தசெந்தளி ரிட்டுவீசுசில ர்
சிலர்பக்கங்களில் வெகுஇஷ்டப்பெ ற
மிடறிற் சுரபத் ததியொற் றதிக க் ௩
குளுமைகொண்டு கனநயங்கள் பாடுவ ர்
மானூர்க்கு மையல்தரு மாயனு ர் (௱௨)

பார்தமிந்த வகைக்குளோதர ணி
காந்தனுந்த னிஜச்சொரூபம தை
மறைவித்துந்திரு வருளுத்துர்திக ழ்
தளிரொப் புமைசெப் படியற் புதவி த்
தகருநந்த னுடகுழந்தை மாதி ரி

சார்ந்துகொணடு நடக்கையாலுல கை
யார்ந்துகண்டு நகைத்துமேதிரிவ ர்
சுருதிக்குந்துய முனிவர்க்குந்தெ ரி
வரிதப பொருளுச் சிதசிற் சொருப ப்
பரமனந்த குணநிறைந்தகாரண ர்

பாண்சுரும்பு மிழற்றுமாரணி ய
மாம்பிருந்தை யிடத்தில்மேயவெ கு
கிடைகட்டும்பசு நிரைவிட்டுங்க ள
விடையர்க் குளொருத் தரெனச் சொலவி ப்
படிநடந்து திரியுமெங்கள் யாதவ ர்
மாகீர்த்தி யுள்ளஜகந் நாதனு ர். (௪)

## இராமகிருஷ்ணர்களைத் தோழர்கள் பனம்பழம் வேண்டல்.

விருத்தம்.

கேவலம்நா டோடிமாட்டுக் காரன்போற்
கிருஷ்ணனுந்த மையனும்வினை யாடுகின்றார்
கோவலரிற் சிதாமா சுபலனென்னுங்
கூறுமவ ருந்தோக கிருஷ்ணனென்போன்
சாவலனே யிவர்மூன்று பேரையாதி
கனவரிசை யுளவிடைய ரெல்லாங்கூடி
மாவலரி ராமகிருஷ்ண ரிடத்திற்சொல்லும்
வாணிதான் பனங்கனிக்கு மேணிதானே.

தரு, இராகம்-பந்துவராளி, மிச்சிரதாளம்.

பல்லவி.

அசோமகாபல்சாலியான ராமராமரா மா இந்த
அவனிமேற்றுஷ்ட நிக்கிரகஞ்செய்யுங்கிருஷ்ணகிருஷ்ணகிருஷ்ணா *

அநுபல்லவி.

சகாயம்நீங்கள்செய்யவேணும்நீங் தக்சாட்டுக்குச்சமீபத்தி லே
முகாமைப்பனங்காடிருக்குது மொழிந்தோமுன்ஸமக்ஷபத்தி லே(அசோ)

சரணங்கள்.

க. அந்தப்பனம்பழங்கனமிக வுந்தானே பூமி தனிற்ப
ரந்துவீழ்ந்துகிடக்குதிதோஸாமி ஸாமி *
பிந்தியின்னஞ்சிலகனிவிழும் பெலத்ததேனுகாசுரனும் மட்டி
அந்தக்கழுதையதிலிருந்துகொண் டடிக்கிறானையாவழியைக் கட்டி(அசோ)

உ. அவனதிககொரேன்ஜா தியிலசுரன் றீயன் துஷ்ட்ட
னவன்பேர்தேனுகன்கழுதைரூபனாம் பேயன் *
கவடராமவன்பந்துக்களுங் கழுதைக்கூட்டமாய்க்கூடிக் கொண்டு
எவனையுமண்டவொட்டாமலங்கு மிருக்கிறான்சேதியின்ன முண்டு(அசோ)

ங. மனிதனைத்தானேயாகார மாய்க்கொள்வதி னாலே யொரு
ஜனங்கிட்டுகிறதில்லை யந்தப்பனைவன மேலே *
கனருசியுமுளதுவேதெய்வீ கவாசனையுடனே சேருங்
கனிவாசமிதோநாலுதிக்கிலுங் காற்றுக்கொண்டுவருதே பாரும்(அசோ)

ச. வாசனையைக்கண்டந்தக் கனிசாப்பிட வேணும் என்றே
யாசையெங்களுக்கிருக்குக் கிருபைசெய்யுங் காணும் *
மாசிலாப்பலராமனுடனினம் மனதுக்குருசித்திருந்தாலெல்லோருங்
கூசாமலவ்விடஞ்செல்வோம்நந்தகுமாரவேணுகோபாலனே வாரும்(அசோ)

## இராமகிருஷ்ணர்கள் தேனுகாசுரனை யடித்தல்.

விருத்தம்.

பலமுள்ள வுங்களா லந்தத்தால
பலமெங்க ளுக்கெல்லாங் கிடைக்கவேணும்

நலமுள்ள புருஷர்களே யென்றுவேண்டி
ராமகிருஷ்ணர் களைப்பரவுந் தோழராயர்
குலமுள்ள பேர்மேற்கரு ணைகடாக்ஷந்
கூர்ந்தவர்கள் கூடவரத் திருவைகுந்தத்
தலமுள்ள வருந்தால வனத்திற்சென்றார்
தாக்கினார் தேனுகன்பேர் போக்கினாரே.

தரு, இராகம்-அடாணா, ரூபகதாளம்,

பல்லவி,

பனைவனத்தையுந்தேனுக னெனவனத்தையும்ராமரும்
பாலகிருஷ்ணருஞ்சேர்ந் தடித்தாரே.

அநுபல்லவி.

தனைவருந்துமவர்பனங் கனியருந்தும்படியாகத்
தக்கோரெல்லாங்கூடி மிக்கவிளையாடிச்
சத்தமிட்டேங்கொடிய கர்த்தபமுற்றும்மடியப் (பனை)

சரணங்கள்.

க. பனங்காட்டுக்குள் நுழைந்துபல பத்திரன்கை விசைத்தார் மன்னா
பனமரங்களைமதயானைபோற் பாணியினா லசைத்தார்
கனங்காட்டுங்குழற்கோவியர் கனதனங்களைப் பிசைத்தார் பனங்
கனிவகைகளையுதிர்த்தசத்தங் காடெங்கிலு மிசைத்தார்
குணங்காட்டித் தேனுகன்
சினங்காட்டிக் கழுதையாய்
வனத்துப்பூமியுங் கிடுகிடு முந்து
கனைத்துத்திடு தி டெனவோடி வந்து
பிணைத்திக்கால்ராமன் மார்பிலெ றிந்து
மனத்தத்தியனுஞ் சூழ்ந்துதி ரிந்து
அதைக்க உதை புதைக்க மனம்
பதைக்கக் கண்கள் புதைக்க முன்கா
லாலேபுழுதிநிறைத்துமேலேமிகவுமுறைத் து
ஆரம்பஞ்செய்கிற கோரம்பலராம னுருந்தெரிந்தங்கே வீரம்பொருந்தினா ர்
அத்திச்சினமும் பெருக வெத்திக்கினரும் உருகச்
சுத்திப்பனையும் அருக வெத்திப்பிரபலந் தருகப் (பனை)

உ. ஒருகைபாலந்தக்கழுதை யுடகால்களைப் பிடிக்கப்பின்னும்
உயரவுஞ்சுழற்றிடத்தேனுக னுயிரையெமன் குடிக்க
பரியகழுதைப்பிணத்தாற் பலபத்திர னடிக்க வந்தப்
பனைமரந்தானேவேருடன்சாயப் பார்மீதிலே மடிக்க
பெருராசி யாம்பனை
மரராசி யதுகளும்
ஒருமரமீதே யொருமரஞ் சாய்ந்து
வரிசைகளாகச் சிலமரம் வீழ்ந்து

பிரசண்டவாயு வடிகொடு மார்ந்து
தருசிலசில நடுங்குதற் சேர்ந்து
தரிக்கக் கரம் மரிக்கப் புகழ்
விரிக்கப் பூமி பரிக்க வந்த
சங்கருஷணர்விளையாட வங்கந்தசுரனைச்சாடத்
தாலமரங்களுல் லோலகல்லோலமாய்ச் சாலவசைந்தது மேலுமற்புதமாய்ச்
சக்கரத்தவனும் அவனே மிக்கப்புகழ்வை பவனே
அக்கரத்தனுமுன்னவனே சொற்கட்டறிமன்னவனே (பனை)

ஙூ. குறுக்கும்நெடுக்கும்நூல் களைக்கொண்டேயிசை தூசு போலக்
குருகுலமன்னுவுலகமெல்லாங் குறுக்குநூலாய்ப் பேசு
சிறக்கும்அரிநெடுக்குநூலாய்ச் சேர்ந்தேதுய்ய தேசு இந்தச்
செகமதிலெங்கும்நிறைந்திருக்குந் திஷ்டடாந்தந்த ராசு
மறக்குமோ ஞானிக்கு
நிறக்குமோ வேறொன்று
நிறுக்குமரங்க ளெனப்பி றந்தது
மறைப்பொருள்ராம னசைத்த சைந்தது
முறைக்குளிதென் னற்புதஞ்சி றந்தது
மறுத்துமுன் தேனுகனுமி றந்தது
வகையாய்க் கண்டு மிகையாய் நெஞ்சு
புகையாய்க் கோடும் பகையாய்ப் பெரு
வாயன்குழுக்களுங்கூடி மாயனிருவர்முன்னோடி
வந்துயுத்தத்துக்கி சைந்திடுபோதிலே யந்தராமகிருஷ்ணருந்தங்கள்கைகளால்
மட்டிக்கரதுக் கிறிய ளொட்டிச்சமனுக் கறியத்
தெட்டிச்சடலம் மூறியத் தட்டிப்பனையி லெறியப் (பனை)

## இராமகிருஷ்ணர்கள் பனம்பழம் உதிர்த்தல்

விருத்தம்.

சரங்கனிறைற் கரங்களையுங் காலைவாரிக்
கடுவேக மாய்ச்சுழற்றிச் சுழற்றித்தால
மரங்களிலே யெறியவெறி யவுமங்கந்த
வனத்திலுள்ள பனைகளின்மேற் கழுதைப்பிரேதம்
நிரந்தரமாய்த் தொத்தியந்த வசைவிற்பூமி
நிரம்பவுங்க னிகளெல்லாம் வீழ்ந்துவெள்ளைப்
பரம்புசெவப் புக்கறுப்புக் காராகாசப்
பந்தலா மதுக்குவ்வமை முந்தலாமே.

## இராமகிருஷ்ணர்கள் தோழர்களுடன் கோகுலத்துக்கு வரல்.

விருத்தம்.

புருடரா மிராமகிருஷ்ணர் லீலைகண்டே
புரந்தரா திகளான தேவர்புஷ்ப

வருடமாய் வருடித்தட் டாதசஞ்சொல்
 வாத்தியமும் முழக்கினா மனிதரெல்லாம்
மருடீர்ந்து மக்காட்டிற் பனம்பழங்கள்
 வரிசையாய்ப் புசித்துவந்தார் பசுக்களெல்லாங்
கருடவாக னாகிருபையாற் புற்கள்மேயக்
 கண்டிட்டா ரானந்தங் கொண்டிட்டாரே.

தரு, இராகம்-உசானி, திரிபுடைதாளம்.

பல்லவி.

திரும்பிவந்தன — ரே கோகுலத்தைத்
திரும்பிவந்தன — ரே

அநுபல்லவி.

பரம்பிவந்ததேனு காசுரனோடும — க்
கரம்பலவுமெமன் படைக்கேவிருந்திட்டு — ம்
வரம்பிலாதபனங் கனியையெல்லாங்கூ — ட
நிரம்பிவருமாயா தமக்கேவிருந்திட்டு — ந் (திரும்)

சரணங்கள்.

௧. செந்தாமரைக்கண்ணா புண்ணியபுருஷாக — ள்
 செய்யுங்கீர்த்தனங் கொண்டு — மதிக்கவே
தந்தையனுடனே கூடிவரும்போ — து
 தளங்களைசேர்ந்தாயா மிகவுந் — துதிக்கவே
கொந்தவிழுங்கொண்டை மீதுநிறைந்திடு — ங்
 கோதூளியும்மயிலிறகுங் — கதிக்கவே
விந்தையாகியசாட்டு மலாகளு — ம்
 மிகமனோகியங்கமொன்று — விதிக்கவே (திரும்)

௨. கண்ணன்முகமென்னுந் தேனையிடைச்சிய — ர்
 கணகமொனும்வண்டுகளினாலே — பானம்
பண்ணிப்பகலினிற் பிரிந்திருந்த — தா
 பங்கள்தீர்ந்தவர் மனதிலுந்தி — யானம்
நண்ணிவெட்கத்துட னதிவணக்கமு — ம்
 நகைப்புஞ்சோகடைக் கண்பார்வைநி — தானம்
ஒண்ணுமியொண்ணுதலார் வரிசைவரிசையா — ய்
 உபசரித்ததற்கு மென்னவுப — மானந் (திரும்)

௩. வீட்டில்வந்துசேர்ந்த ராமகிருஷ்ணருக் — கு
 மேன்மையுள்ளதாய ரபீஷ்ட — பூரணங்
காட்டியாசீர்வாதங் களையும்பண்ணிபின் — பு
 காட்டிலலைந்திட்டகளைநி — வாரணம்
நாட்டியுடம்பெல்லாம் பிடித்துத்திருமஞ் — ச
 னம்பண்ணியாடையாபரண — மேரணம்
பூட்டிசசந்தனமும பூசியாரங்களு — ம்
 போட்டுபசரிக்க யாதுவ — வாரணம் (திரும்)

௬. வழிநடந்திட்ட விளைப்புத்தீரநல் ல
வகையாயறுசுவை பதார்த்தமுட னன்னம்
பழுதில்லாமலுப சரித்துஞ்சாப்பிட ப்
பணிவைத்துமெத்தையிற் றிருக்கண்வளர்த் தின்னங்
தழையும்பலபத்திர ராமருடன்கிருஷ்ண ன்
சவுக்கியமாயிருந் தார்கள்பிர சன்னம்
வழுவுதிலில்லாமலனு தினமும்பிருந் தா
வனத்திற்சஞ்சரித்த மகிமைகளைச் சொன்னந் (திரும்)

கண்ணன் விஷஜலமுண்டதோழர்களையும்
பசுக்களையும்பிழைக்கச்செயல்.

விருத்தம்.

அடச்சலத்தைத் தொடுத்தகர நடத்தனிசர்த் திடப்பலண்ட மதினிறைந்தோன்
மடச்சலத்தைத் தடுத்தடிமைக் கிடைச்சறவிர்ந் திடச்செய்யும் வானோர்கோமான்
கடச்சலத்தில் வடத்தளிரிற் படுத்தெழுந்து மிடப்பிளையாங் கண்ணனிங்கே
விடச்சலத்தைக்குடித்தவர்க்குக்கடைக்கணருள்கொடுத்தெழுப்பிவிட்டாரன்றே

தரு, இராகம்-காபி, அடதாளசாபு.

பல்லவி.

பசுபாலரும்ஆனினங்களும் விஷஜல *
பானம்பண்ணினார் மன்னனே கிருஷ்ணனாலேபின்
பிராணனுண்டானார்மன்னனே *

அநுபல்லவி.

அசுரபயங்கரரச் சுதனைரநினைக்கின்றே யே
அரிலீலைதெரிகின்றேயே யபிமன்சே யே (பசு)

சரணங்கள்.

க. ராமனில்லாமற்றோழ மார்களுடனேயெ மு
ஞநதி திரத்திலே
பூமன்பசுமாடுகள் மேய்த்துக்கொண்டிருக்கி ற
பொழுதுச்சி நேரத்திலே
தாமந்தவிடையரும் பசுக்களும்ஆடி மா
தவெயிலின் கோரத்திலே
தீமையோர்போல்வருந்தித் தாகத்தினாலேகாளி ங்
திவிஷஞ்சேர்நாரத்திலேகொ ரேத்திலே (பசு)

உ. இந்தச்சலமொருவ ருஞ்சாப்பிடக்கூடா த
தென்றேபிரசித்த மானதும்
அந்தவிஷஜலத்தை விதிவசத்தினாலேயு ண்
டவர்க்கெல்லாமுயிர் போனதும்
மந்தைமந்தையாய்க்கீழே விழுந்தாரதைக்கண் டு
மாயனுங்கிருபை யானதுந்
தந்தமுதப்பார்வையா லிடையர்பசுக்களையு ங்
தான்பார்த்துயிருண்டான துஞ்சொன்னேனதும் (பசு)

க. கருமுகில்வண்ணன்பார்க்கப் பிழைத்துநினைவுவந்த க்
கனைவிட்டெழுந்து நாடி
ஒருவாக்கொருவர்பார்த்து இந்தவிஷஜலத் தை
யுண்ணும்பிழைத்தோமென் றுடி
கருணைகடாக்ஷஞ்செய்தார் கோவிந்தனென்றுமவ ர்
கருத்திலெண்ணிக்கொண் டாடி
அருமையருமையிதற் புதமென்றுசொலிக்கொண் டு
வாசனையறிதேடி நல்லாயர் பாடி (பசு)

ருரு - ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன் திருவடிகளே சரணம்.

---

## ருசு - ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

விருத்தம்.

எண்ணிரண்டா மத்தியாய மிதனிற்கண்ண
னெமுனைமடு விற்காளி யனென்னும்பாம்பை
நண்ணிநிக் கிரகித்தவன்பத் தினிகளான
நாககன்னி யருந்துதிக்க வநுக்கிரகந்தான்
பண்ணியுஞ்ச கலவித்தைக் கிடமாய் நின்றார்
பனம்பழங்கள் பக்ஷித்த சந்தோஷத்தால்
அண்ணலுங்கா ளியன்படமாஞ் சபையினின்று
மானர்தக் கூத்தாடி னதுவுஞ்சொல்வாம்.

கண்ணன் எமுனையில் நின்ற காளியனை நீக்கினனென்று
சுகப்பிரம்மரிஷி பரிக்ஷித்தாசனுக்குரைத்தல்.

விருத்தம்.

காளிந்தி யென்றுமின்ன மெமுனையென்றுங்
கனவரிசை யாயுரைக்கும் நதிதானுருங்
கேளுமையா பரிக்ஷித்தே யதுவேகிருஷ்ணை
கிருஷ்ணபணி விஷம்பரவிக் கிடப்பதாலெ
வாளுமிந்திக் கின்றகொடுங் குணத்தைநீக்கி
மாநதியைப் பரிசுத்தம் பணவுமெண்ணிக்
காளியனும் பாம்பதனைத் துரத்திவிட்டார்
கண்ணன்றன் நீலமணி வண்ணன்றனே.,

சுகப்பிரம்மரிஷியைப் பரிக்ஷித்தாசன் காளியன்வரலாறு வினவல்.

வெண்பா.

நல்ல யமுனை நதியாக்கிக் காளியனைச்
செல்லவிட்டா ரென்று தெளிவாகச் - சொல்ல

வருட்சித்த முள்ளசுகா சாரியனை நோக்கிப்
பரிட்சித்து ராஜனுரைப்பார்.

தரு, இராகம்-எமுனாகல்யாணி, ரூபகதாளம்.

பல்லவி.

சொல்லும் வினைவெல்லும் சுகப்பிர்ம்மரிஷியே.

அநுபல்லவி.

அல்லல்தீரும்நல்லஞான வல்லவரோவல்லவரே. (சொல்)

சரணங்கள்.

க. மாயனுமகாதமான மடுவுக்குள்ளே கிடந்த
தீயபாம்பைப்பிடித்ததென்ன செயலங்களே நடந்த
தோயம்மடுவிலவன்வெகு யுகமாய்வாசந் தொடர்ந்த
மாயமென்னமாயமென்ன மாயமென்னமாயமென் ன (சொல்)

உ. விருகாளியன்றுரத்தப்பட்ட வயணமென்ன நேமி
க்ருதினபடிமுடிக்கும் பகவனேயவர் பூமீ
தோரிடையராய்ச்செய்தலீலை யுசிதமது சாமி
குருநாதனேகுருநாதனே குருநாதனேகுருநாத னே (சொல்)

ரு. இருவினையும்நீக்கும் கிருஷ்ணலீலாமுத பானந்
திருத்தியடைந்தோமென்ற வர்செப்புவாரதி தானம்
பரமகுருநீர்செய்கிற பாகவத கானம்
பிரமானந்தப்பிரமானந்தம் பிரமானந்தப்பிரமானந்த ஞ் (சொல்)

கண்ணன் காளியனென்னும் பாம்பினைக் கட்டுண்ணல்.

---

விருத்தம்.

காவலனு மிதுசொல்ல முனியுஞ்சொல்வார்
காளிந்தி யாற்றிற்கா ளியபணிக்கு
மேவுவிஷாக் கினியாலே கொதிப்புக்கண்டு
வேகமுள்ள ஜலம்நிறைந்த மடுவொன்றுண்டாய்த்
தாவிவரு பக்ஷிகளும் நேரிட்டாகா
சத்திலுற்று லதுகூட வெரிந்துவீழுங்
கோவரசே யந்தவிஷ வேகஞ்சேர்ந்த
கொடுமைதா னகாதமுள்ள மடுமெய்தானே.

திபதை, இராகம்-ரீதிகெவுளை, ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. அந்தவிஷஜலத்திற்ப டிந்துவராநின்றகா ற்
றதுதானெந்தமட்டுக்கும் வீசும்
அந்தமட்டுக்குமுள்ளம ரங்கள்பிராணிகளு ம்
பேசும்

உ. ஆயருடன்பசுக்கள்பரு கியுயிர்பிழைக் க
வரியமுதப்பார்வை பார்த்தாரே

தியதுஷ்டநிக்கிரகஞ் செய்யவவதரித் த
ஸ்ரீதரன்மடுமுன் னோர்த்தாரோ

ங. கொடியவேகத்துடனே விஷபராக்கிரமமு ங்
கொண்டுமந்தவிஷத்தி னாலே
கெடுதலாயிருக்கின்ற நதியையுங்கண்ட ரி
கிருஷ்ணஸாமியாம்நெடு மாலே

ச. இடுப்பைநன்றாயிழுத்துக் கட்டியொட்டியாணத் ததை
யேவஸ்திரத்தின்மேலே பூட்டி
எடுப்பாய்த்தோளைத்தட்டிக் கொண்டுந்தமடுவின்க ரை
யிலிருக்குமடம்பினைச் சூட்டி

ரு. அந்தவுயர்ந்ததானவ டம்புமரத்திலே றி
யதிவேகந்தனைநெஞ்சிற் பதித்தார்
விந்தையாயதனுனியிலி ருந்துகிருஷ்ணனந் த
விஷமடுவிற்கிளம்பிக் குதித்தார்

சு. எல்லாமரங்களுமங் கெரிந்துபோயிருக்க வு
மிந்தவடம்புநின்ற தேதா
வல்லாமையுள்ளகிருஷ்ணன் பாதங்கிடைக்கும்பாக்கி ய
மகிமையிருந்துவிஷ் ணுவுராதா

எ. அன்னாளிற்கருடாழ்வா ரமுதங்கொண்டுவரும் போ
தமரத்திருந்துசெல்ல லாச்சு
இன்னமுதத்துளியடம் புக்குக்கிடைத்ததவ்வி ஷ
வேகமதற்கில்லாமற் போச்சு

அ. பலமுள்ளபுருஷன்குதித் தவேகத்திலேமடு ப்
பாணியுமுல்லோலகல் லோலஞ்
சொலக்கேளதனற்காளி யன்பெருமூச்சனைய த்
தொடுத்தாரேகிருஷ்ணனிந்திர ஜாலம்

கூ. அனர்த்தவிஷசஷாய ஜலத்தலைபயங்க ர
மாகநூறுவிற்கடை தூரம்
நனைக்கப்படக்குதித்தார் கேளுமாதிபக வ
நாராயணர்தன்னதி வீரம்

கo. அனந்தபலமுள்ளகிருஷ் ணனுக்கிர்தநூறுவிற் க
டைவாரியிறைத்தது தானே
நினைந்தாலீதோராச்ச ரியமாசொல்லுமன்ன வ
னேயபரோட்சஞான வானே

கக. மடுக்கொண்டகாளிந்தியிற் குதித்துவிளையாடியு ம்
மதயானைதும்பிக்கையி னாலே
யடிக்கிறப்போற்சலத்தில் யாதவகுலதீ ப
ரடிக்கின்றசத்தங்கேட்டப் பாலே

கஉ. அகியானகாளியனுந் தானிருக்குமிடத்து க்
தவமானம்வந்ததென்றெ ழுந்தான்
சகியாமற்கட்செவியா மவனுஞ்சீறிக்கொண்டு மா
தவனைப்பார்த்துக்கொண்டோடி வந்தான்

கங. பார்க்கரம்மியராயுஞ் சுகுமாரராயுநீ ல
பயோதரவண்ணராகக் கொண்டும்
ஏர்க்குந்திருமறுமார் பராய்ப்பீதாம்பரந்தரி த்
திருக்குமிடையழகுங் கண்டும்

கச. அழகுள்ளமுகத்திலே மந்தகாசம்பொருந் து
மவர்பயமின்றிவிளை யாடச்
செழுமைகொண்டிடுஞ்செந்தா மரைமலரைநிகர்க்கு ந்
திருவடிகளுடனே கூட

கரு. கண்ணனிருக்கக்கண்டு மருமஸ்தானங்களி லே
கடித்துடம்பெல்லாஞ்சுற்றிக் கொண்டான்
பண்ணவற்குவிரோதி போலுங்காளியனென்னு ம்
பாம்பன்கிருஷ்ணனைநேராய்க் கண்டான்

கசா. அந்தப்பாம்பினுடலினுற் சுற்றப்பட்டுங்கை கா
லசைக்கக்கூடாதவராப் போலும்
இந்தக்கவடநாடக சூத்திரதாரிநின் ற
தென்னவென்றுவிளம்ப மேலும்

கண்ணனைக்காணமற் றேழர்கள்வருந்தல்.

விருத்தம்.

காளியனும் பாம்புடலைச் சுற்றிக்கொள்ளக்
கைகால்க ளசைக்கக்கூ டாதவன்போற்
காளியனன் நின்றதுகண் டாயர்தாமி
கவுமார்த்தி யடைந்தார்மன் னவனேகேள
வாளுடபி ராணன்சித்தம் பொருள்பெண்டிர்மால்
வகையெல்லாங் கண்ணனிட மொப்பிவைத்தே
நீளன்ப ரானவர்கள் துயரடைந்த
நோக்கே ளரிலீலைச் சினக்கேளே.

திபதை, இராகம்-நீலாம்புரி, ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. தொடருமிடையரெல்லாம் மிகவிதனத்தினு லே
சோகம்போட்டுவீழ்ந்தாரே குருகுலனே
கிடையானிரைகளுடன் கானேகிடாரியெல்லா ங்
கேளும்நெஞ்சுடைந்ததே குருகுலனே

உ. கதறியதுகளெல்லாங் கண்ணன்மேற்கண்ணைவைத்து க்
கண்ணீரைச்சொரிந்ததே குருகுலனே

பதறியந்தவேளையி லாயர்பாடியிலங் கே
பாரும்நடுங்கித்தையா குருகுலனே

ங. வானத்திருந்துகொள்ளிக் கட்டைவீழ்ந்திடக்கண் டு
வாடினார்கோபரெல்லாந் குருகுலனே
ஏனத்துருவன்றெண்ட ராகுமிடையர்க்கெல் லா
மிடதுகண்துடித்ததே குருகுலனே

ச. இந்தவகையாய்மூன்று விதமான துர்நிமித் த
மெழுந்ததேமூன்றிடத்துங் குருகுலனே
அந்தவகைகயைக்கண்டு நந்தர்முதலாகி ய
வாயர்நடுங்கினரோ குருகுலனே

ரு. பலராமன்கண்ணன்பின்னே செல்லாமலந்தவாய ர்
பாடிவீட்டிலிருந்தார் குருகுலனே
செலககிருஷ்ணன்றோழருடன் கூடிப்பசுவின்பின் னே
சென்றதறிந்தாராயர் குருகுலனே

சா. சாவிலாவின்பின்னைக் கோவிந்தன்சென்றதெண்ணி க்
கலங்கியஞ்சியஞ்சியே குருகுலனே
சாவிலாக்கண்ணனுக்குச் * சகரத்திரண்டில்லையை த்
தான்சேர்த்தெண்ணினார்பாருங் குருகுலனே

எ. முகில்மெய்யரானதிரு முகுந்தன்வல்லமைக ளை
முனிவரறியார்களோ குருகுலனே
மகிமையுள்ளாராமந்தக் கண்ணனையாயர்பா டி
மனிதரறிகுவாரா குலகுலனே

ஆய்ப்பாடியார் கண்ணனைத்தேடல்.

---

விருத்தம்.

அச்சுதரி டத்தினிற்பி ராணன்சித்த
மதுகளையே வைத்திருக்கு மாயரெல்லாம்
மிச்சமாய்ப் பயந்துதுக்க சோகத்தாலே
விருத்தரொடு பாலர்பெண்டி ருடனேகூடப்
பச்சைக்கு ழந்தைகளாங் கன்றைத்தேடிப்
பசுக்களைப் படியோடி வருமதைப்போல்
இச்சையாய்க் கண்ணனையே காணுங்காத
லேறுவா ரோடினதுங் கூறுவாரே.

தரு, இராகம்-புன்னாகவராளி, ஆதிதாளம்.

பல்லவி.

கண்ணனைத்தேடினரோ தேடியெல்லோருங்
கண்டங்கே கூடினரோ *

---

* சகரத்திரண்டில்லையை-என்பதற்கு, சாவை, என்றர்த்தம்.

அநுபல்லவி.

விண்ணோரனுகூலனை விஜயகோபால                    னா
யெண்ணியெண்ணியேநாடி யெங்கென்றுபுண்ணியகோடி (கண்ண)

சரணங்கள்.

க. கோகுலத்துள்ளோரெல்லாங் கூட்டங்கூட்டமாய்க்      கூட்
வாகுலத்தாலேகிருஷ்ண னெங்செங்கேயென்று      தேட
தாசமுற்றோடக்கண்டு தம்பிபலனை      நீட
நாகரீகமாய்க்கண்ட ராமன்னகைகொண்      டோடக் (கண்ண)

உ. தங்களிஷ்டனுங்களென்னன் றன்னடியைப்      பிடித்தும்
அங்கங்கேயுணிநின்று மடையாளத்தைப்      படித்தும்
எங்கெங்கேயென்றுதேடி யிதையமிகத்      துடித்துங்
கங்கையெமுனை சென்றுங் கண்ணுல்முத்தை      வடித்துங் (கண்ண)

ங. கொடியுடன்வச்சிரமங் குசமடையாளங்      கண்டும்
இடையரடிகளுட னெக்குளப்படி      மண்டும
நடுவிலரியடிகள் நாடியிதென்றே      விண்டும்
வடிவழகனம்பியை மறவாமலன்பு      கொண்டுங் (கண்ண)

ச. சுருதிபலவழியைச் சொன்னுலுமதன்      பாலே
பரதத்துவத்தைநாடிப் பார்க்கும்யோகியர்      போலே
கருமுகிலடிநாடிக் காளிந்திக்கரை      மேலே
வருபோதிற்கண்டாரையா மன்னனேயொருக்      காலே (கண்ண)

ரு. காளிந்திமடுவிலே கருநாகமோரவ      னைக்கத்
தாளுந்தடக்கைகளுந் தானசையாதி      ருக்கக்
கேளுமாயர்களெல்லாங் கிருஷ்ணனைக்கண்டார்      தக்க
வாளெல்லாந்தம்பித்துப் பொம்மையைப்போலாகினார்      மிக்க (கண்ண)

சா. ஆயர்தம்பனமாக வாக்கள்மிகவுங்      கூவ
வேயையூதுவான்செய்யும் விந்தையென்னகு      லாவ
தூயவவர்மகிமை தோணலெவர்களுண்      டாவ
தோவரசனேயின்ன முனைக்கிறேன்தேவ      தேவ (கண்ண)

ஆய்ப்பாடியார் கண்ணனைக்கண்டு வருந்தல்.

---

விருத்தம்.

அடர்த்தியா யாயர்கள்மூர்ச் சையையடைந்தா
    ரந்தப்ப கலிடத்தி லாசையுள்ள
விடைச்சியரும் பாம்புசுற்றிக் சொண்டதங்க
    ளிஷ்டநா யகராங்கண் ணனையேபார்த்து
மடக்கொடிமா ரெலாந்திருமால் சினேகிதத்தை
    மந்தசா சத்தையவர் கடைக்கண்பார்வை
திடத்துடனே சொலியிருந்த வார்த்தைதன்னைச்
    சிந்திப்பா ரரியையவந்து சந்திப்பாரோ.

## கண்ணன் பாம்புக் கட்டைநீக்கி வெளிவரல்.

விருத்தம்.

இடையர்பைந்தொடியர் மிக்கவுந்துய ரொழுந்துமங்கவர்கள் தங்களுக்
கிஷ்டநாயக னிலாமல்மூவுலகு மேசமாய்க்கதியி லாததாய்
மடமையானவர்க ளெண்ணினார்பினையும் மைந்தனைப்பரவி விதனமோ
மாதெசோதையி னிடத்தில்வந்தவள் வருந்துதற்கினைய தாகவே
நெடியகண்கள்சொரி நீருடன்னருகில் நின்றுகண்ணனுட நெறியெலாம்
நேர்மையாகவுரை செய்துகொண்டுஜய நீலவண்ணன்முக மீதிலே
படியவேவிழிகள் வைத்துமங்கவர்கள் பருமரங்களென நின்றனர்
பாரதாவினை நேரதாயறிவை பரமஞானபரி பாகனே.

திபதை, இராகம்-ஆனந்தபைரவி, ரூபகதாளம்.

கண்ணிகள்.

க. அந்தமில்லாக்கண்ணன்ஜீவனதுக்சந்தம தென்றே தாமே
யாயர்பாடியில்நந்தனைமுதலானோர்கண்டு நின்றே

உ. அம்மடுவில்விழுந்துபிராணனையவர்கள்விட வெண்ணினார்கிருஷ்ண
மர்ம்மமறிந்தராமனங்கனேவந்துதான்றகை பண்ணினார்

ங. இந்தரீதியாய்த்தன்னையேநம்பியிருக்குமாயர் பாடியார் பெண்க
மைந்தர்சொல்லாந்துன்புறல்கண்டுமனிதநெறி நீடியார்

ச. ஆம்புராணொருமூகூர்த்தமதின்வரைநின்றுந் தானே யந்த
பாம்புக்கட்டினின்றுங்கிளம்பினார்பாஞ்சஜன்னியத் தானே

ரு. கண்ணன்தேகத்தைவளர்த்ததாலேகாளியனென்னும் பாம்பும் உடல
புண்ணதாய்மிகநொந்துகுண்டலம்போட்டிருந்ததும் வீம்பும்

சூ. பட்டுக்கோபத்துடனேகூடப்படத்தைமேலதாய்த் தூக்கி யெடு
திட்டுச்சீறிப்பெருமூச்சறைந்துமேதன்னுட மூக்கின்

எ. துவாரங்களாலேநெருப்புப்பொறிசொரிவதற்கு நேரா க
வாரச்சட்டிகாய்ந்ததிலுண்டாகுஞ்சொடிய தழலேரா

அ. தந்தவங்கிபோற்சிவந்தகண்களாலேகிருஷ்ணனைப் பார்த்துக் கொண்
கொந்தளித்திரண்டுமூனையொடுங்கூடும்நாவி லார்த்து

கூ. இருகடைவாய்களைத்துளாவிக்கொண்டேகொடிய விஷாங்கி தாமே
பரவிச்சொலிக்குங்கண்களுமுள்ளபாம்பின்மீதே யோங்கி

கo. விளையாடுகின்றநிதித்தியம்வேணுகோபால ஸாமி பாம்பி
நெளிவறிந்துங்கருடனைப்போலும்சீர்ப்பயராக நேமி

கக. வந்தத்தின்றருணங்கண்டுஞ்சுற்றிவர்தார்சுற்றும் போது சமீ
சிந்திப்போனதுகாளியனுங்கட்செவிவீழ்ந்ததே தாது

## கண்ணன் காளியன்மேல் நடனம்புரிதல்.

விருத்தம்.

ஆயிரந்தலைகளுள்ள ததிலேமுக்கி
யங்களாந் தலைகளொரு நூறதாகும்

ஆயிரம்ப டமுமுயர வெடுத்துக்காளி
யபணிகா ளிந்திமடு மீதினின்றே
• ஆயிரமாம் பெயர்படைத்த கண்ணனைப்பார்த்
தாக்கிரமிப்ப துங்கண்டும் தன்மேலேறி
ஆயிரந்த லைப்பணியை யணையாய்க்கொண்டா
ராடினர் தொந்தோமென் ருடினரே.

தரு, இராகம்-கல்யாணி, ரூபகதாளம்,

பல்லவி,

நாராயணராடினரே நந்தகோபன்மகிட்சிநா டி
நலபுண்ணியமே நண்ணியஸாமி கிருஷ்ணஸா மி .

அநுபல்லவி.

நீரதவணனுனையு மிரட்சித்தயாதவஸா மி
வாரொமுனநதிமடுவிற் காளியபணிபணத்தி ல் (நாரா)

ஜதி.

தஜ்ஜஜந்தகஜந் தஜந்தஜந்தரி ஜகதரிகுகுத ரி
கிடதகதகணக தகுதிமிதகுதரி கிடதகதாந்தா ந்
தகதிந்திந்தினுத கிடதகதகணக தகுதிமிதகுதரிகி ட
தித்தளங்குதளங்குதக திகததிங்கணத்தோ ம்

முறை.

நர்த்தம்புரிகின்ற நந்தநந்தன ரசியதினுடைத லை
களினதுபெரிதுக ளதிலிருதிருவடி பதியுறதாந்தா ம்
அடிகொண்டுங்காளியபணி தலைகுனியவுமுயர் படமணியொளிதர
வித்தையென்பதிருந்த குருமனமகிழ்ந்திட வே (நாரா)

சரணங்கள்

க. மங்களவிக்கிரகமா லங்குகாதிற்குண்டலமு ம்
அங்கதமார்பிற்கவுஸ்து பாரமுந்தகதகெ ன
பங்கயமின்னுள்வலவர் பங்கஜாக்ஷரனாயினி லே
கிண்கிணியொலிக்கப்பாதச் சலங்கை சலின்சலினென்கவே-தஜ்ஜஜந் (நாரா)

உ. வானவர்கந்தருவர் ஞானசித்தசாரணர்க ள்
ஆனகபேரிமிருதங்க வாத்தியங்கள்மிகமுழங் க
மேனகைரம்பமுதலோர் கானம்பாடவுமலர்ம ழை
மேனின்றுசொரிந்துதுதிசி தானமெஞ்ஞானப்பிரம்மானந்தத்-தஜ்ஜஜந் (நாரா)

ந. எந்தத்தலைவணங்கா தந்தத்தலையிலடிவைத்து த்
திந்திமென்றுடிப்படத்திற் றீர்மானந்தீர்ந்திட வே
மந்தமதிமாதுஷ்டனைச் சிந்தைவாடத்தண்டனைசெய் ய
வந்தவர்மிதிக்கரத்தம்ப ரந்துசொரிந்து வருந்திட த்-தஜ்ஜஜந் (நாரா)

ச. ஆட்டங்கொண்டபணியின் கூட்டமானதலைமே லே
நாட்டியமாடுவதற்கு நாராயணனேவல்லவ ர்
மீட்டுமங்கனேகாளியன் வாட்டமாய்க்குருதிகக்கி ட
ஆட்டிவைப்பவரும்விநோத நாட்டியங்காட்டியகுட்டியாய்த்-தஜ்ஜஜந் (நாரா)

## காளியன் மூர்ச்சையடைதல்.

### விருத்தம்.

பலங்குறைந்து சுழன்றுமுகங் களினல்ரத்தம்
பாய்ந்துகா ளியபணியும் விதனங்கொண்டே
நலங்குறைந்தா யிரம்படமுங் காயப்பட்டு
ரத்தங்க ளொக்கக்கி யதன்மேலுள்ளங்
கலங்கியுடல் மிகநொந்த பின்புதான்சங்
கமத்தாவ ரங்களெல்லாம் படைத்தகண்ணன்
அலங்கிருதா னந்தத்தாண் டவபாதத்துக்
காட்பட்டா னரிசரணத் தாட்பட்டானே.

## கண்ணனைக் காளியன் பத்தினிகள் அடைக்கலம்புகுந்துரைத்தல்.

### விருத்தம்.

அன்னவே ளையிலின்ன சமாசாரத்தை
யறிந்துகா ளியன்பத்தி னிகளாம்நாக
கன்னியர்க ளாபரணங் குலைந்துவீழக்
கலேசோரச் சொருக்கவிழ வோடிவந்து
குன்னமிதென் றேடுங்குஞ் சித்தத்தோடுங்
குழந்தைகளை முன்போட்டு மஞ்சலித்து
நன்னயநீர் தண்டித்த தெங்களுக்கும்
நலமென்பா ரினியுனடைக் கலமென்பாரே.

தரு, இராகம்-சவுராஷ்ட்ரம், ஆதிதாளம்.

பல்லவி.

பாவியிவனைத்தண்டனை பண்ணினதுஞாயந்தான்.

அநுபல்லவி.

பூவிலவதரித்ததும் புண்ணியாவுன்மாயந்தான் (பாவி)

சரணங்கள்.

க. துட்டநிக்கிரகசிஷ்டபரிபாலனம் சுவாமியவ தாரமே
சட்டமைந்தருஞ்சத்துருவுஞ் சரிதானென்ன பாரமே (பாவி)

உ. யாவுஞ்சமமாய்ப்பார்ப்பதாலே யிவனைச்சிட்சை பண்ணினீர்
தேவதேவாவிவனடங்கித் திரியவேநீ ரெண்ணினீர் (பாவி)

ஙூ. அரியுன்கையாற்றண்டித்தாற் றுஷ்டாளினுட பாபங்கள்
சரிவரத்தீர்ந்துசிஷ்டாளாய்த் தானுண்டாம்பிர தாபங்கள் (பாவி)

ச. அதனலெங்களுக்கிதுவே யனுக்கிரக மாச்சுது
பதிதபாவனவுன்பாதம் பாம்பனுக்கு வாச்சுது (பாவி)

ரு. இந்தப்பாம்புஜன்மமிதற் கென்னபாவந்தன் னலே
வந்ததோவதன்மேற்கோபம் வரவுஞ்சம்மதம் மாலே (பாவி)

௬. உம்மாலேயவமானந்தா னுண்டானபாம்ப னவன்
எம்மனோர்க்குமான தனை யிருப்பவனுகு மிவன் (பாவி)

௭. வருந்தியேயிவன்மிகத்த வஞ்செய்திட்டானே பண்டு
திருந்திபேதர்ம்மங்களையுஞ் செய்தானேவன்பாய்க் கொணடு (பாவி)

௮. சாமியெர்தக்காரணத்தாற் சருவஜீவ ரூபரோ
நேமிநீரனுக்கிரகித்த நீதியென்பிர தாபரோ (பாவி)

௯. அரியுன்னடித்தூளிகிடைக்கு மதிகாரம தானது
கருநாகனுஞ்செய்புண்ணியபலங் காணப்படா தானது (பாவி)

கண்ணனைக் காளியன் பத்தினிகள் துதித்தல்.

---

விருத்தம்.

கருணாநி தியேயுன்றன் றிருவடித்தூட்
காதலினாற் காமங்க ளதனைவிட்டு
விரதாரம் பங்கொண்டு திருப்பிராட்டி
வெகுதினங்க வம்பணினு ளந்தவுன்றன்
சரணோ னுவுமிவற்குங் கிடைத்தன்தயா
தடுத்தாட்கொண் டிவனைரட்சித் தீர்கோபாலா
பரமபுரு ஷாவெனவே துதித்துமின்னம்
பன்னுவா ரரிஜையமன துன்னுவாரோ.

தரு, இராகம்-மாஞ்சி, சாபுதாளம்.

பல்லவி.

பாலகோபாலகிருஷ்ணபரந் தாமா ஹரி
பரமபுருஷனேயாயிர நாமா

அநுபல்லவி.

மூலப்பொருளேகிருஷ்ண மூர்த்தியேவை குந்த
மூத்தர்ஞானஞ்செய்யும் நித்தியானந்தமு குந்த (பால)

சரணங்கள்.

க. தார்க்கவாதிகட்கென்ன கிட்டுந் தத்துவங் கிருஷ்ண
பக்குவஞானிக்குன்மேல் நத்துவஞ் *
சொர்க்காதிபத்தியஞ் சாருவபூ மத்துவம் நல
மிக்கபிர்ம்மாதிபத் தியபாம கத்துவந் *
திக்கெங்கும்விளங்குஞ்சக் கிரபட்டம்யோக ஸித்தி
தக்கபிறப்பில்லாதுந் தானிச்சியார்க ருத்திற் (பால)

உ. பாவத்துக்குற்பத்தித் தானம தாயுங் கொடுங்
கோவத்துக்குவசிய மது வாயும் *
ஆவத்தைச்செய்யுகின்ற விஷத் தீயும் மிஞ்சித்
தீயகண்களுஞ்சிங்கப் பல்லும் வாயும் *
மேவித்திரியுமிந்த வியாளராஜனுக் குந்தன்
பூவொத்ததிருவடிப் பொடிகிடைத்ததே தந்தன் (பால)

௬. பிரமாதிதேவர்க்கு மரிது தானே யுன்றன்
சரணாரோணுவடைந்தான் பெரு மானே *
பரவுகொடியபாவ நெறிக் கேகே ரிட்டுக்
கரவுள்ளபணித்தலை பணி யானே *
துரியசமுசாரத்திற் சுழலுந்தேகிக்கு மென்ன
வுரியதர்தயிசுவரிய முண்டாச்சுதேபிர சன்ன (பால)

இதுவுமது.

அளவிலயிசுரியமுள வருட்டானபகவனெல் லாருள்ளும்நிறைபுருஷனே
யரியரிநின்மகிமையறி யொண்ணுமோகான்மாவே யாகாசமாதியாக
வுளபஞ்சபூதங்க ளெல்லாம்நிறைந்திடவு முரியபூதாவாசரே
யுலகம்யாவுக்குமுனி ருக்கின்றபூதரே யுரைசெய்காரணபரனுநீர்
வளமைதருகாரண தீதபரமான்மனே வந்தனம்வந்தனமையா
வருஞானவிஞ்ஞான நிதியறிவுபிரகாச வல்லசத்தியுநிறைந்தாய்
தெளிவானபிரமமே யகுணவனந்தசத்தி யுளவாவவிகாரனே
செம்மையாகின்றதரு டன்மையானந்தகர சின்மயாநந்தசுதனே.

தரு, இராகம்-பைரவி, ஆதிதாளம்.

பல்லவி.

வாசுதேவனே சரணஞ்சரணமை யா
வரதகோபாலகிருஷ்ணஸா மி.

அநுபல்லவி.

ஆசைவலையிற்சிக்கி மோசம்போகாமலுன் ற
னருட்பாற்கடலைவேண்டி யிருப்பாரவர்கள்ப வ
மோசனனேயுன்பாதத் தடிமையானவ னை
முனிவாயாசெங் கனிவா யா (வாசு)

சரணங்கள்.

௧. ஹரிஹரிபிரகிருதியுள் ளவரெல்லோருக்ம்போலிரு ந்
தனந்தசத்தியுள்ள பிராகி ருதரோ
விரிவானகாலரூப ராயிருக்குங்கால ரோ
வேதவேதாந்தரோ யச் சுதரோ
பெரிதாங்காலசத்திக்கே யிடமாங்காலநாப ரோ
பெருமைசிறுமையில்லா வற் புதரோ
கருணாநிதியேசிருஷ்டி யாதசமையசா க்ஷி
காலவயவசாக்ஷி யுன் னதரோ
உரைசெய்விசுவரொன்று முலகஸ்வ ரூபரோ
யுலகையெல்லாம்படைத்த பதும நாபரோ
பரவுலகையறிந்த பரஞான தீபரோ
பகருமுலககா ரணரோபிர தாபரோ (வாசு)

௨. பஞ்சபூதங்களுந்தன் மாத்திரையிந்திரியங்க ள்
பன்னுடபிராணனென்னும் நாரணரோ
நெஞ்சபுத்திசித்தமிப் படியாகச்சொல்லுகின் ற
நிலையதானசகல காரணரோ

தஞ்சர்தஞ்சம்நீருண் டாக்கியபிராணிகளுக்குச் | பூரணரே
சாத்திகாதிகுணத்தைப்
பிஞ்சக்கொடுத்துந்தேகாபி மானவகங்காரத் | தை
விளைத்துமறைந்திருப்பீ | ராரணரோ
பஞ்சாயுதரேயகங் காரமில்ல | னந்தரோ
பாடுவதுன்னையந்தச் சனகச | னந்தரோ
கஞ்சமலர்க்கண்ணரோ நின்னையிந்த | நந்தரோ
காதலனைவந்தீர் கையினில் | நந்தரோ (வாசு)

௩. ஒருவர்கண்ணிலுங்காணு திருக்கின்றகூட்சுமரோ
யுபாதிவிகாரமில்லாக் | கூடந்தரோ
ஒருமையாய்ச்சகலமுந் தெரிந்தவித்துவானீரோ
யுண்டில்லையென்னும்நர | வேடத்தரோ
கருதிலெல்லாந்தெரிவார் கொஞ்சந்தெரிவாரொன்று | ந
கட்டுண்டார்நீங்கினொன்ற | வாடத்தரோ
வருமொருவரனேக மொன்றும்பலவிதமாய்
வாதஞ்செய்வாருன்மாயை | மூடத்தரோ
பரவிபமாயவனே யுந்தனுக்கு | வந்தனம்
பணுதேகமது தேகமல்ல | விந்தனந்
திருவடியும்முதல்லோ பக்தர்க | ளுந்தனந்
தேவதேவனேமற்றத் தனமெல்லா | தந்தனம் (வாசு)

இ து வு ம து.

விருத்தம்.

சொல்லுகிறவனுநீர்சொலப்படுபவனுமாய்த்
தோத்திரசட்சுக்களாதியிந்திரியவங்கைகள்
எல்லைகளிலுருவானபிரமாணமுமா
வேதொன்றிலுமபேக்ஷையில்லாதகவியே
யில்லவரோவேதமாமூச்சுக்காற்றுள்ள
மாசாஸ்திரயோகிப்பிரவர்த்தயும்நிவர்த்தி
வல்லுணர்வில் நூலுருவமானபெருமானே
வருவிஜயகோபாலஸாமிவந்தனமே.

திபதை, இராகம்-ஸவுராஷ்ட்ரம், ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. அரியேயெங்குநிறைந்து விளங்குஞ்சுத்தசத்து | வ
ராணவாஸுதேவப்பிரத்தியும் | மனனே | யுலக
பரிபாலனஞ்செய்குவீர் ஸ்வாமிகிருஷ்ணராகியு | ம்
பலராமரூபராம்வா | மனனே | *

௨. அனிருத்தனேயுபாஸிக் கின்றவருக்குச்சா | லோ
காதிபதங்கள்தமைக்கொடுப் | பவனே | மாலே
பினுமந்தக்கரணங்களை விளங்கப்பண்ணுங்குண | ப்
பிரதீபருமானமா | தவனே | *

௩. உபாஸிக்குஞ்சன்மங்கட்கு மோக்ஷமபேக்ஷையின் நி
பொவ்வொருகோரிக்கைகளை யுண்டு பண்ணி
யபீஷ்டங்களைக்கொடுத்தும் வெளிப்படாமல்மறை வ
தாயிருக்கும்புருஷ விண்டு *

௪. மனோலயமடைந்தவர்க ளுக்குக்காணப்பட்டோ ரோ
மநதுக்குச்சாக்ஷியுமா னவரோ சாமி
அநகரோயான்மஞான மதனாலறியப்பட் ட
வளவில்லாமகிமையுள் ளவரோ *

௫. சகலகாரியசித்தி யுள்ளோரோயிந்திரியங்க ள்
தம்மையேவற்பண் ணும்ரிஷீ கேசரோ கிருஷ்ணு
புகலுமான்மஞானிகட் கிப்படியிப்படியென் று
போதிக்கும்முனிஸ்ரீநி வாசரோ *

௬. தூலசூக்ஷ்மகதி யறிந்தொன்றிலுமொட்டாம ற்
சுயம்பிரகாசமாயிருப் பவரோ வன
மாலிசகலஜகத்தும் மிடத்திலிருக்கின் ற
வகையாலதிஷ்டானரா னவரோ *

௭. உலகமில்லாதவரோ யுலசத்தையாட்டிவைத் து
முலகுக்குச்சாக்ஷியுமா னவரோ தொண்டர்
கலியகற்றிரட்சிக்கும் நீர்வித்தையவித்தைக்கு க்
காரணர்நேமிக்கரத் தவரோ *

௮. நீலவண்ணனேயிந்த வுலகுக்கிச்சையில்லா த
நீர்தாமேமிகலீலை நண்ணியே யுயர்
காலசத்தியைக்கூடும் முக்குணங்களினாலா க்
கலளித்தலழித்தலைப் பண்ணியே *

௯. அததினடத்தைகளை யறிந்துசன்மார்க்கர்க ளை
யனுக்கிரகிப்பதனையும் நாடுநீர் எங்கும்
பொதுவாய்த்துன்மார்க்கர்களை மிகவுந்தண்டித்துநல் ல
புத்தியைக்கொடுத்தும்விளை யாடுநீர் *

௧0. மூவுலகத்துமெவ ராலுமடக்கக்கூ டா
மூடஜன்மமாகுமிப்பாம் புடலஞ் சாமி
தேவரீர்க்கடங்கின தல்லாதெவர்க்கடங்கு ஞ்
செப்புதற்கெளிதோவுன் னடலம் *

௧௧. மிக்கபெரியோரைக்காத்துந் தருமநிலைநிறுத் த
வேண்டிப்பூமியிலவ தாரம் ஆகுந்
தக்கபொறுமையுள்ளோரோ யிந்தப்பாம்பினுடமூ த்
தனத்தைச்சொல்லுவதும பாரம் *

௧௨. உம்மையறியாதவ னும்மாலேயுண்டான வ
ய நாயகன் இந்தச்
செம்மையில்லாத்தொழிலைப் பண்ணினதுஞ்சரி யே
தெரியாமற்செய்தானையா தியசன் *

கங. ஒருகுற்றமாகுமிதைப் பொறுத்தனுக்கிரகிப் பீ
ருலகரக்ஷகரேமா தவனே இந்தக்
க்ருநாகத்துக்கிதோபிராணன் போம்போலிருக்கு து
கருணைசெய்திரக்ஷியுங்கே சவனே *

கச. மகத்தாநதுககமடைந்த ்வங்களப்ராணனும்ந் த
மணவாளனுக்கருட்கண் பாருமே யிப்போ
வகிப்பாயெங்கள்பாத்தாவுக் குயிர்ப்பிக்ஷைதந்தெங்கட் கு
மங்கலியபிக்ஷையுந் தாருமே *

கரு. பரவுமடுமைகளா மெங்களுக்கினிமேலி ப்
படிப்புத்தியென்றருளு வீரோ யாரும்
பரனேயுன்கட்டளையின் படிநடந்தாற்சக ல
பயத்தையும்விட்டொழிகு வாரோ *

காளியன் மூர்ச்சைதெளிதல்.

விருத்தம்.

நாககன் னியரிவகை துதித்துவேண்ட
நாராய ணனுந்திருவுள் ளமதிரக்க
மாகியங்கே படங்களுங்கா யமதாய்மூச்சை
யடைந்திருக்குங காளியனும் பணியின்மீதே
தாகிடதை யென்றுசா லடிகள்வைத்துந்
தாணடவமா டுதலைவிட்டா ரதற்குமேலப்
போகியுமூச சைதெளிந்து தயின்யமாகிப்
புததிதான் றெளிநததரி சத்திரானே.

காளியன் கண்ணனைத்துதித்தல்.

கலித்துறை.

மெருகுபிரயாசத்தி னல்வருமூச்சையும் விட்டுக்கொண்டும்
அகியானகாளியன் சேஷாங்கசாயியை யஞ்சலித்தே
மகிதிருமாதிரு வோரும்வருடும் மலாப்பதனும்
பகவனைத்தோத்திரஞ் செயதங்கைக்கேளுயர் பார்த்திவனே.

தரு; இராகம்-எதுகுலகாம்போதி, ஆதிதாளம்.

பல்லவி.

நாராயணனேஜகந் நாதா வெனை
ரக்ஷித்தருளுஞ்செம்பொற்பாதா *

அநுபல்லவி.

பேராயிரமுள்ள ஆராவமுதேயெ ன்
பிழைபொறுத்தருளாபுரி மழைநிறத்தரிய ரி (நாரா)

சரணங்கள்.

க. கொடியநாங்கள்தாமத குணத்திறபிறந்து துட்ட
கோபத்துடனேபர விங்கிசைசெய்துங கெட்ட

நடத்தையுள்ளபேரொங்க ளியற்கையிப்படிப் பட்ட
ஞாயமெல்லாம்அஸத்தா யிருக்கவேவிதித் திட்ட (நாரா)

உ. தேகத்துடனேகூடப் பிறந்ததூர்க்குண மீதே
ஐன்மத்துடன்பிறந்த தெவருக்கும்போ காதே
மாகர்த்தனே தாதாவே யிந்த்ரச்செகந்தா னேதே
வரீர்முக்குணங்களாலே வகுத்ததுவுந்தப் பாதே (நாரா)

ங. மிகவாஞ்சுபாவவீரியங் காந்தியுடனே யோனி
வித்துபுத்திரூபமிவ் வகையாகவுமபி தானி
பகவனீர்ந்தலோகந் தனிலேநாங்களுந் தானிப்
பாம்புசாதியிற்பெருங் கோபத்திலபி மானி (நாரா)

ச. விஷ்ணுன்மாயையால்நாங்கள் மோகம்மிகுந் திடுவோம்
விடக்கூடாவுன்மாயையை யென்னவென்று விடுவோம்
வண்டுழாயனேயுந்தன் கட்டளைக்குட் படுவோம்
மற்றுந்தான்நாங்களென்ன காரியத்தைத் தொடுவோம் (நாரா)

ரு. தேவரீர்மாயையைவிட்டு விடவுங்காரணந் தானே
ஜகதீசனீரேயெல்லாந் தெரிந்தவெம்பெரு மானே
மேவியிந்தக்காரியத்தைச் செயவிட்டுவிட மானே
மெய்யாவுன்றிருவுளம் படிகாத்திருக்கின் றேனே (நாரா)

கண்ணன் காளியனுக்கு விடைதரல்.

---

விருத்தம்.

நிக்கிரகா னுக்கிரக சக்தியுள்ள
நின்றிருவு ளப்படிக்கே செயலாமென்று
மிக்கவுங்கா ளியபணிந்துத் தியங்கள்செய்து
வேண்டவுங்கா ரியமனித ராகநின்ற
சக்கரபா ணியும்பகர்வார் பணிநீயிங்கு
தரிக்கொண்ணா தொல்லைசமுத்தி ரம்போய்ச்சேர்வாய்
இக்கணமுன் ஞாதியினோ டெண்டிரோடும்
ஏகென்பா ருந்தனுக்கே வாகென்பாரே.

தரு, இராகம்-சுருட்டி, சாபுதாளம்:

பல்லவி.

இனிநீயிங்கனே நில்லாதே காளியாகடல்
தனிலேசெல்லொன்றுஞ்சொல்லாதே *

அநுபல்லவி.

புனிதமிந்நதிதேடி யனேவோரும்நீராடிப்
புசிக்கட்டும்நலந்தானே ருசிக்கட்டும்ஜலந்தானே (இனி)

சரணங்கள்.

க. இனியிந்தநதி நண்ணவே பசுக்களுடன்
மனிதரும்பானம் பண்ணவே *

உனைநாஞ்சிக்ஷித்தரிதி யுபையசந்தியுமோ　　　　தி
யுசிதம்பாடுவோரொல்லைக் குங்கள்பயந்தேவையில்　　　　லை (இனி)

உ. ஏர்த்துநானுடல்　　பொருந்தும்　இங்குநீராடித்
தீர்த்தோபவாஸ　　மிருந்துந்　　*
சேர்த்தியாய்த்தேவதர்பணஞ் செய்தென்னையர்ச்சித்தக்கணந்
தீர்த்திடும்பாவங்களெல்லாஞ் செகத்தார்க்கிதுவேசொல்லாம் (இனி)

ங. த்வுரமணகம்　　விட்டாய்　　கருடபயம்
மேவிவந்திங்கிருந்　　திட்டாய்　　*
சேவடியால்நாமுந்தாளந் தீர்ந்தாடினவுடையாள　　　ங்
காவலாய்க்கொண்டிதுன்றலையே கருடபயமுனக்கில்லை　　யே (இனி)

காளியன் கடலேற்செலல்.

விருத்தம்.

அரவிணையுளவ னருளிதுசெய்ய வாடையாபரணசந் தனமும்
அற்புதஜீவ ரத்தினமாலை யலங்கிருதபூஜனை செய்து
கருடசேதனனை வேண்டியேவணங்கிக் களத்திரபுத்திர மித்திர
கணங்களுஞ்சேர வுள்ளன்பதாகக் கண்ணனைநெஞ்சினில் வைத்துஞ்
சரணைமுப்பிர தக்ஷணம்வந்துவந் தனமதுசெய்துகா ளியனுஞ்
சமுத்திரத்தீவை யடைந்தனன்மன்ற தக்ஷணமதில்விஷந் தீர்ந்தே
ஹரியரிலீலா மானுஷவிக்கிரகபகவானரு ளாலே
யமுதமாய்ருசிக்குஞ் சலமுளதாக வாகியதெமுனையா நதியே.

௰சு - ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன் திருவடிகளே சரணம்.

---

## ௰எ - ம் அத்தியாயம்.

அவதாரிகை.

விருத்தம்.

அத்தியா யம்பதினே ழிதனிற்காளி
யனைமடுவிட் டேத்துரத்திக் கனாயிலேறிச்
சுத்தியபே ரரிபணியால் வளையப்பட்ட
துயரிலாய்ப் பாடிக்கு வராமற்றனே
அத்தினமி ரவிலெமுனைக் கரையின்பாங்க
ரனைவோருந் துயில்போதிற் காட்டுத்தீசூழ்ந்
தத்திலே நின்றுமிர க்ஷித்தானென்ப
தறைவதாந் தொண்டருளம் நிறைவதாமே.

காளியன்வரலா றுரைத்தல்.

விருத்தம்.

பரிசுத்த மாயெமுனை யானதென்றும்
பணிகடல்மேற் சென்றதென்றும் முனிவனங்கே

உரையிட்ட வகையறிந்தே ராஜன்கேட்பார்
ஊணிமுனங் காளியனி ரமணகத்திற்
பரவியிருந் தவனிந்த மடுக்கேன்வந்தான்
பாம்பெல்லாங் கருடற்கா சாதிருக்கப்
பரிவற்றே காளியன்மாத் திரமென்செய்தான்
பகரென்பா ரதைச்சொலுவர் சுகனென்பாரே.

தரு, இராகம்-எதுகுலகாம்போதி, ஆதிதாளம்.

பல்லவி.

மன்னவனேகேளாய் பாகவதவுத்தம
மாபாக்கியசாலிநீயே *

அநுபல்லவி.

என்னும்ரமணகத்தி லிருந்தகாளியனுங் கா
ளிந்திமடுவினிலே வந்திருந்தகதை யை (மன்னவ)

சரணங்கள்.

க. பன்னுமுன்னொருபெரு மரத்தடியினிலெல்லாப்
பணிகளானதுந் தரித்து
நின்னயஞ்செய்துமாத மாதங்கருடனுக்கு
நிலையாய்ப்பலிகள் பிரித்து
இன்னதென்றுதான்திட்டம் பண்ணியிருந்ததை யா
என்றுற்கேளும் விரித்து
பன்னகங்கட்குங்கரு டோபத்திரமில்லாமற்
பலிதீர்த்துக்கொண்டதாகுங் கலிதீர்த்துக்கொண்டவனே (மன்)

உ. பருவத்துக்குப்பருவ மந்தமரத்தடியிற்
பலிகொடுக்கவிசைந்து
வரிவைத்துத்தங்கள்தேக ரக்ஷணைநிமித்தியம்
வயினதேயற்குத்தந்து
விருதுகட்டிப்பாம்பெல்லாம் பக்ஷித்துப்போடுவதை
வேண்டாமென்றுதொடர்ந்து
ஒருநாகம்பலிகொண்டு மற்றதின்வழிபோகா
வுறுதிபண்ணிக்கொண்டதை யறிதிமேல்நடந்தது (மன்)

ங. சத்துருதேவியின் பிள்ளையாயிருக்கின்ற
காளியபணிதாணீது
புத்தியின்றித்தானதி பலனென்றுந்தன்விஷத்தைப்
போலெவர்க்குங்கிடையாது
சத்தியிருக்குதென்றுங் கருடாழ்வாரையெண்ணமற்
றன்வீதத்தின்பலியாதும்
வைத்துக்கருடனுக்குப் பலியுங்கொடாமல்மற்றோர்
வரிப்படிவந்ததையுஞ் சரிப்பிடித்துப்போட்டானே (மன்)

ச. தானுங்கொடாமற்கொடுப் பாரையுங்கொடுக்காமற்
றடுப்பானையாவதிபூடன்

ஏனிந்தமதிகெட்ட பேனக்காயாசோமாவெ ன
றெடுத்தாலுந்தான்குடி கேடன்
என்றருந்தியாகம் பிராணத்தியாகமேயல் லா
லென்னசொல்லுவேன்வி ராடன்
மானின்றனையவந்த வகைபோற்காளியப
மடத்தனத்தினலிவை தடுத்தானின்னமுங்கேளு ம் (மன்)

௫. கட்செவிகாயளிலும் தன்பலிமற்றப்ப லி
களுங்கருடனைச் சேராமற்
பட்சித்துப்போட்டானேயா விஷசர்வத்தினா லே
பகவானிஷ்டலாய் பாராமற்
கட்சிகட்டவுங்கண்டு மதிவேகத்துடன்வந்து ங்
காளியன்மேற்கோபந் தீராமற்
பட்சிராஜனவனைச் சிட்சிக்கவேணுமென் று
பரபரப்பாய்த்துரத்தி வரவராக்கிரமித்தா ர் (மன்)

௬. வேகத்துடனேவந்து மேல்விழுங்கருட
விஷப்பற்படையெடுத் தானே
ஆகம்படபடத்துக் காளியனுனவனு ம்
அனேகம்படமெடுத் தானே
சேகரமாய்க்கொடியன் நாவைத்துளாவிக்கொண் டு
சீறிமூச்சைவிடுத் தானே
மாகொரேங்களான கண்களாற்பார்த்துவிஷ ம்
அடித்தான்பற்களினலே கடித்தான்கருடனை யே (மன்)

௭. மதுகயிடவனைவென்ற விஷ்ணுவைச்சுமப்பவ ர்
மாவேகந்தான்படைத் தாரே
கதுமென்றேதாட்சியர்க்குப் புத்திரராயிருக்கின்ற ர்
காளியனெஞ்சுடைத் தாரே
கதிகோபங்கொண்டவனைத் தள்ளிவிட்டுஞ்சுவர் ண
காந்திச்சிறகாற்புடைத் தாரே
அதனாற்காளியனஞ்சிக் கருடன்வரக்கூடாதா ம்
அந்தமடுவிலோடி வந்துவிட்டானைய னே (மன்)

இ து வு ம து.

வி ரு த் த ம்.

கருடனம்மடுவில் வராதிருப்பதற்குக் காரணங்கேணீ பண்டொருநாட்
கனபசியுடன்வந்த மடுவிற்சரிக்குங் கயலினையெடுத்திட வந்தத்
தருணமங்கிருந்த சவுபரிமுனியாந் தபோநிதிவெகுவித மாகத்
தடுக்கவுங்கேளா தடத்தினலந்தச் சலசரராஜனைக் கலுழன்
ஒருமிஷத்திற் கொண்டுபோயதனை யுந்தினமற்றுள சேல்க
ளுந்துயரடைய வருந்தவனம்மீ னுக்கெலாங்க்ஷேமமுண் டாகக்
கருணையாற்சொனது விமடுவிலினிமேற் கலுழன்வந்திதுகளைத் தொட்டாற்
காலனுமிவனை யேதொடவென்றார் காளியனதுவறிந் தனனே.

ச. உங்களைக்கேட்டன்னம்வாங்கிக் கொண்டு வரச்சொன்னார்க
ளெங்கள்வார்த்தைமெய்யாகக் கண்டு *

ரு. தருமத்தையறிந்தபிரா மணரோ யுத்தமர்களுக
ளொருமையாய்க்கேளுமையாசற் குணரோ *

சு. அங்கவர்க்கன்னங்கொடுக்க வேணும் என்பதாயிஷ்ட
மங்களுக்கிருந்தாற்றருங் காணும் *

எ. வாரும்பெரியோரேபசு பந்தஞ் சயுத்திராமணி
நேருமிந்தயாகபரி யந்தம் *

அ. மாட்சிமையாகமதுவே மத்த யாகங்களிலே
தீட்சிதன்னங்கள்தோஷமோ சித்த *

ஆயர்கள் வினவியதற்குத் தீக்ஷிதர்கள் விடை தராமை.

---

விருத்தம்.

தடையறு பிராமர்கண்ண
ருடையமொழி யேவல்கொண்டு
மிடையரிது சொல்லவேத
முடையவர்கள் பேசிலாரே.

தரு, இராகம்-காம்போதி, அட்தாளசாபு.

பல்லவி.

ஒன்றும்பேசாம லிருந்தார் அன்ன
முண்டில்லையென்பதுந் திருந்தார் *

அநுபல்லவி.

அன்றேபிராமணர் மார்களென்பதும் நாமே
யென்றேயாணவம்மிஞ்சி யிருந்தாரவர்கள் தாமே (ஒன்)

சரணங்கள்.

க. கொஞ்சமானசுவர்க் காதிபோகங்களை க
குறித்தபேர்க ளாயும் இன்னம்
மிஞ்சும்விதனங்கொடுக் கின்றகர்மத்தி ன்
மேலிஷ்டமானோ ராயும் நெஞ்சிற்
கிஞ்சித்துமறிவில்லாத கேவலம்பாலர்கள் போலும்
நெஞ்சினிலெல்லாந்தெரிந்த நேர்மையாளர்போலும் மேலும் (ஒன்)

உ. வயதுசென்றிட்ட மானிகளாம்பிரா
மணரென்றே பேரிட்டார் அவர்
துயசருவேசனன்னங் கேட்கச்சொன்னதையு ந்
தோணுமலிருந் திட்டார் கேளு
மய் மானுஷதேகாபி மானியாந்துராத் மாக்கள்
ஜய கிருஷ்ணனைநராிற் சேர்த்தெண்ணினார்தீக்ஷி தாக்கள் (ஒன்)

௯. தேசகாலமந் திரந்தந்திரங்க ள்
திரவிய ருத்துக்களுஞ் சொல்லும்
மாசிலாதவங்கி தேவாயாகமெ ஐ
மானென்று ருத்துக்களுந் தர்ம
வீசுரச்சொரூபமாமவ் வீசுரனைக் குறியாமல்
ஆசிலாப்பகவானுமை தோட்சஜனொன் றறியாமல் (ஒன்)

கண்ணன் ஆயர்களை தீக்ஷித பத்தினிகளிடம் அனுப்பல்.

விருத்தம்.

ஆயரன்னங் கேட்டதற்கு வேதர்தாமே
யாதொன்றும் பேசாம லிருந்தார்மன்னு
மாயனிடந் திரும்பிவந்து நிராசையாக
வசனிக்கக் கேட்டுநகை செய்தேலோக
நாயகரு மிடையர்களைப் பார்த்துபின்னும்
நாட்டுமனி தரினடத்தை காட்டிச்சொல்வார்
ஆயபரி க்ஷித்தனே கேளாயென்று
சுகசொல்வார் பிரமதா ரகர்சொல்வாரே.

தரு, இராகம்-மத்தியமாவதி, அடதாளசாபு.

பல்லவி.

ஆயரே வாரும் நங்கையாரிடம்
அன்னமும் வாரும் *

அநுபல்லவி.

நேயங்கொண்டிடுவோரிதோ ருபாயங்கணடீ ரே (ஆயரே)

சரணங்கள்.

க. காரியங்கொள்கிறவ ேனாரிடந்தட்டினற்பி ன்
னோரிடத்திலாவது சாரியங்கொளளுவா னே (ஆயரே)

உ. சங்கருஷணருட னுங்கூடக்கிருஷ்ணன்வந் தே
யிங்குற்றுரொன்றேவேதர் மங்கையர்க்குச்சொல்லுவீ ர் (ஆயரே)

௩. பின்னரவர்கள்தானே யென்னிடம்பக்தியுள் ள
வுன்னதர்தேவியானை அன்னங்கொடுப்பாக ளே (ஆயரே)

ச. மாட்சிமைபெருகிய திட்சிதமங்கையர்க்கு ச்
சூட்சஞாபகம்பண்ணுந் தாட்சியென்னவுங்கட் கு (ஆயரே)

ரு. வீட்டிற்றேகசஞ்சாரங் காட்டிப்பக்தியென்னிட ங்
கூட்டிச்சஞ்சரிக்குஞ்சீ மாட்டியவர்கள்தா மே (ஆயரே)

ஆயர்கள் தீக்ஷிதபத்தினிகளை அன்னம் வினவல்.

கலித்துறை.

இத்திறங்கண்ணன் திருவுளம்பற்ற விடையர்களும்
பத்தினிசாலையிற் சென்றலங்காரப் பணிமொழியா

ருத்தமதீக்ஷித நங்கையனைக்கண் டிறவணங்கிப்
பக்தியுடனுரைப் பாரதைக்கேளு பரீட்சித்தனே.

தரு, இராகம்-மாஞ்சி, அடதாளசாபு.

பல்லவி.

நங்கைமார்களே யன்னந்தாந்தரவேணும்
நங்கைமார்களே *

அநுபல்லவி.

இங்கிவ்விடத்தின்சமீ பங்களிற்சஞ்சரிக்கி ற
வெங்கள்கிருஷ்ணனேவ வுங்களிடத்தில்வந்தோம் (நங்கை)

சரணங்கள்

க. அந்தணர்மின்னார்களே வந்தனமுங்கட்குச்செய்வோஞ்
சிந்தைகூர்ந்துநாங்கள் வந்தவகையிதா மே (நங்கை

உ. கண்ணனும்ராமனுன வண்ணனுடன்கூ ட
வெண்ணுமிடையர்சேர நண்ணவும்வந்தாரிங் கே (நங்கை)

ங. பசுக்களைமேய்த்துக்கொண்டு திசைக்குளெங்குந்திரிந்தா ர்
பசித்திருக்குங்கிருஷ்ணனும் பசுபரும்புசித்தி ட (நங்கை)

தீக்ஷிதபத்தினிகள் கண்ணனிடம் அன்னங்கொண்டுவரல்.

---

தாழிசை விருத்தம்.

கற்புநங்கையர்க ளாயர்சொன்னதொடு கண்ணன்வந்ததை யறிந்துமே
காணவேணுமெனு மாசையாலுமவர் கதையினாலேதெளி மனதுடன்
அற்புதம்பெறவெ மூந்துநாலுவித வன்னமும்அறு சுவைத்ததா
யததனுக்கிசைவு பாத்திரங்களி லமர்த்தியங்கையி லெடுத்துமே
பற்பலாறுகள் தனிஷ்டனுகிய பதிச்சமுத்திரனை நாடியே
பரவியோடிவரல் போல்வரும்பொழுது பதிசளோடுதுணை தாதைகள்
விற்பனம்பெருகு புத்திராளிவர்கள் விளையவந்துதகை பொழுதினும்
மின்னனாரவரை யெண்ணிலாரறிவ பின்னனேசகுண மன்னனே.

தீக்ஷிதபத்தினிகள் கண்ணனைக்கண்டு மகிழ்ச்சியடைதல்.

---

வெண்பா.

உத்தமசு லோகனொனு மோங்குபக வன்கதைவி
சித்திரங்கள் கேட்டுத் தெளிந்தவராம்—பத்தினிமார்
பண்ணனைய சொல்வேதர் பைந்தொடியா ரோடிவந்து
கண்ணனைக்கண் ணாரக்கண் டார்.

தரு, இராகம்-மோகனம், ஆதிதாளம்.

பல்லவி.

கண்ணனைக்கண்ணாரக் கண்டாரே வேதர்மங்கைய
ருண்ணிறைந்தானந்தங்கொண்டாரே

அநுபல்லவி.

பண்ணனைத்துங்காணுக விண்ணனைநீலமே ௧
வண்ணனையப்பிகைக கண்ணனைத்தாமனை க் (கண்ண)

சரணங்கள்.

௧. சோசந்திர்க்குமசோகந்தளி ராலே விளங்கியெங்குஞ்
சூழ்முனைதிரவன மேலே யிடையர்கூட்டஞ்
சேகர்மாய்ச்சூழவன்பி னாலே தமையனுடன
சேர்ந்துசஞ்சரிக்குந்திரு மாலே யாமளவர்ண

ராகப்பீதாம்பர மோகனவன மாலை
நாசரீகமாம்மயிற் றோகைதளிரின் மாலை
வாகுநற்சங்கப்பொடி யேகாலங்கார மாலை
யோகசித்திரைநீங்கும் யோகரகித மாலை (கண்ண)

௨. சுந்தரக்கூத்தாடிவேஷங் காட்டுங் கிருஷ்ணனுந்தோழன்
தோளிலேயிடதுகையைப் போட்டும் பின்னொருகையாற்
செந்தாமரைப்பூச்சுழற்றுந் தாட்டுங் கருநீலபுஷ்பஞ்
செவியின்மேலேதரித்திடுங்கொண்டாட்டுஞ் சாயக்கொண்டையும

அந்தமுள்ளகபோல முந்தரளத் தின்னல
மந்தகாசமதுமி னைந்தமுக மண்டல
விந்தையுளவரா முகுந்தர்வெகு பிரபல
நந்தகுமாரனென வந்தருளுங கமலக் (கண்ண)

௩. தினவனையிலரிசதையாந் தேனைச் செவியாலுண்ணுந்
தீக்ஷிதபத்தினிகளாகும் மானை நேர்விழியாதா
புனிதராகவேயெம்பெரு மானை நந்தனெசோதை
புதல்வனொனலீலைசெய்கின் றோனை நாடியேவந்து

பனிமொழியாருங்கண் ணனிடத்திலே லயித்து
கினைவொன்றிமீதே தனதுபாவையை வைத்து
வனமாலியையிதையந் தனிலேயாகரு ஷித்து
மனதாலிவகனைசெய்து கனபரவச முத்துக் (கண்ண)

கண்ணன் தீக்ஷிதபத்தினிகட் குரைத்தல்.

---

விருத்தம்.

மானதா லிங்கனஞ்செய் தீக்ஷிதாளின்
மடந்தையர்கள் பரவசமா கினதெவ்வாறு
நானெனுமா ணவமுள்ளோன் சுழுத்திதன்னில்
லயிப்பதுபோல் மன்னவனே நங்கைமார்கள்
தானவதை பரவசமா னார்களகண்டாய்
சகலவாசை களையும்விட் டிருக்கும்மின்னு
ரானவர்தம் மைக்காண வந்ததாலே
யரிசொல்வார் ஐயமிகுஞ்ச வரிசொல்வாரே.

திபதை, இராகம்-சங்கராபரணம், சாபுதாளம்.

கண்ணிகள்.

௧. மாபாக்கியசாலிகளே நல்வரத்தா க
வந்தீர்களாநங்கை யரோ
கோபாலனுமென்னைக் காணவேண்டிநீங்க ள்
கூடிவந்ததென்சொல் வீரோ

௨. ஏதுசொல்வேன்வாருங் களிருங்களுங்க ட்
கிப்போநானென்னசெய்ய வேணும்
யாதொருகாரணத்தா லெங்களைப்பார்க் க
வெண்ணிவந்தீருண்மை காணும்

௩. நானென்பதோரா ணவமுள்ளபே ர்
நாட்டினிற்பொட்டையர் தாமே
ஏனென்றுலென்பாற் பிரீதியோரோது வு
மில்லாமல்வாராது தாமே

௪. எப்படியென்னிற்றன்னுத் துமாவுக்குப்பிரி ய
மேற்கின்றவஸ துககள் மீதே
யெப்படிப்பிரியமோ வப்படிவிசவா ச
மென்னிடம்வரமாட் டாதே

௫. அதனுலவர்கள்தாமே பொட்டையரென்பதற் கோ
ஞாயமுமில்லைமங்கை மாரோ
மதிமான்களேயோரோது வின்றியென்மேலேவி சு
வாசம்வந்ததுகண்ணுள் ளோரோ

௬. தனதுபிராணன்புத்தி மனங்தேகம்பெண்டீர்பிள் ளை
தனங்களிதெல்லாம்புவி மீது
எனசம்மந்தத்தாற்பிரிய மோவதல்லாதுவே றே
யிருக்கும்பிரியபதார்த்த மேது

௭. எல்லாமறிந்துமென்மே லன்புவைத்துவந்தீர்க ள்
யாகசாலையிற்செல்லு வீரோ
நல்லோருங்களபதிக ளானதீக்ஷிதர்யாக ம்
நடத்திநிறைவேற்றுகி ன்ரோ

௮. உங்களாலவர்களுக் கில்லறமிருப்ப து
முண்மைப்பலன்கைகண்ட நீரோ
மங்களமிதுமுங்கள் பதிகளருள்பொருந் தி
வாழ்வீர்யாகத்திற்செல்லு வீரே

தீக்ஷிதபத்தினிகள் கண்ணனைப்பார்த் துரைத்தல்.

---

விருத்தம்.

பத்தினிசாலைசெல்லும் படிபகவனுந்தான்சொல்லத்
தத்தைதவாசகத்தரா்மந் தணர்மனையாட்டிமார்கள்

சித்தமத்தியிலேகண்ணன் றிருவடிபதிப்பாரந்த
வுத்தமிமார்முகுந்தர்க் கோதுவாரீதுபாரே.

தரு, இராகம்-ஆனந்தபைரவி, ஆதிதாளம்.

பல்லவி.

இப்படியுஞாசெய்வதோ கிருஷ்ணா தேவரீர்முன்ன
மிசைத்ததைநிலைநிறுத்துவீர் கிருஷ்ணா *

அநுபல்லவி.

எப்படியென்னில் நகைத்துப்போ கா
ரொன்றுண்டார்களென் றீரோ
யென்பாதமடைந்தார்திரும் பா
ரொன்றெடுத்துந்தேவ ரீரோ சாமி (இப்)

சரணங்கள்.

க. சகலமானபந் துக்களையுந்தள்ளிக் கடுமையாய்ப் பாந்
தாமனையுந்துமாயலங்கிருதபாதத் தடுமையாய்ப *
பக்வனேயுமக்கன்பு பூணும் படியாகவந்தோங்காகக வேணும்
இகமதிலெங்கட்கென்ன காணு மிருக்குதினியுங்கிருபை யூணும் (இப்)

உ. எங்கள்புருஷருடனே தந்தைமார்கள் புத்திரர்கள் சேரா
ரொனிலோதுணைவர் சுற்றத்தார்களேது மித்திரர்கள் *
செங்கமலநயனனே பாங்கா திருசகண்டகண்ணுக்கென்னநீங்கா
பங்கயமலர்ப்பதத்தை நீங்காப் பதம்பெறவந்தோமேயடியோஙகா (இப்)

ந. உந்தந்திருவடித்தாமரையேசரணகதி யையா விந்த
வுலகினில்வேறுகதியுண்டோசொல்லுமுத்தமனேதுய்யா *
கந்தர்ப்பசதகோடி சுந்தா கருணாநிதியேநி ரந்தர
சந்ததமகலாவ ரந்தர சரணம்யாதவகுல துரந்தர (இப்)

கண்ணன் தீக்ஷிதபத்தினிகளுக் குரைத்தல்.

---

விருத்தம்.

மனதையென்னிடத்திற்கூட்டி வைப்பவர்நித்தியந்தான்
எனதிடமிருக்கலாம்நா னிருப்பதுமவரிடத்தே
யனாநடைமிரிதல்லா லவையவக்கூட்டிஞலே
யெனசொலுஞ்சொல்லுமென்றே யெம்பெருமான்சொல்வாரே.

தரு, இராகம்-தோடி, சாபுதாளம்.

பல்லவி.

மனதே யென்னிடத்தில்வைப்பார்க்குநான் றனதே.

அநுபல்லவி.

மனம்விரிந்துருவிந்தது மாதவம்நல் லாரோ
மனதென்பால்வைத்துநீர் வந்தடை வீரோ (மனதே)

சரணங்கள்.

க. வாருங்கள்தீக்ஷிதபத் தினியாம் நங்கையரே
வந்தென்னிடத்தில்நின்றுந் திரும்பு மங்கையரே

சேருமென்னுத்தரவிற் செல்லுவீர் செங்கையரோ
சிந்தைகூர்ந்தழைத்துக் கொள்வார்க ளங்கையரோ (மனதே

உ. தந்தைஅண்ணன்தம்பி மக்களின்னஞ் சூழ்வர்
சகலவிதபந்துக்க ளுடனுங்கள் கேழ்வர்
இந்தவுலகுதெய்வங் களுங்கிருபை நீழ்வர்
எவருமுங்களச்சம்ம தித்தழைத்து வாழ்வர் (மனதே)

௩. நாங்களும்மைப்பிரிந்து சகியோமென் றாலும்
நரனென்னையடையவேண் டுவர்க்குமெக் காலும்
ஈங்கவையவங்கள்கூட் டுறவினு லேலும்
எனதுபிரீதியுமாசை யுண்டாமோமென் மேலும் (மனதே)

தீக்ஷிதபத்தினிகள் யாகசாலையடைதல்.

---

விருத்தம்.

அவையவக்கூட் டுறவினு லென்னைச்சேர்த
லரிதரிது தீக்ஷிதபத் தினிகாளென் றுஞ்
செவையாயென் னிடத்தில்மனம் வைத்தீராற்
சீக்கிரம்வந் தெனையடைவீ ரெனவெசோதை
சுவைமிகுந்த திருமுலைப்பா லுண்டவாயர்
சொல்லிவிடை கொடுக்கவந்த யாகசாலைக்
கிவைவிழியார்சென்றார்க ளிதனைக்கேட்குங்
கிழமைதான் மன்னவுங்கள் பழமைதானே.

திபதை, இராகம்-முகாரி, ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. தீக்ஷிதபத்தினிகளும் யாகசாலையநோக்கித்
திரும்பிவந்தார்கள் குருகுலமன்னு
சாக்ஷியென்ன அக்ஞை யில்லாமற்பெண்டுகளைத்
தானழைத்தார்கள் குருகுலமன்னு

உ. அவர்களுடனேகூட யாகத்தைநிறைவேற்றி
னார்களந்தணர் குருகுலமன்னு
எவர்களறிவாரையா கிருஷ்ணலீலையையெல்லா
மின்னஞ்சொல்கிறேன் குருகுலமன்னு

௩. பகருந்தீக்ஷிதபத்தி னிகளிலேயொருத்திதன்
பர்த்தாவினுலே குருகுலமன்னு
தகைவாயரியிடத்தில் வரக்கூடாமலேயாக
சாலைதனிலே குருகுலமன்னு

ச. இருந்தாளிருந்தபோதும் அரிரூபலீலையெல்லா
மிதையத்தில்வைத்துங் குருகுலமன்னு
விரிந்தகர்மபந்தமாந் தேகம்விட்டடைந்தாளே
விஷ்ணுசாயுச்சியங் குருகுலமன்னு

௫. அறுசுவைப்பதார்த்தங்க ளுடன்நாலுவகையா ன
வன்னமுந்தானே குருகுலமன்னு
நறுவிசாய்வேதியர்கள் மங்கையர்தந்ததெல்லா ம்
ராமகிருஷ்ணருங் குருகுலமன்னு

௬. சோலாகலஞ்செய்துகொண் டிடையர்களுடன்தாமு ங்
கூடபுசித்தார் குருகுலமன்னு
லீலாமானுஷகிருஷ்ணன் பரமபுருஷர்தா மே
யிவ்வகையாகத் குருகுலமன்னு

௭. பசுக்களிடையிடையர்க ளிடைச்சிகளுடன்கூடி ப்
பாடியாடிக் குருகுலமன்னு
பிசத்தைபபோல்விளையாடி மனிதர்நடத்தைகளி ன்
னேர்மைகாட்டினார் குருகுலமன்னு

தீக்ஷிதர்கள் தங்களைத்தாமே நிந்தித்தல்.

---

விருத்தம்.

நரருலகை யனுசரித்துக கொணடிந்த
நடத்தைநா ராயணன்செய் தாபூவிற்கே
சுரராதீ க்ஷிதாகளிரா மனெடுங்கணணை
சோதனையா கதைதையாங் கொடாமற்போனோம்
அரியிடத்தி லபராதஞ செய்தோமெனறும
அவாமனைவி களைககுருவா யெண்ணியிாதத்
தெரிவையாபோல் மாலபகதி நமககில்லெனறு
சிந்திபபாா தஙகளைததாம நிநதிபபாரே.

தரு, இராகம்-பந்துவராளி, ஆதிதாளம்.

பல்லவி.

மிகுந்ததாயறிவிருந்தும் வைகுந்தநாதவனமாலி
முகுந்தருக்கபராதஞ்செய்தன மே.

அநுபல்லவி.

ஜகந்தனிலாயர்க்குள்ளே புகுநதுராமகிருஷ்ணர்க ள்
பகாந்தைதயெண்ணுமல்நாம் அகந்தையாயிருநதிட்டோமே (மிகு)

சரணங்கள.

௧. அரியிடத்தேவர்பரா முகம்பண்ணுவார் க
ளவருடஜன்மமென்ன காணுந
தரணியிலவர்யோகந் தவசு தீக்ஷைமூன்றையு ந்
தானேநன்றாகச்சுட வேணும்
விரதமறிவுகுலங் கிரியையவர்சமத்தி ன்
மேன்மையிதினாலென்ன ஆணும்
முராரிபுவாம்பகவன் மாயையோகிகளையு ம்
மோகஞ்செய்வதுறுதி யாகுமிதேவற்குத் தோணும் (மிகு)

உ. மனிதர்குள்ளேபெரிய வேதர்வர்ணத்திலா மே
வந்துபிறந்தறிவு மிருக்க
இனியென்னகாரியந்தான் நமக்குந்தெரியாமற் போ
யிதைவிடச்சொல்வதென்ன பெருக்க
முனிகள்மோகிப்பதற்கு மிதுவேசாக்ஷியதா மே
மூடபுத்தியையரு வருக்க
நினைவில்லாமல்முகுந்தர்க் கபராதத்தைச்செய்தோ மே
நிலத்தினிலேயசோவாச் சரியமாணவஞ் செருக்க (மிகு)

௩. பாரும்பெண்டுகளுக்குஞ் சகத்குருவானகிருஷ் ண
பக்தியுண்டாய்க்கிரக தொந்தஞ்
சாரும்பிள்ளைகளாதி யானதிவைகளென்னு ஞ்
சமுசாரபாசவனு பந்தம்
நேருமிதுகளெல்லாம் நீக்கிவிட்டார்களிந் த
நேரிழையார்க்கும்பிரமா னந்தஞ்
சேரும்வகைகிடைத்த தேநமக்கந்தவ கை
தெளிவில்லாமற்போச்சுதே ஜகத்தில்நாமுடல்சு மந்தம் (மிகு)

௪. அந்தோவுபநயனங் குருகுலவாசந்த வ
மான்மவிசாரஞ்சுசி யேது
சந்தியாவந்தனுதிக் கிரியையுமில்லாமாத ர்
தானப்படியிருந்த போது
இந்தப்பரிசுத்தகீர்த்தி யுள்ளயோகேசரீ ச
ரென்னுங்கிருஷ்ணமூர்த்தியின் மீது
வந்ததேதிடபக்தி நமக்குமுன்சொன்னதெல்லா ம்
வகையாயிருந்துங்கிடைத்த தோயிதையறியொண் ணுது (மிகு)

இதுவுமது.

விருத்தம்.

பெண்டுகட்குங் கடையாகி நமதுபுத்திப்
பிரமையால் விஷவிச்சை மிகுந்துன்மத்தங்
கொண்டுகொண்டல் கொண்டவண்ணன் நேரேவந்துங்
கூறறியாக் கர்மிகளா யிருந்தோமந்த
விண்டுபெரி யவர்க்கெல்லாங் கதியாகின்றார்
விளையாட்டு யாசகங்கேட் டாரிதல்லால்
உண்டுசுகிக் கவுங்குறையோ வரியேயெங்கு
முறைவென்பா ரவர்க்கெல்லாம் நிறைவென்பாரே.

தரு, இராகம்-நீலாம்பரி, ஜம்பைதாளம்.

பல்லவி.

அந்தஅரிசோதனையே யிந்தவகைதானே.

அநுபல்லவி.

தந்தையாயுலகைப்படைத் தானையிந்தக்கோ குலமே
நந்தகுமாரனைச்சலஜ நயனனென்றறிந் திலமே (அந்த)

சரணங்கள்.

௧. இடையர்வார்த்தைகளினாலே ஞாபகம்பண்ணினாரல்லா ம
லெங்கும்பரிபூரணமா யெல்லாம்நிறைந் தவரோ
அடைவானகைவல்லிய முதலானதுகளுக்கெல் லா
மனுக்கிரகநாயகரா யிருக்கின்றமா தவரோ (அந்த)

௨. கேவலமாகிடாராக விருக்கின்றநம்மாலேய ரீ
கிருஷ்ணனுக்காகவேண்டுங் காரியங்க ளென்ன
கோவலர்வேஷந்தரிக்கு மூலகநாயகர்க்கன்ன ம்
கொடுக்காமற்போனதிந்தக் கொடுமையென்ன பன்ன (அந்த)

௩. ஜகன்மாதாவாம்லட்சுமீ தேவியானவளித ர்
தேவர்களைநீக்கிவிட்டு அரிபாத தாளே
சுகபரிசங்கிடைக்குமென்னு மாசையாலென்னேரமுந்த ன்
தோஷத்தீர்ந்துமோட்சமது பெறவடையு றாளே (அந்த)

௪. முகுந்தனெனும்புருஷரொரு யாசகங்கேட்பதுமூல கை
மோகஞ்செய்யவல்லாம லவர்க்கென்ன வேணும்
இகந்தனிற்றேசகாலந் திரவியமந்திரதந்திர ம்
இருத்துக்களக்கினிதேவர் களிதெல்லாமவர் காணும் (அந்த)

௫. எஜமானன்யாகமதிலுண் டானதருமங்களெல்லா ம்
யாதொருத்தருடரூப மென்னும் வேதம்
அயனையோகேச ரீசர்யாதவரிடத் தி
லவதரிக்கக்கேட்டுந் தெரியாததென்ன போதம் (அந்த)

தீக்ஷிதர்கள் கண்ணனைத் துதித்தல்.

---

விருத்தம்.

நடங்கரிய பணிமீதிற் செய்துவேணு
நாதங்கோ வியர்மயங்கப் புரிந்தும்பச்லை
திடங்களாய்க் காளியிடம் போட்டவாயர்
திருமின்னார் பால்வரமீந் தானைவேத
ரடங்சலுஞ்சிந் தனைசெய்து மடமைதீர்ந்தே
யவரவர்தாந் தமைநிந்தை செய்துகொண்டு
தடங்கலில்லா மனதுளகண் ணன்மேலன்பு
சாற்றுவார் மிகமிகவு மேற்றுவாரே.

தரு, இராகம்-பூரிகலியாணி, ஆதிதாளம்.

பல்லவி.

சாமியுமக்கு வந்தனம் கிருஷ்ண
சாமியுமக்கு வந்தனம் *

அநுபல்லவி.

தீமைதவிர்க்கும்வாஸு தேவதேவதேவ (சாமி)

சரணங்கள்.

௧. அரியுன்மாயையாற் பூமியி லுழல்கிறோம்
கருமமார்க்கங்களிலே சுழல்கிறோம் (சாமி)

உ. ஆதிபுருஷனின் மாயையதி ஞாலே
பேதமையாய்ப்புத்திப் பிரமைகொண்டோம் மாலே (சாமி)

ங. அரூபரூபவனந்த கிருஷ்ணர்கள் நீங்கள்
சொரூபஞானமது தோணுத நாங்கள் (சாமி)

ச. எங்களக்கிரம மிதனைப் பொறுத்திடுஞ்
சங்கஞ்சக்கரஞ்சா ரங்கந் தரித்திடும் (சாமி)

இதுவுமது.

விருத்தம்.

அளிமுரலுந் துளவணியுஞ் செங்கண்மாலை
யந்தணர்க ளுந்துதித்தே தங்கள்பூவங்
கனைநினைந்து நினைந்துருகி யந்தமாலின்
கணபரியா சத்தின்பின் பவரைக்காண
வுளம்விரும்பிச் சேர்வைசெய்ய வேணுமென்றே
யுறுதியுட னெதுபதியே பிரமமென்று
தெளிவுவந்த போதுங்க ளனுக்கேயஞ்சித்
திரிகுவார் வாராமற் பரிகுவாரோ.

உங-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன் திருவடிகளேசரணம்.

---

## உச-ம் அத்தியாயம்.

அவதாரிகை.

விருத்தம்.

சாமிசில தாட்சேபித் திந்திரன்பூஜை
தனைத்தள்ளிக் கோவர்த்த னகிரிப்பூஜை
நேமித்தும் நிலத்தேவர் கர்வம்போக்கி
நீள்விசும்பிற் றேவரிடத் திலும்வலாரி
மாமதபங் கப்பொருட்டா யவன்யாகத்தை
மாற்றினதுஞ் சீதரனர் தொகுத்துமிங்கே
தாமுரைப்பா ரிருபத்து னன்காகின்ற
சருக்கந்தான் பாகவதப் பெருக்கந்தானே.

இந்திரன் பூஜைக்காரம்பித்த நந்தனைக் கண்ணன் வினவல்.

விருத்தம்.

அந்தவே தியர்கஞ்சற் கஞ்சித்தங்க
ளாச்சிரமத் தேதானே யிருந்தாரல்லால்
வந்திலரோ கண்ணனிடங் கண்டாய்மன்று
மால்பலரா மனும்பிருந்தா வனத்திருந்தார்
இந்திரபூஜைக்காரம் பித்தாராய
ரெங்குநிறைந் தெலாமறிந்த வரியுங்கண்டே

நந்தன் முதற் பெரியகோ பர்க்கெல்லாம்வ
ணங்குவா ருனையதுதொ டங்குவாரே.

தரு, இராகம்-சங்கராபரணம், சாபுதாளம்.

பல்லவி.

இந்தப்பூஜையார்க்குப் போடுநீர் நீங்க
ளேதுக்கெல்லோருங்கும்பற்கூடுநீர் *

அநுபல்லவி.

இந்தப்பூஜையார்க்கு ஈதென்ன விந்தையே
யானறியச்சொல்லுவீ ரையாவென் றந்தையே (இந்த)

சரணங்கள்.

க. இந்தயாகத்தினுட பல னென்ன
விதற்கதிகாரியெவர் தேவதையார் பன்ன
எந்தக்காரியத்தாலே சாதிப்ப
திதுவென்றுரைசெய்குவீ ராய்ப்பாடி மன்ன (இந்த)

உ. பூஜையிதின்மேலுங்கட் கதிவிசு வாசம்
பொருந்துதென்பதுகாணு தேனிப்பிர யாசம்
மாசிலாமகான்கட்கு வீணேயுல் லாசம்
வருமோநானறிந்ததா லுண்டாமோ மோசம் (இந்த)

ங. எல்லாஞ்சரிபார்ப்பதுநல்லோர்தம் நிலையே
பேதும்மறைவாய்ச்செய்ப வேண்டிய திலையே
யல்லோவொன்றுஞ்சொல்லாம லசைக்கிலீர் தலையே
யையாவிதனைக்கேட்க வெனக்குங்க வலையே (இந்த)

இதுவுமது.

விருத்தம்.

வங்கணமி குந்தவன்மித் திரனும்பாரில்
வலியபகை யாளியுஞ்சத் துருவென்றாகும்
அங்குமிங்கு மிருப்பனுதா சீனன்றானே
யவனையுஞ்சத் துருவுடனே சேர்க்கலாகும்
இங்கிவையின் மித்திரனைத் தன்னைப்போலே
யெண்ணுவது லகவழக்க மிந்தப்பேதம்
உங்களைப்போ லொத்தபெரி யவர்கட்கையா
வுண்டாமா வென்றுபின்னும் விண்டார்மாலே,

தரு, இராகம்-அடாணு, ஆதிதாளம்.

பல்லவி,

மித்திரருடன்கூடிவி சாரித்தொருகாரியஞ்செய் ய
வேணுமேயிதென்னநீர்செய்யும் விந்தையேயென்றந்தை யே.

அநுபல்லவி.

உத்தமகோபாலராம்ம கத்துவமுள்ளவ ரே
இத்தனையிலேயிதுவி சித்திரமையாவென்னை யா (மித்தி)

சரணங்கள்.

க. அவனதுசெய்கிறானே யிப் போதே நாமு
மதனைச்செயவோமென்று செய்யொண் ணாதே *
அவனியிற்சனங்களான தறிநதறியாமலுங் கர்ம
மெவைகளேயுஞ்செய்யுதேயதி லிருககினறதைக்கேளும் வாமம் (மித்

உ. அறிவுள்ளகல்விமான்கள் பிர வர்த்திககும் அவாக்கும்
அந்தககருமபலமுஞ் சித்திககும *
அறியாதுடம்பத்துககாக வாரம்பிப்பார்க்கதின பலன்
குறைவறபபலிககாதையா கோகுலத்தின்நீர்பிர பலன் (மித்

ந. சாத்திரத்தையாய்ந்துதிதீர் மானமா வுலகிற்
சகலருஞ்செய்வதைககண்டுநீ தானயா *
பாத்திரநானல்லவோவெப படியுஞ்சொல்வீர செய்யரோ
நேததிகாணுமவேறறுமையாய் நீரொண்ணலாமோ துய்யரோ (மித்

நநதா கணணனுககு இநதிரன்பூஜையின் வரலாறு கூறல்.

---

விருத்தம.

துழைக்கண்ணிக் கண்ணரிவை கேடகநந்தர்
சொல்லுவா ரகோகுழநதாய் கேளாமையயா
மழைககதிகா ரியுமாகும் பகவனிந்திரன்
மற்றுமவ னுருவாக ளேமேகங்கள
தழைககினற பிராணிகட்குச் சீவனென்னுஞ்
சலமதைநால வாக்குமவரு ஷிபபதாலே
பிழைபபையெண்ணி நாங்களுமமற் றவருஞ்செய்யும்
பெருமைதா னவன்பூஜை யொருமைதானே,

தரு, இராகம்-அசாவேரி, சாபுதாளம்.

பல்லவி.

பகவனிநதிரனபூஜைக் கதுவே யாயா
பாடியெங்கட்குமிது பொதுவே *

அநுபல்லவி.

முகிலவன்சொறபிடிக்கும் முழங்குநீரைக்குடிக்குஞ்
சகலபூதசோடிக்குஞ் சலத்தையேவ ருடிக்கும.

சரணங்கள்.

க, மழைக்கிந்திரனேயதி காரி யவன்
வருஷித்துண்டாகும்பொருள் வாரி *
வழக்கமவருஷத்தொரு சாரி யந்த
வாசவனுக்கேயிடைச் சேரி *
பிழைக்கும்பொருட்டாய்க்கொண்டு பெரிதாய்ச்செய்குவந்தொண்டு
தழைக்குநாருங் கண்டு தான்யாகஞ்செய்வ துண்டு (பல

உ. இந்தப்பூஜையில்மீந்த தனமே பாரி
லெந்தப்பிராணிகட்குஞ்சீ வனமே *
மூந்தறம்பொருளின்ப மீனமே பலம்
மூன்றுக்குஞ்சாதகங்கண் டனமே *
வந்துகுலிச பாணி மழையைப்பூமியி லூணி
யுந்தான்பெய்யாது காணி லொருநெற்காணுமா காணி (பக)

௩. பரம்பரையாகிவந்த மிந்தப் பூஜை
பஞ்சுகாமமும்லோபம் மூந்த *
விரம்புமயந்துவேஷ மெந்த நீதி
நிலையென்றிதைவிடுவா னாந்த *
நரன்புகழ்தனை நாட்டான் நலத்தையடைய மாட்டான்
வரம்பில்மிடியை யொட்டான் மற்றுமவனென்னதோட்டான் (பக)

கண்ணன் நந்தரிடத்தில் இந்திரன்பூஜையைத் தடுத்துரைத்தல்.

விருத்தம்.

பெரியவரா மாயரொடு நந்தர்பூஜை
பிரபலமா யிந்திரற்கே செய்வோமென்றும்
அரிபால கோபாலர் தமக்குச்சொல்ல
வதுகேட்டுக் கேசவனப் பகவானுக்கே
விரிவாகக் கோவமுதுண் டாகத்தக்க
விதம்பிதா வாயிருக்கு மவனைப்பார்த்துச்
சொரிகுவார் சொல்மாரி யதுகேட்பாரோ
சுகிர்திபார் பாகவதப் பகுதிபாரோ.

நந்தகோபருக்குங் கண்ணனுக்கும் நடந்த வாதம்.

விருத்தம்.

மக திரனுககுண் டாகுமாககளு
செய்வதுவு மென்னென்றால் விண்டோராதா
கனமுளமூ வுலகுக்கு மதிபனென்ற
கர்மவலை மீதிருப்பான் கீழிறங்க
வனமாலி திருவுளத்தி லெண்ணியந்த
வர்னவனை நிராகரித்தார் வேறொன்றில்லை
மனமகிழ்நந் தர்க்குரைப்பா ரவர்செல்வககு
மாரர்தான் நவநீத சோரர்தானே.

திபதை, இராகம்-மணிரங்கு, ஆதிதாளம்,

கண்ணிகள்.

கண்ணன் விடை.

௧. பிறப்பதுங்கர்மத்தாலே யிறப்பதுங்கர்மத்தா லே
பிராணிகளுக்குண்டாகு மென்றுரைதையே
உறைப்பாகச்சுகந்துக்கம் பயத்துடன்க்ஷேமங்க ளு
முண்டாகுங்கர்மத்தினு லென்றுரைதையே

நந்தர் விடை.

உ. தேவனுமீசுரனே பலங்கொடுப்பதல்லாம ற்
சகத்திலெவர்களுக்கும் பாலகிருஷ்ண
கேவலஞ்சடமான கர்மத்தினலேபல ங்
கிடைப்பதெப்படியையா பாலகிருஷ்ண

கண்ணன் வினு.

ரு. ஈசுரனென்னத்துக்குக் கர்மமேபலந்த ரு
மெடுத்துச்சொல்கிறேனினை யென்றுதையே
யீசுரமாமீமாங்க சாஸ்திரம்படித்தபே ர்
விளங்கச்சொல்லுவாரிதை யென்றுதையே

நந்தர் விடை.

சு. எந்தக்கர்மஞ்செய்தாலும் பலத்தைக்கொடுக்கின்ற வ
னீசுரனென்றேதானே பாலகிருஷ்ண
அந்தமீமாங்கத்தையே நன்றுயறிந்தோர்சொல் வ
ராகுங்கர்மத்தாலென்ன பாலகிருஷ்ண

கண்ணன் வினு.

ரு. அன்னியகர்மங்கட்கும் பலரூபனுருமீ ச
னங்கொருத்தனுண்டானு லென்றுதையே
பின்னுமவனுக்குமே லாகவொருகர்த்தாவை ப
பிடிப்பதில்லையோவவ னென்றுதையே

நந்தர் விடை.

சு. கவனங்கொண்டுசொல்லவந் தாயேவிவரஞ்சொல்வே ன்
கருத்தாய்க்கேளெந்தனையா பாலகிருஷ்ண
அவனுக்குமேலாகவோர் கர்த்தரிருந்தாலென் ன
அவனொருபிரபுவாமே பாலகிருஷ்ண

கண்ணன் வினு.

எ. கர்த்தாவல்லாதபேரைப் பிரபுவென்றுசொல்வதென் ன
கணக்கையறியச்சொல்லு மென்றுதையே
வியர்த்தமாயாட்டின்கழுத் ததராமவராலா க
வேண்டியதென்ன வையா வென்றுதையே

இ து வு ம து,

விருத்தம்.

தந்தங்கரு மங்களிலே பிரவர்த்திக்குஞ்
சகலபூ தங்களுக்குங் கர்த்தனை
இந்திரனு லாவதென்ன மனிதர்தங்க
ளியல்பான தொழிலைவிட்டு வேறுசெய்வ
தந்தவகை யெந்தவகை யெங்கிருந்து
மவரவர்கி ரியையவரைக் காப்பாற்றுங்காண்
இந்தவகை கருமமே செய்வதென்று
ரெம்பிரான் யாதவர்க்குந் தம்பிரானே.

இதுவுமது.

விருத்தம்.

அப்படிக்கர் மங்களைச்செய் குவதற்குந்தா
னந்தரியா மியுமாயி சனுமிருந்தே
எப்பொழுது மேவலினாற் செய்யவேணு
மேயல்லாற் கிரியைகளை யுயிர்களாலே
எப்படிச்செய் யிப்பபடுவ தென்பீராகு
விமையவர்க ளசுரரொடு மனிதரெல்லாந்
தப்புதலின் றிக்கிரியை சுபாவமாகத்
தரிக்கின்று ரீசனெங்கு மிருக்கின்றாரோ.

தரு, இராகம்-உசானி, ஆதிதாளம்.

பல்லவி.

கருமமே செய்யவேணும் நந்தாதையே.

அநுபல்லவி.

இருவினையுஞ்செய்யாவிட்டா லீசனெங்கேபலந்தருவார். (கருமமே)

சரணங்கள்.

க. உயிர்களுக்குமேலான வுடலத்தைத் தருவதுவும்
அயரோகிமானதேகமு மதனாலல்லோ வருவதுவும் (கருமமே)

உ. சத்துருவாவதுநடுத் தூரமாவதுமி மானே
மித்துருவாவதுமெல்லா விதமுங்கிரியையாலே தானே (கருமமே)

ங. இதமுறுகுருவுடனே யீசுரனுங்கிரியை காணும்
அதிலுந்தங்கள தங்கள் கிரியைபலக்கச்செய்ய வேணும் (கருமமே)

இதுவுமது.

விருத்தம்.

திரவியத்தைச் செலவுசெய்து கிரியைதன்னைச்
செயும்போதோர் தேவதையை யுத்தேசித்துப்
பரவியகர் மங்களைச்செய் யாவிட்டாலெப்
படிபலனுஞ் சித்திக்கு மென்றீராறு
கருமவகை யங்கங்கள் தனிலேயோரங்
கந்தானே தேவதையு மதைக்குறித்தால்
வருகின்ற தேவதையும் வேறுகேளும்
மன்னவா வென்றறியுஞ் சொன்னவாறே.

தரு, இராகம்-பியாகடை, ஆதிதாளம்.

பல்லவி.

எவனுக்கெதினாலேஜீவனமோ
அவனுக்கதுவே தெய்வமாம்.

அநுபல்லவி.

அவனியில்நந்தஞ் சாதித்தொழிலை
யறிந்தும்நீரறியாதுபோற்பேசுகிறீர்.
(எவனுக்)

சரணங்கள்.

க. ஒருவனாலேஜீவனம்பண்ணுமொருவனவனைப்பூசிக் காது ம்
றொருவனைப்பூஜைசெய்தாலதனுக்குவமைசொல்லுவனேயெய் போது
புருஷனிருக்கவன்னியபுருஷனைப்பூஜிக்கும்விபிசார மாது
தரணியிலக்ஷேமமடையாளேதிஷ்டாந்தங்கண்டீரொன்றதையேயிப்போது
(எவனுக்)

உ. வேதபாடமுதலானதாலேவேதியருக்குச்சீவனந் தாமே ந
மேதினிபரிபாலனந்தானேவேந்தர்களுக்கெல்லாம்பிழைப் பாமே
ஜாதிவைசியர்க்கெல்லாம்யாபாரந்தன்னாலேதானேஜீவனம் பூமே
லாதிமலரயோாபணிவிடையினாலாஞ்சீவனஞ்சதுர்த்தர்க் காமே
(எவனுக்)

௩. வசியர்தொழிலும்நாலுவிதமாம்வகைபயிர்ச்செயலுடனேவியா பாரம் மிக
பசுரக்ஷணையும்வட்டிக்குக்கொடுப்பதினாலும்பிழைப்பாஞ்சமு சாரம
நிசமாய்நாங்கோரக்ஷணைத்தொழிலில்நிலைத்திருப்பவர்க்கேனிவ்வி சாரம்
வசியரிறகோவசியரும்நாமல்லோவாசவனைப்பூஜிப்பதென்ன சாரம்
(எவனுக)

இதுவுமது.

விருத்தம்.

பசுக்களுக்குஞ் சீவனமிந் திரனுடவா தீனமென்றே பகர்வீராகில்
இசைப்பன்மறு மொழிசேரு மெனவரத கோபால ரெங்கையங்கே
பசப்புவார் சிரீசுரசாங் கியமத்தா லேகுலிச பாணிபூஜை
திசைக்குளொரு தருஞ்சம்ம திக்காத வகையரியுஞ் செப்புவாரே.

தரு, இராகம்-சுத்தசாவேரி, ஆதிதாளம்.

பல்லவி.

இந்திரனாலென்னகாணு மையா இத்தை
யெந்தனுக்கறியவுரை செய்யா

அநுபல்லவி.

நந்தாதாவேயாயா சந்தானில்லாமற்கேளு ம்
நாட்டில்நம்மைக்காட்டிபபசு மாட்டுக்கும்புற்காட்டுலைதற்கு (இந்தி

சரணங்கள்.

க. சாத்துவிகராஜஸ தாமஸகுண ரீதி
தானேயாக்கலனித்த லழித்தல்வகையின் நீதி
யோர்த்தராஜஸகுணத்தா லாண்ஜாதிபெண் ஜாதி
யிருவோர்களும் மருவலாலே கருவாயெல்லாம் உருவாகுதனு பூதி (இந்தி

உ. சமத்தாம்ராஜஸகுணந் தனிலுண்டாம்மேகஞ் சாரி
சாரியாய்வருஷிக்கத் தழைபபதுயிர பாரி
சமுத்திரமலைகளுந் தலைநகளிலுந்தான் மாரி
தவறுதுபெய்துவராதுண்டோ யெவராற்றடை யவராலிடைச்சேரி (இந்தி

௩. உமக்குமாத்திரம்மழைராச்சியங்கட் கில்லையா
நாயகனிந்திரன்றனு வேறுண்டோ நில்லையா
உமக்குமின்னமாயர்களும் உலகமெல்லா மெல்லையா
உண்டாகுமாகண்டலனே யண்டகோடிகொண்டாரசோசொல்லையா (இந்த

## கண்ணன் கோவர்த்தனகிரியைப் பூஜைசெய்ய உரைத்தல்.

### விருத்தம்.

நிலையிதுவே யானாலும் யோகக்ஷேம
  நிமித்தியந்தெய் வத்தையபே க்ஷிப்பீரானால்
உலகிதிலே பட்டணங்க ளுடனேதேச
  முரவீடு களில்வாசஞ் செய்வோமல்ல
பலவனங்கள் பருப்பதங்கட் குள்ளாய்வாசம்
  பண்ணுவோம் நாம்வனவா சிகளதாமே
நலபசுக்கள் வேதர்பருப் பதங்கள்தம்மை
  நாடுவோம் பூஜைநன்றாய்ப் போடுவோமே.

## கண்ணன் கோவர்த்தன பூஜாவிதி யுரைத்தல்.

### வெண்பா.

பூசை யிதற்கே பொருள்வேறு மென்பீரால்
வாசவன்பூ சைக்காக வந்ததெலாம்—நேசம்
உளம்பரவிப் பூசைக்கே யோக்கியமென் றேமால்
விளம்புவார் பூசை விதி.

திபதை, இராகம்-ரீதிகெவுளை, திரிபுடை-தாளம்.

### கண்ணிகள்.

| | | | | |
|---|---|---|---|---|
| க. | பருப்புட | னன்னம் | பாயஸ | ம் |
| | விருப்புட | னின்னம் | நலக | றி |
| | பதார்த்தம | னேக | வகைதா | னோ |
| | யதார்த்தம | தாக | சமைப்ப | தே |
| | உருப்படி | நிறுக்கும் | அதிர | ஸ |
| | வருக்கமு | முறுக்குங் | கோது | மை |
| | யுடமாவி | னாலே | யுளுந்தினா | ல் |
| | வடையுமென் | மேலே | செயச்சொல்லி | த் |
| | திருப்பணி | யாரம் | ருசிக | ள் |
| | பெருக்கவும் | க்ஷீரம் | பசுக்கி | டை |
| | சேரவுங் | கறக்கும் | பாலெல்லா | ம் |
| | நேரவுஞ் | சிறக்கும் | இதனுக்கு | த் |
| | திருக்கென்ன | காணும் | விசுவா | ச |
| | மிருக்கவும், | வேணும் | பூஜையு | ஞ் |
| | செம்மைய | தாமே | யிதுவென்ற | ன் |
| | சம்மத | மாமே | | * |
| உ. | நேமமாய்க் | கொண்டு | வேதர் | க |
| | ளோமத்திற் | கண்டு | ஆகு | தி |

செய்கலைச் சோரிய மந்தி ர
மெய்களுக் குரிய வந்தண ர்
தாமவாக் கன்னம் பலவி த
மாமின்னஞ் சொன்னம் பசுக்களு ந்
தக்ஷிணை கொடுப்போம் பூஜையி ந்
தக்ஷணை மெடுப்போம் இதுவன்றி ப்
பாமரன் கோளன் பதிதனு ந்
தீமைசண் டாளன் சுவானமி ப்
படியெவர் களுக்கும் வருந்தி ய
பிடியவர் களுக்குங் கொடுப்ப து
க்ஷேமத்தைத் தருமே புகழ்ந்த ப்
பூமிக்குள் வருமே பூஜையு ஞ்
செம்மைய தாமே யிதுவென்ற ன்
சம்மத மாமே *

௬. வேண்டிய புல்லும் பசுக்களு க்
கீண்டிடச் சொலலும் நெஞ்ச து
மெலியாமல் நாடும் மலைக்குய ர்
பலிகளைப் போடும் அலங்கார ம்
பூண்டுகொள் வோமே மனதன் பு
நீண்டிடுந் தாமே நாமெல்லா ம
போசன நடத்திப் புதுசா ன
தூசுக ளுடுத்தி வணிதமா ய்
மீணடியர் வாசச் சந்தன ம்
ஈண்டியே பூச ஆனி ஙா
வேதாக ளங்கி மலையையி ப்
போதுதொ டங்கிப் பிரதக்ஷிண ந்
தீண்டியே செய்ய நந்தம் மை
யாண்டிடு மைய பூஜையு ஞ்
செம்மைய தாமே யிதுவென்ற ன்
சம்மத மாமே *

## கண்ணன் கோவர்த்தனகிரிக்குப் போடும் பலியை யுண்ணல்

---

### விருத்தம்.

பூசுரர் பசுக்கள்மலை களைக்குறித்துப்
பூஜைசெய்யத் திரவியமே தென்றுலையா
வாசவன்றன் யாகத்தி னிமித்தமிங்கே
வந்ததிர வியங்கொண்டே செயலாமந்தப்
பூசைவிதி யிப்படியென் றறியுந்தாமே
புகலவுமப படிநந்தா முதலோர்செய்தும்
ஆசையா யக்கிரிக்கே பலியைப்போட்டார்
அவையுண்டா ரோசோதைமுலைச் சுவையுண்டாரே.

திபதை, இராகம்-சங்கராபரணம், ஏகதாளம்.

கண்ணிகள்.

க. தேவேந்திரன்பூஜைக்காகச் சேகரித்து மிருந்த
திரவியங்களெல்லாந்தான் செம்மையதாய்ப் பொருந்த
கோவர்த்தனமலைக்குமுயர் கோகுலமாம்நிலைக்கு ங்
கூடிச்செலவிட்டாரே யாயர்பாடியிற்பார்ப்பா ரோ
பாவந்தீரமறைமுழங்கப் பலிகளிட்டுவிளங்க ப்
பசுக்களுக்குமபுல்லிட்டுமந்தப் பசுக்களைமுன்னிட்டு க்
கோவர்த்தனகிரிவலம் கொண்டுநலகிரி யை
கோபாலர்பூஜைகொண்ட கோவிந்தன்மலை .யே

உ. அந்தணர்களெல்லோரும் ஆசீர்வாதம் பண்ண
ஆய்ப்பாடிவாழ்வார்க ளனைவோரும் நண்ண
விந்தையதாய்க்காளைகட்டுஞ் சகடையின்மே லேறி
வேடிக்கையாய்க்கோவியர்கள் சுந்தரங்கள் மீறி
நந்தகுமாரன்கதையை ராகத்துடன் பாட
நவநீதசோரகிருஷ்ண னிவர்களுடன் கூடக்
கொந்தளிப்பாய்விளையாடிக் கொண்டிருந்தார்மன் ஞ
கோபாலர்பூஜைகொண்ட கோவிந்தன்மலை யே

ஙூ. உசிதமின்னம்வேறுமொரு பருவதத்தைப் போலே
யுருவெடுத்துக்கொண்டிடையர்க் கெல்லாமென் மேலே
விசுவாசம்வருவதற்காய் நாந்தான்மலை யென்று
மிகுந்திருந்தபலிகளையு முண்டார்பின் னென்று
வசுதேவபாலகிருஷ்ண னிங்கிருந்துஞ் செம்மை
மலைபோலேயுருவெடுத்து வந்திருக்குந் தம்மைக்
குசலமிகுமாயருடன் கூடிநமஸ்கரித்தா ர்
கோபாலர்பூஜைகொண்ட கோவிந்தன்மலை யே.

கண்ணன் மலையுருவாகிய தம்மைத்தாம்வணங்கி ஆயர்களுக்குரைத்தல்.

விருத்தம்.

வாச்சுதென்றே யாயருடன் கண்ணனங்கு
மலையுருவாய் வந்ததம்மைத் தாமேவந்தித்
தாச்சரியம் பாருமிந்த மலைநமக்கே
யனுக்கிரகஞ் செயவேண்டி வந்ததென்றே
ஈச்சுரனும் வனவாசி யாகும்நம்மை
யிரக்ஷிக்க வந்ததென்று காமரூபம்
மீச்சுரமா யுளதெனவே சொல்வாரந்த
வேயர்தான் செய்யகனி வாயர்தானே.

கண்ணன் கோகுலத்துக் கெழுந்தருளல்.

விருத்தம்.

பிடிப்பாகப் பசுக்களுடன் நமமைக்காக்கும்
பெரியதிந்தச் சொரூபத்தைப் பணியாவிட்டால்

அடிக்குமே பணிமுதலா முருவமுண்டாம்
ஆனதால் நாமும்வந்திப போமென்றுரைப்
படியந்தக் கோபர்செய்தா ரேயிவ்வாறு
பருவதம்ப சுக்கள்பிரா மணராயெல்லாம்
நெடியவனுத் தரவிலாச்சித் தவருங்கூட
நிலேவந்தா ராய்ப்பாடித் தலேவந்தாரே.

க லி க் கூ ற் று.

தரு, இராகம்-செஞ்சுருட்டி, ஆதிதாளம்.

ப ல் ல வி.

தேவர்மதபங்கஞ்செய்தநேன்றே
தேவர்மதபங்கஞ்செய்ததொன்றே.

அ நு ப ல் ல வி.

[அல்லாற்] றேவர்பூஜையைத்தள்ளத் திருவுள்ளமன்றே (தேவர்

ச ர ண ங் க ள்.

க. சனங்கள்தேவர்கட்குச் செய்யும் பூசை தன்னைத்
தடுத்ததையவர்கொள்ளலென்ன ஆசை * (தேவர்

உ. சகலகர்மஸ்வரூபர்மு குந்தரோ பல
தாதாவும்பண்ணச்சொல்கிறவருங்கோவிந்தரோ * (தேவர்)

ங. புகலுங்கர்மத்திற்சிக்கும் கர்த்தர் தானே தேவர்
பூஜைவிதித்ததுமெம் பெரு மானே * (தேவர்)

உச - ம் அ த் தி யா ய ம் மு ற் று ம்.

கண்ணன் திருவடிகளே சரணம்.

---

## உரு - ம் அத்தியாயம்.

அ வ தா ரி கை.

---

வி ரு த் த ம்.

எடுத்திடுங் கோபத்தாலே யிந்திரன் கோகுலத்தைக்
கெடுத்திட மழையைப்பெய்யக் கேசவ ரந்தமாரி
தடுத்திட வேண்டிக்கோவர்த் தனகிரி குடையாய்க்கையிற்
பிடித்திர க்ஷித்தகாதை பேசுவ திருபத்தைந்தே.

தேவேந்திரன் கோகுலத்தை யழிக்க மேகங்களை யேவல்.

---

வி ரு த் த ம்.

வாசவன்றன் பூஜைகெட் வதையறிந்து
மாதவனே நம்புநந்தன் முதலானோரை
மோசமது செயச்சினந்து மூலகங்கட்கு
முடிவைச்செய் குவதாய்த்தன் னதிகாரத்தின்

ருசராய்ப் பணிபூழி காலமேகந்
தனிற்சங்க வர்த்தமெனுங் கணத்தைத்தானே
ஈசனென்று மாணவத்தா லிதனைச்சொல்லி
யேவினன் கற்பகப்பூங் காவினனே.

இதுவுமது.

கலித்துறை.

அரிதனைநம்பிய வாய்ப்பாடியானை யடிக்கவென்றே
அரியாரம்பிப்ப தென்னென்றற்றன் பூஜை யதையிடையர்
அரிபோலெதிர்செய்து தளளிவிட்டானொன் றறிவுமங்கி
அரிபோலச்சங்க வர்த்தங்களைப்பார்த்தங் சுறைகுவனே.

தரு இராகம்-அடாணா, ஆதிதாளம்.

பல்லவி.

மேகங்களாஜலப்பிர வாகங்களாகச்செய்கு
வீரோகோகுலத்திற் செல்லுவீரே.

அநுபல்லவி.

யாகம்நம்மதைத்தடுத்தும் ஏதோவொன்றைத்தொடுத்துஞ்
சேகரமாய்க்கிருஷ்ணனிடஞ் சேர்ந்து மிருக்கின்றாரோ
தேகந்தெரியாதாய ராணவம் பெருக்கின்றாரோ (மேக)

சரணங்கள்.

க. வனமதிற்றிரிகின் றாரோ யாயர்கள்பொருள்
மமதையைப்பார்த்தீரா ரோ *
மனிதன்கிருஷ்ணனைச்சேர்ந் தாரோ தேவனென்னை
மருட்டிப்பகடிசெய் தாரோ *
மமதைகொண்டேயொருமித்து மற்றோர்பூஜையாரம்பித்துச்
சுமதலையாகவேதஞ் சொன்னவிதி தேறார்களாஞ்
சமுசாரசாகரத்தைத் தாண்டப் போறார்களாம் (மேக)

உ. பாலன்வாசாலக னவனே வணக்கமில்லான்
பண்டிதமானியு மவனே *
மேலவனறியா தவனே கிருஷ்ணனும்நீல
மேனியன்மனித னவனே *
அமரரொன்றெண்ணமும் மாறி யாக்கினையதனை மீறிக்
குழுக்காய்க்கிருஷ்ணனையாயர் கூடித் தொடர்ந்தார்களே
நமக்குப்பிரியமில்லா நடத்தை நடந்தார்களே (மேக)

ங. அந்தக்கிருஷ்ணனுடன் கூடிச் சரீரம்பூரித்
தயிசுவரியமமதை மூடிப் *
பந்திசேருமாயர் பாடி யுள்ளார்கருவத்தைப்
பங்கஞ்செய்துநீங்கள் தேடி *
பசுக்களுக்குஞ்செய்வீர் தொல்லை பயமுங்கட்குத்தேவையில்லை
விசைசண்டமாருதத்தைக் கூட்டிக்கொண்டு நேருகிறோம்
இசையயிராவததி லேறிவந்து சேருகிறோம் (மேக)

## தேவேந்திரன் கண்ணனை யிகழ்ந்துரைத்ததைச் சுகப்பிரம்மரிஷி புகழ்ந்துரைத்தல்.

---

### விருத்தம்.

இந்தவிதஞ் சங்கவர்த்த மேகக்கூட்டத்
திருஞ்சிறையை நீக்கியிடைச் சேரிசெல்ல
இந்திரனு மேவியுரை செய்தவார்த்தை
யினிலேயெம் பெருமானை யிடக்காய்ச்சொன்ன
சிந்தையெலா மவன்வாக்கி லுறையும்வாணி
நேரான துத்தியம தாகின்ற
தந்தவகை விரித்துரைசெய் வேன்கேளென்பா
ரையர்தான் சுகசாமி துய்யர்தானே.

திபதை, இராகம்-புன்னாகவராளி, சாபுதாளம்.

### கண்ணிகள்.

க. சிறுபிள்ளையென்பதற் காய்ப்பாலனென்று ரை
செய்தானேயிந்திரன் றானே யது
முறைகுழந்தைபோல்சி றயிமானியென் று
மொழிந்ததேவாணி மானே *

உ. ஓயாமாரியாகப் பேசுகிறவனெ ன்
றுன்னிவாசாலக னென்ற சொல்லும்
ஏயசாஸதிரங்கட் கெல்லாமவ ரே
யிருப்பிடமென் றுரைக் கின்ற *

ந. வணங்காமுடியென்றே பெண்ணிக்கிருஷ்ண னை
வணக்கமில்லானென்ற பேச்சு அவர்
வணங்கும்படிக்கு மேலொருவரில் லை
வணங்காமுடியுள்ள தாச்சு *

ச. படித்தவனென்றுபேர் மாத்திரமென்றுசொ ற்
பண்டிதமானியென் றெடுத்த தது
வடித்தவேதம்பண் டிதரிடத்தும்வெ கு
மானியென்றேபொருள் கொடுத்த *

ரு. அறிவில்லாதவனென் றிந்திரன்கிருஷ்ண னை
யறியாதவனென்று சொன்ன வுரை
அறிவாயெவரு மறியாதவ னே
யறியாதவனாகும மன்ன *

சு. நிதானமதாயெம் பெருமானைக்க ரு
நிறத்தனென்றுரை சேதி கிருஷ்ணன
சதானந்தரூபனெனச் சொன்னதேபா க
சாதனனவாய்ச்சர சோதி *

எ. மண்டலத்திலொரு மனிதனென்றந் த
வாசவன்சொன்னனென் னையனே யிங்கே
தொண்டரை ரக்ஷிக்க வந்தமனி த
ஸ்வரூபமல்லோவதின் பயனே *

அ. நானுமறியேனவனும் பொய்சொல்லாளி ந்
நாட்டினிற்சொல்லும்பிர சித்தனே யுவ
மானமதாய்நிந்த யெல்லாந்துதியா தி
வந்ததைப்பார்பரி க்ஷித்தனே *

மேகங்கள் கோகுலத்தை யழித்தல்.

விருத்தம்.

அலங்கார மெனும்புகழாப் புகழ்ச்சிதானே
யச்சுதற்கே துதியான தறிவாயேகோ
குலங்கார தனின்குழுவால் மூடியின்னங்
குலிசன்வர விடுமனிலன் கூடச்சேர
விலங்காரப் பளபளென மினையுங்காட்டி
விண்ணுமண் ணுலகதிர முழக்கிலார்தான்
கலங்கார வனிபதியே யூழியென்னுங்
காலந்தா னதுவுமிந்திர ஜாலந்தானே.

தரு, இராகம்-நாதநாமக்கிரியை, சாபுதாளம்.

பல்லவி.

பரிக்ஷித்தேகேளா ய் மழையினுற்கோகுலம்வெருண்ட
வெருக்ஷியைக்கேளா ய் *

அநுபல்லவி.

கருக்கொண்டுகோகுலத்தி லிறங்கிச்சங்கவர்த்தமா ந்
கனமின்னவிடிமழை களால்வருத் தியதையென்னசொல்வே ன் (பரி)

சரணங்கள்.

௧. விண்ணில்மின்னல்களாலே திக்கெல்லாம்பிரகாசித் து
மேககர்ச்சனையாலே கிடுகிடாயமான ம்
பண்ணியும்வேகசண்ட மாருதங்களும்மோத ப்
பரவிக்கல்வருஷமாய் வருஷித் ததுவேயுயர்வான ம் (பரி)

உ. ஒவ்வொருதூண்பேரலவே யொவ்வொருதாரைகளா க
வுயர்வானிலிருந் துகார் வருஷிக்கும்போ தே
அவனியெல்லாஞ்சலப்பிர வாகமாய்மேடுபள்ள ம்
ஆவதுந்தெரியாமற் போய்விட்ட ததுவுஞ்சொல்லொணு தே (பரி)

௩. அதிவருஷத்தினலும் பெருங்காற்றினலேயு ம்
ஆனினங்களுக்குங்குளிர் நடுக்கல்மிகுந்த தே
அதிலிடையரிடைச்சி யருஞ்சிறங்களா லே
யார்த்தியடைந்துகோவிந் தனையடைக் கலம்புகுந்த தே (பரி)

௪. நடக்கும்நடைமந்தித்துச் சிரசுங்கன்றுசனையு ம்
நாடிச்சரீரத்தால்மறைத்து மழையணிய வே

நமெக்கப்பசுக்களெங்கிருஷ்ணன் றிருவடித்தாமரை ளை
நம்புதலாகவந்தே சரணுகைப் பரவிப்பணிய வே (பரி)

ஆயர்கள் மழையினால் வருந்திக் கண்ணனைச் சரணுக வடைதல்.

விருத்தம்.

மாலடியே துணையென்றும் பசுக்களென்னும்
வாய்விடாச் சீவனெல்லாந் தொழுவேயுள்ளன்
பாலடிய ராமிடையர் கண்ணகண்ண
பாக்கியசா லியும்நீயே நாதனென்று
மேலடிநாள் தொட்டாயர் பாடியாகஎள்
மிகநம்பி யிருக்கின்றோந் தீமையுண்டும்
ஆலடியிற் கொணர்ந்துரக்ஷித் தீரோயெங்கட்
காளையா வென்றுனாசெய் வாளையாவே.

கண்ணன் கோவர்த்தனகிரியைக் குடையா யெடுத்து
மழையைத் தடுத்தல்.

விருத்தம்.

இந்திரன்கோ பாக்கினியை யுண்டுநீயே
யிரக்ஷிப்புமெம் பெருமானே பக்தராவிச்
சுந்தரனே யெனவுங்கோ குலத்திலங்கு
துயரடைந்த வசேதனத்தைப் பார்த்துமங்கே
மூந்திடைய ரிடைச்சிகளுஞ் சொல்லுதற்கு
முன்னமே வாசவன்கோ பத்தினாலே
இந்தவகை யானதென்று மலையைக்கையி
லெடுக்கின்றார் கல்மழையைத் தடுக்கின்றாரே.

தரு, இராகம்-சுருட்டி, ரூபகதாளம்.

பல்லவி.

பாலகோபாலகிருஷ்ணன் பக்தர்க்காய்க்கோவர்த்தன
பருவதத்தையுமெடுத்தா ரே.

அநுபல்லவி.

தாலகேதனன்றுணைவமாலே சதமகன்பூஜைதடுத்ததா லே
சங்கவர்த்தமங்குல்பெருத்த தழலுறுசினமுங்கொண்டு மழைசொரிதருணங்கண்
[டு (பால)

சரணங்கள்.

க. அதிககாற்றுடன்சிலாவருஷ மாம்மழையை வலாரி யிந்த
அகாலத்திலேவருஷிப்ப தென்னென்றளவிட்டந்த முராரி *
ததியில்நம்மாலேயவனுட யாகங்கெடுதலா யகங்காரி த்தவன்
தானேகெடுதலாக மழையைவருஷிக்க விடைச்சேரி மிக
விதனங்கொண்டதேயந்த விந்திரன்சமத்தையும் பார்ப்போம் நமது
வீரலட்சுமிகாட்டி யேகோகுலமதைக் கார்ப்போம் உலக

பதியேதானெனுமாணவவிருள் படர்ந்ததுந் தீர்ப்போம் நம்மையே
பரவுதொண்டர்கள்துய ரடையாதபடிநலஞ் சேர்ப்போம் *
இதுவேதருணமெனவுஞ் சாமி யிருடீகேசமூர்த்தி நேமி
மதுசூதனனுந் தானே மதுராபுரிவந்தா னே
யிதையேயெண்ணுகின் றானே யெதுநாயகனுந் தானே (பால)

உ. விண்டலத்துளோர்சாத்தி கருணமிகுந்திருப் பவர்தானே யுன்றன்
மெய்யன்பர்களுக்கஞ்ஞான மானவிருளங்கே வருவானே *
வீண்டிடுமெனிற்சாந்தமு மென்மேல்விசுவாசம் பெறுவானே வளர்
மேன்மையானதேவர்களுக்குநானிப்போது சொல்வேனே தாங்கள்
மண்டலேசனெனுங் கருவங்கள்வந்து மூடாதே வரவே
மானபங்கமுஞ்செய்குவோம்நா மதுவுந்தப் பாதே யப்படி
அண்டியநல்லோர்களை யவமானமதுசெய்யும் போதே யவருக்
கனுக்கிரகமதாகு மென்றறிவார்மன மீதே *
எண்டிசைபுகழ் கின்றகோகுல மென்னையடைந்தவர்க் கென்னவியாகுலம்
அண்டர்க்கரசன் சொரியப் பண்டிட்டதுவும் பிரியக்
கண்டித்ததுவுந்தெரிய த் தொண்டர்க்கருளும்புரியப் (பால)

ந. ஆய்ப்பாடியர்கள்நாதனென்றெம்மை யடைந்திருப்பதுங் கண்டே நாமும்
அதையொப்புக்கொண்டுமவர்களை ரக்ஷிப்பதுவிரதமொன் றுண்டே *
காப்பதுநந்தம்பலத்தினாலே காட்டுவோமென்று விண்டே யொரு
கையினாற்கோவர்த்தனகிரியையுங் கனவிளையாட்டுக் கொண்டே நல்ல
வாய்ப்பதாய்ச்சிறுபிள்ளை நாய்க்குடைபிடுங்கியே தூக்கி றதுபோல
வனமாலியாயருடனே தந்தைதாய்களை நோக்கி யுமது
பாற்பசுக்களினுடனுங்கூடப் பரவியே பாக்கி யிலாமலே
பருவதமெடுத்திடு பள்ளத்தினிலிருந்துயர் நீக்கி *
ஏற்பதாயுங்கட் கேதுதொல்லை யினிமேலும்பயந் தேவையில்லை
தாப்புக்கொடு மிக்கட்டுத் தீர்ப்புக்கட னெற்கிட்டுக்
காப்புக்கென் னத்தொட்டுச் சேர்ப்புத்தியு னைத்திட்டுப் (பால)

ச. என்கையாலெடுத்திடும்மலைவிழு மெனும்பயந்தனை நீக்கும் மழை
யிலும்பெருங்காற்றினாலுமுன்ன மேபயந்ததேபோது மாக்கும் *
சங்கையில்லாமலந்தரெண்டையுந் தடுத்துமுங்களைக் காக்கும் என்சொற்
றவராதீனெனக்கிருஷ்ணன் சொன்னசமாதானத்தினை நோக்கும் அவர்
அங்கப்படியேபள்ளத்தினிலே சகடைகள் காளை பசுக்க
ளான்கன் றுநடைநாடகசாலை யாவும்நல் வேளை வேத
புங்கவரானபுரோகிதர்களும்மால் பாதத் தாளை யணிந்து
போற்றிவந்திருந்தாருலகங்கள் புகழுமன் றாளை *

துங்கனேபணிமேல்நடித்தாரே ஸ்வாமிநாளேழுங்குடைபிடித்தாரே
மங்கையெசேர்தைசுபுத்திரச் சிங்கம்யாதவ மித்திரப்
புங்கவரேபல பத்திரற் சங்குபின்னுனவி சித்திரப் (ப

தேவேந்திரன் மேகங்களை விலக்குதல்.

விருத்தம்.

பசிதாக சுகதுக்க மபேக்ஷையொன்றும்
படராம லாய்ப்பாடி யார்கட்கெல்லாம்
இசைவாக நாளேழும் பார்த்திருக்க
வெம்பெருமான் வைத்தவடி பேராமற்கை
மிசைகோவர்த் தனமலையைத் தரித்தாரந்த
மேகவா கனனறிந்தாச் சரியங்கொண்டே
அசையாது ஸ்தம்பமதாய்க் களிப்பதாகி
யாகஙிறு காரதனை நீக்கினனே.

திபத, இராகம்-ஆனந்தபைரவி, ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. ஆக்கினைகாரதனையங்கே நீக்கினனேயிந்திரனு ம்
அதுவரிகோவர்த்தன தர ரொ துகுலவிண் டு
யேற்கும்சிமலவானையும பாற்கரனபிரகாசத்தையு ம்
ஏழ்தினமிருநதமழை யோடவுநகண் டு

உ. வாக்கியஞ்சொல்லுவார்களே யோக்கியரேயாயர்பா டி
வசிபபவரோபெண்டபிள்ளை பசுகளுட னே
ரோகசூவீரானந்தவெள்ளந் தேகசூவீரொலலோரும்ந வ
ரோசுபாடியாடிக்கூடிப் பேசுவீரக ளே

ரு. காறறுமழைநின்றதையும் பார்த்தவீரமடு க்
கனுமவடிந்ததேயினிநீங கனும்வருவீ ரோ
மாற்றுவீரபயநதையெனச் சாறறினாரியந்தக் கோ
வலரெனவிளங்கியகோ குலமதுளளோ ரோ

ச. ஆந்திரளபெண்டபிள்ளைப தாரத்தமுஞ்சகடைமேற்கொ ண்
டபபுறம்வந்தாரபளளம்விட டிபபுறம்வந்தா ர்
நேத்தியாய்முன்னிருந்தபடி யாய்த்துளவமால்மலை யை
நிலையில்வைத்தாரேபதமென் றலையில்வைத்தா ரே

ஆயர்கள் முதலியோர் கண்ணனைத்துதித்துக் கோகுல மடைதல்.

விருத்தம்.

சகலபிரா ணிகளும்பார்த் திருக்ககோவர்த்
தனகிரியை விளையாட்டாய் முனனிருந்த
வகையாக வைத்திடவாய்ப் பாடியாரும்
மாதவனை வந்துகட்டிக் கொண்டாரின்னம்

புகலுவேன் றயிரக்ஷை தைகளினாலே
பூஜித்தா ராசீர்கள் பெரியோர்செய்தார்
இகபரமெல் லாம்பெறுவ ரிதனைக்கேட்பார்
என்னன்பா பாகவத மின்னம்பாரே.

தரு, இராகம்-செங்களா, சாபுதாளம்.

பல்லவி.

கோவர்த்தனதாரி கதைகேளாய்.

அநுபல்லவி.

கோவக்கன்னிமார்கள் கூவிளங்குயில்போற்
கோவிந்தன்புகழ்தன்னை மாவிந்தையாகச்சொல்லிக்
குலுக்கிக்குலுக்கியே பலுக்கிப்பாடினாரே (கோவர்)

சரணங்கள்.

க. தாதையாம்நந்தனுஞ் சோதரராமனுஞ்
சோதைரோகிணியென்னும் மாதர்களும்வந்து
துய்யவாசீர்வாதஞ் செய்யவதுகொண்ட (கோவர்)

உ. உத்தமதேவர்கள் ஸித்தர்ஸாத்தியர்கள்
மற்றுஞ்சாரணருடன் வித்தியாதரர்கள்வானின்
வரிசைமலர்மழை சொரியவதுகொண்ட (கோவர்)

௩. சங்கதுந்துபிமேளங்களுமுழங்கப்
பண்களுடன்றும்புருவுங் கானஞ்செய்யக்கொண்ட
பதிதபாவனராயெதுமரபில்வரு (கோவர்)

௪. பலருமாயர்கள் பலருஞ்சேரவே
குலவிவிளையாடிக்கோ குலமதையடைந்தாரே
கோவியர்கள்நெஞ்சைக் கோவிலாகக்கொண்ட (கோவர்)

உரு-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன்திருவடிகளேசரணம்.

---

## உசா-ம் அத்தியாயம்.

அவதாரிகை.

விருத்தம்.

மற்கருட கேதனரற் புதமாம்லீலை
வரிசைகண்டாச் சரியங்கொண் டிருக்குமாயு
வர்க்கருடன் நந்தர்முன்னாட் கேள்விகொண்ட
வாறெலாந் தொடுத்துவகை வகையாயந்தத்
தர்க்கருட சங்கையெலாந் தெளியவிந்தச்
சருக்கமிருபத்தாறில் முகுந்தற்கேற்குந்
தர்க்கருட வாக்குச்சம் பத்தைநன்றாய்க்
காட்டுவா ரென்பதனை நாட்டுவாரே.

## ஆயர்கள் நந்தகோபரிடங் கண்ணன் மகிமைகளை யுரைத்தல்.

---

### விருத்தம்.

கண்ணனுடை லீலாவி பூதியெல்லாங்
கண்டுமிக வாச்சரியங் கொண்டேயாயர்
புண்ணியராம் நந்தனைக்கண் டுமதுசெல்வன
புதுமைகளை யென்னவென்று புகல்வோமிந்த
மண்ணுலகி லிடைச்சாதி யானநந்தம்
வாக்கத்தி லிவர்பிறந்தார் பெருமைதன்னை
யெண்ணவெகு குறைச்சலா யிருக்குதத்தை
யிவ்வாறு மென்றுமுறை செய்வாராமே.

### தரு, இராகம்-மத்தியமாவதி, சாபுதாளம்.

### பல்லவி.

நந்தரேயுமது மைந்தன்மகிமையை
யெந்தவிதஞ் சொல்லுவோ ம்.

### அநுபல்லவி.

அந்தணராசீவா தங்கள்மிகுந்த் சீ
ராயாபாடிககுநன் னுயகராய்வந் த (நந்த)

### சரணங்கள்.

௧. மானிலமீதிந்த வேழுவயதுள் ள்
மைந்தன்விளையாட்டாய்ச் செந்தளிர்க்கை யாலே
தானேபருவதத்தை யானையான து
தாமரைப்பூவை யெடுப்பதனைப் போலே
மானுபாவரெடுத்தாரோ யெடுத்துங்க ல்
மாரிதடுத்ததே யற்புதம்மென் மேலே
ஆனதிதற்குமுன் னுகநடந் த
வதிசயலீலை யதுவோவொருக் காலே
ஆதியிற்கண்விழி யாதகுழந்தைநா ள்
மீதுபலசாலி பூதனையாவி ப
யோதரப்பாலுடன் போதவுண்டாரத ற்
கோதுமுவமான மேதென்றுசொல்லுவோ. ம்
உயிர்கள்தேகத்தி னுயுவை யெப்படி
யுறுஞ்சுவானெம னுவமை யிபபடி
வயதிளமையைக் காலமுன் டபபடி
மன்னவனேகலை யாவுந்தீ ரப்படி (நந்த)

உ. தொட்டிலுக்குட்படுத் திருந்தாரோமுன்ன ஞ்
சொல்லுமூன்றுமாதக் குழந்தை யாச்சுதே
அட்டதிக்குஞ்சொல்லுங் காலைமேலேதூக் கி
யழுதுகொண்டுதைத் தாரொன்ற பேச்சிதே
திட்டமுள்ளதந்தச் சகடைத்தொட்டிலு ஞ்
சின்னபின்னமாகத் தெறித்துப் போச்சுதே
சிட்டேயிங்கிதோ ராச்சரியங்கண்டீ ர்
செல்வருமக்குவந் தாரிது வாச்சுதே

சென்றவயதூதா னென்றினிலேய சு
ரன்றிருணவிருத் தன்றூக்கிவான்செ ல
நின்றுசொடுபோனு னென்றுநெஞ்சையுறி ந்
தன்றவனையிவர் கொன்றூரல்லோவை யா

ஆச்சரியஞ்சொல்ல நாவாயிரம் வேணும்
ஆயிரங்கண்ணுண்டானுற்பார்க்கலாங் காணும்
ஆச்சியெசோதைக்குக் காணுதெல்லாங்காணும்
அகண்டமண்டலத்தோர்கட்கெல்லாந்தோணும் (நந்த)

௩. கண்ணனும்வெண்ணை திருடக்கண்டுந்தாயா ர்
கட்டினுளல்லோ வுரலிலுமப் போதே
நண்ணிரண்டுகையாலுந் தவழ்ந்துகொண் டு
ரட்டைமருத மரத்துநடு மீதே
எண்ணப்புகுந்து கயிற்றைப்பிடித் து
மிழுக்கமரங்களுஞ் சாய்ந்ததுதப் பாதே
அண்ணனுடனிவ ராயர்குமார ரோ
டான்கன்றுக்கூட்டத்தை மேய்த்தார்தவ றுதே

அக்காலத்திலிவ னைக்கொல்கிறோமென் று
கொக்குவேடமெடுத் துக்கொண்டுமூக்கா லே
சிக்கக்கொத்துஞ்சத்து ருக்காண்பகன்றன்மூ க்
கைக்கையினுற்பிடித் துக்கிழித்திட்டா ரோ

சங்கணங்கட்டிக்கொண்டெங்களைக்காக்கிறூர்
தூசினியெங்கிலுந் தான்புகழ் சேர்க்கிறூர்
மங்களப்பார்வையா யெங்களைப் பார்க்கிறூர்
வந்துமுன்னேநின்று துன்பத்தைத் தீர்க்கிறூர் (நந்த)

௪. கன்றுக்கூட்டங்களொடு மோரசுரன்மு ன்
கன்றுவேடமெடுத்துக் கொண்டுவந் தானே

வென்றிடவந்தவன் காலைவாரிச்சுற் றி
விளாமரமீதெறிந் தாரேயறிந் தோனே
அன்றேவிளாவு மடியோடேசாய்ந்த தே
யந்தவசுரனுயிர போய்விழுந் தானே
குன்றதுபோலுங் கழுதையுருவமு ங
கொண்டதேனுகா சுரனுமிருந் தானே
கூட்டமுறமுறைச் சேட்டைக்கழுதை க
ளாட்டபாட்டத்துடன் காட்டிறபனம்பழ ம்
நாட்டிலொருவாகருங் காட்டாதடித்தா னே
சேட்டனையுமிவா கூட்டிககொணடேசாட்டிற்
றிரிந்துகழுதையெல் லாந்தான் மடித்தாரோ
சோநதபனமபழம யாாகருங கொடுத்தாரோ
பிரிநதிடாராமனமே லனபு தொடுத்தாரோ
பிரலமபனுயி யவரா லெடுததாரோ (நந்த)

ரு. காட்டிதததீவந்து வளைகரும்பாளாய ா
களையுமபசுகக ளையுமிரக்ஷித திட்டார்
மீட்டுங்கொரே விஷபபாமபினமேலா டி
மேலுமமடுவிட் டதனைத்துரத் திட்டார்
நாட்டிலெமுனு நதிவிஷம்நீககி யே
நலலஜல மாகச செய்துகொடுத் திட்டார
கேடடீரோயிபபடி யொவ்வொருவறபு த
கிருத்தயங்கள்செயதே யெஙகுமபிரபலித் திட்டார
கிளைகளென்றேநம துளுமோாசுபாவமா ய்
விளையாடிககொண்டிம தளையாயிருககிறு ர்
தளபதியேயிதை யளவிடவேணுமெ ன்
றுளமுணடுகோகுலத் துளவெங்களுககெலா ம்
உன்னதமான மலையதனை நேரும்
ஒரேழுவயதுளள பாலரிவர் பாரும
இனனதைதககையா லெடுககககண்டோம்யாரும்
எனனவெனறுசொலல லாகுமகோ வாரும் (நந்த)

இதுவுமது,

விருததம்.

தொடநதாய ராச்சரியங் கொணடுகேட்சத்
தூயகாகக முனிமுன்னுட் சொன்னவாறே
நடந்துவாக கண்டெசங்கை தீர்ந்திருககும
நநதாகணணன தத்துவங்க ளெலலாமநதக்

கடந்தவ ருரைப்படியே சொல்லக்கோவர்
கணமெல்லாந் தெளிந்திருந்தார் மன்னுநந்த
ரிடந்தனிலே கர்க்கர்சொன்ன வகையைச்சொல்வே
னிதனைப்பார் பாகவத மதனைப்பாரே.

தரு, இராகம்-ஸாவேரி, ஆதிதாளம்.

பல்லவி.

நந்தரேயுந்தமிந்த மைந்தன்குணந்தனி　லே
நாரணனுக்குநிகரா　யா.

அநுபல்லவி.

விந்தையாய்க்கண்ணன் மிகவிளையாடற்செய்வா　ர்
விஜயகோபாலர்தானே புஜபலவான்ஸ்ரீமா　னே　(நந்த)

சரணங்கள்.

௧. யுகந்தோறுந்தேகமெடுக் கின்றவிக்குமாரற்　கே
யுண்டாச்சுமூன்றுநிறம்　முன்னே
பகர்ந்திடில்வெள்ளையுட னேசிவப்புப்பொன்னிற　ம்
பாரும்வர்ணம்மூன்றுமுன்　பின்னே
ஜகந்தனிலிப்பவுங் கறுப்புநிறந்தரித்　த
திறத்தாற்கிருஷ்ணனென்றுபே　ருன்னே
மகிழ்ந்துமுன்றன்பிள்ளை யிவர்முன்னேரிடத்தி　லே
வசுதேவர்க்கும்பிள்ளையாய்ப் பிறந்திருக்கிறார்சொன்னேன்　(நந்த)

௨. மகிமையறிந்தபேர்க ளிந்தவுன்றன்பிள்ளை　யை
வாசுதேவனென்றுஞ்சொல்　வாரோ
விகிதகுணகிரியைக் கனுசரணையாயின்ன　ம்
வெகுநாமரூபம்பெற்ற　பேரோ
அஃதெல்லாம்நானறிவேன் ஜனங்களறியாருங்க　ட்
கதிபுகழையுண்டாக்கு　வாரோ
மகிதலத்திலேநீங்கள் சகலதுன்பங்களா　ன
வாரிதிதன்னைத்தாண்ட விவரோதோணியா　வாரோ　(நந்த)

௩. மண்ணுள்ளராஜர்கள்கா லத்திற்சோரர்செய்யு　ம்
வாதைக்குள்ளாம்நல்லோரைக்　காக்க
எண்ணியந்தச்சோரரை யடித்துநல்லோர்களையு　ம்
இரக்ஷித்தாரிவரொன்றே　யேற்கப்
புண்ணியர்மகாபாக்கிய சாலிகிருஷ்ணன்மேலன்　பு
பொருந்தச்சத்துருவெல்லாந்　தோற்கப்
பண்ணுவாரரியைச்சேர்ந் தவரையசுரருமெ　ப்
படியணுகக்கூடாதப் படிதிஷ்டாந்தமும்　பார்க்க　(நந்த)

## ஆயர்கள் கண்ணன் மகிமைகளைக்கண்டு மகிழ்தல்.

விருத்தம்.

ஆதிநா ராயணனை நிகருன்பிள்ளை
யயிசுவரியம் புகழ்கிரியை யனுபவங்கள்
ஈதுகளி லாச்சரிய மென்னவென்றே
யென்னிடத்திற் சொன்னவர்தன் னிடத்திற்சென்று
ரேதிருநா ரணனென்றே நானுமெண்ணி
யிருக்கிறே னெனுநந்தர் மொழியைக்கேட்டப்
போதிடையர் சங்கையெலாந் தீர்ந்தாரையா
புரவலா பரிக்ஷித்தே யுரவலானே.

தரு, இராகம்-தன்னியாசி, ஆதிதாளம்.

பல்லவி.

மன்னு விற்பன்னு மாலைச்
சொன்னு வதுநன்னு விண்டோராத மன்னு.

அநுபல்லவி.

பன்னகசயன பரமபுருஷகிருஷ்ண ன
றன்னுகமமெல்லாந் தானறிந்தாரேயாய ர் (மன்னு)

சரணங்கள்.

க. அங்கிசைகளைக்கண்டுங் கேட்டுமனுபவத்த ற்
சங்கைகளெல்லாந்தீர்ந்து சந்தோஷமானாராய ர் (மன்னு)

உ. நந்தருடனேயந்த நாரணனைக்கொண்டா டி
வந்தனர்பிருந்தாவன வாசிகோபாலரெல்லா ம் (மன்னு)

ந. கொடுத்தார்நமக்குக்கை கோவர்த்தனமலை யை
யெடுத்தாரென்றடிக்கடி யெண்ணினாராய ர் (மன்னு)

ச. அழியாதயிசுவரிய ராகுங்கண்ணனு ட
விழியருள்பெருகவே வேண்டினாராய ர் (மன்னு)

இதுவுமது.

விருத்தம்.

சதகோடிக் கையனுயர் கோபத்தாலே
சண்டமா ருதமுடன்கல் மழையடிக்க
அதனுலிப் படியாயர் பசுக்கள்பால
ரிவையருந் தமைச்சரண மடையக்கண்டுச்
சிதமான கருணைசெய்தோர் கையினாலே
சிறுபிள்ளை நாய்க்குடையை யெடுத்தாற்போலே
அதியுனத மலையெடுத்திந் திரன்மதத்தை
யடித்திட்டா ரதையிவகை படித்திட்டாரே.

உகூ-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன் திருவடிகளேசரணம்.

## ௳௭-ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

விருத்தம்.

பூவந்த வுந்திநர சிங்கமூர்த்தி
பொன்னடிக்கா ளாகுஞ்சீ தரனுரிங்க
னேவந்த மூவொன்பா னத்தியாய
நேருனையிற் சுகமுனிவர் சொன்னவாறே
மாவிந்தை யு[illegible]சன்னன் மகிமைகண்டு
வாசவனும் காமதே னுவுந்தான்வந்து
கோவிந்த ராகவபி ஷேகஞ்செய்யக்
கொண்டிட்டா ரென்பதுவுங் கண்டிட்டாரே.

### தேவேந்திரன் கண்ணனிடம் வருதல்.

விருத்தம்.

பூவுலகில் மலையெடுத்து மழைதடுத்துப்
புண்ணியராய்ப பாடியைரட் சித்தாரென்றே
கோவுலக மிதிருந்து காமதேனுவுங்
குலிசபா ணியுங்கண்ண னிடத்தில்வந்தார்
காவலனே விண்ணேரி பயத்தால்வந்தான்
களிப்பதனல் வந்தந்தச் சுரபிதானே
நீவலரி புவின்கதைகே ளெனு முனிக்கே
நிகருந்தா ருரவரோ சுகருந்தானே.

தரு, இராகம்-கல்யாணி, ஆதிதாளம்.

பல்லவி.

வாசவன்வந்தானே கேசவனிடத்தில்
வாசவன்வந்தானே *

அநுபல்லவி.

வாசவன்வரும்போதுபரி யாசத்துக்குள்ளாஞுமென்றும்
யோசித்தும்லஜ்ஜையடைந்தே ராசனுடொருவனு க (வாச)

சரணங்கள்.

௧. சூரியன்போலுங்கிரீடம் ஆரியன்கிருஷ்ணனுடைய பா
தாரவிந்தத்தொடநமஸ காரமிகவுந்தான்செய் ய (வாச)

௨. பரவுகாந்தியுள்ளகண்ணன் சரிதைகண்டுங்கேள்விகொண்ட,
வரிசையேயனுபவமுஞ் சரியானநினைலேயந் த (வாச)

௩. தோணவேமூவுலகுக்குங் காணுநாமேநாதனென் ற
ஆணவமடங்கியிரு பாணியுங்குவித்துக்கொண் டு (வாச)

### தேவேந்திரன் கண்ணனைத் துதித்தல்.

விருத்தம்.

விணையாளும் நாயகனிப் படியேவந்து
விஜயகோ பாலர்பதம் வணங்கிநின்றே

௩௨

வெண்ணையுணும்நீ ரெனதபரா தம்பொறுக்க
வேணுமெனச் சொல்வதற்கு மெண்ணினாகத்
தணையானே சாமியுமக்கி யான்செய்கின்ற
வபராத மெனவிருக்கென் பாலேதேவர்
துணைசெய்தே யனுக்கிரகஞ் செய்வீரென்றே
துதிககினாறன் நெஞ்சிலன்பு கதிக்கின்றனே.

தரு இராகம்-புன்னாகவராளி, ரூபகதாளம்.

பல்லவி.

சரணஞ்சரணஞ்சகந்நாதனே குருவேசரணம் கிருஷ்ண
சகலவுலகங்களுககுந் தாதையும்நீசரணம் *

அநுபல்லவி.

திரணம்மேருவாகமேருவைத் திரணமாகச்செய்து மந்தக்
கரணந்தொண்டரின்மீதுவைக்கும் கமலநயனனேயரிமுகுந்த (ச

சரணங்கள்.

௧. நிமலஞ்சாந்தம்வசரூபம் நிறைந்தெலலாமுணர் தீபம் ஆகுந்
தமோரஜோகுணங்களையே நீக்குஞ்சாமியுமது ரூபம் *
எமனே ருக்கும் இப்படிக்குக
கணமுன்னே நிற்கும் மாயாகாரியம்
உமதுரூபஞ்சமுசாரத்திலே புரவாயிருந்தபோதுமந்த ச்
சமுசாரத்திலேயஞ்ஞானிகளபோறறுன்கட்டுப்படவில்லைநீகோபால ச

௨. தேவரீர்க்கஞ்ஞானமான தேகானுபந்த மேது அதி
லேவிரிந்தவுலோபாதி களுக்கென்னபேச்சிப் போது *
தேவாதி தேவா அவதார
னேவாசுதேவா தேகந்தனனிலு
லோபகுணங்கள்மறுபிறப்பினை யுண்டாக்குவதஞானிக்கு நேருமே
யாவதல்லாமல்ஞானிககென்னசொல் லாசைதீரவுமஞ்ஞானந் தீருமே (ச

௩. இலையையுமக்குலோபகுணைதியிருந்தாலுமென்ன மருட்டுந் தா்ம
நிலைநிறுத்தும்பொருட்டுந் துஷ்டநிக்கிரகத்தின் பொருட்டும
ஜல ஜாக்ஷனே வேதாந்தத்திற்
சொலுஞ்சூக்ஷனே நெஞ்சினில
வலுகருவமதிருந்தவென்னை மடககியிந்தமான பங்கம்
மலிவானவிந்தத்தண்டனையுந்தேவ ரீர்செய்ததுவேயனுக்கிர காங்கஞ் (ச

இதுவுமது.

விருத்தம்.

இவ்வளவு சொல்வதென் கோபாலனுக
விருக்குநான் றண்டனைகள் செய்வதென்ன
அவ்வளவு சக்திநமக் குண்டாவிங்கே
யாரைத்தண டித்தேன்கா ரணமென்னென்றுற்

செவ்வியசொல் லாந்துதிக்குந் தேவரீரோ
ஜகத்துக்குத் தந்தைகுரு நாதன்மூன்றும்
எவ்வகையி லுளுந்தண் டிககலாமென
மினஞ்சொல்வான மேகவா கனன்சொல்வானே.

௫௫, இராகம்-உசேனி, ரூபகதாளம்.

பல்லவி.

தேவரீரோ தண்ட நாயகராகு மே ஞான
தீபாலகிருத கோபாலகிருஷ்ண *

அநுபல்லவி.

சேவாதிதேவ ரிந்தக்கால ஞ்
சிந்தரபடி தேகந்தரித் து
மேவுலகபாலா கருவங்கண் டு
விளையாட்டாய்மான பங்கமுஞ்செய்கிறீ ர (தேவ)

சரணங்கள்.

க. ஜகதீசமரம் பிடித்தேனே யிங்கே
சிலாவருஷ மடித்தேனே *
பகருமஞ்ஞானக் கடித்தேனே யும்மைப
பரமெனறெண்ணுமற் றுடித்தேனே *
யுகாந்த காலத்தைக காட்டினேன்
உனமேலே கததியைத் தீட்டினேன்
அகிலாணடகோடிக்கு நாயகரான நீ
ரஞ்சாதிருநதைக கணடோடிவந் தேனே
மிகவுமபேறபக்தி செயயவைத்தருளொரு
விளையாடடாகிய தணடனையீ ரானே (தேவ)

உ. ஆணவககட்டை மடங்கினேன் என்றன்
அடங்காதபுத்தி யடங்கினேன *
தோணுமலினைதத தொடங்கினேன உன்றன்
சொரூபங்கணடபின் றடங்கினேன் *
தோணுமபடியாய்க கணடனை
துஷ்டநிக்கிரக தணடனை
காணுமயிசுவரிய மதமூட க்
கசடனெனனப ராதமபொ றுத்திடும்
வேணுகோபால ஸாமியின்மேலு ம்
மிகநலலபுத்தி தந்தருள் வைத்திடும் (தேவ)

௩. அபராதமிது பெரியதே யுமக்
கதிபொறுப்பது முரியதே *
விபுவேமெனமேலு பரியதே யுன்றன்
விளையாட்டையறி வரியதே *
அபிராமவவ தாரமாம்
அவதயெடுத்துப்பூ பாரமாம்

பிரபலபாவத் தளபதிகளை ப்
பிளக்கவுந்தானே நீமணி வண்ணனே
உபயமாகுமுன் பாதத்தின்றொண்ட ரை
யுறுதியாக ரக்ஷிக்கவுங் கண்ணனே (தே,

இதுவுமது,
விருத்தம்.

பூதலத்திற் பாவிகளை யடித்துமுன்றன்
பூங்கமலச் சேவடியைப் பணியுந்தொண்டர்
மீதுதயை புரிந்திரக்ஷிக் கவும்நீயிங்கு
விளையாட்டா யவதாரஞ் செய்தாய்கண்ணா
ஆதலினால் நின்னடிமை யானேனென்ன
வபராதஞ் செய்திருந்தா லுமதையெல்லாம்
மாதவனே பொறுத்தருள் வேறுமையா
வாடனு மறவேனின் றமாரனே.

தரு, இராகம்-ரீதிகவுளை, சாபுதாளம்.
பல்லவி.
எங்குநிறைந்தவாஸுதேவா வாஸுதேவா.
அநுபல்லவி.
[கிருஷ்ணா] சங்கசக்கரதர சரணென்னைக் காவா (எங்
சரணங்கள்.

க. அரிஜகந்நிவாஸ பூரணனே யிந்தத்
தரணியிலயாதவர்க்கு நாதனே நாரணனே * (எங்

உ. அடியார்பாவனைசெய்யும் வடிவே யேற்கும்
நெடியோனேரிஷிகேச னேவேத முடிவே * (எங்

ங. சகலவித்துமானோனே சரணங் கிருஷ்ணா
சகலபூதகோடியி லுறைவோனே சரணம் * (எங்

ச. தேவர்முப்பத்துமூன்று கோடிக் கெல்லாங்
காவலனென்பூஜை தன்னினுறாயர் கூடி . * (எங்

ரு. சண்டமாருதனுசிலா ருக்ஷங்
கொண்டுநான்பெறாதிந்த வுன்கிருபா வருக்ஷம் * (எங்

கண்ணன் நேவேந்திரனுக்கு விடை யுரைத்தல்.

விருத்தம்.

சாத்திரவா திகட்கறியொணா றைமலேபத்
தருக்கறிய வருமுன்ற னருள்மழைக்குப்
பாத்திரயா னெனக்கருவ மதனைவிடடேன்
பரமனே குருதெய்வ மெல்லாம்நீயென்

றேத்தியிந்த வகையிந்தி ரனுந்தான்சொல்ல
வெழில்மந்த காசமது செய்துகொண்டு
தோத்திரஞ்செய் தவனைப்பார்த் துனைப்பார்க்கன்னை
சோதையாம் நந்தரவர் தாதையாமே.

தரு, இராகம்-சாரங்கா, சாபுதாளம்.

பல்லவி.

வாராயமரர்மன்னனே பொன்னுலகத்திற்
சேராயமரர்மன்னனே *

அநுபல்லவி.

வாராயிந்திரா மமதையுடனகங்
காரமில்லதி காரஞ்செலுத்துவாய் (வாரா)

சரணங்கள்.

க. தேவபதியென் மேலே கருவங்கொண்ட
தனாலமறிந்த தாலே *
உனதுயாகத்தைத் தடுத்ததும
தூடையஞாபகம் மறதியில்லாமல்
அனுதினமுஞ்செறி விருக்கத்தகதா
யனுக்கிரகமே செய்யலாச்சுது (வாரா)

உ. தெண்டநாயகனேன் றென்னை யெண்ணுமல்மதங்
கொண்டாய்கண்டித்தேனே யுன்னை *
மண்டலத்தினி லெவர்பாலனுக்கிரம்
வைப்பமோவவ ருடையசம்பத்தை
விண்டிடச்செய்வோம் வருசவிந்திர
மிகவுமங்களமுனக்குண்டாகட்டும் (வாரா)

ந. முன்னுத்தரவிலே நில்லு நான்கொடுத்திடும்
உன்னதிகாரத்திற் செல்லு *
அன்னவகைமற்ற வருணன்முதலோரும்
அவரவர்களதி காரங்களிலிருந்
துன்னுசருவமில் லாமலிருந்துகொண்
டோங்கிவாழ்தலே யுறுதிவிடையிதே (வாரா)

கண்ணன் காமதேனுவினுற் கோவிந்த
பட்டாபிஷேகங் கொள்ளல்.

---

விருத்தம்.

மதமகங்கா ரங்களின்றி யிருக்கவென்று
வாசவற்கு வாசுதே வனுமுரைத்த
விதமிந்த வகையிருக்கக் காமதேனு
மிகுந்தபசுக் கூட்டங்க ளுடனேகூட

இதந்தருசந் தோஷமதா யாயர்வேஷத்
தெம்பெருமா னிடத்தயனுத் தரவில்வந்தற்
புதமாங்கோ விந்தபட்டா பிஷேகந்தானே
புரியுமா மதுகொண்ட தமியுமாமே.

தரு, இராகம்-காம்போதி, ஆதிதாளம்.

பல்லவி.

அரிகோவர்த்தன கிரிதரர்கோவிந்
தாபிஷேகங்கொண்டா ரே.

அநுபல்லவி.

திருவாய்ப்பாடி வாசா திருமார்பவல் லாசர்
திருவடியி னேசாக் கருணாவாத ராசா
பரவுஜக தீசா பரமபொருடபிர காசா
பரானந்த விலாசர் பரோக்ஷஞான கோசா
திருவிளையாட்டி னாலே கோவர்த்தன
பருவதத்தைதக்கை யாலே தூக்கியே
திருநாட்சத்தந்தொடுக்க வருங்கல்மழை தடுக்க
வருந்துமிடை யருக்கப பெருந்துயரை மூடுக்க
திரிவிதவுலகிலும் மருவிபபுகழுது
பெருசவுடமுடிவரி நரவரியரிய ரி (அரி)

சரணங்கள்.

க. எங்குநிறைந்தபரி பூரணரோ யுல
சங்களையுண்டாக்கிய காரணரோ *
பங்கஜாக்ஷரோயரி நாரணரோ ஜய
புங்கவரோதிருமா லாரணரோ *
இங்கனேபூமண்டலத்தி லெங்கள்குலபசுக்களும்
இந்திரனாலேயடி பட்டிருந் தாலும்
திங்கள்வதனரோயுல கங்களுக்குநாயகரா ந்
தேவரீராலேரக்ஷிக் சலாகும் மேலும்
சிங்கரேயெங்களுக்கெல்லாம மங்களஸ்வரூபமா ன
தெய்வமும்நீரிந்திரனும் நீரப் பாலுஞ்
செங்கையனேபசுதேவத் துங்கமுள்ளநல்லோருடன்
தேவர்களைரக்ஷிப்ப திந்திரற் கேலும்
அங்கதனாலே நீரோ யிங்கிந்திரனு வீரோ
யெங்களுக்கிந்திரனேரோ யங்கிருபபானென்றீரோ
சங்கசக்கரதிருக் கரப்பர வாஸுதேவா
துங்கசக்கிரிமீதி லேறியாடும் வேணுகோபா
எங்களுக்கிந்திரனே யாகவுந்தான் பிர்மதேவ
ரிங்குமக்கபிஷேகஞ் செய்யச்சொன்னார் தேவதேவ

அங்கவருத்தர வுங்கொடுமூற்ற ன
முங்கருணைப்பெரு வஞ்சமளித்தரு ள்
பொங்குபுவிச்சுமையெங்குமிராக்கி ட
வுங்கமலப்பத மிங்குமுதத்த து
சிங்கநரனே கிருஷ்ணை மங்கையுரனே கிருஷ்ணை
கங்கைச்சரண கிருஷ்ணை லங்காரதர கிருஷ்ணை
பங்கயற்கு மங்கஜற்கு மங்கெவர்க்கு மெங்களுக்கும்
எங்கோனெனவேவல்ல பங்காமதேனுசொல் ல
வுங்கனமங்கள தாங்கவலங்கிரு த
கங்கணதிங்கள்கு லங்கள்விளங்க வே (அரி)

உ. புரந்தரனுக்கிந்திரப்பட்டம் போதும் என்றும்
நிரந்தரமெங்களுக் கேயினி மீதுந் *
திருந்துந்தேவரீரோ யிந்திரன் மீதுஞ் சொன்னர்
விரிஞ்சனென்றுகாம தேனுவுமோதும் *
மருந்துண்ணுந்தேவனேயிந் திரனைவேணுமல்லா ல்
மனிதனுவதெப்படி யெனிந் கண்ண
பரிந்துதேவராம்நீரோ பொருந்துநரவதார ம்
பண்ணினீரையாநீல மணி வண்ண
வருந்தினமெங்களுக்குத் தருங்கருணைக்கட லே
வனமாலியென்றுகாம தேனு நண்ண
சொரிந்துபாலபிஷேகம் புரிந்ததயிராவத ந்
துதிக்கையாலாகாச கங்கையைப் பண்ண
விரும்புமிந்திர னுட வருந்தேவரிஷி கூடப்
பெருந்தகைமைகள்நீட விருந்ததிகொண்டாட
கருந்துளவற்குமபிஷேக கமுறை விரித்தாரோ
நிரைந்துபசுசுவர்க்க மிரண்டையும் பரித்தாரோ
தெரிந்துமனதன்பாக வரியையுச் சரித்தாரோ
விளைந்துகோவிந்தனென்று திருநாமந் தரித்தாரோ
பரந்தவிடத்தி லுரந்துதுதித் து
வரம்பில்புகழ்ச்சி நிரம்பும்விளிக் கை
சுகங்கள்பலுக்கு கிரந்தநெறிப்ப ண
அருந்தனிருற்று நெருங்குரவைக்கு ள்
முருந்தராலோலகிருஷ்ணை வருந்தாகோபால கிருஷ்ணை
வரந்தாசுசீல கிருஷ்ணை திருந்தாதிமூல கிருஷ்ணை
பிருந்தையிற் பொருந்துறைத் திருந்தருட் பரஞ்சுடர்
பெருந்தேவைநாரதரும் புருகானம்பாடுவ து
மருங்கு நெருங்க வொருங்கு பெருங் க
திருஞ்செய் கிரஞ்ச னரஞ்ச கரங்க னே (அரி)

ங. சந்தருவர்வித்தியாதரரும் நீட வெகு
விந்தைச்சித்தசாரணர்களுங் கூட *

எந்தவிதமான பாவமு மோட நந்த
நந்தனார்கீர்த்தியைச் சங்கீதம் பாட *

சுந்தரரம்பைமுதலோர் சந்தோஷநடனஞ்செய்ய ச்
சுரருக்குள்ளேமுக்கிய ராவோ னாய
துந்துபிபேரிமுழங்கச் சிந்தைசெய்துகிருஷ்ணனை யே
துதித்துப்புஷ்பவருஷ மது பெய்ய
எந்தவுலகத்துள்ளோருஞ் சந்ததஞ்சுகம்பெரு கி
யெம்பெருமான்கருணையினாலே யுய்ய
புந்திமகிழ்ந்துபசுக்க ளுந்தானேபாலைச்சொரிந் து
பூமியைநனைத்துமீ ரமது செய்ய

எந்தநதியும் மீறு செந்தயிர்நெய்பாலாறு
தந்ததுவேறுவேறு வந்துமரந்தே னூறி

நெந்தைபயிரிடாதே நெல்மாரி சொழிக்கவே
யிந்திரநீலாதிரத்தின மலையெல்லாஞ் செழிக்கவே
அந்தந்தவுயிர்கள்பகை களின்றிப் பிழைக்கவே
யெந்தெந்தத்துஷ்டஜந்துவும் நல்லகுணந் தழைக்கவே

எந்தை முகுந்தர் பிருந்தை வனந்தனில்
வந்து வளர்ந்தவ னந்த ரருந்து ணை
நந்தசு னந்தனர் விந்தை மிகுந்த வை
குந்தர் பொருந்தி நிறைந்த சவுந்தர ர்

உந்திபூத்தருள் கிருஷ்ண பந்தந்தீர்த்தருள் கிருஷ்ண
நந்தமோர்த்தருள்கிருஷ்ண வந்துகாத்தருள் கிருஷ்ண
மந்திரரூபர் தந்திரரூபர் எந்திரரூபர் இந்திரரூப ர்
செந்தாமரைநயனர் நந்தாநந்தசயன ர்

இந்து குலந்தனில் வந்து பிறந்தவர்
இந்திர னென்று மிசைந்து முயர்ந்தவர்

## தேவேந்திரன் அமராவதி யடைதல்.

---

### விருத்தம்.

இப்படிக்கோ குலத்துக்கும் பசுக்களுக்கும்
இஷ்டமுள்ள நாயகராங் கண்ணனுக்கே
செப்பமாய்க் கோவிந்த னெனும்பட்டாபி
ஷேகமது செய்தவருத் தரவுபெற்றே
அப்படியே சகலதே வருடன்கூட
வாயிரங்கண் ணனுமமரா வதியைச்சேர்ந்தான்
எப்பொழுது மிக்கதையாம் மருந்தைக்காதி
லேற்கின்றார் பவப்பிணியைத் தீர்க்கின்றாரே.

உஎ-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன்திருவடிகளேசரணம்.

## உ அ - ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

---

### விருத்தம்.

நாலேழில் வருணாலயத்திருந்து
நந்தனை யழைத்துவந்து மாயர்க்கெல்லாம்
மாலேவை குந்ததரி சனமுஞ்செய்து
வைத்துவிளை யாடிமுன்கோ வர்த்தனத்தை
மேலேதூக் கியிந்திரனை வசியஞ்செய்தார்
விரைந்துவரு ணாலயத்திற் சென்றநந்தர்
மூலமீதாய் வருணனையும் வசியஞ்செய்து
முன்னிற்பா ரென்பதனை வர்ணிப்பாரே.

### நந்தர் வருணலோக மடைதல்.

திபதை, இராகம்-புன்னாகவராளி, ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. ஏகாதசியிற்சநார்த் தனனையர்ச்சித்துநந் — த
நிருந்தாரேயுபவாசங் — காவலனே
வாகாய்த்துவாதசியிற் காளிந்தியில்நீரா — ட
வந்திறங்கினாரையா — காவலனே

உ. நிசியாமசுரவேளை தனிலேநந்தரும்வந் — து
நீரிலிறங்கினதாற் — காவலனே
அசுரன்வருணதூத னிழுத்துக்கொண்டுபோய்வ — ரு
ணாலயஞ்சென்றானையா — காவலனே

ங. எமுனாநதிஜலத்தில் அசுரவேளையில்நந் — த
ரிறங்கும்வகையென்னென்றாற் — காவலனே
சமதமாகச்சொல்கிறேன் துவாதசியதுதான்சொ — ஞ்
சமிருந்தாலதற்குள்ளே — காவலனே

ச. விளைந்துபாரணைபண்ண வேண்டியருணோத — ய
வேளைக்குமுன்னமேதான் — காவலனே
திருந்திராத்திரியிலே யிறங்கிப்பகல்நேமங்க — ள்
செய்துகொள்ளலாமென்றே — காவலனே

ரு. ஆகமம்விதிப்பதா லிறங்கினாரந்தவ — கை
யசுரற்குத்தெரியாமற் — காவலனே
யோகமிகுநந்தனை யசுரன்வருணாலய — த்
துள்ளேயிழுத்துப்போனான் — காவலனே

சா. எமுனாநதிக்கரையில் நின்றவாயர்களெல்லா — ம்
ராமகிருஷ்ணரேயென்று — காவலனே
குமுசலாய்க்கூவுவதைத் திருச்செவிசாற்றினா — ரே
கோவிந்தர்பரீக்ஷித்துக் — காவலனே

எ. அரிதமக்குந்தந்தையா கியநந்தனாவருண — ன்
அபகரித்தனனென்று — காவலனே

பரிவாயந்தவருண னிடத்திற்சென்றானேகிருஷ்ண ன்
பிராதா காவலனே

அ. தம்மைப்பூஜிக்குந்தொண்டர்க் கபயங்கொடுத்தருளு ந்
தாமனாககண்ணனுந்தான் காவலனே
செம்மையாய்த்தன்னிடத்தில் வரக்கண்டுவருணனு ஞ்
செய்தவகைகையக்கேளுந் காவலனே

வருணன் கண்ணனைத்துதித்தல்.

விருத்தம்.

தருமபுத் திரன்மரபாங் கடலில்வந்த
சந்திரனே பாகவதந் தனிலேயன்பு
பெருகுபரி க்ஷித்தவிண்டு ராதனேய
பிமன்சுதனே கிரீடிமகிழ் பேரனேகேள்
இருகண்கா ணவுமிருடீ கேசமூர்த்தி
யெழுந்தருளக் கண்டுலக பாலனான
வருணனும்பூ ஜித்தேதன் குற்றமெல்லாம்
மாற்றுவான் கண்ணனடி போற்றுவானே.

தரு, இராகம்-கவுளிபந்து, ஆதிதாளம்.

பல்லவி.

அரியுன்பாதங்கண்டேன் நந்தநந்தன
அரியுன்பாதங்கண்டேன் ✱

அநுபல்லவி.

அரியுன்பாதங்கண்டே னடியேனேபாக்கியசாலி
கருணாநிதியேயுந்திக் கமலனேவன மாலி (அரி)

சரணங்கள்.

க. சாமியுமதுதரி சனமிப்போகிடைத்த தே
தமியேன்றேகந்தரித்தற கிதுதான்கைகண்ட பலம்
நாமஞ்சருவரத்தி னுகரபதியென் று
நான்பெற்றிருந்ததனுக் கிதுவரையுண்டோ நலம்
நேமிக்கரத்தேவரீர் ஸேவையினலிப்போ து
நிலைத்ததேயந்தப்பெரும் நேராமெங்குபிர பலம்
காமக்குரோதலோபா திகள்மிகுபவக்கட ல்
கடந்தேன்மோக்ஷக்கரையைக் கண்டேனேயாநி மலம் (அரி)

உ. தரணிதனிலேயிந்திர ஜாலவித்தைதசெய்கி ற
சமத்தனதில்மயங்கான் போலவே யாரணரோ
திரவியுன்மாயையாலே மயங்குதுலகமல்லா ல்
நீர்மாயையில்லாதவர் தானுதி காரணரோ
நிரதிசயமாகிய வயிசுவரியமுள்ளோ ரோ
நித்தஸர்வஜீவ காரண பூரணரோ

பரமபுருஷஜய வாதவேணுகோபா ல
பணிசயனனேதிருப பயிலமார்ப ஆரணோ (அரி)

ரு. ஆயர்பாடிக்குத்தள பதியானநந்தகோ ப
ரகாலத்திறசலத்தினி லிறஙகினொன்றே தானே
மாயவனேகேளுமென றூதனெனனிடஙகொண் டு
வநதானறியாமையா லபராதஞ்செயதேன் யானே
தியதுசிறியவா செய்தாலதுபொறுப் ப
தேபெரியவாகொள்கை யாமேயெம்பெரு மானே
நாயகாவுனறநதைதனை யழைததுககொணடுமுகுந் தா
நானசெயதகுறறமபொறுத் தருளவேணுஞசீ மானே (அரி)

நந்தர் கோகுல மடைதல்.

விருத்தம்.

தோத்திரமிப் படிச்செய்து நந்தர்தமமைச்
சுவாமிமுனனே விடடவனைக கடாக்ஷத்துக்குப்
பாத்திரமாக கியுமயனை யழைததுகசொணடாயப
பாடியிறசோந தாயாகடகெல் லாஞசநதோஷங்
கோத்திரமங கவரினமென் றேதவநதக்
கோவிந்த னுணடாககி யிருந்தாமன்னே
சாத்திரமெல் லாமுபடிதது மெனனகாணுஞ
சரமிதாம பாகவதா முதயிதாமே.

கண்ணன் ஆயர்களுககு வைகுந்த தரிசனங் காண்பிவித்தல்.

விருததம்.

மனிதருட கண்களினுற காணெண்ணாத
வருணனைத்தாங கண்டதுமவ வுலகபாலன்
புனிதமுள கணணனைவந் தடிவணங்கும
புதுமைகளும நந்தாபந்து ஜனஙகளகேட்கச்
சொனதிலவெகு வாசசரிய கரமாயசசொலலத்
தொடாநதாய ரதுகேட்டெ சோதைசேயைக்
கனிவுடனே பரமபுரு ஷனென்றேயெணணக
காட்டினா பரமபதங காட்டினாரோ.

தரு, இராகம-தோடி, ஆதிதாளம்.

பல்லவி,

ஸாமிகாட்டும்வைகுந் தங்கண்டாயர்களும்
பூமியிலேவந்தா ர்

அநுபல்லவி.

நேமிதரிக்குஞ்செங்கை வாசுதேவமு குந்த
நீலவடிவழகா தேவகிதந்த மைந்த
தீமைதவிாத்தன்பனைச் சேர்க்கும்பாதார விநத
தேனளிமுரறறுழாய மாலையணிகோ விந்த (ஸாமி)

சரணங்கள்.

க. அந்தவீசுவரனு யிருக்குங்கண்ணன் தங்களுக்
காதிவைகுந்ததரி சனங் காண
வுந்தயவுசெய்திட வேணுமென்றெண்ணும வ
ருடையனினைபபுஞ்சாமிக கங்கே தோணச்
சிந்தனைசெய்வாரரி யிந்தலோகத்திலுள் ள
ஜனங்கள்தேகமேதா னென்கிற வாண
வநதனைமேவிவெகு ஆசைகொண்டலைகின் ற
வகையலலாலவேறிலலென்று மாதவனகிருபை பூண (ஸாமி

உ. ஆசைகொணடுகருமங் களைச்செய்துயர்ந்ததே வ
ராயுந்தாழ்நததிருமி யாயு நேர்வார
ஆசுபடியுமிநதச் சனனமரணங்களி ற
சுழல்வதல்லாலமெஞ்ஞான மதை மேவார
பாசமதைவிலககுஞ் சுக்ஷமமாமநம து
பரமபதமறிவ திலலை பூவார
தேசுபெறுநமது திருவைகுந்தத்தையாய ர
தரிசனஞ்செய்யமனங் கொணடாரொனறரி யாவார (ஸாமி

௩. மூலப்பிரகிருதிக்கு வேறாயுமபிரமஸ்வரூ ப
முதலாந்திருவைகுநத தரி சனமே
தாலமீதிலமனித ரூனக்கணகளாற்பார்கக ச
சகிககககூடாமையாலே யதின முனமே
மேலுந்தேகத்துககன்னிய மாயகிருபாதிகமா ய்
விளஙகுமஞதியாகி யனு தினமே
சாலுமகணடமாயுஞ் சுயஞ்சோதியாயுஞ்ச ஞ
தனமாமபரமபதந் தனையிசைநதங கனமே (ஸாமி

௪. முனிகள்முக்குணங்களைக் கடநதுகாணுமபதத் தை
முருநதனகோபாலர்களுக் கிஙகே காட்ட
மனமாயெமுநாநதி பிரமமடுவெனகி ற
மடுவினமுழுகசசொல்லி யுனா நாட்டப
புனிதமுனனாவாயாகளு மபபடிச்செய பவ ப
போதுவைகுந்தங்கணட தேசொன டாட்ட
முனமநதமடுவிலே யையரகருரார்கண ட
முறையேயாயருஙகாணச் செயபுநதருவினை யாட்ட (ஸாமி

ரு. கண்ணனந்தமடுவில் வைகுந்ததரிசன ங்
காட்டியவாகளைபபின் கரை யேறப
பண்ணச்சமாதியிலே யிருந்ததிற்கண்டவ னு
பவஞானிகட்கானந்தத தேனு மூற
நணணுஞ்சமாதிநீங்கும் போதுமுன்னனுப வ
நாட்டம்மறவாததே யினை கூற
வண்ணமேயாயாகண்ட வைகுந்தானுபவத் தை
மறவாமல்வையகத்தும் வந்தவர்மனந் தேற (ஸாமி)

இதுவுமது,
விருத்தம்.

வைகுந்தங் கண்டபின்னும் பூலோகத்தில்
வரககண்ண னிமித்தகா ரணமேயன்றிச்
செய்குநத வங்கண்மிகு மககுரூரர்
சிறநதந்த மடுவிலே மூழ்கமுன்னாள்
மெய்குந்த கங்களின்றிக கணடபின்னும்
மீணடதற்குப புராணவா தரவுங்காண்பாய்
மைகுநத ளமதிலுறை சோதைபாலா
யாட்சிதா னதுசருவ சாட்சிதானே.

இதுவுமது.
விருத்தம்.

வழக்கமதா யெமுனையிலே யின்னமபிரம
மடுவென்று மிருபபதிறற் காணலாச்சு
முழக்கமதா யானந்த மடைநதுநந்தா
முதலான வயாகளுங் கணணன்றன்னைப்
பழககமதாய் வேதங்க ளாறறுதித்த
படிமடுவி னின்றுகனா யேதிவந்து
பொழக்கமதாய்க கணடபடி யதுதானேயற்
புதமென்பா ரரிபரம பதமெனபாரே.

உஅ-ம் அத்தியாயம் முற்றும்.
கண்ணன்திருவடிகளேசரணம்.

---

உகூ-ம் அத்தியாயம்.

இதுமுதல் ஐந்தத்தியாயமும் கண்ணன் ராஸகிரீடா
மகிமையுரைத்தல்.

அவதாரிகை.

---

விருத்தம்.

கண்ணனுனவா கோவிமாாகள் களிக்கராஸக் கிரீடையைக்
காட்டியுஞ்சில வாககிறைலுரை கண்டுதாம்மறை வாகினர்
பண்ணராம்பர மேசராயாகள் பாவைமாரொடு கூடலும
பஞ்சபாணன வன்ஜயிபபது பங்கயன்முதலண்டமொன்
றெண்ணமாயெவ ருந்தமககெதி ரிலலையெனறக மீறவே
யீதறிந்தன ரொங்கையாதவ ரொங்குமாகிகி றைரதமால்
அண்ணலாமரி யக்கிரீடைவியாஜமாயவிளை யாடியே
யந்தவேளைய டககினாெனு மாறுநான்குமோ னாந்திலே,

கண்ணன் ராஸக்கிரீடைக் காரம்பித்தல்.

தரு, இராகம்-ஸவுராஷ்ட்ரம், சாபுதாளம்.

பல்லவி.

வாஸுதேவன்செய்த ராஸக்கிரீடையை
ராஜனேகேளுமை யா.

அநுபல்லவி.

[நல்ல] வாசமிகுமல்லிகை மலர்செய்மையா ய்
மலர்ச்சியாஞ்சரற்கால மதிற
பேசுமிரவனு கூல மாக
ராசமதனகோ பால * (வா

சரணங்கள்.

க. கொம்மைமுலைக்கோவி மாணைப்புணர்ந்த து
கோவிந்தறகங்குமேற் பூச்சு இது
செம்மதிபாாயோக மாயையைச்சேர்ந்த ரீ
லீலைசெய்யவந்த தாச்சு ஞாயம்
இன்மையதாயபர தாரத்தைபிச்சித் தா
லெமபெருமானுக்கி தேச்சு என்ன
நன்மையதுவிப ரீதமேமன்ம த
னைசெயிபபதென்ன வீச்சு ஆனல்
நம்மையபோலேதானே யாசசு தெனாற்
செம்மையாய்க்கேளிந்தப் பேசசு * (வா

உ. சங்கசக்ரத்தரி யாத்துமாராமராய் த்
தாமேசகலபி ராணி க்குள்ளே
யுங்கலந்திருப்பர் கட்டவிடக்கர்த் த
ருன்னுஞ்சுதந்திர ரூணி யெளி
சஙகாதமகருள்ளே தாங்கலந்தாப ர
தாரபேதமிலலைத் தோணி ப்பாரும்
அங்கபபடிநாமு மல்லவேயான தா
லநதவிளையாட்டைப பூணி மாயை
பொஙகவேலைசசக்கர பாணி மத
பங்கஞ்செய்தாரிதைக கேணி * (வா

௩. சுந்தரமாகப பகவன்சரித்திர ஞ்
சொல்லிவநதிந்தச்சிங காரம் ஆனா
விந்தைகககதைசொன் னறசனங்களுக் கு
விரக்தியுண்டோவென்ன சாரம் என்றால
அநதச்சிங்கார முழுதுமவெளியா கி
யறபுதஞானதி காரம் வரும்
உந்தனுககுச்சொல்வோ மைந்தாமத்தியாய மீ
தோதுஙகடைசிகம பீரம் ஆக
வுந்தான்விரக்தியி னரம பங்கொண்
டநதமின்னும்மிகுந் தீரம் * (வா

கண்ணன் சந்திரோதயங்காணல்.

---

விருத்தம்.

முகில்போலுந் திருமேனிச் செங்கண்மாலாம்
மூர்த்திவன மாலிமுன்ன ளாயர்மாதர்

துகில்கவர்ந்த பொழுதினிமேல் வருமிராவித்
சுகமாக வுங்களோடா மணைவோமென்று
விகிதமாய்த் திருவுளம்பற் றினபடிக்கே
விளங்குமந்த ராத்திரிய தனிலுமாயை
சகிதராய் லீலைசெய்து மவர்கள்தம்மி
தயங்கண்டார் சந்திரோ தயங்கண்டாரே.

தரு இராகம்-மோகனம், ஆதிதாளம்.

பல்லவி.

கண்டதுபூரணதி லாவே லீலைக்காரம்பங்
கொண்டனரெங்தேவர்தேவே *

அநுபல்லவி.

மண்டலமீதுகார்த்திகை வருமிரவதனில் மேலே
எண்டிசைசொற்கண்ணனுக்கே யிசைந்தவெள்ளிக்குடைபோலே (கண்)

சரணங்கள்.

க. கிழக்கதுமுகத்திலேதான் கிரணமாங்கரங்க ளாலே
முழக்கமாய்ச்சிவப்பையிட்ட முதஞ்சொரிந்துபுவி மேலே
தழைக்குஞ்சனங்கள்பயிர்கள் தாபம்நீங்கியொருக் காலே
பிழைக்கச்செய்தசிங்காரமெம் பெருமானைநெடு மாலே (கண்)

உ. நெருங்குதலின்றிக்கணவன் னெடுநாளாகவே பிரிந்தும்
வருந்தருணம்வந்துசேர்ந்து மனைவிமேலன்பு மிகுந்தும்
ஒருங்கதாயந்தக்கண்ணுட்டி யுடமுகந்தனிற் பொருந்தும்
கரங்களாற்குங்குமம்பூசுங் கணக்கதாய்மண்டலந் திருந்தும் (கண்)

ங. ஆம்பலோடைக்குநாயக னகண்டமண்டல விமானன்
தேம்பொழிகூந்தல்மாதர்கள் திருமுகத்துக்குச் சமானன்
ஆம்புதியகுங்குமம்போ லருகுமண்டல மோவானந்
தீம்புதவிர்க்குமுகுந்தன் றிருவிளையாட நிதானந் (கண்)

கண்ணன் வேணுநாதத்தாற் கோவியர் வருதல்.

விருத்தம்.

நிலவுதனில் விளங்குபசுக் கிடைகளாலே
நிறைபிருந்தா வனத்தையங்கே கண்டுங்கண்ணன்
குலவியந்த ராத்திரியிற் புணரவேணுங்
கோவியரை யென்றிதமாய் வேணுகானம்
நலவிசையாய்த் தொடங்கமன்ம தனையுண்டாக்கும்
நாதத்தை யறிந்தவர்மே லாசைதானே
நிலைபெறுருங் குமக்கொங்கை மாதரெல்லாம்
நேர்நின்று ரோடிவந்து சேர்கின்றாரே.

இதுவுமது.

விருத்தம்.

மனதுருகிமுரலியிசை வழியினேரிடவெங்கு வனமாலிநிற்பதென்றே
வள்ளையுறுசெவிகளிற் குண்டலங்களுமசைய வருவேகமதனில்காமே

தனதாமொருத்தியே செல்வதல்லால்வேறு சங்கங்களிலையென்றுமே
சந்தடிகள்வருவதும் அவரவர்கள்தெரியாது தருமிலச்சைகளின்றியே
பனகசயனனையெதிர்செய் பகனகன்பூதனை படர்ந்ததேனுகனொடுமினம்
படியில்வருபிரலம்ப னுதியனாவென்றவெம் பரமனையுமாயர்மாதர்
நினைவில்வைத்தேயவர்கள் தொழிலெலாம்பாதியி னிறுத்திவருமொழிவுபோ
நீடிவந்தார்கதியி லோடிவந்தாரறிகி ரீடிதந்தார்தனையனே.

திபதை, இராகம்-எதுகுலகாம்போதி, ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. பசுவின்பால்கறந்துகொண் டிருக்கையிலவரவர்
பாதியில்விட்டோடிவந்தார் சிலமாதர்
உசிதமாய்க்கன்றைவிட்டுக் கறப்பதற்குமுன்னமே
யோடிவந்ததென்னசொல்வேன் சிலமாதர்

உ. பாலையடுப்பில்வைத்துப் பொங்கிவருவதையும்
பாராமலோடிவந்தார் சிலமாதர்
பாலுடன்சோறுமையன்னம் பக்குவம்பார்ப்பதைவிட்டுப்
பரந்துபரந்தோடிவந்தார் சிலமாதர்

ங. குழந்தைகளுக்குமுலைப் பால்கொடுக்குநடுவிற்
கொடுக்காமலோடிவந்தார் சிலமாதர்
கொழுந்துமுல்லைக்கோதையார் புசிப்பைநடுவில்விட்டுக்
கும்பல்கும்பலாகவந்தார் சிலமாதர்

ச. புருடர்க்குப்பணிவிடை செய்வதைவிட்டவர்கள்
புருஷோத்தமன்பால்வந்தார் சிலமாதர்
இருடீகேசன்மாயையாற் கோகுலத்திலேயுள்ள
வேந்திழைமார்களிலே சிலமாதர்

ரு ஒருபாலிற்சந்தனமுங் குங்குமங்களும்பூசி
யொருபாற்பூசாமல்வந்தார் சிலமாதர்
ஒருகண்ணுக்குமைதீட்டி யொருகண்ணில்மையிடாம
லுடைசோரவந்தாரையா சிலமாதர்

சா. ஆடையாபரணங்க ளணிவதிற்சிலதுக
ளணியுமுன்னோடிவந்தார் சிலமாதர்
வேடிக்கையாய்க்கண்ணாடி பார்ப்பதைவிட்டுமெதி
வேகமாயோடிவந்தார் சிலமாதர்

எ. காதலரொருவற்சா யலங்காரங்கொண்டதெல்லாங்
கண்ணனுக்கேற்றதென்பார் சிலமாதர்
மாதவரவர்முன்னே மனமகிடசியதாக
வையல்கொண்டோடிவந்தார் சிலமாதர்

அ. வத்திராபரணங்கள் வரிசைகண்டணியாமல்
மாறுய்த்தரித்துவந்தார் சிலமாதர்
சித்தனுகியகண்ணன் நெடுமாலாயிருக்கவும்
நெடுமாலாய்வந்தாரையா சிலமாதர்

இ து வு ம து.

கலித்துறை.

கோவந்தனைக்கொண்டு கேள்வர்பிதாக்கள் சகோதரரும்
ஆவிந்தவேளையி லெங்கேசெல்வீரென் றதட்டிவருங்
சாவந்துக்காரர் தடங்கலையாதுங் கருத்தில்லையார்
கோவிந்தர்பால்மனம் வைத்தோடிவந்தனர் கோவியரே.

கண்ணனிடம் வாராத அந்தப்புரக்கோவியர் முக்தியடைதல்.

திபதை, இராகம் ஆனந்தபைரவி, மிச்சிரதாளம்.

அந்தப்புரராணிகள் தானே சிலபேர்கோபிமார்
அவர்கள்கதையையான்சொல்லு வேனே இங்கே
வந்திடக்கூடாதவர் தாமே யிருக்குமிடத்தில்
வாஸுதேவனைமனதக லாமே நல்ல
பாவனைசெய்துகண்களை மூடி மனஞ்சலியாமற்
பாலகிருஷ்ணனைமருவுதல் நாடி நெஞ்சில்
ஆவலாகவேசகிக்கக்கூ டாத விரகதாபத்தி
னாலேதீவரமாயக லாத மனது
கண்ணனிடத்திலேபதித் தாரே முக்குணமான
காயத்தைவிட்டுமேலயித் தாரே யோகம்
பண்ணும்பிரம்மவரே யாச்சுதே லயித்தபேர்கள்
பந்தங்களெல்லாந்தீர்ந்து போச்சுதே அரியைச்
சோரபதிபாவனையே பண்ணினார் அலதுபிரம
ஸவரூபமென் றுமெங்கே யெண்ணினார் இந்தப்
பாரிலவர்க்குமோக்ஷங் கிடைக்குமா பவபாதமான
பாசத்தொடர்பையறவுந் துடைக்குமா வென்றால்
அமுதமென்பதையறியா துண்ணவே யதன்குணந்தனை
யதுவேகொடுக்குமென்றே யெண்ணவே *

சுகப்பிர்ம்மரிஷி பரிக்ஷித்தாசனுக்குக் கோவிமார்
மகிமை யுரைத்தல்.

---

வி ரு த் த ம்.

ஏந்திழையார் பிராரப்த கருமமெல்லா
மெப்படிவி மோசனமாச் சென்றாற்கண்ணன்
தோய்ந்திடா விரகத்தாற் றுனபமுற்றா
தொடர்ந்தரியை மனதிலே தியானஞ்செய்து
சேர்ந்துசுக மனுபவித்தா ரிவையிரண்டாற்
றீர்ந்ததையா பிராரப்த சுகதுக்கங்கள்
ஆய்ந்துபார் பரிக்ஷித்தே யவரோகல்ல
வாச்சியார் பெருமைபெற்ற ராச்சியாரே.

## இதுவுமது.

### விருத்தம்.

பதிபுத்திரா திகளையுந்தான் கோபிமார்கள்
பரப்பிர்ம்ம பாவனையுஞ் செய்யவில்லை
யதுபோற்கண் ணனைச்சொரூப மென்றெண்ணாம
லழகுள்ள வாசைநா யகராயெண்ணில்
எதனாலே முக்தியுண்டாச் சென்பீராகில்
எதிரியாய்ச் சிசுபாலன் பகைத்துமோக்ஷக்
கதியடைந்தா னிவர்கட்குக் கேட்பதென்ன
காணுநீ மெஞ்ஞானம் பூணுநீயே.

தரு, இராகம்-ஸாவேரி, திரிபுடைதாளம்.

### பல்லவி.

மகிமையுள்ளவரி மீதுவைம | னதையே கோபி
மடர்ந்தமார்கள்முக்தி யடைந்ததிந்தக் | கதையே

### அநுபல்லவி.

நகைமுகத்தரான கோவிமா | ராசை
நாயகராயெண்ணித் துடைத்தாரோ | மாசை
அகிலவுலகநா யகனை | யருச்சித்தே
யடிபணியமுக்தி வருமே | பரிக்ஷித்தே (மகி)

### சரணங்கள்.

க. பிரமமெனுமதுசகலவுயிரிலும் பரவியிருக்கும் | ரூபமே
பேசுவதுரிஷீகேசனனகண்ணன் பிரபலமனிதஸ்வ | ரூபமே
தரணிதனில்வருதேவகிமைந்தனைப் பிரமமென்பதென்பிர | தாபமே
சாற்றுவீரொன்றுற்பார்த்தன்பேரனே தானவனிர்க்குண | தீபமே
அரியொருநாளிலு மழிவில் | லாதவர்
அறியக்கூடாத பெருமை | யாதவர்
திரிகுணங்களையும் மேவ | லீதவர்
செய்கையென்றறி நீயவரோ | யாதவர் (மகி)

உ. மனிதனைரக்ஷிக்கும்பொருட்டினலந்த வனகனேகிருஷ்ண | ஸாமியே
வடிவுகொண்டுவந்தபடியல்லாமற்பாரின் மனிதனைப்போலல்லநேமியே
பனகசயனவிராட்புருஷனை வனமாலியந்தரி | யாமியே
பாருங்கோவம்பயமாருஞ்சினேகிதம் பக்திசம்பந்தர்கள் | காமியே
இனமுறையாய்த்தானே வகுத்துயான் | சொன்ன
தெந்தவிதத்திலு ஞானஸம் | பன்ன
அனுதினங்கண்ணனை மனதினிலே | யுன்ன
வவாகள்தற்சொரூப மடைவரோ | மன்ன (மகி)

ங. யோகேசருக்கெல்லாமீசர்பிறப்பில்லா ராகும்வாஸுதேவ | ரிடத்திலே
யூர்ச்சிதம்தாமீதாச்சரியமென்ன வுனைக்கிறேனிந்தத் | தடத்திலே
வாகுளசரங்கள்முதலாய்க்கண்ணனாலே தேகபந்தந்தீர்ந்து | திடத்திலே
வரமுக்தியடைந்தபிரசித்தமுமது வைகுண்டபதிதான் | வடத்திலே

யோகசித்திஞானயைபுவந்தவருள் மாரி
யுலகரக்ஷகராங் கோவர்த்தன தாரி
யேகனனேசனு மவன்றனேமு ராரி
யெதுகுலத்தினில்வந் துதித்தவவ தாரி (மஙி)

## கோவியரைக்கண்ணன்வினவல்.

விருத்தம்.

உள்ம்பரவு காதலினல் முக்திபெற்ற
வொண்ணுதலார் சரிதையிது கண்டாய்மன்னு
வளம்பெருகு கண்ணனிடஞ் சிலதுகோவி
மார்கள்வரப் பார்த்தருளி மாயைகாட்டித்
தளம்பும்வகை செய்ததுகேள பேச்சில்நல்ல
சமத்தராங் கோபாலர் வினையமாக
விளம்புமொழி யால்மோகஞ் செய்ததுங்கோ
விந்தர்தாம் சொல்லுவர்வை குந்தர்தாமே.

தரு, இராகம்-சங்கராபரணம், சாபுதாளம்.

பல்லவி.

கோவியரேயிங்கே வந்தகாரியமென்கோ
குலமுஞ்சுகமோவென் னன்னங்களே.

அநுபல்லவி.

காவிவிழியரோ பாகியசாலிக ளே
கருத்தின்பிரியமென்ன திருத்தியதனைச்சொல்லு ங் (கோவி)

சரணங்கள்.

க. வேகுகோரமானவிந்த இரவிலே பொல்லா
மிருகபபிசாசுமுதல் வரவிலே வந்த
வகையென்பிருந்தாவனப் பரவிலே நீங்கள்
,, வரும்படியெவர்களுந் தரவிலே யிங்கே
அகலாதரிவையர்கள வசிப்பதோ சொல்லுவீரோ
அன்னநடையீருங்க ளாய்பபாடி செல்லுவீரோ (கோவி)

உ. தாயர்தந்தையுங்களைத் தேடுவார் பெற்ற
தனையர்துணைவர்முகம் வாடுவார் உங்கள்
நேயரங்கனேயானைக் கூடுவார் இன்னம்
நேருங்கிளைஞரெல்லா நாடுவார் நல்ல
தூயமல்லிகைமுல்லை சூடுங்கோதை மார்களே
சுழன்றுநாலுபக்கமும் பார்க்கும்பேதை மார்களே (கோவி)

ங. வாசமலர்கள்செந்தேன் பெருகுதே தேனை
வண்டுகிதங்கள்பாடிப் பருகுதே குளிர்
வீசுமந்தமாருதம் வருகுதே மதி
வெண்ணிலவுமானந்தந் தருகுதே யின்னம்
பேசுங்காந்தளமலர்க் கிணையான செங்கையரே
பிருந்தாவனச்சிங்காரம் பார்த்தீரா மங்கையரே (கோவி)

௪. நேரமதிகமாச்சுக் காணுமே யங்கே
நேயர்பணிகள்செய்ய வேணுமே யதோ
பாருங்கன்றுகள்சத்தந் தோணுமே யுங்கள்
பாலரழுவதனை யூணுமே நீங்கள்
ஆருஞ்சென்றுகுழந்தை களுக்குப்பால் கொடுக்கலாம்
ஆவினங்கள்கறந்தாற் றயிர்வெண்ணை யெடுக்கலாம் (கோவி)

இ து வு ம து.

விருத்தம்.

சாத்திரபு ராணமொடு முதலாய்வேதந்
தந்தருளித் தருமமிது வென்றுகாட்டுஞ்
சூத்திரதா ரியுமான கண்ணனையர்
தோகையனைப் பார்த்துங்கள் கணவற்கேநீர்
பாத்திரமா மவாபணியும் பாலர்பந்து
பாலனமுஞ் செய்வீரோ மெனவுங்கேட்டும்
நேத்திரங்க ளுங்கலங்கி மவுனமாக
நிறகின்றார் களைப்பார்த்து னாக்கின்றாரோ.

தரு, இராகம்-தோடி, மிச்சிர தாளம்.

ப ல் ல வி.

அஞ்சனாக்ஷிகளே கோவிமா ரே
யடங்கலும்நீரெனைத் தேடிவந்தீ ரே.

அ நு ப ல் ல வி.

ரஞ்சிதமிதுசகலமானபி ராணிகட்கெல்லாம்பிரியனை னே
பஞ்சுமெல்லடியாருங்கட்கென்மேற்பரிவுவரவேண்டியதுதானே (அஞ்ச)

ச ர ண ங் க ள்.

௧. வஞ்சனையின்றிப்பதிபணிவிடை மைந்தர்சுற்றமுங் கூட *
மனதுடன்பரிபாலனஞ்செய்யு மங்கையர்க்கறம் நீடக் *
கிஞ்சித்தாகிலுமாசாரம்பாக் கியமில்லாத மூடக் *
கிழவன்ரோகிதரித்திரங்களுங் கிளைப்பததிவி சேட னாகிலும்
வஞ்சியரோ யெழிலப
ரஞ்சியரோ யொருநாளும்
பஞ்சமாபாதகமில்லாப் பதிகளைவிடப்புகழ் படைக்குமோ
அஞ்சுகமொழியாரோகேளும் அவர்க்குநல்லலோகமுங்கிடைக்குமோ (அஞ்ச)

௨. பரபுருஷனையனுபவிப்பதிற் பலிக்கும்நரகக் குழியே *
பயத்தையெப்போதுங்கொடுப்பதேயல்லாற்பாரிலெங்கெங்கும்பழியே *
வரவதினாலுண்டாகிலுமது மாதர்க்கவலச் சுழியே *
மனைப்பெண்டியர்க்குவிபசாரச்செயல் மகாபாதகத்தின் வழியே யானதா
லரிவையரோ பதிபணி
புரிவையரோயுங்கட் கென்னைத்
தரிசிக்கலாங்கதையைக்கேட்டுந் தியானித்துங்கீர்த்தனம் பண்ணலாம்
வரிசையிதுவல்லாமலென்றனைமருவநீங்கள்தாமெப்படியெண்ணலாம்(அஞ்ச)

க. பதிவிரதைகள்நீங்கள்என்றனைப் பாங்குடனேசி னேசம் *
பணியும்மன்மதன்றிருநாள்நடத்தும் படியுங்கள்மனோ பாகம் *
அதனையறியக்காட்டுதுங்கள்நயனங்கள்சொரிபிர வாகம் *
அன்னநடையீரின்னதென்றுரையாததேனிந்த மோகம் முழுமதி

வதன மின்னே ரிடைச்சிசாள்
விதனமென்னே கனமான

பதகமாமிதுகற்புநிலையைப் பங்கஞ்செய்யாதீரினிநீர் சொல்லலாங்
குதலைமொழியினுரோகேளுங் கோகுலத்துககுநீங்கள் செல்லலாம்(அஞ்ச)

கண்ணனுரையைக்கேட்டுக் கோவியர் வெட்கமடைதல்.

---

விருத்தம்.

இப்படிப்பகவ னுரைத்ததுசெவிகட் கேறுதலின்றியே தங்கள்
எணமதுாடக்க வில்லையென்றுய ரேந்திழைமார்துய ருற்று
மைப்படிக்கண்ணி னூபெருமூச்சால் வதனபங்கேருகம் வாட
வரிசையாய்க்கொவ்வை யதரமுமுலர மலாபபதவிரலினு லங்கும்
இப்புவிதன்னி லெழுதியேகொண்டு மேர்தலேகுனிந்துமை கனையும்
இருகண்ணினீராற் றனங்களிலணிந்த வெழிற்குங்குமங்களை யலம்பிச்
செப்புதலொன்று மிலாதுநின்றூர்கள் சிலபொழுததனையென் சொல்வேன்
செங்கணுன்மகிமை யெங்கனுனறிவ தீரனேதெவிவிமன் னவனே.

கோவியர் கண்ணனைப்பார்த் துரைத்தல்.

---

விருத்தம்.

சதிருள்ள கோவியர்பே சாதிருந்துஞ்
சத்துருப்போல் வார்த்தைசொல்லு மரியைத்தானே
கதியென்று புருஷர்மைநதர் வீடெனுஞ்ச
கலத்தையும்விட் டொழித்துவந்தார் கோபத்தாலே
அதிகதழ தழப்பாக மொழியையங்கே
யறைகின்று ரதைகேளு மபிமன்மைந்தா
மதிமானே யென்றுரைப்பார் வியாதரின்கு
மாரர்தாம் பராசரற்குப் பேரர்தாமே.

தரு இராகம்-ஆனந்தபைரவி, ஆதிதாளம்.

பல்லவி.

இந்தவுபதேசந்தான் சொல்லவந்தீரோகிருஷ்ணு
யிதெல்லாமுமக்கே யேற்கு மே.

அநுபல்லவி.

நந்தகோபகுமாரா நவநீத சோரா
சுந்தரனேயொய்யாரா சுமுகநராவ தாரா (இந்த)

சரணங்கள்.

க. சகலவிஷயங்களும் அகலவிட்டுவந் தோமே
சாமிதிருவடிக்கே யடிமையாய்ப்புகுந் தோமே

தகமையுள்ளவரும்நீர் பகடிசெய்வ தென்னது
தடுத்திந்தமொழியெல்லா மெடுத்துரைக்க வொண்ணது
மிகவுமெங்களைத்தள்ளி விட்டுவிடாதீர் சாமி
வீடுபுருஷர்மைந்த ராசைதவிர்ந்தோம் நேமி
அகிலவாசையும்விட்ட துறவிபோல்நாங்கள் காணும்
ஆதிபுருஷர்சேர்க்கும் வகையாகச்சேர்க்க வேணும் (இந்த)

உ. புருஷர்க்குப்பணிவிடை புரியச்சொல்லி வந்தீரோ
புதல்வருறவைக்காரும் போமென்றுரை தந்தீரோ
தருமங்களையறிந்த நீரெங்கட்குப தேசஞ
சாற்றினதெல்லாமுமக் காகட்டுமென்ன மோசம்
பரவுமுலகுக்கெல்லாம் பதிதேவரீ ரல்லவோ
பந்துக்களுமமையல்லாற் பகுத்துவேறு சொல்லவோ
தருபுத்திரனேயான்மா வென்னும்வேதப்பிர தாபந்
தாமரைக்கண்ணனேநீர் தானேயான்மஸ் ரூபம் (இந்த)

௩. ஆசானுசவேயுப தேசஞ்செய்வது நாமே
யதெல்லாநாமல்லவென்று விதமாகச்சொல்லு வோமே
கூசாமறறருமத்தை யறியவேண்டியே தாங்கள்
கூறவேணுமென்றிங்கே பதிவிரதையாம் நாங்கள்
பேசுமும்மிடத்திலே கேட்கவர வில்லையே
பின்னுநீர்சொன்னாலுந்தான் கேட்பதிந்தச் சொல்லையே
தேசிகனுகியுமமற் றெதிலுநீரோ யிருக்கச்
செகந்நாதரும்மையல்லா திதென்றுகாட்டும் பெருக்க (இந்த)

௪. சாத்திரங்களறிந்த பேர்கள்யாவரு மும்மைத்
தானேயன்பாய்ப்பூஜித்துங் கலந்திருப்பதே செம்மை
ஆத்திகளைகொடுக்கும புருஷாபுத்திர ரின்னம்
அனைவர்களாலுமெங்கட் காகவேண்டிய தென்ன
சோத்தியாயுமமிடத்தி லாசைபெருகி யிங்கே
சென்றோமெங்களைத்தள்ளி விடவேண்டாங்காணுமங்கே
கீர்த்திபெருகுங்கிருஷ்ண மூர்த்தியா நிதியே
கேளும்லோகநாயகா நீர்தானெங்கள் பதியே (இந்த)

இ து வு ம து.
விருத்தம்.

எதுவரையிலெங்களுட வீடுகளிலேசுகத்தி லிருந்தோம்யாங்கள்
அதுவரையிலுளசுகங்க ளெல்லாமுன்சொரூபமென் றேயறிந்தோமிக்க
பதிவிரதையாமெங்கள் மனதுகளையிழுத்தீர்கோ பாலபாலா
இதைவிடவுமெங்களுக் கங்கென்னசுகமென்னபய னிதுசொல்வீரே.

தரு, இராகம்-பிலகரி, ஏகதாளம்.
ப ல் ல வி.

விரகவேதனைதீரும் வேணுகோபாலஸாமி.
அ நு ப ல் ல வி.

வரிசையாய்நாங்களிந்த மையல்கொண்டோமேமுகுந்த (விரக)

சரணங்கள்.

க. கைகளோவேலைகள் செய்யக் கால்நடப்பதில்லை மெய்ய
செய்வதென்னநாங்கள் துய்ய சிந்தையும்மிடத்தி லய்ய (விரக)

உ. உம்முடையமந்த காசம் உச்சிதப்பார்வை விலாசம்
செம்மைவேணுகானேல்லாசஞ் சேர்ந்துசெய்தகாமா வேசம் (விரக)

௩. விண்டுசொல்வதோவுன் பாலே வித்தையுள்ளவர்மென் மேலே
கண்டுன்னிதழமுதா லே காமத்தீயைநீயும் மாலே (விரக)

இதுவுமது.

விருத்தம்.

நந்தசுதா விதழமுதால் விரகத்தீயை
நனையாமல் நீயிருந்தீ ராணலயாங்கள்
இந்தவிர காக்கினிக்கெங் களின்றேகத்தை
யிங்கொப்புக் கொடுத்தும்யோ கிகளைப்போலே
சிந்தையினி லும்மையே தியானஞ்செய்து
திருவடியில் வந்தடைவோ மதனையுங்கள்
சொந்தமுள்ள புருஷர்களால் நனையுமென்று
தொடுக்கின்ற ரதற்குறையுங் கொடுக்கின்றோ.

தரு, இராகம்-உசானி, ரூபகதாளம்.

பல்லவி.

வரதனேயுனை யென்னுளுங் கூடி
மருவியிருக்கமன தே.

அநுபல்லவி.

அரிவையரெங்கள்மே லருளனுகூல
அற்புதந்தரும் வேணுகோ பால (வரத)

சரணங்கள்.

க. மனமஞ்சுசசியேவளரச்செய்தேவி மாலக்ஷ்மி மானே யுன்றன்
கனமெய்ப்பாதந்நான்பிடிக்கவேயொரு கணங்கிடைத்ததுந் தானே *
சனதமீறியானந்தம்பெற்றுளே சாமிசெங்கண் ணனே நாளும்
வனஜனங்களுக்கன்பனுன்சேவடி மால்மறவாதையாமற்றுஞ்சொல்வானே (வ)

உ. தேவரீர்பாதபத்துமங்களைநாங்கள் தரிசித்தோமே யிந்தச் சுக
மேவியானந்தம்பெற்றவெங்கட்கெந்த விஷயங்காணுஞ் சொந்த *
ஆவலாயினிமற்றொன்றையும்வேண்டோம் அரிபாதார விந்த மான
சேவையன்றியாதொன்றுமெங்கள்மனந்தேடுமோசொந்தயின்மைந்தகோவிந்த (வரத)

௩. இந்திராகருணைகடாக்ஷம்பெற வெண்ணங்கொண்டு துய்யா மிக
அந்தணன்முதலானதேவரெல்லா மருந்தவங்கள் செய்ய *
உந்தம்மார்பின்மாலக்ஷ்மியிருப்பது மோராங்காணி யையா நல
அந்துளசிசேர்பாதத்தைப்பொன்னவ ளாசிக்கிறுள்மெய்யனுதிசெங்கையா (வ)

இதுவுமது.

விருத்தம்.

அப்படியே யுன்றன்பா தத்துக்கென்ன
வதிகபாக் கியவிசே ஷந்தானென்றுற்

றப்பாது திருமார்பு மீதிருந்து
சக்களத்தி யாந்துளசி யுடனேகூட
எப்பொழுது முன்சரணும் புயத்தின்ஸேவை
யெண்ணுகிறாள் தொண்டரெல்லாம் பரவுகின்றார்
செப்புகிறே மிதைவிடவு மென்னபாக்கியந்
தேட்டந்தா னுன்னடிமேல் நாட்டந்தானே.

இதுவுமது.

விருத்தம்.

அடியருடதுன்பம் விலக்கின்றதேவரீர்க் கடிமைசெயவேணுமென்றே
யருந்தவஞ்செய்துவரு யோகிகள்தமைப்போல வாய்ப்பாடியதனைவிட்டு
நெடியபாதத்திலே தொண்டாகவந்ததே நிச்சயம்நிறைந்தவழகா
நின்மந்தகாசமும் பார்வையுங்கண்டிந்த ரீதியாயதிககாம
முடனிந்தவிரகத்தி லேதவிக்கின்றவெமை யுமதடிமையாக்கியருள்வீர்
உனையெங்கள்வீடுகளி லெஜமானியாகவு முறைந்திருப்பதனைவிட்டுன்
அடிமையாய்வரவந்த தென்னென்றுவினவிலுலங்கதற்கெதிர்மொழிசொல்வோம்
அரவிந்தணிசைசடில னரவிந்தனுருவம்பின தரவிந்தநயனமுகிலே.

தரு, இராகம்-சுருட்டி, சாபுதாளம்.

பல்லவி.

காயாம்பூவண்ணனே நில்லும் உம்மையல்லாதென்
கண்களுக்கெதிரார்சொல்லும் *

அநுபல்லவி.

நேயநந்தகுமார னேநவநீதசோர
நினைவுகனவிலுமுந் தமையேசிந்தனைசெய்வோம் (காயா)

சரணங்கள்.

க. சாயக்கொண்டையின் னலமுந் கோபாலரேயென்
சாமிமுகமண் டலமும் *
மேயச்செவிக்குண் டலமுங் கண்ணுடிப்பிரபை
வீசுங்கன்னத்தின் றலமும் *
வேடிக்கையாகக் காட்டி வேணுகானத்தை மீட்டிப்
பாடிக்காமத்தை மூட்டிப் பகட்டுவதென்ன போட்டி (காயா)

உ. விபுவுன்னமுதா தரமுங் கண்பார்வையுடன்
மென்னகைமனோ கரமும் *
அபயவரத கரமுந் திருமாதென்றும்
அகலாதிருக்கு முரமும் *
அழகர்தேவரீர் காணும் அடிமைகொள்ளவே வேணும்
மழைமேகங்களு நாணும் வடிவருமக்கே தோணுங் (காயா)

௩. இந்தவுமக்கே யடிமை யல்லாதெங்கட்கோ
ரொஜயானத்துவங் கொடுமை *
அந்தச்சொல்லைநீர் விடுமை யாகிருஷ்ணஸாமி
யனங்கன்செய்கிறான் கடுமை *

ஆசைதேவரீர் மீதே யல்லாலொன்றுநா டாதே
பேசுமிதுதப் பாதே பின்னொன்றுஞ்சொல்லொண்ணாதே (காயா)

இதுவுமது,
விருத்தம்.

அரிவையர்கள்பரபுருஷர் களையனுபவஞ்செய்வ தவனிக்குநிந்தையென்று
லமுதொழுகராகவா லாபனைவிசித்திரங்க ளாமிசையுடனறுதிக்கும்
முரளிகானத்தைநின் னிடமதிறகேட்டுலக மோகமாய்பபுருஷாகூட
மோகிப்பதைக்கண்டு பதிவிரதையானவர்கள் மூனறுலகிலெவர்கள்சொல்லும்
பரமபாக்கியமுள்ள வுமதழகும்வேணுப பலுக்குங்குலுக்குகளையும்
பசுபக்ஷிமிருகங்கள முதலாய்மரங்களும பார்த்துரோமாங்கிதங்கள்
பெருகுதேநாங்களதா மெப்படிநிஜத்திலே பேதையானவர்நடப்போம
பெண்ணரசெசோதைதரு கண்ணமணிவண்ணனே பின்னைகேளவாபரமனே.

தரு, இராகம்-காம்போதி, ரூபகதாளம்.
பல்லவி.

அரிஹரிகிருஷ்ணவரத ராஜனே
யமலனேயருளனு கூலனே.

அநுபல்லவி.

பரமபுருஷாவேணுவைப பலுக்கிறீர் பிலுக்கிறீர் குலுக்கிறீர்
ஸரஸகோபாலரேயெங்களுக்குச சரணாகதி யே (அரி)

சரணங்கள்.

க. மருக்கமழ்மாமலர்வாளி மதனவிடுவதினாலே
நெருக்குதே சிந்தையையிப்படி
யுருக்குதே நிறைந்தசுந்தர
வரிக்கருங்களிவண்டு பாடுதே மாயனே தூயனே நேயனே
அருககனிதென்னவே காயுதே வெணமதி யாரண காரண பூரண (அரி)

உ. நலத்தொடுதேவரை நாரணரிரக்ஷிப்பதது போலே
நிலத்திலே சாமிதேவா கோ
குலத்திலே நிலைமையாக வே
பலத்தையெங்களுக்கருள வந்த கோபாலனே சீலனே லோலனே
மலைககிணையாயுயர் நந்த கோபகு மாரனே சூரனே தீரனே (அரி)

ந. சகிக்கவொண்ணாதிந்த விரகலாகிரியுமநேடுமோலே
உகைகிறீ ரெங்கள்கொஙகைமேல்
நகக்குறி நளினமாக வே
முகத்திலேமுகமவைத்துமுத்த மதுதா மோதர ஸ்ரீதர நீதர
குகைகிரிகோ வாத்த னதரஞனவை குநதமு குந்தகோ விந்தனே(அரி)

கண்ணன் கோவியருடன்கூடி விளையாடல்.

---

விருத்தம.

உம்மடிமை யாயிருந்தும விரகதாப
முமறிந்த வகைதவிககு மெஙகள்மார்பில்

விம்முமுலை களின்மீதுந் தலையின்மீதும்
  விரைமலர்ச்செந் தாமரைபோ லிருக்குங்கையைச்
செம்மையாய் வைக்கவென்றே யாயர்மாதர்
  சேர்ந்துபர வசமாகப் புலம்புகின்ற
நன்மொழியை யோகேச ரீசர்கண்ணன்
  நாடினர் கூடிவிளை யாடினரே.

தரு, இராகம்-ஸாவேரி, ஆதிதாளம்.

பல்லவி.

சிங்காரலீலைசெய்தாரோ கோபாலகிருஷ்ணன்
சிங்காரலீலைசெய்தாரோ

அநுபல்லவி.

மங்கையெசோதைசேயர் மதுரச்செங்கனிவாயர்
  வங்கணமாய்ப்பிருந்தா வனத்தினிலே நடந்து
  பொங்கமதாகவாயர் பூவையரைத் தொடர்ந்து (சிங்கா)

சரணங்கள்.

க. ஆன்மாராமரா யிருந்த போதிலுமாயர்
  அரிவையர்மனம் பொருந்த க்கருணைசெய்து
தான்மந்தகாசந் திருந்த அவர்களுமி
  சைந்திதழமு தருந்த
மேன்மைபெருகியசோ தியர்கட்கிசைய நாடி
  வேணுகோபாலஸாமி வேடிக்கையாகக் கூடித்
தேன்மருவியமலர் மாலைமிகவுஞ் சூடிச்
  செகன்மோகனவடிவைச் சேர்ந்துமிசைகள் பாடிச் (சிங்கா)

உ. ஆசைநாயக மாலே யவர்சுந்தர
  வருட்கண்பார்வையி னாலே செந்தாமரையின்
வாசமலரைப் போலே முகமலர்ந்து
  மங்கைமாரொருக் காலே
ராஜகோபாலருடன் மேவிச்சஞ் சரித்தாரோ
  நகைத்துக்கொண்டச்சுதரும் வேடிக்கை விரித்தாரோ
நேசமிகுந்தவர்போ லேமனந் திரித்தாரோ
  லீலாவிநோதராக வேயவ தரித்தாரோ (சிங்கா)

ங. குந்தமலர தென்னவே தந்தபங்திகள்
  கொடுக்குங்காந்திகள் மின்னவே நீலமேனியில்
அந்தவெண்மையு மன்னவே பூரணசந்திர
  னுமிவரொன்றே பன்னவே
பைந்தொடிமார்நக்ஷத் திரங்களைநே ராகப்
  பரவநடுவின்முழு மதியென்னுஞ்சீ ராக
விந்தைவிந்தையாய்ப்பரி யாஸவ்கைபண் பாக
  விளைத்துமதன்கருவ மடக்கியரிய னேக (சிங்கா)

## கண்ணன் கோவியரை யாலிங்கனஞ்செயல்.

---

விருத்தம்.

இடையர்வனி தைகளொரு நூற்றுக்குமேலாம்
எண்ணிக்கை யுளபெண்கள் சேனைசூழ
நடுவினிலே வையஜயந்தி மாலைபூண்டு
நாரணரு மிசைவேணு கானஞ்செய்தார்
படியளந்தா ரந்தந்த வனங்கள்தோறும்
பரவியெமு னநதியின் பாங்கர்சென்றே
நெடியமணற் குன்றுகளி லிசைந்துமேவி
நீடிப்பார் மனதினிலூ டாடிபபாரே.

தரு, இராகம்-புன்னகவராளி, சாபுதாளம்.

பல்லவி.

ஆலிங்கனஞ்செய்தாரையா கிருஷ்ணனேகிரானையா.

அநுபல்லவி.

மாலிங்கிதசுந்தரர் ஞாலஞ்செய்பீதாம்பரா ரி
மானயமாய்வேணு கானவினோதர்கோவியரை யே. (ஆலிங்க)

சரணங்கள்.

க. எமுனையாற்றுமணலும்பனியினு லெங்கும்நனைந்தது நீட
ஏற்றந்தநதிஜலத்தினலைகளி லேபடிந்துங்காற்று மாடக்
குமுதமாமலாவாசனையுங்குமு குமென்றுவீசுதல் நாடக்
கோபாலகிருஷ்ணனுமந்தமணற்குன்றிற் கோவியர்களுடன்கூடக்
குஞ்சரந்தனைநேராக ரஞ்சிதம்பேசிச்சிரா க
வஞ்சியரைக்கைபிடித் தின்சொல்மிகவேபடிப் பாரே
மாதரசேயிங்கே வாருங்களடியென்று மருவியே (ஆலிங்க)

உ. கரமிரண்டையும்நீட்டிமங்கையரைக் கட்டியணைத்துஞ்சிங் காரக்
கைகளளகந்தொடைகளிடுப்புகள் கனதனங்களுஞ் சேர
வரிசையாகப்பிடித்தேநகரேகை வைத்துமகிட்சிகள கூர
மன்னுஞ்சரஸஸல்லாபபரியாஸ வார்த்தைகள்பேசியந் கோ
மந்தநகைமுகச்சேர்வை செந்தாமரைக்கண்ணின்பார் வை
யிந்தவிதங்கள்கன விந்தைகளுஞ்செய்தன ராய
ரேந்திழைமார்களைச் சேர்ந்துதயாநிதி சரசமாய் (ஆலிங்க)

ஙூ. கோடிமன்மதவடிவாகவேயந்தக் கோவிந்தராம்பக்த ராவி
கோகுலத்தின்மிக்கசுந்தரிகளாகுங் கோவிமாரோடிங்கு லாவி
நீடியவாசையவர்கள்மனதில் நிறையச்செய்திப்படி மேவி
நீலமணிவண்ணர்தானந்தமன்மதன் னெஞ்சின்கருவத்தை ராவி
நித்தரகண்டபூரணர் கர்த்தராந்திருநாரண ர்
பத்தரைவிட்டகலார் சுத்தமாயாசையிலார் அந்தப்
பரமசுகாதீதப புருஷராயெங்குநிறை பரம்பொருள் (ஆலிங்க)

### கண்ணனை யடைந்த கோவியர் கருவமடைதல்.

விருத்தம்.

ஆசைகள்யா தொன்றுமிலாப பகவனங்கே
யாயர்மடந் தையர்குறித்த படியேகாம
பூசைநிறை வேற்றுதற்காய் லீலைசெய்யும்
போதந்தக கோவியாக ளெலலாமிநதப்
காசினியி லேயுள்ள பெண்களுக்குட்
கனவழகு நாமென்று மதனுல்நம்யேல்
மீசுரமாய்க காதலுற்ருர் கண்ணனெனற
விதங்கொண்டார் மனதினிலு மதங்கொண்டாரோ.

### கண்ணன் கோவியர் கருவத்தை நீக்க மறைதல்.

விருத்தம்.

நாஞ்சொன்ன படிக்கண்ணன் கேட்குகின்ருர்
நமகநிக ரில்லையென்ற வெணணந்தனனைத்
தாஞ்சிந்தை தனிறகேச வனுமறிந்தத்
தையலாா கருவத்தை நீக்கிபபின்பு
காஞ்சனமே னிக்கோவி மார்களுககுக
கடாகூமது செய்வமெனறே மறைந்தார் துய்ய
பாஞ்சஜன் னியபாணி மகிமைகேளாய்
பரிக்ஷிதகே யரியவனா யருச்சித்தேற்றே.

உக - ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன் திருவடிகளே சரணம்.

---

## ௩௰ - ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

விருத்தம்.

மாயனைக்கா ணமல்விர கததினலே
மயங்கியநதக கோவியருன மத்தங்கொண்ட
பேயனைபபோல வனங்களதோறுஞ் சுழன்றுகொண்டே
பிரமையாய்த தேடினு ரென்னுமகாதை
தோயுமிது முப்பதா மத்தியாயஞ்
சுகமுனிவா பரிக்ஷித்துக குரைத்தமார்க்கங்
தூயவியாக இியைபுரிந்த மதிமானும்பூ
ஸுரர்கண்டீ ரவரோ ஸ்ரீ தரா கணடீரோ.

### கண்ணனைககாணுமற்கோவியர்கள் தேடுதல்.

விருத்தம்.

காணுமல் மறைந்தவுடன் கோவிமார்கள்
கணணனையே தேடினதற குவலமகேளும்

ஆணை தனைத்தேடித் தேடியேபெண்
ணுனைகளதாந் தவிபபதுபோற நவித்தாளையா
வேணுகோ பாலாநடை யழகுமாசை
மிககொடுக்கும நகைகடைக்கண் பார்வைசெய்ய
வாணிமன மகிட்சியதாங் கீதந்தன்னை
மதிககினறுர் மனதையங்கே பதிக்கின்றுரே.

தரு இராகம்-ஆனந்தபைரவி, ரூபகதாளம்.

பல்லவி.

நங்கைமார்களெங்கெங்கும் நாடிநாடித்தேடினு ரே
நாராயணநநதகோபு நநதனகோவிநத னை.

அநுபல்லவி.

செங்கைபிடித்துமருவிககலநது திருவிளையாடுமெரியைக்காணும ல்
அங்கெமுனுநதிதீர ததின ததிலு மறபுதமாகியபிருநதாவன ததிலு ம்(நங்கை)

சரணங்கள்.

௧. கன்னனுடநடையழகுங் காதலசெய்யுநதிருநகையு ம்
பன்னணிசைந்தசங்கீதமும பாாவையுங்கோாவைகளு ம்
நன்னுமவாபலவிதமாய் நாட்டுமவிளையாட்டுகளு ங்
கனணுலேகண்டதனுலே கருத்தைமுகுநதனிடததிற்பதித்து ப்
பெணணுாகள்பிரமைதானே பிடித்தாசைபெருகியவாதா ம்
பணணினலீலைகளெல்லாம் பரிந்துதெரிநதுபுரிந்தாரேமன் ணு(நங்கை)

௨. அரியவரேயாயர்பாடி யரிவையரோதாங்களென்று ங
கருமுகில்மேனியனடையைக காட்டிநடந்தாகளை யா
பரிக்ஷிததனேமாலதிருககண பாாவைபோலபபாாத்திசைந்து ம்
புருஷோததமாநகைசெய்வதைப போலேகோவிமாாநகைத்தா ரே
திருமாதுமணவாளா சிஙகாரவசனமபோ லே
வரிசையாய்வசனித்துமிக வணங்கியிணங்கியணங்குகள்போ லே(நங்கை)

௩. சங்கசக்கரகதாகட்க சாாங்கபாணிவனமாலியா ம்
எங்கள்கிருஷ்ணன்விளையாடலபோலேந்திழைமார்சோாதுசேர்ந்து
குங்குமஞ்சோகொங்கைமினனா கூடிககூடிவிளையா டி
அங்கனைமாாகளேயடி நானகணணனுனகணணனென்று மே
மஙகிநதபபடியாடி யழகாகச்சநகொலிசெய்யு ஞ்
செஙகையரவாகளஙகனே திருததியொருத்திககொருத்திபேசி யே(நங்கை)

இதுவுமது.

விருததம.

நயநதிவகை விளையாடிப பின்னுமந்த
நங்கைமார் கண்ணனைககா ணுமலங்கே
உயாநதகுர லாயரியைக கூவிககூவி
யுனமத்தம பிடித்தவாபோல வனங்கள்தோறுந்
தயங்கியவா தேடினு ராகாசமபோற்
சதலபூ தங்களினுள ளுமபுறம்பும்

வியந்துநிறை பரமபுரு ஷனைக்கண்டீரோ
விருக்கங்கா ளென்பரவ ருருக்கங்காணே.

திபதை, இராகம்-கண்டை, சாபுதாளம்.

கண்ணிகள்.

க. அரசமரங்களேயிச்சிமரமே ஆலேயுயர்ந் தீரோ இங்கனே
வரிசையாய்நிற்கிறீரோபிருந்தா வனத்திற்சிறந் தீரோ *

உ. கந்தகுமாரனுசைகொடுக்கிற நகையி னலேயும் முகுந்தன்
விந்தையுள்ளசெந்தாமரைக்கண்பார்வை விளையாட்டினலேயும் *

ங. திருடனைப்போலேமயக்கியேயெங்கள் சிந்தைகொள்ளைகொண்டுசென்றனோ
வரவும்நீரிங்கேகண்டதுண்டோசொல்வீர் மர்தருமு முண்டு *

ச. மனிதர்க்குமிகவுபகாரமான மருதானை மரமே புன்னையே
பனிமலற்செண்பகமேயசோகமே பாதிரிப்பூ மரமே *

ரு. மந்தகாஸஞ்செய்துராமாநுஜன்பெண்கள் மனமத பங்கஞ்செய்துகொண்
டிந்தவழிசெல்லக்கண்டதுண்டோசொல்லு மெங்களுக்கந்தரங்கம *

சு. சுந்தரஞ்சேர்மங்களகரமான துளஸியும்நீ தானே யரிகோ
விந்தன்றிருவடித்தாமரைமேலன்பு மிகுந்திடு மானே *

எ. வண்டுகளுடனேகூடவுன்னையந்தமால்தரிக் கின்றனே யுன்மீது
கொண்டபிரீதியுள்ளவச்சுதன்சேதி கூறெங்கு நின்றனே *

அ. குணமிகுந்துநல்வாசனையுள்ளார்க்குக் கொடுமை யில்லையே யதனல்
வணங்கியிருக்குமாலதியேஜாதி மல்லிகை முல்லையே *

கூ. உங்களைக்கையாற்பரிசித்தானந்தத்தை யுண்டாகக்கொண்டீரோ மாதவன்
எங்கனேசென்றன்தயவாய்ச்சொல்லுமநாங்க ளேந்திழைகண்டீரோ *

க0. சகலஜீவாகருங்கனிவர்க்கமு தற்றன துருவான வகையால்
மிகவுபகாரசரீரங்கொண்டு விளங்குந் தருவான *

கக. மாவேபலாவேமலையத்திவேங்கையே வகுள விலவமே தாணியே
காவல்கதம்பமரமேபிரியாள் கற்றிருவே சொல்வமே *

கஉ. யமுநாதீரத்திற்றீர்த்தவாஸிகளா யிருககின்றீர் நீரோ யெங்களைக்
கமலலோசனகிருஷ்ணன்பிரிந்தான் கண்டதுசொல்வீரோ *

இதுவுமது.

விருத்தம்.

கொடியிடையா ரிவ்வாறு வனமரங்கள்
கொடிகள்செடி களைபபாத்துப் புலம்பிக்கொண்டு
நெடியயமு னநதியின் மணலின்முன்னே
நேரிழையா ளைப்பிரிந்து சென்றநீல
வடிவழக னெசோதைமைந் தனைப்பிருந்தா
வனத்திலெங்கெங் குந்தேடி வரவேமாலின்
அடிபதிந்த பூமியைப்பார்த் துனாக்குஞ்சொல்லோ
ராணிதா னதுமதுர வாணிதானே.

இதுவுமது.

ம.

பூமிநீதவ மென்னசெய்தனே புருஷரத்தின கேசவன்
பொன்னடிக்கம லம்பதிந்துடல் புனிதமான மகிழ்ச்சியால்
மாமயிற்புள கங்கள்புல்லு மரங்களாலும் விளங்கிருய்
மகிழுலாசமி தோவலதுமுன் வருதிரிவிக்கிரம சாமியாம்
நேமிமாலடி யுன்சரீரம் நிறைந்தணைந்ததி ஞலுமோ
நீதியாதிவ ராகருன்னை நிலைத்தெடுத்ததி ஞலுமோ
ஆமிதற்குளி தென்றுசொல்லென வாசைநாயக ராழிமால்
அரிநடந்த நடப்பைநாடின ராயர்மாதர்க ளாவரே.

தரு, இராகம்-தோடி, ஜம்பைதாளம்.

பல்லவி.

வனமாலிதமைக்கோவி மார்தேடினரோ மன்ற
வனமாலிதமைக்கோவி மார்தேடினரோ

அநுபல்லவி.

வனமான்களையுங்கனியின்மரங்களையுங்கோலி (வன)

சரணங்கள்.

௧. மான்பேடுகளேயிங்கே வந்தசகி மாரோ
மலர்க்கண்ணிறைலழகாய் மகிழ்ந்துபார்க்கின் றீரோ
தேன்பொழியுந்தாரச்சுதர் சிறந்துங்கள்கண் ணேரோ
திருவழகுகாட்டிக்கொண்டு சென்றாரோசொல் வீரோ (வன)

௨. ஆசைநாயகியுடனே யரியிங்குற் றாரோ
அவரெங்கள்குலபதியே யாவதறி யீரோ
பேசியிங்கேயெழுந்தருளெம் பெருமானைக்கண் டீரோ
பெண்மான்களெங்களைநீர் பேதமுஞ்செய் வீரோ (வன)

௩. அரியாசைநாயகியை யணைந்ததி னலே
யவள்தனத்திலணிருங்கும மதுகளொரு காலே
பரவிக்கிருஷ்ணன்றிருமார்பிற் படிந்தகுந்த மாலே
பரிமளங்கள்வீசுதென்றும் பகர்வதினி மேலே (வன)

௪. வணங்கிநிற்கின் றீரேகனி மரங்களேஒய் யார
மாதரசிதோளிலொரு வாகுவைச்சிங் கார
மிணங்கவைத்துமொருகையிஞ லேமகிட்சி கூர
விசையும்மனமலர்கொண்டரி யேகிஞர்கண் டீரா (வன)

௫. மார்பினிலேயணிதுளஸி மாலையினி லிருக்கும்
மதுவுண்மதவண்டுகள்பின் வரவுமன்பு பெருக்கும்
பேர்பெறுங்கள்வந்தனத்தைப் பிரீதியாகத் திருக்கும்
பெருமாண்கண்டருளினரோ பேசுமென்றந் தருக்கும் (வன)

இதுவுமது.

விருத்தம்.

அதிலேசில லாயர்கொடி மார்கள்பாங்கி
யரிவையலாப் பார்த்திந்தக் கொடிகள்தங்கள்

பதிகளாம் மரங்களையா லிங்கஞ்செய்த
படியிருந்துங் கண்ணன்கர பரிசங்கொண்ட
திதுபுளகாங் கிதங்களடைந் திருக்குதல்லா
லினைசொர்ந்தப புருஷர்களா லிவையுறுநம்
பதியாகுந் திருநெடுமால் நகம்பதிந்த
பதிவைப்பா ரென்றங்கே மதிவைப்பாரே.

## கோவியர்கள் கண்ணன் செய்த லீலைகளைத் தாங்கள் செயல்.

கலித்துறை.

பித்தனைப்போற்றிரு வாய்ப்பாடிக்கோவியர் பேதையர்கள்
வித்தகக்கண்ணனைத் தேடிக்கொண்டேவரும் வேளைதனில்
இத்திறமாயரி தாங்களென்றேசெய்த லீலையெல்லாம்
வைத்துச்செய்தாரதைக் கேணீபரிக்ஷித்து மன்னவனே.

ஓரடித்தரு, இராகம்-நாதநாமக்கிரியை, ஆதிதாளம்.

ஒருத்திபூதனையாயிருந்தே முலைகொடுத்தாள்
ஒருத்திநான்கிருஷ்ணனெனச் சிரித்துக்கொண்டவள்மார்பி ற்
பெருத்தமுலைப்பாலையுந் திருத்தியாய்ப்பருகினா ள்
தானேகிருஷ்ணனாகவொருத்தி யழுதுகொண்டு
சகடையையுதைத்திட விகிதமாகவொருத் தி
சகடையுமாயிருந்தாள் வகையையின்னமுங்கேளா ய்
திரணாவிருத்தாசுரனென்றே யொருத்தியங்கே
சீக்கிரமாகவந்து தூக்கவும்மற்றொருத் தி
யேற்கின்றகண்ணனெனுஞ் சேர்க்கையாயிருந்தா ளே
கொக்காம்பகாசுரனென்றே கோவியொருத்தி
கொத்தவுமவனைக்கிழித்த கண்ணனைப்போ லொ
ருத்திவிளையாடும்வி சித்திரமென்னசொல் ல
காவலாதேனுகாசுரனா யொருத்தியங்கே
கழுதைபோலேகத்தின வழிரெண்டுகாலும்வாரி ச்
சுழற்றிப்பலபத்திரன் செழுமைசெய்தாளொருத் தி
அந்தக்கோவிமார்களுக்குள்ளே ரெண்டுபேர்தாங்க
ளாமேபலபத்திர ராமனுங்கிருஷ்ணனென்று ந்
தாமேமகிமையாக நேமகஞ்செய்துகொண்டா ர்
மற்றுமங்குள்ளகோவிமார்கள் பசுங்கன்றுகள்
வள்ளலதாயிடையர் தெள்ளுமணிகளா ன
பிளளைகளெனவுந்தாந் துளளிவிளையாடினா ர்
அதிலேகன்றானதொருபெண்ணைக் காலைச்சுழற்றி
யரிவிளாவின்மரத்தில் வரிசையாயெறிந்துமு ன்
திருவிளையாடற்போலும் ஒருதிவிளையாடினா ள

பசுவாயொருத்திதூரச்செல்ல அவனையொரு
பாங்கிகண்ணனுக்குர லோங்கியழைக்கவ வ
ளாங்குமோடிவந்தனள் வீங்குமுலையொருத் தி
வேணுகானம்பண்ணினனையா வருமையாக
மீசுரமாகவுஞ்ச பாசென்றுமெச்சம ரி
ராசகோபாலர்மீதும் ஆசைகொண்டாரிப்ப டி
நாராயணன்போலுநடந்து காட்டுறேனென்றோர்
நங்கையொருத்திதோளிற் செங்கையைவைத்துமி க
லிங்கிதங்களும்பேசி யங்கொயிலாய்நடந்தா ள்
பெண்கள்சிலரிடையராக வவனைப்பார்த்துப்
பெருங்காற்றுமழையினால் வரும்பயங்களைத்தவிர் ந்
திருமுங்களைமிகவும் விரும்பிரக்ஷிப்போமென் று
உரைத்தேயொருத்திசெங்கையாலே முலைமேற்போடும்
உத்தரீயந்தனையெ டுத்துமுயரத்தூக் கி
வித்தைவினோதராங்கோ வர்த்தனதரரானு ள்
நங்கையொருத்திதலைமீதே காலைவைத்தேறி
நடனம்புரிந்துதுஷ்டா அடடாவிங்கிராதேபோ ய்
விடடாபொல்லாதபேனைப் படியவைக்கநானவந்தே ன்
கண்டாயென்றொருத்தியிப்படிச் சொல்லியேகிருஷ்ணன்
காளியமர்த்தனமுன் னாளினிற்செய்தப டி
தாளவரிசைவிளை யாடிநடித்தாளே யா
காட்டுத்தீஜொலிப்பதைப்பாருஞ் சீக்கிரமுங்கள்
கண்களைமூடிக்கொள்ளு முங்கட்குக்ஷேமம தை
யிங்கேசெய்கிறேனென்று மங்கையொருத்திசொன்னா ள்
தயிர்ப்பானையுடைத்தாயுன்றனை யுரலிலிந்த
க்ஷணமேகட்டுறேனென்று மணமாலைகொண்டிறுக்கி க்
குணமாதொருத்திகட்ட வணியிழைதானொருத் தி
கட்டுக்கொண்டவளாயிருந்து முன்னாளிலங்கே
கனபயந்தவர்போலே யனகர்நின்றபடி யே
பனிமொழியொருத்திநின் றனளையாமன்னவ னே(௧௫)

கோபியர் கண்ணனடிபிடித்தல்.

---

விருத்தம்.

கூடியிவை விளையாடிப் பினும்வனத்திற்
சொர்டிகள்மரங் களைக்கேட்டுக் கொண்டெங்கெங்குந்
தேடிவரும் பொழுதுவன பூமிமீது
திருமாலி னடிபிடித்துக் கொண்டுசெல்லும்
நீடியவேல் விழிமாதர் கண்கள்முன்னே
நிறைந்தமழை மேனியராந் திருமாலாயர்

பாடிநந்தன் பாலர்திரு வடிகளின்வைப்
வைக்கண்டார் மொழிகளெனும் கற்கண்டாரே.

தரு, இராகம்-ரீதிகௌளை, அடதாளம்.

பல்லவி.

படிப்பாரடிபிடிப்பாரோ பொன்னார்மின்னார்
படிப்பாரடிபிடிப்பாரோ

அநுபல்லவி.

நடிப்பானையரியை நந்தகுமார னை
நந்தாவிளக்கொளியாம் நாரணர்நடந்தவழி தேடிப்
பிருந்தாவனத்தினிலே பேதையர்தேடினரோ கூடி (படி)

சரணங்கள்.

க. அடிகளிற்றுஜரேகை பதும ரேகை
யங்குசம்வச்சிர ரேகைதானிய ரேகை
அடியடிகள்தோறு மாட்சிகளாம் ரேகை
யாதிநாராயண னனகிருஷ்ண ரேகை
அரிவையரோ யிழிவையரோ யொன்றும்
அந்தவடிகளைப்பிடித்துக் கொண்டு விந்தையரிசென்றவழி கண்டு
பைந்தொடியாளொருத்தியடிரெண்டு பதுமநாபருடனசென்ற துண்டு
பார்த்திடுமெனவாயர் பாடியுள்ளாகிய மின்னாரோ *
ஆர்த்திகளேமீறி யாரிழையார்சில சொன்னாரோ யினம் (படி)

உ. கண்டீராணனைபெண் ணணையின்றுள் மேலே
கைபோட்டுக்கொண்டது போவதுதான் போலே
கொண்டல்மேனியராம் நந்தன்சேயன் பாலே
கொம்மைமுலைமாதொருத்தி யுடன் . மாலே
கூடியிங்கே நாடினரோ யென்று
கோதையவளாரடி நேரடி யீதோவிவையெவளடி பாரடி
மாதவரீசுவரரடி சீரடிப் போதுசேருமவளெந்த வூரடி
புருஷரத்தினக்கண்ணனைப் பூஜித்திருக்கிறு ளந்தநங்கை *
அரிவைரத்தினமவளை யாசித்திருக்கிறார்மு குந்தனங்கே யென்று (படி)

ந. நந்தம்மைவிட்டந்தக் கோவிந்தர்தா னவர்
நங்கையவளிடத் தாசையுண்டா னவர்
அந்தரங்கமானவிடத்திலே யவர்
அழைத்துக்கொண்டுபோனார் பாருங்கள்மா னவர்
அயில்விழியீர் குயில்மொழியீர் களே
அச்சுதனையும்மயக்கிக்கண் காட்டி யிச்சைகள்பேசியாசைக்கண் ணூட்டி
உச்சிதமானாள்நமக்கவள் போட்டி மிச்சமாய்ச்செய்ததுவல்லோ சூட்டி
வெகுவிந்தைக்காரரடி வேணுகோபாலர்தன்வேடிக்கையோ *
சகஜமதாகுவந்தத் தையற்குமுன்னமே வாடிக்கையோவென்று (படி)

## கோவியர் கண்ணன் பாததூளின் மகிமை யுரைத்தல்.

விருத்தம்.

மடந்தையரே கோவிந்த ருடையசெந்தா
மரையடிகள் பதிந்ததிந்தத் தூளிக்கூட்டம்
அடர்ந்தபுண் ணியங்களிதெப் படியென்றாலோ
அயனாதி தேவரொடுந் திருவுங்கூடப்
படர்ந்திபா வந்தீர வேண்டியாதோர்
பாததூ ளியைச்சிரசிற் றரிப்பாரீதை
யடர்ந்துநா மெடுத்துமபி ஷேகங்கொண்டா
லடையலாங் கண்ணனையுந் தடையிலாமே.

## கோவியர் கண்ணன்பின்சென்ற மற்றோர் கோவியின் மகிமையை யுரைத்தல்.

வெண்பா.

மஞ்சனவண் ணன்பாத மாமலர்த்தூ ளைப்பரவும்
அஞ்சனவேற் கண்ணாரு மாரிழையார்—கஞ்ச
நயனன்ற னைக்கலந்தோர் நங்கையவள் சென்ற
வயனந்த னைச்சிலர்சொல் வார்.

தரு, இராகம்-மத்தியமாவதி, சாபுதாளம்.

பல்லவி.

பாங்கிமார்களே கேளும்ஆயர்
பாடியார்களே

அநுபல்லவி.

ஆங்கவள்தானே கண்ணனைதரத்துக்
காட்சிக்காரியோகாணி யாட்சிக்காரியோசொல்லும் (பாங்கி)

சரணங்கள்.

க. உச்சிதமாகிய கோவியர்க்குப்பொது
வுள்ளதென்றே நேரும் எங்கள்
அச்சுதருடையவதாரத்தையொரு
அங்கனைபே ரூருந் தெரியாமல்
இச்சையதாய்த்திருடிப்பானஞ்செய்ய
விரகசியஞ் சேரும் வகையாய்
நிச்சயமாகச் சென்றிருக்கிறாளவள்
நெஞ்சானதுசற்று மஞ்சாததைப்பாரும் (பாங்கி)

உ. தோகையவுளடியிந்தவடிகளே
சொல்வதென்ன சாக்ஷி பாரும்
ஆகையினாலே நமக்குந்துயர்செய்யு
தந்தவிசா லாக்ஷி அடி
யேகமாய்க்கண்ண னடியிற்கலவா
திருந்தாலல்லோ காக்ஷி கரும்பைப்

பாகைக்கற்கண்டைச்செந் தேனைப்பழிக்கின் ற
பாலார்மொழிநீட்சி வேலார்விழிமாட் சி (பாங்கி)

௯. இவ்விடத்திற்கூர்மை யாம்புல்முனை க
ளிருப்பததி னாலும் அந்தக்
கொவ்வைக்கனியிதழாள் நடையில்லா து
கொண்டுமதன் மேலும் நல்ல
செல்வச்சுகுமார தேகிநடந்திட ச்
சேகல்முள்ளைப் போலும் உறுத்தும்
அவ்வருத்தங்கண்டு தூக்கியிருக்கிற ர்
அடிதானமூந்தும் படிதானேமாலு ம் (பாங்கி)

இதுவுமது.

விருத்தம்.

அதிகாமியாயிருக்கும் கண்ணனந்த
வாசைநாயகியைத்தன் றோளின்மேலே
பதிவாகத் தூக்கினதா லடிகளிங்கே
பதிந்திருப்ப தைப்பாரு மவட்குச்சூட்டப்
புதியமல ரொடுப்பதற்கிங் கிறக்கிவிட்டுப்
பூவுமெடுத் திருக்கிறார் மரங்கள்தோறும்
மதுருத னடந்தெட்டாக் கொம்பையெல்லாம்
வளைத்திட்டா னெனமிகவே களைத்திட்டாரே.

தரு, இராகம்-ஸ்ரீராகம், சாபுதாளம்.

பல்லவி.

வேணுகோபாலர் மந்திரசித்த ர்
வெகுவிந்தைக்காரர டி.

அநுபல்லவி.

ஆணிமுத்தாரமுலைப்பாங்கிமார்க ளே
யச்சுதராம்நெடு மாலே கன
இச்சைகொண்டாரவள் பாலே தூக்கி
வைச்சுக்கொண்டார்தோளின் மேலே யதுபின்
னாலே யறிவோம் லீலை செய்யும் (வேணு)

சரணங்கள்.

௧. எட்டாதகொம்பின் மலர்களெடுப்பத ற்
கிரண்டுகாலையுங் குந்திக் கொண்டு
வட்டாரமெங்குஞ் சுற்றிச்சுற்றிக்கொண்டிங் கு
மலரொடுத்ததிற் சிந்திக் கண்ட
மட்டார்மலர்பாருங் காலின்பெருவிர ல்
மாத்திரம்மொண்டும ழுந்தி னதுங்
கட்டாணிமுத்து வரிசைப்பல்லாள்குண க்
கட்டியவள்செய்த தந்தி ரம்பார்
நெட்டரவின் றலைப் பந்தி மீது
நட்டமுமாடினார் திந்தி னென
முந்தித் தேவர் வந்திக் கின்ற (வேணு)

உ. கோவலர்சூடாமணி யாசைநாய கூந்தல்தன்னில்மலர் சூட்ட வெகு
ஆவலாய்க்கொண்டு முழங்காற்படியி டடையாளம்பாருங்கொண் டாட்ட மாகப்
பூவையவட்குமலர் சூட்டியிங்ங னே புணர்ந்திருக்கிறார் நாட்டங் கொண்டு
நீவிரெல்லாம்பாரும் பாங்கிமாரேயந் த நீலவண்ணன்மையல் பூட்ட மலர்
மாலைவண்டுச்சி கூட்ட நல்ல
கோலமதனம்பு தீட்ட நீல
வீட்ட மூனலை மூட்டச் செய்ய (வேணு)

௩. காமிகளுக்குள்ளதி காமியானவ ன் கண்ணனடிபாங்கி மாரோ பெண்கள்
நாமெல்லாமிங்கிருக்கத் தோளின்மேலந் த நங்கையையேற்றிச்சென் றாரோ யிந்தப்
பூமியிலுள்ள மடந்தையர்க்குள்ளந்த ப் பூவையுழகோசொல் வீரோ செய்ய
தாமரைக்கண்ணனைக்கைவசமாக்கி ய தையலவட்செதி ராரோ கன
மையல்நமக்குத்தந் தாரோ பாலும்
நெய்யுந்தயிருமுண் டாரோ மறைந்
தாரோ வரு வாரோ யரி (வேணு)

கவிக்கூற்று.

விருத்தம்.

பேசவதொன் றுண்டுதுரான் மாவாமந்தப்
பெண்டுகேட்குங் கண்ணனுடன் கூடவென்றே
ஆசைபொருந் தினதாலே நாயகன்போல்
அரிசகத்தைக் கொடுத்துவிளை யாடலல்லால்
வாசுதே வற்கவர்மே லாசையில்லை
வருதனதுள் ளேரமிக்கு மான்மாராமர்
மாசினித்தி யானந்த புருஷற்கேது
மாதராம் மயல்வேத வேதராமே.

கண்ணன்பின்சென்ற கோவி தன்னைத்தானே மகிழ்தல்.

விருத்தம்.

அகண்டிதரா மரியவள்மே லாசைகொண்ட
தாகவெண்ணி யாய்ப்பாடிக் கோவிமார்கள்
விகண்டையா யிவ்வாறு பேசியுங்கோ
விந்தனைக்கா ணமல்மதி மயங்கித்தேடிச்
சிகண்டிநடஞ் செயுமபிருந்தைச் சோலையெல்லாந்
திரிகின்ற ரதுவிருகக முன்னம்மின்னர்

புகன்றபடி கண்ணனுடன் செலுமொருத்தி
புகழ்கின்றாள் தனைத்தானே மகிழ்கின்றாளே.

தரு, இராகம்-கல்யாணி, சாபுதாளம்.

பல்லவி.

ஆசைநாயகிநானே ஸ்ரீகிருஷ்ணனுக்கு
ஆசைநாயகிநானே

அநுபல்லவி.

ராசகோபாலற்கு நானேகண்ணாட்டி
தேசம்புகழுஞ்சிங் காரச்சீ மாட்டி (ஆசை)

சரணங்கள்.

க. எந்திழையார்மற் றெல்லாரையும் நீக்கி
யென்னையரிகிருஷ்ணன் றோளிலுந் தூக்கி
ஆய்ந்தமலர்சூட்டி ஞரோசி லாக்கி
யந்தானிதுவல்லால் வேணுமோ சாக்கி (ஆசை)

உ. மனதுக்கிசைந்தபடி யென்சொல் வாங்கி
வனமாலிதானே வைத்தபாரந் தாங்கி
கனநயமாய்விளை யாடியு மோங்கிக்
காமன்றிருநாட்செய்தார் மனமேயென் பாங்கி (ஆசை)

ந. மங்கைமார்களில் நமக்குச்ச மான
மாதரார்செல்வா யரிவேணு கான
ொன்கைக்குள்ளாளு ரிதுவேரி தான
மென்னசொன்னாலுங் கேட்பாரோகண் ணனை (ஆசை)

கண்ணன் தன்பின்வந்த கோவியைவிட்டு மறைய அவளிரங்கல்.

---

விருத்தம்.

கானிந்த வனத்திலே நடக்கமாட்டேன்
நந்தசுதா வெங்கெங்கே செல்லுமாறு
தானுந்தன் மனததுவோ வங்கெங்கென்னைத்
தவறாதுன் றோளினிலே தூக்கிச்செல்லென்
றேநங்கை கருவங்கொண் டுரைத்துந்தோளி
லேறவரும் போதரியும் மறைந்தாரங்கு
மானந்த விழிமடவாள் கண்கணீரா
மலிகின்றா ளிவைசொல்லி மெலிகின்றாளே.

கண்ணனைப்பிரிந்து வருந்திய கோவியிடம் முன்பிரிந்த
கோவியர்கள் வந்துகூடல்.

---

விருத்தம்.

என்றுத னேரமனு பிரியமுள்ளோய்
எங்குற்றாய் புயாசலனே யெழில்முகுந்தா

தென்றுதெ ஞுவெனவே வண்டுபாடுந்
திருத்துளவ மாலையநின் னடிமையானேன்
இன்றுதை யுறலாமா அரிநேராக
வென்கண்முன் வரவென்றே புலம்பும்போது
பின்னுர்கள் மற்றவரு மவளைக்கண்டே
வினவுவா ருலகமிது கனவுபாரே.

திபதை, இராகம்-ரீதிகௌளை, சாபுதாளம்.

கண்ணிகள்.

க. நாக்ரீகமாய்க்கிருஷ்ண னடந்தவழியேகொண் டு
நங்கைமார்வருமுன்ன மேர்த்துத்
தோகையவள்கண்ணனைப் பிரிந்துமோகத்தி லே
துயரப்படுவதையும் பார்த்து

உ. அவள்வாய்மொழியறிந்து மாதவரானவ ர்
அவளையபிமானித்து மீட்டும்
அவளுடையதுர்ப்புத்தி தனைக்கண்டுபின்னவ ளை
யவமானித்தவகையுங் கேட்டும்

௩. ஆச்சரியம்பொருந்திக் கோவிமாரெல்லாம்பிரு ந்
தாரண்ணியமதினடு மீது
மாச்சந்திரகிரண மில்லாதிடத்திலந் த
மாதரெல்லாருஞ்செல்லும் போது

ச. ஓங்குமிருளைக்கண்டும் வனத்துக்குள்ளேசெல்வ தை
யொழிந்துமந்தவொருத்தி கூடப்
பாங்கியரானமற்றக் கோவியர்களெல்லோரு ம்
பரவிக்கண்ணனைத்தானே தேட

ரு. தேடித்தேடிக்கண்ணனைக் காணுமல்மனதினி ற்
சிந்தனைசெய்தெம்பெரு மானே
பாடிப்பலுக்குவதும் லீலைகளையுஞ்சொல்லி ப்
பரவித்தன்மயமாகத் தானே

சு. அரிகுணங்களைச்சொல்லிக் கானம்பண்ணிரை ல்லா ல்
ஆய்ப்பாடிவீடுமுத லான
வரிசையெதுகளையும் நினைக்கவில்லையேபின்னு ம்
மாயன்முன்பிரிந்ததி தான

எ. யமுனுநதிமணற் குன்றினில்வந்துகூ டி
யேகிமைழக்கோவிமார்க ளெல்லாந்
தமுனுகவுங்கிருஷ்ணன் வரவேண்டிப்பாடின து
தான்கோபிகாகீதையாஞ் சொல்லாம்

௩0 - ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன் திருவடிகளே சரணம்.

## ௩௧-ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

---

விருத்தம்.

கோவியர்பிருந் தாவனத்தி லரியைத்தேடிக்
கொண்டெமுனு நதியின்மணற் குன்றிற்பின்னும்
மேவியந்தக் கண்ணனையே காணவேண்டி
மிகத்துதித்த கோபிகா கீதைதன்னை
நாவலரெல் லாம்பரவுஞ் சுகச்சுவாமி
ராஜபரி க்ஷித்தனுக்கே சொன்னமார்க்கம்
மூவேழு மொருபத்தா மத்தியாய
மொழியிதாம் பாகவத வழியிதாமே.

## கோபிகாகீதை.

### கோவியர் கண்ணனைத்துதித்தல்.

---

விருத்தம்.

குருகுலமாங் கடலில்வந்த மதியேமன்னர்
கோவேயக் கோவிமார் பிருந்தைக்காட்டிற்
பரவியே தேடியரி யைக்காணமற்
பைங்கிளியன் னார்பின்னு மெமுனைப்பாங்கர்
பெருமணற்குன் றினில்வந்து கூடியேயெம்
பெருமானே நெடுமாலே யெங்கள்கண்முன்
வரவேணு மென்றுரைத்த கீதைதன்னை
வாசிப்பா ருலகமெங்கும் பூசிப்பாரே.

தரு, இராகம்-ஆனந்தபைரவி, ஆதிதாளம்.

பல்லவி.

பாலனே யரவிந்தலோசன இரு
பாதிதரிசனந்தரவை யா.

அநுபல்லவி.

நீலமேகவண சங்கசக்கராத ர
நினைத்துநினைத்துவருந் துவமேயசோ தை (பால)

சரணங்கள்.

௧. உனதுஜனனத்தாலுயர்ந்ததுவெங்களிடைச் சேரி யனு
தினங்கோகுலந்திருமகள்மேவவும்மனம் பூரி மா
தனைவருமையல்கொண்டுமைநாடுவதும் பாரி யீ
வனபூமிகளெங்குந்தேடித்திரிகிறோம்மு ராரி *
பனகசாயிகருணைமுத வாரி
யனகனேதரணிமேலவ தாரி
வனஜபாணிபீதாம்பர தாரி
,சனகராதிமுனிவோருனைக் கோரி
கனதியானமிசைவார்மலர் மாரி
காவலானெனவுமோதும்வ லாரி

தனொடுதேவர்பொழிமால்செய　வாரி
தருணமீதேயாரியனேயெசோ　தை　(பால)

௨. சரத்ருதுதனிலேவிகஸிதமனாமலர்　போலே　சுந்
தரமாமுன்றிருக்கருணாரஸவிழி　யாலே　ஆ
தரவுளவினதடிமைகளாகினம்வெகு　மாலே　யுற
வருவேளசெயுந்துயரோதுசொலுவம்நெடு　மாலே　*
விரகமீறுதிங்கடாமொரு　நூலே
பெரியபாரமுலையோவிம　லாலே
பொரியுதேதரளமாமணி　மாலை
சரியுதேயளகவால்வளை　சேலை
அரிவரதராஜனினொரு　ளாலே
யாயர்பாடியானதுமொருக்　காலே
வருவினைகளுந்தீர்ந்ததுமென்　மேலே
மதிநுதலாளபாமலனுஞ்சொல்லெசோதை　(பால)

௩. விடஜலமதையேபருந்திமுளமிறந்த　போதும்　உடல்
படர்யாமளைப்பணியுடலாயினில்நுழை　போதும்　மா
கடுமழைபெருங்காற்றிடியோதிவரு　போதுந்　தீ
யடலரிஷ்டன்மகனகன்றுருவாகவந்த　போதும்　*
அடவிதன்னிலனல்சூழ்ந்திடு　போதும்
அடிமையனவெங்களையப்　போதுந்
தடையிலலாமறகாரதிரோயெப்　போதும்
அடர்பகனென்றோரசுரன்வரு　போதும்
உடல்கிழியச்செயதேயொணறு　போதும்
ஓங்குநாககாளியனெதிர்　போதும்
படமதில்நடமிடும்பதமெப்　போதும்
பரவுகிறோமிப்போதேயெ　சோதை　(பால)

இதுவுமது.

விருத்தம்.

அனையதுன்பங்களையிவ்வாறகநீக்கி
　யாண்டவரிபபோதிந்தவுபேக்ஷைசெய்வ
தெனணாயீந் தேவரீரொசோதைமைந்த
　னென்பதுமாத் திரமல்ல பிராணியென்ப
தனில்விளங்கு புத்திசாக்ஷியதாம்பிர்ம்ம
　ஸாக்ஷாத்கா ரப்பொருளே யதுநிஜந்தான்
அனவாகன் முனம்வேண்டச் சகத்துன்பத்தை
　யரிக்கின்றீர புவியிலவ தரிக்கினறீரே.

தரு, இராகம்-பந்துவராளி, ஆதிதாளம்.

பல்லவி.

காதாந்தப்பிர்ம்மஸ்வரூபமே　கோபாலகிருஷ்
ணேரீர்மெஞ்ஞானதீப　மே　*

அநுபல்லவி.

சோதைநந்தனார் தானேயல்லநீ ர்
ஆதிமூலர்சகலமா ன
பூதகோடிபுத்திகளிலு ம்
நீதிஸாக்ஷியாயிருக்கின் ற (நாத)

சரணங்கள்.

௧. ஜகத்தைரக்ஷிக்கும் நிமித்தியமபிர் ம
தேவர்வேண்டநீயொது குலத்திலே
மகத்துவமுள்ள அவதாரஞ்செய் து
வந்தீரெங்கள்சோகுலத் தலத்திலே
இகத்திற்றெண்டர்கள பிறவித்துன்பத் தை
யெண்ணியஞ்சியுன்றுட்க மலத்திலே
புகற்குச்சிந்தனை செய்கிறார்ஜ ய
பொன்னைக்கைப்பிடிததும் நலத்திலே
பொன்னடிசொடுத் துன்னதமா க
மனனுமரிபிர சன்னவத ன
நின்னுடகர மென்னுமல ர
தன்னையெங்கள்சிரன்னடுவைய் ம் (நாத)

௨. மந்தநகையினுற் கோவிமார்களி ன்
மமதைநீக்கியேவருவி னோதனே
நந்தசோகுலந் தார்களார்த்தி யை
நாடித்தீர்க்கின்றவேத வேதனே
உந்தமடிமையாக நவிக்சலாகு மோ
உமதுமுகச்செந்தாமரையைப் போதனே
இந்தவெங்களகண் முன்னேகாண்பித் து
இனிவிடாமறசோந்திருமெம் நாதனே
எவருமைவந்திப் பவரோவவாக ள்
பவவினையைநீக் குவதாகியும ப
சுவின்பின்னுகச்சென் றுவிமலைவாச ந்
தவறுதுமுன் றிருவடியாகு மே (நாத)

௩. பணியின்படத்தின்மேல் நடனமாடி ய
பாதநாமரைமலரைத் தூயனே
மணிவண்ணவெங்கள் தனத்தில்வைத்துநீ ர்
மதவிகாரந்தீர்நந்தன் சேயனே
வணிதமாய்வித்து வானகள்மெச்சுமு ன்
மதுரவார்த்தையால்நாங்கள் மாயனே
கணிதஞ்செயவொண்ணு மோகங்கொண்டதா ற்
கனியிதழ்ச்சுவைதாரும் நேயனே
சதைதரிக்குமுன் கதையென்னுமின் ன
முதையுனைத்துஞ்ச மதையென்றுமின் ன
மெதைச்சொல்லலாமென் பதைபெண்ணித்தேவ ா
சுதைபுமொவ்வாதென் பதையறிந்தோ மே (நாத)

இ து வு ம து.

விருத்தம்.

உமதுவிர கத்திணற் றவிக்குமெங்க
ளுயிரொதிரு விருக்குதென்று லுன்றன்காலை
அமுததுவே தவிபபுண்டாா தமையுண்டாககும்
அறிவுமிகு பிரமநிஷ்டர் களுநதுதிபபாா
சமரஸமில லாக்காம கருமமென்ப
தனைநீக்குங் கேட்டவுடன் சுபத்தைச்செய்ம
கிமையுளதே யமரரமு துக்கிதெல்லாம
கிடைப்பதா மென்றபுகழ் படைபபதாமே.

இ து வு ம து.

விருத்தம.

மூர்சனன யதிலதிக புண்ணியஞ்செய்து
முறைமுறையாய்க் கொடுத்துவைத்த பேர்கட்கல்லால்
இசசளன மதிலுன றன் கதாமுததததை
யிருசெவியாற் பருகுதற்கு மெளிதாமோசொல்
அச்சுதனே நின்கதையா மமுதந்தன்னை
யடியேங்க ளருந்தியுயிா பிழைத்திருந்து
பிசசமா யுனைபபிரிநத விரகத்தாலே
வெண்டினேம் முனைக்கதியா யண்டினேமே.

ஓரடித்தரு, இராகம்-புன்னாகவராளி, அடதாளசாபு.

வாஸுதேவனே     நின்கதைவிசு
வாஸமாய்ச்செவிமே     லேற்கும்
மனிதரானவர்க     ளவாநல்ல
புனிதரோபுவிமேல்     இந்த
மண்டலத்திலுன்னைக்     கண்டவாக்குச்சொல்லும்
வகையதென்னென்று     பகர்வதினிமேல்
மருவினீாமிகத்     திருவிளையாடி
மயககினீாவெகு வியப்பதாக     வே
ஆசைப்பார்வைகளும்     விளையாட்டு
நேசவெண்ணகையுந்     தியான
அங்கங்களாகியதாம்     மிகச்சுப
மங்களமாம்வகையும்     எங்கட்
கந்தரங்கத்திலே     விந்தையாகக்காட்டி
யாசைகொடுத்திந்த     மோசஞ்செய்யலாமோ
அஞ்சலிசெய்தோரை     வஞ்சனைசெய்வதோ
அழகரோநெஞ்சங்     குழையுதேவுன்றன்
அடித்தொண்டானவர்     நினைப்பதைக்
கொடுக்குமேநின்பதம்     நாளும்
அயனுந்தேவருமம     அருச்சிக்குந்
தூயனேநின்பதம்     பூமிக்

கலங்காரமாகி யிலங்குமேயாரும்
ஆபத்துவேளையி லேபத்தியாய்வினைப்
பாரவர்துன்பத்தைத் தீரவுஞ்செய்யுமே
யாரணனேபரி பூரணனேதிருக்
கொண்டல்வண்ணமங்க ளந்தருன்பாத
புண்டரீகங்காணும் அதைக்
கொங்கைகளில்வைத்துநீர் குறைதீர்த்தும்
எங்களைக்காக்கவேணும் அரி

கோபாலனேயசோ தாபாலனேநீமு
குந்தனேமாலேவை குந்தனேசெங்கையா
கோமளமாகிய யாமளவண்ணனே
கோவிந்தனேகிருஷ்ண மாவிநதையாளனே
பண்ணுக்கிசைந்தவேணு வுந்தான்பானம்
பண்ணுன்னிதழமுதம் உய ர்
பஞ்சபாணன்றிருநா ளையுண்டாக்கும்
ரஞ்சிதமாமமுதம் பரி

பாகமதாய்ராஜ யோகபோகங்களைப்
பரவைபண்ணுத பெருமையுள்ளதாம்
பதுமநாபவுன னதராமுதத்தைப்
பரிவாயெங்கட்கே யருள்வனமாலி
கோவர்த்தனதரர்நீர் பகலிற்பிருந்
தாவனத்திற்செலவே கணங்
கோடியுகமாகவே துயரங்கள்
நீடுமெதென்சொலவே பின்னுங்

கோலமதாய்ச்சாயங் காலந்தனிற்சாயக்
கொண்டைசூழ்ந்தமுக மண்டலததாமரை
கோதூளிமேவ விநோதமதாயாயர்
கோடிநடுவில்நீர் கூடிப்புள்ளாஙகுழல்
பலுகவாசிக்கும் ஒயில்முத்துக்
குலுக்குங்கோவிந்தனே யுன்னைப்
பார்க்கும்போதினுக்கு நிமைக்கொட்டுண்
டாக்கயன்மந்தனே யிந்தப்

பாரபக்ஷவேதன் காரியத்துக்கென்ன
பணலாம்வாரிஜக் கண்ணனேசக்கர
பாணியேயுன்றனைக் காணுதபோதிலும்
பார்ததபோதுமெங்க ளாத்திதீரவில்லை
எங்கள்புருஷரோடும் பிளளைபந்து
அங்குள்ளபேர்சனமாய்ச் சோதரர்
யாவரையுமொழிந்தே யுன்கீதத்திற்
கோவியர்மோகமதாய் வந்திருக்க

எங்களைநடத்தைக ளுங்கண்டறிந்தநீர்
இரவிலேயிந்தக் கரவடஞ்செய்தும்

எம்மைவிட்டீரல்லா லும்மைப்போலேமற்றோர்
இப்படிச்செய்வாரோ வற்புதமாயனே

அச்சுதர்நீரல்லவோ அந்தரங்கத்
துச்சிதமந்தகாஸ முகத்தையும்
ஆசைதரும்பார்வையுந் திருமகளா
வாசஞ்செய்யும்விலாஸ மார்பின்

அழகையுங்கண்டு தழையுங்காமத்தை
யடைந்துமுனமீதிற் படர்ந்தவாசையாய்
அடிக்கடிநெஞ்சந் துடித்துமோகம
தாகுதேயங்கமும் நோகுதரியரி (வாண)

இதுவுமது.

கலித்துறை.

பானையொடுததி யுண்டசெவ்வாயன் பரனெம்பெரு
மானையிவ்வாறு துதித்தாரவனை வரக்கண்டிலார
மீனைப்பொருவும் விழியார்றிலேதங்கள் விம்முழலை
யானைகளைக்குளிப பாட்டிசசொலவாரவ் வரிவையரோ.

தரு, இராகம்-நீலாம்பரி, ரூபகதாளம்.

பல்லவி.

எசோதைமைந்தா முகுந்தா கோவிந் தா
அபயகரந் தா

அநுபல்லவி.

எசோதைமைந்தா வெங்கள்மனோவி யா
திக்குமருந்து நீரோயறிவீ ர்
இருடீகேசனே திருவுல்லாஸ னே
வரதராஜனே திரவம்போஜ னே (எசோ)

சரணங்கள்.

௧. ஜகன்மங்களாகார முமது ரூபம் ஆயர்
சேருந்துயர்களதீரச் செய்தபிர தாபம் உள்ள
மகிமைசோமெஞ்ஞான யாமுயர் தீபம் உன்றன்
வடிவைநாங்கள கண்டுவிரக தாபங் கொண்டோம்

பகவனேயுன் மீதிலா சை
பரவுமெங்களைத் தள்ளிவிடலா மா
பலசகோதர வலதாமோத ர
நலசுசித்தர மலைப்பயோத ர (எசோ)

௨. சனமெதுவாந்தேவ நீர்திருப் பாத மலரைக்
கடினமாமெங்கள் தனத்தில்வைக்கவொண் ணாத தென்றே
மனதிலேயமாய்மெள்ள வைப்போஞ்சகந் நாத அந்த
மலரடியாலே பசுவின்பின்னுகப் போத பிருந்தா

வனத்திற்கல்லு முள்ளுநிறைந் த
வழியிலெப்படி நடக்கின்றீரென் று

மன துவாடுதே யுனையேதேடு — தே
யெனமோநாடுதே சனதமாடு — தே — (எசோ)

௯. நாங்களும்மாலே பிழைக்கின்றபேர் — தானே — திரு
நாராயணவன மாலியெம்பெரு — மானே — திங்கள்
ஓங்குவெண்குடை யாகக்கொடியும் — மீனே — பெற்ற
வுருவிலிமலரம்பைத் தொடுத்தெய்கி — றனே — கிருஷ்ண
தீங்குதீர்க்கக் கண்முன்னேவந் — து
சேருஞ்சேருஞ்சாமி ராஜகோ — பாலனே
திருமணாளனே பரவு — தோளனே
வருதாடாளனே கருணை — யாளனே — (எசோ)

௩௧-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன் திருவடிகளே சரணம்.

---

## ௩௨-ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

விருத்தம்.

பராவுவிர கமயக்கந் தன்னுலிந்தப்
படிபுலம்பக் கண்டுமங்கே பிரசன்னமாகி
கிராமயரா மரிசமா தானஞ்செய்தார்
நேரிழையார் தாபங்கள் தீர்ந்தார்பின்னும்
முராரிதம திடமிருந்த வாசையாம
முதப்பிரவா கத்தினிலே நீந்துகின்ற
வராகுங்கோ வியர்க்குமன மகிழ்ச்சிசெய்து
வைத்ததைச்சொல் லுவதிதுமுப் பத்திரண்டே.

கண்ணன் கோவியர்களுக்குத் தரிசனந்தரல்.

விருத்தம்.

கோவியர்களிப்படிவெ குவிதங்களாய்ப்புலம்பிக் கொண்டேவாஸு-
தேவனேயேகாணவெனு மாசையுடன்கீர்த்தனைகள் செய்துயர்ந்து
கூவியுரோதனஞ்செய்தா ரதுகண்டுசெவுரியருள் கூர்ந்துமந்தக்
காவியங்கண்ணூக்கெதிராய் வந்தனரோசெஙகமலக் கண்ணாதாமே.

தரு, இராகம்-ஸாவேரி, ஆதிதாளம்.

பல்லவி.

சாமிதரிசனந்தந்தார் கோபாலகிருஷ்ண
சவுரிதரிசனந்தந்தார் *

அநுபல்லவி.

பூமிதெமுனைதிப் புளினந்தன்னில — னேக
காமிதொமாயர்முங் கையர்க்குப்பிரத்தியக்ஷ — மாக — (சாமி)

சரணங்கள்.

௧. மந்தநகைமுகார விந்தம்பிரகா சிக்க
மாதவரிடையினிற் பீதாம்பரஞ்சொ லிக்க
வந்தார்வனமாலிகை யுந்தான்றரித்து மிக்க
மன்மதமன்மதரா யிம்மாளிலம்பிர மிக்க (சாமி)

௨. ஆசைநாயகரானவாள—தேவரைப் பெண்கள்
அன்பாய்க்கண்டுமிகவுந் தென்பாய்மகிழ்ச்சி பொங்க
வாசகஞ்சொந்தளர்கள நேசமுடனே கண்கள்
மலர்ச்சியாகியுமனம் நிலைத்துமிக விளங்க (சாமி)

௩. ஆவிதேகத்தில்வந்து மேவவுங்கர சர
ணைதியசைவுசெய்யும் ரீதியுனோடி கர
கோவிந்தரற்புதமாய்ச் சேவையதுவுந் தரக்
கோவிமாரெழுந்தங்கே தாவிமுன்னோடி வர (சாமி)

கண்ணனைக் கோவியர் கூடல்.

---

விருத்தம்.

தெள்ளியராம் நல்லோர்க ளரிசெந்தாளைத்
தரிசிக்கத் தரிசிக்கத் திருத்தியாகா
துள்ளதுபோற் கண்ணன்முக மண்டலத்தி
லொழுகழகா முதத்தைமின்னார் கண்களென்னும்
வள்ளமதி னாலெடுத்தே யுண்டுண்டுந்தான்
வந்ததிலை திருத்தியின்னந் திருத்திக்கேளாய்
எள்ளிளம்பூ நாசிகையார் சூழ்ந்தார்மின்போ
லிடைச்சிமார் ஜாதியினு மிடைச்சிமாரே

தரு, இராகம்-காம்போதி, ஆதிதாளம்.

பல்லவி.

எமுநாநதி மணலிற்கிருஷ்ண னை
யிணங்கிக்கூடின ரே.

அநுபல்லவி.

கனகவாடை தரிப்பார்திகிரிச்செ ங்
கையர்களங்கனி மெய்யரிநாரண ர்
வனமாலிகாப ரணனைக்கண்ட
மாட்டிக்கோவியர்கள் கூட்டங்களெல்லோரு ம் (எமுநா)

சரணங்கள்.

௧. கோவியொருத்தி மகிழ்ச்சியாய்க்கிருஷ்ணனை க்
கும்பிட்டிருந்திக் கொண்டாள் அந்தக்
கோவிந்தர்கைமலரைக் குவித்தகையை க்
கொண்டுபிடித்துக் கொண்டாள் ஒரு
பூவைசந்தனந்திமிர்ந் தமால்கையை ப்
புயத்திறதரித்துக் கொண்டாள் மற்றோர்

பொன்னனையாளவர் தம்பலமேந்தவு ம்
புண்ணியம்பெற்றுக் கொண்டான் கஞ்சப்
பூவோமலேயோகைத் தாளமோசக்கர ப்
புள்ளோவிளகீரோ சொக்கட்டானோமற்று ம்
யாவோவெனச்சொல்லுந் தனத்திலொருத் தி
யெம்பெருமானுட செம்பொற்பாதம்வைத்தா ள் (எமுனா)

௨. வங்கணக்கோவப் பரவசமாய்ப்பு ரு
வங்களையே நெறித்து நட்டை
மடித்துக்கடித்துக் கொண்டடிப்பார்போ லே
மாதொருத்தி வெறித்துப் பார்க்கச்
சங்கக்கழுத்தாங் கண்ணன்முகாரவி ந்
தததமுகைக் குறித்து மயிற்
சாயலன்னநடைக் கோவையிதழொ ரு
தையலுறுத் துறுத்துப் பார்த்து
மங்குலின்மின்னோ கொடியோதுடி யோ
மருங்குல்கருங்கு வளையோவளையோ க ல்
லங்கண்செவியென்று மங்கைக்குத்திருத் தி
யானதில்லைக்காணும் மானுரிப்படிக் கே (எமுனா)

௩. நேத்திரத்தாலந்தக் கண்ணனையங்கொ ரு
நேரிழையா ளுறைத்து இழுத்து
நெஞ்சகத்தில்வைத்துங் கண்களைமூ டி
நிமைக்கரவால் மறைத்துக்கொண்டும்
ஆர்த்திகள்தீர்ந்து புளகாங்கிதங் க
ளடைந்துகண்ணீ ரிறைத்து மிகும்
ஆனந்தமாயோகி களைப்போலேயிரு ந்
தாளன்பையே நிறைத்து வயி
ருலோவிழியது வேலோமுலே யி
னரும்போபல்லோதி சுரும்போகரும்புந ற்
பாலோவெனுஞ்சொல் லிசைந்திருக்குமாய ர்
பாடிக்கல்யாணிகள் வேடிக்கையாக வே (எமுனா)

கவிக்கூற்று.

விருத்தம்.

கேசவன்றனையக் கோவிமார்மகிழ்ச்சி கிளைக்கவேயிவ்வகை கண்டக்
கிளியனுர்விரக தாபங்களதுநீங் கினசெயற்குவமைகேள் மன்னு
ஈசனும்பிரானுநூல்முமுக்ஷுகளு மெப்படித்தாபநீங் குவரோ
இனமுறைபிரானுஞ்பிரமநிஷ்டரைச்சேர்ந் திசைசமுசாரியைப் போலும்
பேசுமேசுழுத்தியபிமானஜீவன் பிராஞ்ஞனுமவனையுஞ் சேர்ந்த
பேர்களானுசாக்கிர சொப்பனவஸ்தாபி மானியாம்விசுவதை ஐதனா
யேசொலக்கோவி மார்களெல்லோருமெசோதைபாலகனையே கண்டும்
இப்படித்துயர்தீர்ந் தற்புதம்பெற்று ரிதையறிகுருகுல விளக்கே.

## கோவியருடன் கண்ணன் விளையாடல்.

### விருத்தம்.

சோகங்களெல்லாந் தீர்ந்தகோவியர்கள் சூழவும்நடுவினிற் பகவன்
ஜோதியாய்விளங்குஞ் சுந்தரற்குவமை சொற்பரமாசத்தி யெனும
னேகங்களாகச் சத்துவமெனமுன் னேரிடுகுணங்களால் விளங்கும்
நிலைபெறுபுருஷன போலவுஞ்ஞான நிதிபலவீரியா திகளால
யோகங்கள்விளங்கு முபாஸகபுருஷர்க் குவமையாய்ப்பிரகிருதி யைமுன்
னேறுதத்துவங்கள் சூழ்புருஷனைப்போ லொளிதிகழ்கண்ணனு மங்கே
மாகங்கையென்னு மெமுனையாநதியின் மணற்குன்றிலேவிளை யாடி
மாயைகாட்டினர்செவ் வாயர்தானறிகு வாயையாமன்னர்மன் னவனே.

தரு, இராகம்-ஸாவேரி, ஆதிதாளம்.

பல்லவி,

அரிகிருஷ்ணசவுரியே நலகோவியருட னே
யங்கேவிளையாடின ர்.

அநுபல்லவி.

கரபங்கயரச் சுதர்கிருபாநி தி
சரணென்றே பரவும் யமுனையாற்றினி ல் (அரி)

சரணங்கள்.

க. நலகுந்தமலர்வாசமிருந்தே சொலுமந்தாரம்
மருவுகாற்றும்வந்துற வே
ஒலிதேனேபாடிப்பலுக்கச் சரவெண்மதி
நிலாவிருளைமோதிட வே
அலைகரமெனுமெமு னாநதியேகை க
ளதனாலும்நீரோ பரவவெங்கிலு ம்
மலிகுளிர்ச்சியாகி மணல்நிரம்பிடவ வ்
விடமதனிலவர் சகாயபுருஷ ர் (அரி)

உ. ஆனந்தமேனியராகும்முரலி கானலோல
னைமகிழ்ச்சியாகவு ம்
மானனையவிழியர் பார்த்தபோதே
பானலுஞ்சொலா ரானபே ர்
தானவர்நினைகாரிய மானதுநிறைவே றி
யுற்றதாபமகலவஞ்சி யை
மானுநடுவர்புள கமேநிறைந்தி ட
மோனமுனிவர் தேவரும்அடிபரவு ம் (அரி)

௩. உனைகொண்டசுருதியான தெண்ணில
கரும்காண்டமென்றவகையின லே
பிரமச்சுபாவப்பரமே சனைநிறை
சருவஸாக்ஷியையறிவிலதா ய்
வரிசையதாய்த்தேடி யெங்கிலுமோ டி
யதுஞானகாண்ட முன்னறிகின்ற து

புனையவிங்குமிகக் கோவிமங்கையர்
அரியைக்கண்டுமே மனதுகுளிர (அரி)

## கண்ணன் கோவியருடன் வீற்றிருத்தல்.

விருத்தம்.

அளிநலஞ்சேர் கூந்தல்மின்போல் மருங்குலாராம்
ஆய்ப்பாடிக் கோவியர்கள் கண்களென்னும்
நளினார்தரி சனஞ்செய்தா னந்தமாகி
நலவெமுநா நதிப்பாங்கர் பரவுகின்ற
புளினமதி லோரிடத்திற் சேர்ந்துகாயாம்
பூவணர்க்குந் தனவுத்த ரீயந்தன்னைக்
களிநலார் கொடுக்கவதி லிருந்தாராய
காவலா வுரனெறிசேர் மாவலானே.

தரு, இராகம்-அடாணு, ஆதிதாளம்.

பல்லவி.

சுந்தரமிருந்திருந்தாரோ சோபாலகிருஷ்ணன்
சுந்தரமிருந்திருந்தாரோ *

அநுபல்லவி.

அந்தமின்னார்தனத்திலுந்த வணிந்தகுங்குமம் படிந்த
அந்துகிலதேவி ரிந்த வாசனமதாய்ப் பொருந்த (சுந்த)

சரணங்கள்.

க. யோகீசர்சித்த மத்தி யுள்ளாசனப்பிர சித்தி
யேகர்பகவர் முத்திக் கீசனுக்கனந்த சத்தி (சுந்த)

உ. உலகினழகைத் தேக்கி யொன்முய்க்கூட்டின ராக்கி
நலரூபங்காட்டி நோக்கி ஞாயாசருவ சாக்கி (சுந்த)

௩. கோவியர்சூழ்ந்துபிர மிக்கக் கூடியேமடிமேல் வைக்க
ஆவலாய்க்கைகால்பி டிக்க வானந்தங்கொடுக்கத் தக்க (சுந்த)

## கண்ணனைக் கோவியர் வினவல்.

விருத்தம்.

தவிசிலிருக் கின்றகண்ணற் கங்கேயந்தத்
தையலார் மந்தநகை கடைக்கண்பார்வை
யிவையுடனே புருவநெறிப் புகளுங்காட்டி
யே துதித்து நயகோபஞ் சிலதுகாட்டிச்
செவியர்தொழும் பகவனே யவராயன்னார்
செய்தநன்றி மறவாத குணத்தையங்கே
அவர்வாய்கொண் டறிந்துகொள வுலகனூய
மதுசொல்வாா கோவியரு மிதுசொல்வாரே.

## கண்ணன் கோவியருக்கு விடைகூறல்.

விருத்தம்.

உதவிபெற வதிலுபகா ரங்கள்செயவர்
உலகிலே சிலபோக ளுபகாரஙகள்
எதையொனறுங் குறியாம லுபகரிபபார்
இபபடித்தான சிலபோக ளெவாககுமெந்த
விதத்திலு முபகார மிலலாசிலலோர
வீணாக வூனுககுக கேடாகினாறார்
இதுகளையெங களுககுநனறுயச சொலவீரெனறா
இருடிகே சனசொலிரா சரிடிகேளே.

தரு, இராகம-அஸாவேரி, சாபுதாளம.

பலலவி.

கேளுஙகோடிசகிக ளே கோவியரேநீர
கிளியைநோவாசகிகளே

அநுபலலவி.

வாளுமவேலுமமபும வரிவணடும விழியே
மதுவுமபாலுஙகணடுங குயிலுஞ்சொல் மொழியே
தோளுஙகீசதமநீரின மடுவுநதச சுழியே
தொடைகளரமபையெனனுங் தோகைநீர்சொல் வழியே (கேளு)

சரணஙகள.

க. ஒருவறகோருவருபகாரம பெறுதலெண் ணி
யுதவிசெயகுவ தெனனவுப காரம
உலகிறறனகாரியததைக குறிததுவேயல்லாம ல்
உதவிமறறவாககிலலை யெனன ஸாரந
தருமமதனிலிலலைச சிநேகிதமதுவல ல
காரநதசுகமுமிலலை யதி கோரந
தானவாககுவமையும பசுவெருமையேதிஷ்டா ந
தமதாயசசொலவதேநனனூ லதி சாரந
தெரிவைநீாவினவின வகைதனிலிதொன் றுமே
சிநதைதனிலெணணிறை சநதேகநீாநது போமே
வரிசையாயிரணடான வகைககுமுனாசெய வோமே
மறறுஙகேளவிககுமறு வசனஞ்சொலவது நாமே (கேளு)

உ. தாமொனறையுமெணணாது பரவுபகாரஞ்செயபு ரு
சரீரிகளிரணடு தரநதானே
தயவாயுயிாகளமேலே யிரககிசசெயவாரொருவ ன
தருமமதுவேநில வரநதானே
காமசிநேகததாலே யுதவியொருவனசெய்வா ன
கணடீரதுவேகாம பரநதானே
கருணைநேயரிவனாப பிதாபுததிரஞாயமாய் க
காணபதுமிதுவேசுந தரநதானே

ஆமின்னவகைகண்டீ ரிரண்டாம்வினவ லுக்கு
ஆணிமுத்துவரிசை நிகராமுங்கள்பல் லுக்கு
மாமழைநிகர்சொல்லத் தகாதுங்களகூந்த லுக்கு
வருமூன்றும்பிறைநுத லாரேமூன்றுஞ்சொல் லுக்குங் (கேளு)

௩. நல்லவிடைச்சிகளே யுபகாரம்பண்ணினும்ப ண்
ணுவிட்டாலுமுலகிலொரு வருக்கும்
நாட்டிலொன்றுமுத வாதிருக்கும்பிராணிகளு ம்
நாலுவிதயாமதின் வகை பெருக்கும்
சொல்லுமாத்துமாராமன் ஞானக்கண்பார்வைக்கார ன்
தொடுத்துலகத்தை யெல்லாம்அரு வருக்குந்
தொடரும்இச்சைநிறைந்த வொருவனுனாயுமெண்ணு ன்
தோனுமமூடனுதவா னொரு வருக்கும்
பொல்லாதகுருத்துரோகி யென்னுமொருவன் றனே
பூவிலதிகடின னவனேதுமுத வானே
வல்லபெரியோர்சொல்லும் வகையிதினிச்சொல் வானே
மங்கைமாரேவினவும வகைமூன்றுக்குஞ்சொன் னேனே (கேளு)

இதுவுமது.

கலித்துறை.

கரும்பைச்சொல்வாணி யவரிதுசேட்டுமக் கண்ணன்சொல்லி
வரும்பககமூன்றிற் கடைசியிற்சொன்ன வகையிவரொன்
றரும்புநகையும் நயனக்குறிபபுஞ்செய் யாங்கவர்களே
திரும்பச்சொல்வாரவசு தேவரிடத்திற் செனித்தவரே.

தரு, இராகம்-கேதாரகௌளை, ஆதிதாளம்.

பல்லவி.

ஐயந்திரவே சொல்வேன்கேளும்
ஆய்ப்பாடி மின்னு ரே.

அநுபல்லவி.

மையரிவிழித் தைய லாரே
மங்களஞ்சிறந்தோரே வங்கணம்நிறைந்தோரே (ஐயந்)

சரணங்கள்.

௧. திட்டமாகவிப்போ சொன்னபேர்களுக் குள்ளுந்
கிட்டுவதுநானென்ற வெண்ணிக்கையினைத் தள்ளும்
மட்டிடக்கூடாநான் பரமகாருணி நேரே
மயிலாரேராயி லாரே
இட்டமேமிகுந்த நாமேயுலகில் நித்தம்
எனையனுசரிக்கின்றவ ளைச்சோதிக்குமி மித்தம்
எட்டியெட்டிநின்று காட்டுவமேவ ருத்தம்
எளிதில்வசப்படுவ திலேயேயிதுதான் ஸித்தம் (ஐயந்)

௨. மூடனுகியுந் தரித்திரமாமூட் டணம்
மையனவனுக்கங்கே கிடைத்ததுகுடப் பணங்

கூடியவையிழந்தாற் பசிதாகமுந் தோணுனே
கூறலொன்றுங் காணுனே
நாடியதுவேசிந்தை யாயிருப்பது போலே
நாளுமிடை விடாம லென்னைச்சிந்திப்பார் மேலே
நீடுங்கருணைசெய்து மவரிடத்திலன் பாலே
நெருங்கிச்சேருவோமுங்கட் கென்மீதும்நெடு மாலே (ஐயந்)

௩. என்னைச்சேரவென்றும் நீங்கள்வந் தடைந்தீரோ
பன்னுமுலகவேத பந்தத்தைக் கடந்தீரோ
முன்னங்காணுமல்யானு முங்களைப பிரிந்தேனே
முழுமன தறிந்தேனே
அன்னநடையீரிங்கே பலுக்குமுங்கள் கீதையை
யறிந்திங்ஙனேயிருந்த தலவாலொரு பாதையை
உன்னினதில்லையினித் தீர்பபதுங்கள் வேதையை
யொணடொடியீரமிகவே பாடினீரொன் காதையை (ஐயந்)

இதுவுமது.

விருத்தம்.

கலங்கும்வகை யெவ்விதத்திற் சோதித்தாலுங்
கலங்காமல் வீடுமுத லென்னும்பார
விலங்குகளைத் தெறித்துநீ ரன்பையென்றன்
மீதுவைத்து வந்தவகைக் கமரர்க்குள்ள
நலங்கமழும் வயதினு லுபகாரங்கள்
நானசெயினு முங்களகட னென்மேலுண்டு
அலங்கிருத வல்லிகளே யென்முகண்ணன
அனந்தா நந்தசுத ரோனந்தானே.

௩௨ - ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன் திருவடிகளேசரணம்.

---

## ௩௩ - ம் அத்தியாயம்.

அவதாரிகை.

வெண்பா.

முப்பத்து மூன்றின் முகுந்தா மூலைநிலத்தின்
மைபபறறுக் கணணா மகிழ்ச்சிபெற—மெய்ப்பாய்
மருவி வனத்தும் வனத்தும நடித்துச்
சருவினைதைச் சொறகீர்த் தனம்.

### கண்ணன் கோவியருடன் நடித்தல்.

விருத்தம்.

மாலிவகைதருமதுர வசனமதுசெவிகொண்டு மடந்தைமார்கள்
மேலுமவரங்கபரிசங்களிளுக்களிகூர்ந்து விரகமநீங்கி

வேலனையவிழியர்மணி யொருவர்க்கொருவரன்பு மிகக்கைகோத்து
நீலவடிவனைச்சூழ வவருடனேயரிநடித்த நேர்மைசொல்வாம்.

தரு,இராகம்-பியாகடை, ஜம்பதாளம்.

பல்லவி.

நடனம்புரிந்தாரே யரிதிருமால் முரலிகிருஷ்ணன்
நடனம்புரிந்தாரே யரிதிருமால் *

அநுபல்லவி.

படியையளந்தவரோ வளந்தவரோ யாய்ப்
பாடிவந்தா ரோ * (நடன)

சரணங்கள்.

க. அரிமுகுந்தர்தனக்குநிகர் நாட்டி யங்கள்
வரிசையபிநயங்களையும்வகையாகக் காட்டி *
அரிவையர்கள்சூழவந்தக் கோட்டி தன்னில்
இருவர்க்கொருகண்ணனாக வெழில்நலம்பா ராட்டி *(நடன)

உ. கோவியர்கள்தோளினிற்கை போட்டும் வாஸு
தேவராலிங்கனங்கள்செய்யுந்திருவிளை யாட்டுங் *
கோவிந்தரனந்தசகதி காட்டும் அதை
யாவராலுமறியவொண் ணுதவர்தானேவி ராட்டும் * (நடன)

௩. அங்கனைகளிருவர்க்கொரு சேர்த்தி யாகச்
சங்கீதமும்நாட்டியமும்வரவரவும் நேத்தி *
மங்களமதாகவெங்குந் தோத்தி வருஞ்
சங்கசக்கரகதை சாரங்கபாணிகிருஷ்ண மூர்த்தி * (நடன)

கவிக்கூற்று.

விருத்தம்.

அறியவொண்ணுச் சத்தியுள யோகேசன்றன்
அப்படிக்கெல் லாமுருவங் கொண்டுநின்ற
நெறியறியா தவரவாகள் தந்தம்பாலே
நின்றனாமா லென்றுமவா நினைப்புக்கொண்டார்
குறியதுவே யல்லாது மற்றுமுள்ள
கோவியாபா லரிநின்ற கூறையங்கே
மறைவுசெய்த மாயைதனை யெவாகளாலே
மாற்றலா மிதையென்ன சாற்றலாமே.

கண்ணன் ராஸநடனஞ் செயல்.

---

விருத்தம்.

" அம்பரத்திற் றேவகந்தி ருவர்களெல்லாம்
அவரவாபெண் டுகளுடனே வந்துகூடி
உம்பர்விமா னங்கள்நூற் றுக்குமேலாய
மூதயாந்ததனில் வரிசையா யேறிபபார்க்கப்

பம்பரமாட் டிகள்போலே பூவிலாயர்
பாடிமின்னா ருடன்கூடிப் பாடிப்பாடி
நம்பரமர் பலகணராய் விளங்கியிங்கே
நடிக்கின்றார் ஸ்வரஜதிகள் பிடிக்கின்றாரே.

ஸ்வரஜதி.

தரு, இராகம்-உசானி, திஸ்ரதாளம்.

பல்லவி.

ராஸநடனஞ்செய்தார் கோபாலரி
ராஸநடனஞ்செய்தார் *

அநுபல்லவி.

வாஸுதேவர்கிருஷ்ணநதியி ன்
மணலினமீதேகோவிமாக ள
ஆசையுடன்வெகுநேசமதாக வே
பேசிககுலாவிகொண்டா ட

தாதித்த குகுஜந்தரி தகஜம்ஜந் தரிகிடத க
தகணந்தரி தரிகுந்தரி தகதீநத கிடதோ ம்
ஸா ஸா ஸ ஸாஸாஸ நிஸநிஸ ரிரீஸ நிஸரிநிஸஸ
தாஜுதஜந்தரி கிடதகதகதக திதிதிகி தகதிம்தோ ந்
தகதித்தளங்கு தகாதிங்கணத்தோ ம்
ஸாமீநாத் தனசம்பிரம மதுகண்டுங் கடவுளர்புஷ் ப
வருஷஞ்சொரிந் திசைதுந்துபி ஜயபேரியுமுழக க
சலலாப வுல்லாஸ கல்யாணயெதுப தியுடனடனமிடு ந்
தாமரைகொங்கையர் கரவளைதகதக வெனவொலிமிகுத்திட வே
சரணச்சதஙகை கலின்கலினென வே (ராஸ)

சரணங்கள்.

ஸீ ஸீ ஸீ.

௧. ரீமாஸ ஸஸாமரிநிஸ ரீமாஸஸஸ மரிமரி ஸா
நிஸ ரிமஸமரி நி

ஆடினார்.

காளிய பணவலியின்மு னேநாட்டியம துபுரிகிரு பா
நிதியெதுகுலப தி (ராஸ)

ஸீ ஸீ ஸீ.

௨. ரிமஸஸாஸமரிரீ ஸாஸமரிஸமரி நி

ஆடினார்.

இரண்டுபேர்க்கொருவராய் ஆய்ப் பாடிமின் னவருட ன் (ராஸ)

ஸீ ஸீ ஸீ.

௩. மரிஸநீஸ நிஸரிமஸ ஸாஸமரி ஸஸமரி ஸமரிநி

ஆடினார்.

ஸரஸநாட்டி யமதுக்கிணை வீணைகளிற் கந்திருவ ரிசையுட ன் (ராஸ)

ஸீ ஸீ ஸீ.

ச. ஊவ ஊவ ஹஸிம ஸா ஸீமஊவயவ ஓ
வாதியவ ஊயவஓ ஹஸீமாஓ வஊமஸி நீ

ஆ டி ஞ ர்.

நீலக்கோவைநடுவிலே சேருமேயமணிபோ ர்
கோவியரும் ஆடவரீ கலீரோசைபராவிடவு ம் (ராஸ)

ஸீ ஸீ ஸீ.

ரு. ஸா ஸா ஸ நீயாநிஸநீயாவஓ வாநீய நீஸஸி நீஸா
ஊவநீயநீஸஸிநி ஸிஸா நிஸநீயாவ ஓ
வயநிஸாஸ வயஓவாவ ஹஸிமயாஓ வஊமஸி நீ

ஆ டி ஞ ர்.

கோபால சூடாமணி ராமாநுஜ கோபீஜ ஞவலிமீ தே
ஜோதிஸீ மாடகமா மணி யிடையேசேர்வு று
கதிர்செய்நீல மணியைப்போல விளங்குகோடி மன்மதாகிரு தி (ராஸ)

இ. து வு ம து.

விருத்தம்.

கோடிமன்ம தாகிருதி யாகக்கண்ணன்
கோடியுரு வாயிரண்டு கோவிமார்க்கோர்
ஆடவரா யங்கங்கே கைகோத்துக்கொண
டாடுவார் பாடுவா ரிவைமாருந்
கூடிநட னம்புரிந்தார் வானிலங்கே
கோதைமா ருடனேகந் திருவர்கீதம்
பாடினர் தேவதுந்து பியைமுழகைப்
பரிந்திட்டார் மலர்மாரி சொரிந்திட்டாரே.

இ து வு ம து.

விருத்தம்.

அளிநயம்பா டுந்துளப மாலையானும்
அனேகவுருக் கொண்டுகோ ளிந்தியாற்றின்
புளினமதின் மத்தியிலாய்ப் பாடிமின்னுர்
பொன்மணிகள் போல்விளங்க நடுவேநன்ருய்த்
தெளிநீலத் தின்மணிகளைப்போற்சோதி
திசையெங்கும் பரவவிண்ணிற் றேவர்பார்க்க
நளினநய னனிராஸக் கிரீடைமார்க்கம்
நாடினர் பாடிக்கொண் டாடினரே.

தரு. இராகம்-நாதநாமக்கிரியை, ஆதிதாளம்.

ப ல் ல வி.

பாடிக்கொண்டாடினர் கோபாலகிருஷ்ணன்
பாடிக்கொண்டாடினர்

அநுபல்லவி.

நீடிசைசூழவும் ஆடுமாதரா தி
வாடைகள்கூடவும் வந்துமுரா ரி (பாடி)

சரணங்கள்.

௧. அடவுதீர்ந்துகால்களை வைத்துக் கைகளினாலே
மடவாரபிநயம்பி டித்து மந்தநகைக
ளுடனேபுருவங்கள்நெ றித்து நடஞ்செய்போது
கொடியிளையாகிய விடைதுவண் டிசையப்
படர்முலைகளுங்குலுங் கிடத்துகி லசைய
மடவரலார்களும் மயிலன மெனவே
நடனமும்பாடலுஞ் செயவொலி மனவே (பாடி)

௨. காதிற்குண்டலங்களு மாடி யந்தக்குண்டலச்
சோதிகபோலமாநகண் ணாடி தனிலவிளாநக
மேதினிசொலுமாயர் பாடி மெல்லியர்முக
மீதினில்வேர்வைகள் முத்துமுத் தாய்வர
மாதவமாலரி கிருஷ்ணனைச் சூழ்தர
ஓதிகளமேகலை யோதள ராடலும்
மாதாகளாடலி ஞேதம்வி டாமலும் (பாடி)

௩. மேசமண்டலங்கண்ணன் கூட்டம் மின்னற்கொடிக
ளாகுங்கோவியர்தங்க ளீட்டந் தானாகள்வியாவை
ராகங்கொர்ச்சிதமாய்க்கொண்டாட்டம் ஆடவும்வெகு
விந்தைகளாயர விந்தநளக்கண்ண ன்
ஜநதரிதொந்திமி திநதிமிதகதி ண
தொநதரிதாகிட கிடதகஜனு தக
ணநதரிதாவென வரிசைகளமிக மிகப் (பாடி)

இதுவுமது.

விருத்தம.

காதற்ப ரவுவிளையாட் டதிலேமிகசாங்
காரிகையார் சாரீரக் குளிர்ச்சியாயுங்
கீதப்ப குதிநயமாய்ச் சுரம்பலுக்கிக்
கேசவன்முன் பாடிநடஞ் செய்யும்போது
வேதபொ ருளினங்க பரிசந்தன்னால்
மிகக்களிப்பாய்ச் சங்கீதம் பாடவெங்கும்
நாதப்பி ரமமாக நிறைந்ததந்த
நயத்தைக்கேள் ராஸநாட் டியத்தைக்கேளே.

வர்ணத்தரு,

இராகம்-நீலாம்பரி, அடதாளம்.

பல்லவி.

ஆடினரே திருமால்வை குந்தனே ஒதுவன்நானே
அபிமன்னு மன்னன்மைந்த னே

இ து வு ம து.

விருத்தம்.

இப்படியா டிப்பாடி வருமாய்ப்பாடி
யேந்திழைமா ரிருவர்க்கோர் கண்ணனாக
மெய்ப்படிவ மனேகங்கொண் டவனையங்கே
வியந்தாலிங் கமொடுகர பரிசஞ்செய்து
மைப்படிநேத் திரங்களினால் வாஞ்சைப்பார்வை
மந்தநகை காட்டியுமுல் லாஸஞ்செய்த
தெப்படியென் றுரைசெய்வேன் மன்னர்மன்னா
வின்னங்கேள் முகுந்தர்பிர சன்னங்கேளே.

இ து வு ம து.

விருத்தம்.

சிங்கார மொன்றுகேள் பார்த்தன்போரா
திட்டாந்த தாட்டாந்தி கமதாய்ச்சொல்வேன்
அங்காடிக் காரியைச்சங் கீதம்பாடென்
றால்வெங்கா யங்கருவேப் பிலையென்பாளே
அங்காயர் மின்னார்க்கு மாடற்பாடல்
ஆர்கற்பித் தாரழகு மதுரவாசம்
எங்கான தெனிலரியங் கிசையங்கங்கே
யீட்டினார் சூத்திரங்கொண் டாட்டினாரே.

இ து வு ம து.

விருத்தம்.

பலவிதமாய் விளையாடிப் பாடியாயர்
பாடிப்பைந் தொடிமார்கள் திருமாதுக்கே
நலவேகாந் தநாயகராம் மாலைத்தங்கள்
நாயகனென் றவர்தோளிற் கைபோட்டுக்கொண்
டிலகுநடஞ் செயபார்த்து மோகங்கொண்டே
யிமையவரும் பெண்கேளா டும்போதி
னிலவர்சங் கீதந்தான் மேளந்தன்னை
சிகருமா னதைச்சுகரும் பகருமாமே.

தரு, இராகம்-பந்துவராளி, சாபுதாளம்.

ப ல் ல வி.

நாட்டியமாடினாரோ கிருஷ்ணன்கிருஷ்ணை
நந்தனணைவினி லே.

அ நு ப ல் ல வி.

நாட்டியமாடினாரோ தேவகிமைந்தர்

நடைக்சஞ்சந் துடிக்கொக்கும்
இடைப்பெண்க ளிடைக்கொண்டும்
நடித்தும்பந் தடித்துங்கை
பிடித்தும்பண் படித்தும்நன் (நாட்டி)

சரணங்கள்.

க. காலிற்சதங்கை கலீர்கலீரெனக்
கையின்வளைகள் கிலீர்கிலீரெனச்
சேலைக்கிண்கிணி கிணீன்கிணீனெனத்
திமித்தத்திந் திமிச்சொற்றுந்
துமிச்சத்தந் தமைப்பெற்றுக்
கமிப்பக்கம் பிரமிக்கப்பண்
புமிக்கத்தொந் தமிட்டுநன் (நாட்டி)

உ. வண்டுதேனுண்டு தென்றுதென்றுவென்
மாதனையாரும் மின்றுமின்றுவெனத்
தொண்டரிராஜ மன்றுமன்றுவெனத்
துதித்தன்பைப் பதிக்கச்சொற்
கதிக்கத்தத் ததிக்கிட்டத்
திதித்தொக்கத் துதித்தோமென
கதித்தாளப ரதத்துவ (நாட்டி)

ந. மந்தாரபுஷ்பங் குமுகுமுவென
வாசிக்கச்சொல்லும் அமுதமுதெனப்
பைந்தொடிமார்தத் திமிதிமியெனப்
பாதத்திற் சுரபத்த
தியிற்சிக்கத் தாங்குக்குந்
தரிதக்கத் தரிகிட்டத்
தரிகிட்டத் தரித்தோமென (நாட்டி)

இதுவுமது.

விருத்தம்.

நீலமலரைச்செவிகள் மேல்வைத்துமாலிகையால் நிறையுங்கூந்தற்
கோலமிதுங்கன்னத்தின் வியர்வையுடன்முககாந்தி கூடமாதர்
மாலுடனேநடம்புரிய வாத்தியங்களாகமணி கடகமெல்லாம்
ஓலமிடவானவரும் மயங்குவதைக்கண்டரியு முவந்திட்டாரே.

தரு, இராகம்-சங்கராபரணம், ஆதிதாளம்.

பல்லவி.

வரதராஜராஸக் கிரீடை யந்த்
வானோரைமாதருடன் மயக்குகின்ற வாடை *

அநுபல்லவி.

அரியுருவனேகங்கொண் டாயர்பாடிமங் கையர்
இருவர்க்கொருவராக விடைநின்றுடினார் தூயர் (வரத)

சரணங்கள்.

க. அந்தரதுந்துபியைக் கெலிக்க மாத
ரங்கைக்கடையஞ்சிலம்பு கிண்கிணிக ளொலிக்க *
கந்தருவர்களுட கீதமயங்கக் கூடப் *
பைந்தொடிமார்கள்கூந்தல் வண்டுகளேபண் பாட * (வரத)

௨. ஆடற்பாடல்களையுங் கண்டு வாணி
லண்டாபூமழைபொழிவ ததற்கிணையாய்க் கொண்டு *
நாட்கமாடுமின்னருஞ் சிரககமபம புரிய *
ஏடவிழ்மலாமாரி யவாகூநதலுஞ் சொரிய * (வரத)

௩. ஆலிங்ககரபரிச வகையே பார்வை
யாலுங்கெம்பீரமான விளையாட்டு நகையே *
மாலிங்கிதச்சகல கலாவல்லபமு மந்த *
நூலிடைச்சிகளுக்குங் கொடுத்தார்ஜய முகுந்த * (வரத)

௪. அழகுவாச்னைமதுரந் தொடுத்து மாதர்க்
கதிகமாயுணடாகத் தமதங்கிசத்தைக் கொடுதது *
மழைவணணருமெமூனு நதிமணலிற் கூடினா *
குழவிகளொடுதநதை விளையாடலபோ லாடினர் * (வரத)

௫. கண்ணுடிநிழலைககொணடு மைந்தா அதிற்
கணவிளையாட்டாடு வதுபோலவே முகுநதர் *
பண்ணுறுமொழியாயா பாடிபபாகஇய சாலிப *
பாவைமாருடனடிப பாடினாவன மாலி * (வரத)

கோவியர் கண்ணனுடன் நடனஞ்செய்யச சக்தியின்றி நிற்றல்.

---

விருத்தம்.

பூவேச மஞ்சொல்லும் வண்ணராயர்
  பூவையாக ளுடனும் போதிலங்கே
கோவேசங் ககைகயிரு ரஙகிசத்தைக
  கோவிமா ருடனின்று கருஷித்தாரோ
ஆவேசந் தீரநதவாபோ லரியைசசூழநது
  மாடுதறகுக் கூடாமற் கைகாலோய்ந்து
நாவேசங கதிபாட வரிதாயமமினா
  ளாநினறூா வாணிலுமவா ளோ்நினறூோ.

திபதை, இராகம-சவுராஷ்டரம், மிசசிரதாளம்.

கணணிகள்.

க. ஆகருஷிததாரோ கணணனதமதா ன
அஙகிசங்களையு மங்கே மின்னா
ககரீகமெஙகே பாட்டுகளுமெங் கே
காட்டியமாடுவ தெங்கே *

௨. யாதாகைகாலோயநது மாடல்பாடலின றி
மயஙகியேததி சோர னாலே
ஓதியவிழ்ந்து முடைகுலைநதுநத ன
வுததரியஙகளுஞ சோர *

௩. ஆர்ததியினலைததத திரும்பக்கடிககொ ண்
டாடபபெலனினறி யையா மாாபிற்

சாத்தும்பொன்னாரமும் புஷ்பவாரங்களு ஞ்
சரியகின்றார்கள் மெய்யா *

௪. மண்டலத்திற்கோவி மார்களெல்லாம்நின் ற
வகைகிருபனே யிருக்க வானில்
அண்டர்மின்னார்களும் மோகமடைந்துகி ன்
றாரதைச்சொல்லுநீ பெருக்க *

௫. நக்ஷத்திரகணந் தன்னுடனேயதி ன்
நாயகன்சந்திரன் றனே வெகு
பக்ஷத்துடன்கண்ணன் றிருவிளையாட்டை ப்
பார்த்துமயங்கினின் றனே *

௬. சந்திரனைப்போல மற்றக்கிரகங்களு ந்
தானிறகவவ்விராத் திரியும் அங்கே
அந்தப்படியே வளர்ந்திடவேகோ வி
யருடனேகூடி யரியும் *

௭. எத்தனைக்கோவிமா ருண்டோவவர் க
ளிரண்டுபேருக்கொரு கண்ணன் ஆகி
அத்தனைரூபந் தரித்துக்கொண்டேவி ளை
யாடினரோநீல வண்ணன் *

௮. உம்பரெல்லாமதி சயிக்கவேவெ கு
வுருவெடுத்தங்கே நண்ணினார் அரி
யெம்பெருமானவர் ஆத்துமாராம ரா
யிருந்துமேலீலை பண்ணினார் *

௯. அப்படிச்செய்ததுங் கோவியர்முன்காத் தி
யாயனியம்மனை நோக்கி மன
தொப்பித்தனித்தனி யாகவவரவ ர்
ஓரோவிரதத்தைத் தூக்கி *

௧௦. காத்தியாயனிநீ நந்தசுதனையெ ங்
களுக்குநாயக ராகச் செய்து
சேத்துவைக்கவேணு மென்றவர்வரு ந்
தினபடிக்குநன் றாக *

௧௧ விரிவாயிச்சை நிறைவேறுகின்ற நி
மித்தியம்பிரத்தியக்ஷமாய்ச் சேயி ழைமீர்
வருமிரவிலுங் களைச்சேர்வோமென் று
வரமீந்தார்சேஷ சாயி *

௧௨. அந்தப்படியே யனேகங்கோவியர்க்கு ம்
அனேககிருஷ்ணனாய்ப் பூமி மீதில்
இந்தப்படிவிளை யாடினனை யா
எதுநாயகரொந்தன் ஸாமி *

௧௩. கோவிமார்களிளைப் புடைந்ததாற்கிரு ஷ்ண
கூர்ந்துமவர்முக வேர்வை களைக்

காவிவண்ணர்தானே துடைத்ததல்லோக ண்
காக்ஷியதாகிய சேர்வை *

௧௪. மங்களகரமாங் கைகளினலங் த
மாதர்களுக்காசை கொடுத்துக் காட்டி
யிங்கிதமாகவே லாலனைபண்ணி ன
ொன்னசொல்வேனிதைத் தொடுத்து *

௧௫. காதிற்குண்டலங்களின் காந்திகளந்த க்
கண்ணனுடசாயக் கொண்டை களின்
மீதேபிரகாசிப்ப தைக்கண்டுதேமாத ர்
விழிகளாய்ச்சொல்லுங் கெண்டை *

௧௬. குண்டலகாந்திசேர் கண்ணனுடசாய க்
கொண்டைகபோலக்கண் ணடி மீதே
கொண்டுசோபிக்கின் றதுமமுதம்பெ ரு
கும்வெண்ணசைய தும் நீடி *

௧௭. கடைக்கண்பார்வையுங் கண்டந்தவாய்ப்பாடி க்
காரிகையார்களை நீர்ந்தே வகைப்
படிக்குமுன்போல வாடையாபரண ம
பாங்காய்த்தரித்துக்கொண் டார்ந்தே *

௧௮. அரிகரங்களின் னகரோகைக ளி
னலேமிகமன மகிழ்ச்சி கொண்டு
தெரிவையர்தாமே யிடபராமந்த ச்
சிதரனைச்செய்தார் புகழ்ச்சி *

கண்ணன் கோவியருடன் ஜலக்கிரீடை செயல்.

---

விருத்தம்.

குலக்கொடியாமுத்தனையின் குமாரனைபரிக்ஷித்தாங் கோவேகேளாய்
பலர்க்கிணையராகிவந்தார் புண்ணியசரிதைசகளையே பாடிநன்றாய்ப்
பலுக்குகிறகோவியர்க்குச் சிரமபரிகாரமது பண்ணவேண்டிச்
சலக்கிரீடைக்காரம் பித்தெமுனைமடுச்சென்றார் சரசமாலே.

தரு. இராகம்-ஆனந்தபைரவி, ரூபகதாளம்.

பல்லவி.

சக்கிரியுஞ்சலக்கி ரீடைசெய்தாரே பாரதா
அதிகமேதா விபரிக்ஷித்தா ஆ பாகவதா.

அநுபல்லவி.

இக்குவலயத்திலே யுய
ரெமுனைநதியி லே மின்போ
லிடையன் னர் அன்ன
நடைப்பொன் னர் *

ஈட்டத்திலாட்டமும் பாட்டுடன்கூட்டியா ய்
ராஸக்கிரீடைசெய்தா வேசக்களை தீர்த்து ம்

எட்டியெட்டிப்பிடித் தொட்டியொட்டிக்கட்டி க்
கட்டிமுத்தமிட்டுக் கிருஷ்ணஸாமியா ன (சக்கி)

ச ர ண ங் க ள்.

௧. வரதகோபாலரந்தக் கோவிமார்களுடன் கூடக் கூடி
மருவியந்தவெமுனை மாநதிமடுவில்விளை யாட *
ஸரஸஸல்லாபமாக மாதணைக்கட்டிமுத் தாட மாலை
சரிந்துதன குங்குமங்கள் கரைந்துநீரினி ᵃ லோட *
கருநிறத்தெமுனைசிவந்தலர்மாலை யலைமாலை யனுகூலை யாகக்
கன்னங்கறுத்தவடிவமுஞ்செக் கச்சிவந்தனர் மாலே
கந்தருவர்போலே யைந்தொடொருக் காலே
வந்துமொருக்காலே சந்தமிசைப் பாலே
கண்டுரையொற்றப் பெண்டுகள் சுற்றக்
களையுந்தள்ளிலோகநெறி களையுந்தள்ளிவேதநெ றி
களையுந்தள்ளித்தொண்டர்பவங் களையுந்தள்ளிக்கரைகடந் த (சக்கி)

௨. பெண்ணானைகளினடுவினிலே யாணையா ன தது
பெருமடுக்கரைகளையுடைத்தாடும் பெருமையையமா ன *
கண்ணனைச்சூழ்ந்துபரியாசங்க ளனேகவிதமா ன லீலை
காட்டிநகைக்குங்கோபிமார்களைக்கண்டும்வேணுகானர் *
கலந்துநாலுபக்கமுஞ்சுற்றிச்சுற்றி யாடினத்தில் வானகத்தில் மிகக்
கடவுளோர்கள்பாரிஜாதங் களைச்சொரிந்தார்பிர சித்தி
கயேந்திரலீலைகாட்டி நயந்துமயல் மூட்டி
வியந்துவிளையாட்டி லியந்ததுவே சூட்டிக்
கருணைபொங்கும்புருஷ ரொங்குங்
கலந்திடுவோருயிர்களெல்லாங் கலந்திடுவோர்தன்னுக்குள்ளே
கலந்திடுவோரிடைச்சிகளைக் கலந்துகாளிந்தியி லே (சக்கி)

௩. ஆனைமிதிக்கச்சந்துண்டாசொல் யானைபோன வீதி யென்றும்
அவனியிற்பெரியோர்கள்சொல்லுவரதுவேபிரக்கியாதி *
தானவரரிகிருஷ்ண மூர்த்தியெமுனைமடு மீதி லிந்தச்
சரஸகோபிமாருடன் ஜலக்கிரீடைசெய்த ரீதி *
தானுமாத்துமாராமராஞ்சருவேசர் வரதராஜர் ஸ்ரீநிவாஸர் நந்தர்
தந்தமைந்தரொந்தையாம் விந்தைப்புருஷருல் லாஸர்
சங்கமுளதையர் செங்கனிவாய் மெய்யர்
அங்கஜற்குமையர் எங்குமுறை துய்யர்
தாமரைக்கண்ணர் மாமணி வண்ணர்
ததிக்கினியமொதுமன்னர்சந் ததிக்கினியர்சுருதியின்ப த்
ததிக்கினியர்பால்நிறையு ததிக்கினியர்சவுரியென்னு ஞ் (சக்கி)

கண்ணன் கோவியருடன் பிருந்தாவனத்தில் விளையாடல்.

வெ ண் பா.

எமுனா நதிநீரி லேந்திழை மாரைச்சேர்ந்
துமுனடி னோ துளவர்—குமுகுமென

வீசும் பிருந்தா விபினத்து மாடினத்தைப்
பேசுமவர்க் கேது பிறப்பு.

தரு, இராகம்-அடாணு, ஆதிதாளம்.
பல்லவி.

பிருந்தாவனத் தும்வினை யாடினு ரரியே திரு
நந்தாதிபராம்வேணு கானச வுரியே *

அநுபல்லவி.

திந்தாதிரிகிட தரிகிடஜந் தரி
தொந்ததிங்கணத் தோமென்றுடுமு ராரி
எந்தைதிருவைகுந்தர் முகுந்தரிடைச்சேரி
பைந்தொடிமாருடன்காளிந்திநீரிலாடுவராரி (பிருந்)

சரணங்கள்.

௧. காளிந்திநதிக்கரை பிருந்தாவனங் காக்ஷி சண்ப
கமலாமல்லிகைமுல்லை யுடனிரு வாக்ஷி *
நீளுமிந்தவாசனை களையுமப ரிக்ஷித் தனே
நிறைந்தவெழுணாதியிற் கிருஷ்ணன்கடாக்ஷி *
தாளதாமரை செங்கழுநீர்ப் பூவுந்
தளமிருந்தநெய் தலுமங்கே யேவுந்
தூளுடனேமந்த மாருதமுந் தாவுஞ்
சோதிவெண்ணிலாவும்ப ராவும் (பிருந்)

௨. குளிர்ச்சியானநாலு திக்கிலுந் தொடர்ந்து கிருஷ்ணன்
கோவிமாருடன்சிங் காரநடை நடந்து *
தளிர்ச்செங்கையாமேற் பரியாசந்தானே படர்ந்து மாலுஞ்
சரஸஸல்லாபஞ்செய் தனர்கரை கடந்து *
களிக்குமவர்கள் பினுலே வண்டு
சரும்பேடுடன் மதுககளை யுண்டு
தூளாசயில்லாத லாகிரி கொண்டு
சங்கீதம்பாடக் கண்டுமனங் கொண்டு (பிருந்)

௩. கரேணுகும்பல்நடுவில் மதயானை தானே யாடுங்
கனகதாய்வினை யாடினுரெம்பெரு மானே *
டராவுமிந் துகிரணம் விளங்கிய வானே யிந்தப்
பாரிற்சரற்கால ராத்திரியுஞ்சொல்லு வானே *
புராணகாவியங் களிற்சரற் சாலப்
புதுமையென்னென்ன சொல்லுவது சால
வராய்மன்னனே யப்படியனு கூல
வர்ண்ணனைசேர் கோலவி சால (பிருந்)

சுகஸ்வாமியைப் பரிக்ஷித்தாசன் ஐயமடைந்து வினவல்.

---

விருத்தம்.

நினைத்தபடி நிறைவேற்றுஞ் சக்தியுள்ள
நீலவண்ணர் தமைச்சூழ்ந்த கோவிமார்கள்

மனத்தினுக்கே யிசைந்தவகை யங்கேதானே
வாசாலங் காரத்திற் சிங்காரத்தை
யினிக்கையா யனுசரித்துச் சுரதஞ்செய்து
விளையாடி னார்தன்னுட் சுரதஞ்செய்வா
ரெனப்படிக்குஞ் சுகனைப்பார்த் துரைப்பாரந்த
விராஜன்று னதுவுமிந்தப் பிரஸங்தானே.

தரு, இராகம்-மத்தியமாவதி, ஆதிதாளம்.

பல்லவி.

ஐயா முனிநாதா
வேதாதீதப்பரமஹம்ஸ நிரஞ்சனப்பிர்ம்மாணந்
வியாஸஸைமந்தனேதெளிந்த போனனென்றன். (ஐயா)

அநுபல்லவி.

செய்யாள்வையமின்னுளுஞ் சேருங்கொண்டல்மேனியர்
தேவகிதந்தவாஸு தேவவிராட் டாவரவா கோவிமானா மேவுதென். (ஐயா)

சரணங்கள்.

க. நிலையாய்த்தர்மத்தைவைக்க வென்றுமேயதர்ம்மத்தை
நீக்கவுஞ்சகதீசா நேமியரி
உலகிலங்கிஷசயினுற் பகவானவதரித்த
துண்டென்றுனாத்தசுக ஸாமி *
வலுவாகுநதர்ம்மங்களை வகுத்துஞ்செய்துமரக்ஷித்து
வருகோபாலரோயதி காமியென்று
சொலவேபரதாரங்கள் கையைப்பிடித்துஞ்செய்த
சோரத்தனமீ தென்ன *
தொந்தமிந்தச் சந்தேகங்க ளைந்துபோட வந்தவரோ (ஐயா)

உ. அவர்கொருகுறைவுண்டோ வெல்லாம்நிறைந்திருக்கும
அரியென்னகாரணத்தி னுலேயிந்தக்
கவைக்குளளாயநிந்தையான காரியஞ்செய்தாருல
கதிறபெரியோர்கள்மேன் மேலே *
துவக்கியெதைச்செய்வாரோ அதைமற்றச்சனங்களுந்
தொடர்ந்துசெய்வார்களொருக காலே பின்னுஞ்
செவைக்கஸதசிச்சயமாய்க் கொளவாரோயிநதவகை
செய்ததென்ன மயக்கந் *
தீரவருள் கூறும்யோக தாரணையி னரியனே (ஐயா)

௩. பிறனாயடங்கச்சொல்லித் தானடங்காதிருக்கும்
போகளேநேரல்லோவிக் கருமம் உபாறி
மறையைக்கடந்துலக மரியாதைகளுமின்
மாதவன்செய்ததென்ன தருமம் *
முறையிதைமற்றச்சனங் களுஞ்செய்தாற்பாவமவாது
மூடமென்பதென்ன மருமம் அதைத
அறைகுவீரொன்றனுக்கு மையாநீரவேஈல்
ஆணித்திறம தாக *
அற்புதப ரப்பிர்ம்மரூ பப்பிரபல தற்பரனே (ஐயா)

இ து வு ம து.

கலித்துறை.

ஜகத்துக்கொருவழி யீசனுக்கங்கோர் தனிவழியோ
அகிருத்தியஞ்செய்திடு வோர்மகத்தோவெளி யோரஸத்தோ
முகத்துதிபேசிய தோவேதம்ஞாயம் மொழிந்திலதோ
சுகத்தவனேயடி யேன்றெளியும்படி சொல்வதுவே.

சுகஸ்வாமி பரிக்ஷித்தாசனுக்கு ஐயந்தெளிய வுரைத்தல்.

தரு, இராகம்-தோடி, ஆதிதாளம்.

ப ல் ல வி,

பாராய் பாரதா இதை
நேராய் பாரதா

அ நு ப ல் ல வி.

தீராளானபெரியோர் செய்ததெல்லாம்நம்மா லே
செய்யக்கூடாததாக்குந் திஷ்டாந்தமுஞ்சொல்கிறே ன் (பாரா)

ச ர ண ங் க ள்.

௧. காந்திமான்களாமீசுவ ரர்களதர்ம்மஞ்செய்திட க்
கண்டுமதுதோஷமா காது மன்ன
போர்நசகலபதார்த் தங்களையுமக்கி னி
புஜித்தும்பரிசுத்தந்தப் பாது *
வாய்ந்தவிதிபிந்திரன் சநதிரனுடன்வி சு
வாமித்திரரிவர்கள மீது தானே
ஆய்ந்துபாாக்கிலவர்கள் அதர்ம்மஞ்செய்திருந்தாலு ம்
அகிலபுவனதநும்பிர காசிக்கிறுெப் போதும் * (பாரா)

௨. மேலானபெரியோர்க ளதர்ம்மமப்படிக்கங் கே
விளைத்தாரொனறுநாஞ்செய்ய லாமா முன்னம்
ஆலாகாலவிஷத்தை ருத்திரன்பானம்பண்ணினு ர்
அவாசகித்தாாநாஞ்சகிப போமா *
ஏலாதகாரியந்தான் றேகாதிசுதந்திரங் க
ளில்லாதவிதராருங் காமா வேசங்
கோலாகலமாய்க்கொண்டு பரதாரகமனு தி
குறிக்கக்கூடாததாக்குங் குருகுல ஸோமா * (பாரா)

௩. நல்லோர்செய்காரியத்தி லெத்தைநாமிவடத்தி ல்
நம்பிச்செயவதென்றுறகிர் வாணம் பேசும்
எல்லாபிராம்மாதியான வீசுரரள்முன்னேசொல் லி
யிருக்கும்வசனமேபிர மாணம் *
அல்லாதவர்நடந்த நடத்தைகளினிலேந ம்
மாலேசகிக்கமட்டுங் கோணம் இன்றிச்
செல்லும்வகைநடந்து புத்திமானவர்வாக்கை ச்
செலுத்திநடக்கவேணு மதுவேவேதபு ராணம் * (பாரா)

இதுவுமது.

விருத்தம்.

நிரகங்கா ரிகளான வீசரற்கே
நிச்சயமன்றி நடக்கை பிரமாணமாகா
துரகமது கப்பியென்றால் வாய்திறந்துக்
தொடுகவோ ளங்கண்டு மூடற்போலே
உரகங்கண் டாலோடிப் பரதாரத்தி
னுடைகையைப் பிடிக்கவேணு மூலகமாந்தர்
நரகங்கண் டெழுந்திரா ரதர்ம்மஞ்செய்தால்
நசிபபதாந் தீயபலம் புசிப்பதாமே.

இதுவுமது.

விருத்தம்.

மொழிவதொன்று சோற்றுக்கற் பொறுக்கமாட்டான்
முகவனைக்கற் றூக்கவெண்ணு முறையேயென்ன
அழியாத வயிசுவரியர் மலையெடுத்தார்
அங்கியுண்டார் விஷமுண்டார் வெண்ணெயுமுண்டார்
பழிபாவஞ் செயமனதிலெண்ணவில்லை
பத்தருக்கு வேண்டியதைக் கிருபைமாரி
பொழிகின்ற ரிதிலென்ன பரிக்ஷித்தேநீ
பூபன்ற னிதுதுரா க்ஷேபந்தானே.

திபதை, இராகம்-கேதாரிகௌவுளை, ஆதிதாளம்.

கண்ணிகள்.

௧. பெரியோராகியவீசுரர்வசனங்களோ
பிரமாணமென்றறிநீயே
அரியாமவனமாலி பரதாரகமனஞ்செய்
தாரொன்றேநாமுஞ்செய்ய லாகாதறிகுவாயே

௨. அந்தவீசர்தரும நடத்தைகள்முழுதும்நம்
மாலேநடத்தவுங்கூடாதே
எந்தவகையுமவர் அதர்ம்மமாய்நடந்தைதை
யெடுத்துநாமநடக்கவுமடாதே

௩. பூச்சிபுழுமனிதர் தேவர்களீசர்களைப்
போலேயதர்ம்மஞ்செய்வதென்ன
பேச்சிதுதுராக்ஷேபங் காணுமபிமன்மைந்தா
பிரபலபரிக்ஷித்துமன்ன

௪. பரதாரகமனஞ்செய் தாரொன்றேகண்ணனுடை
பாதாரவிந்தத்தைியிங்ஙனே
தரிசித்தும்யோகஞ்செய்துங் கர்ம்மந்தீர்ந்தரிபக்தர்
சோகின்றார்முக்திமற்றோர்க்கெங்ஙனே

௫. தன்மயராயிருக்கும் ஞானிகளுக்குக்கேட்கத்
தக்கதென்னவின்னமொருவசனம்

நன்மையாயினதைக்கேளு சகலசந்தேகங்களு ம்
ராஜனேதீர்க்குமரி பஜனம்
அ. அரசேயந்தக்கோவிமா ரவர்பதிமற்றுந்தே வி
யரிடத்தும்விறைவார்தப் பாது
அரியைத்தவிரவேறே யொருபதார்த்தமுண்டா மோ
அவர்க்கும்புரீதாரந்தா னேது

இதுவுமது.
விருத்தம்.

அலையுண்டார் தொண்டர்வினைத் தனைதக்கொடுக்க
அங்கிசையால் மனிதவேதே கந்தரித்து
விளையாடிச் சிங்கார ரஸத்தைப்போலே
வெளிக்குங்காண் பித்தன்பர் நினைப்பையீந்தார்
தலையில்லா தவருக்குக் காமமுண்டோ
தன்னுக்குள் ளேரமித்தா ரவனைச்சேர்ந்து
கலைதீர்ந்தும் பரிசுத்த ரானார்கோப
கன்னிமா ரரிசரணைச் சென்னிமாரோ.

இதுவுமது.
விருத்தம்,

அச்சுதர்பாற் கோவிமா ரெல்லாங்கூடி
யணைந்திருந்த போதுமவர் பதிகள்நாடும்
இச்சைகளை நிறைவேற்றித் தங்கள்தங்க
ளிடத்திலே யிருக்கக்கண் டனுபவித்தார்
வச்சிரபா ணிக்கனுஜ ராகவந்தா
மாயையினால் மோகங்கொண் டாயர்க்கெல்லாம்
நிச்சயமா யிருந்ததையா சண்ணஞ்கேயார்
நிகரொன்பார் பிரமமுனி சுகரொன்பாரோ.

தரு. இராகம்-தோடி, ஆதிதாளம்.
பல்லவி.

ஞானதீரராய் வாழ்வார்க ள்
நாராயணன்சரிதை சொன்ன ல்.

அநுபல்லவி.

மானதவியாதி தீர்ந் து
மநோபீஷ்டமெல்லா மடைந் து (ஞான)

சரணங்கள்.

அரிபரமபுருஷராயி சுவரியமுள்ளஸுருவ சத்தன்
ஆனதன்னனேநடந்த மானடத்தைதானெ ருத்தன்
அடக்கமதின் றே நாமும்
நடக்கலாமென்றே யுலகத்
தார்கள்செய்தால்நசித்துப் போவாரோ யல்லால்
அவர்நல்லகதி யடைவாரோ சொல்லாய்

பார்தனிலேயிந்தப் பாகவதங் கல்லாப்
பாமரனேநீக்கிப பண்டிதரே வல்லார் (ஞான)

௨. பிரியம்வைத்தேயரியுடனே மருவிககோவியருமி சைந்தே
பிரமமுகூர்த்தமதிலே பிரமானந்தமுமி குந்தே
பேட்டனமென்று ா தங்கள் தங்கள்
வீட்டினிறசெனறூர் சுகமே
பெருகியிருநதாா கண்ணனை நாடினர்
பீதாம்பரதாரி மகிமை பாடினா
அரியிராஸக கிரீடையிற் கூடினா
ஆனந்தமாகத் திருவிளை யாடினா (ஞான)

௩. வாஸுதேவகேசவாதன் ராஸககிரீடா சரிதை
வாணிபபவர்காணமுறரோர் நன்னயமாய்ச்சொன்னவர்க ள்
வாமனைபபுல்வார் உலகினிற்
காமனைவெல்வார் திவவிய
மங்களமூாததி யரியேவன மாலி
மைந்தராயபபெறறதே வகிபாக்கிய சாலி
அங்கெசோதைமடித் தொடடிலிலூஞ சாலி
யாடிவளாநதா ரவரோபரி பாலி (ஞான)

௩௩-ம அததியாயம் முறறும.

கண்ணன் திருவடிகளே சரணம.

---

## ௩௪-ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

விருததம.

உத்தமநந் தனைமலைப்பாம புமபிடிக்க
உடனேயி ரட்சித்தாங் கிரதசாபஞ்
சுத்தும்வித் தியாதரனுக கருளிசசங்க
சூடனையும் மடிததிரா ஸம்வியாஜம்
வைத்துமனம தனையடிமைப படுததிககொண்டார்
மறறுமவித்தி யாதரனை வசியஞசெய்தும
இத்திறமால விளையாடற கதையத்தியாயம
எஙகிதாம முபபத்தி னாகிதாமே.

கண்ணன் மலைப்பாம்பினால் விழுங்கிய நந்தனைமீட்க அதன் சாபம நீஙகல்.

தொண்டிச்சிநது.

இராகம்-சங்கராபரணம, ஆதிதாளம.

காவலனே யொருநா ள் ஆதிக்
கந்தருங்கோகுல நந்தாமுதலோ ா

| | | |
|---|---|---|
| தேவயாத்திரைமே | ல் | மனதிற் |
| சிறந்தசந்தோஷமும் நிறைந்தகாளைய | ர் | * |
| காளைமாடுகள்பூண் | ட | சகடை |
| களின்மேலேறிக்கொண்டு தளமிருக் | தே | * |
| வர்ளைபாய் தடஞ்சூழு | ம் | அம்பிகா |
| வனமேவிச்சரஸ்வதிநதியி | லே | * |
| ஸரஸ்வதி நீராடி | ப் | பசுபதி |
| சரணம்பிகாதேவி யிருவரையு | ம் | * |
| பரவிப்பூஜைத்திரவிய ॥ | ங் | களைக்கொண்டு |
| பக்திபரவசரா யர்ச்சித்துமுட | னே | * |
| உடனேபசுப திசற் | கே | பிரீதியாய் |
| யோகமிசைவேதியர்க்கனேகம்பசுக்க | ள் | * |
| குடிப்பாற்செல்விகளாய் | க் | கொடுத்தார் |
| கோடிகொடுத்தார்சொர்ணங் கோடிகொடுத்தா | ர் | * |
| தூரணியெங்குஞ்சொல | வே | யறுசுவைச் |
| சாப்பாடிட்டார்வேதப் பார்ப்பார்க்கிட்டா | ர் | * |
| பாரதா ஜலமாத்திர | ம் | சேர்பாலர் |
| பருகியெதிசளைப்போல் விரதரங் | த | * |
| அந்தநத்திரத்தி | லே | யுபவாஸ |
| மாகவிருந்தாரிளைப் பாகவிருந்தா | ர் | * |
| வந்தஅந்த ராத்திரியு | ம் | அங்கேதானே |
| வசித்திருந்தார்தியானம் ருசித்திருந்தா | ர் | * |
| திருந்தியநந்தசுநந்த | ன் | முதலான |
| திடச்சித்தராகிய இடையரொல்லா | ம் | * |
| வருந்திப்படுத்திருக்கும் | போ | தெவருக்கும் |
| மலைப்பாம்படியொரு மலைப்பாம் | பு | * |
| பாம்பர்தவனத்திருந்து | ம் | அதிகப் |
| பசியுடனேகூட நிசியதி | லே | * |
| நாமபுகல்வதுகேளா | ய் | மார்பிலுல் |
| நகந்துவந்ததுசெய்த அகந்தைசொல்வே | ன் | * |
| அகந்தை யில்லாதநந்த | னா | விழுங்கவும் |
| ஆரம்பித்ததேயுடல் பாரம்பெற்ற | தே | * |
| ஜகந்தனிற் புகழ்நந்த | னா | யண்ணைக்குத் |
| தண்டாமலேவிழுங்கக் கண்டானா | யா | * |
| ஐயமலைப் பாம்புபிடிக்க | க் | கிருஷ்ணகிருஷ்ண |
| ஆஹாவென்றார்நந்தர் கூகூவென்று | ர் | * |
| மெய்யிதோ பெரியமலைப்பா | ம் | பென்னைமெத்த |
| விழுங்குதையாயனம் புழுங்குதை | யா | * |
| தயாநிதி நீசேக | இ | யன்றிவேறு |
| தஞ்சமில்லையேசாமி யஞ்சனவண் | ணை | * |
| ஐயவென்று கூக்குரலிட்டா | ர் | மற்றுமுள்ள |
| ஆயரறிந்தார்பிராண நேயரறிந்தா | ர் | * |
| ஆருஞ் சீக்கிரமெழுந் | தே | யோடிவந்தார் |
| அந்தநந்தனைப்பாம்ப ருந்தக்கண்டா | ரோ | * |

சூரர்க ளானவிடைய ர் பரபரப்பாய்த்
துள்ளித்துள்ளியோடிவந்து கொள்ளிக்கட்டையாற் *
கொள்ளிக்கட்டை கொண்டுபாம்பை ச் சுட்டடித்தார்
கொட்டிக்கட்டியளப்பானேன் விட்டதில்லை யே *
தெள்ளிய நந்தனைப்பாம் பு தன்வாயிற்
செலுத்தல்விடாதுகண்டு பலத்திருமா ல் *
திருமாலெதுநாயக ர் பகவான்
செந்தாமரைக்கண்ணரும் வந்தாரா யா *
கருமாலோடிவந்து ம் அந்தப்பாம்பைக்
காலாலுமுதைத்தாரே பாலாழியா ர் *
ஆழியான் சரணா ர விந்தந்தொட
அற்புதநந்தனைவிட்டுச் சர்ப்பசரீர ம் *
பாழிதென் றதனையும்விட்டா ன் கண்ணன்மீது
பக்திகொண்டெடுத்தவுடல் வித்தியாதர ன் *
வித்தியா தரருக்குள் ளே யுத்தமமாம்
மெய்யையெடுத்தான்கெட்ட பொய்யைவிடுத்தா ன் *
சுற்றிவந்து நமஸ்கார ஞ் செய்தனையத்
தோத்திரஞ்செய்தானந்த நேத்திரஞ்செய்தா ன் *

தனனா தன தனனா.

கண்ணன் பாம்புருவம் நீங்கிய வித்தியாதரனை யாரென வினவல்.

விருத்தம்.

அதிகாந்தி யுளதேகன் சொர்ணமாலி
காலங்கி ருதனாகக் கிட்டிவந்து
துதிவித்தி யாதரனை யிருடீகேச
ஸ்வாமிகண்டு தம்மகிமை யிடையர்நெஞ்சிற்
பதிவுசெய வேண்டியொன்று மறியார்போலே
பரிந்துமந்தக் கின்னரனை நீயாரொன்று
புதியவர்போல் வினவுகிறா ரதனைக்கேளும்
புவிராயா பாகவத கவிராயாவே.

வித்தியாதரன் கண்ணனைத் துதித்தல்.

விருத்தம்.

நீயார்பின் னாய்காந்தி ஜொலிக்கநின்றாய்
நிறைந்தவைசு வரியமுள்ளாய் நேத்திரானந்தம்
ஆயிருக்கி றாய்நீதான் பார்ப்பவர்க்கும்
அடியிலென்ன காரணத்தால் மலைப்பாம்பானாய்
தீயதென்று முலகத்தார் நகைக்கநிந்தை
சேர்ந்ததிந்தச் சரீரம்வந்த வகையைச்சொல்லென்
றாயர்சிகா மணிதிருவாய் மலரக்கண்டான்
அடுகின்றான் கின்னரனுந் தொடுக்கின்றானே.

தரு இராகம்-மணிரங்கு, சாபுதாளம்.

பல்லவி.

ஸ்ரீதரனே வித்தியாதரனானுன்றன்
தரிசனங்கண்டேன் ஸு தரிசனனென்பேருந்
திருவருள்புரிவை கருணையாகரனே.

அநுபல்லவி.

ஆதிமூலமேசச்சிதானந்தசிர்விகற்ப
அனந்தகல்யாணஸுக ஸநந்தனாதிபரவும் (ஸ்ரீதர)

சரணங்கள்.

அழகுள்ளபுருஷர்களெனைப்போற்கிடையாதென்றும
ஐசுவரியமிருந்துங் கர்வத்தையெண்ணினேன்
வழியில்விமானமேறிக் கொண்டுதிக்குகளெல்லாம்
வலம்வந்துசஞ்சரித்து மடப்புத்திரண்ணினேன்
அழகில்லாக்குரூபியா யிருக்குந்தவஸியான
அங்கிரஸமுனிவரைப் பரியாஸம்பண்ணினேன்
பழிபாவத்துக்கஞ்சாமல் முனிவரைப்பகடிசெய்தேன்
பணியபாவத்தால்மலைப் பணியதானேன்விண்ணினேன் (ஸ்ரீதர)

அந்தக்கருணாநிதி யங்கிரஸமகாரிஷி
யடியேனைமலைப்பாம்பாய்ப் போகச்சொல்லியிட்டசாப
முந்தானெனக்கதுவே யனுக்கிரகமானது
உலககுருவாகியே யெங்குநிறைந்தாதீபம்
உந்தன்றிருவடிகளெனையெப்போபரிசிப்ப
துடனிந்தப்பாம்புஜன்ம நீங்குந்தீர்ந்திடும்பாவஞ்
சிந்திப்போமென்றுரைத்தார் ஜனனமரணபயந்
தீர்க்குந்தேவரீர்பாத மென்றன்பரமலாபம் (ஸ்ரீதர)

தொண்டரையிரட்சிக்குந் தேவரீர்பாதமலர்
தொடவுமடியேன்முனி சாபம்விட்டுநீங்கினேன்
விண்டுவேசகலதுக்கங் களையுநீக்குமுன்றன்
மெய்யானதரிசனங் கண்டுமிகவோங்கினேன்
அன்றடியேனுன்னையானு மென்னுலகிற்செல்லும்படி
யனுக்கிரகிக்கவேணும் அருள்மனமுதாங்கினேன்
கொண்டல்வண்ணனேஸாமி மகாயோகிமகாபுருஷ
கோடிசூரியப்பிரகாசம் நீடும்அரிசார்ங்கியே (ஸ்ரீதர)

எதுகுலபதிநீரோ ஸகலவுலகிலுள்ள
ஈசுரருக்கெல்லாமீசுரனேயருள்மலையே
துதிசெய்வதறியேன்கிருஷ்ணா வெனாக்ஷித்திரச்
சுதாவுன்னைத்தரிசித்தே னினியினிக்கவலையே
உதைவிட்டவரடியேனு முனிசாபந்தனைவிட்டும்
உடனேமோசனமானேன் உன்றுமத்தின்சொலையே
பதிவாய்க்கேட்பவரெல்லாம் பரிசுத்தராகவுன்றன்
பாதம்பெற்றடியேற்குக் கேட்பதென்னவிலையே (ஸ்ரீதர)

வித்தியாதரன் தன்னுலகடைதல்.

விருத்தம்.

தாசானு தாசனுமா யிவகையச்சு
தரிசனனு மனேகவந் தனங்கள்செய்து
தாசாருக ருத்தரவி னுலேவித்தியா
தரருலகஞ் சேரநதானீ தறிவாய்நந்தர்
வேசாரி மலைப்பாம்பின் வாய்க்குள்ளான
விதனந்தீர்ந் ததிசுகத்தை யடைந்திருந்தார்
ராஜாதி ராஜகண்ணன் பக்தியில்லா
ஞானந்தா னென்னவது வூனந்தானே.

கண்ணன் ஆயருடன் கோகுல மடைதல்.

விருத்தம்.

ஆத்துமவை பவமிகுந்த கண்ணன்செய்தி
ஆய்ப்பாடி யாரறிந்து மனதுக்கேற்கப்
பார்த்தாச்ச ரியரம்பி காவனத்திற்
பசுபதீ சுவரனுடனம் பிகையைச்சேவித்
தேத்திக்கோ குலஞ்சென்று ரரியைநித்தம்
இசைந்துகொண்டா டிப்பாடி யிருந்தாரிப்பால்
வாய்த்தொருநாட் சங்கசூ டனைவதைத்த
வாறுகேள் ஐயமன்ன ரேறுகேளே.

இராமகிருஷ்ணர்கள் பிருந்தாவனத்திற்
சுரமண்டலவீணைவாசித்தல்.

கவித்துறை.

பிருந்தாவனத்தி லொருநாட்பசுபர்கள் பெண்டுகளோ
டிருந்தாரிராமனுங் கணணனுங்கூடி யெவர்களுக்கும்
திருந்தாதெனுஞ்சுர மண்டலமோரிரண் டுஞ்சிறக்க
மருந்தாமிதுவெனச் சேர்ந்திசைபாடினர் மன்னவனே.

தரு, இராகம்-காம்போதி, சாபுதாளம்.

பல்லவி.

சிக்கிக்கொள்ளப்பக்குவமாய்ச் சுரமண்டலவீணை வா
சித்தாரேராமகிருஷ்ண ரென்னை யா.

அநுபல்லவி.

சக்கரபாணிமுகுந்த ஸாமிவஸுதேவரய ன்
தந்தைநந்தர்மைந்தர்விந்தை யெந்தவாறறிந்துசொல் ல
ஸகலசுபாகரர் ஜகன்மோகனுகர ர்
ஸரஸஸங்கீத நிரவல்தனிலாரு ஞ் (சிக்கி)

சரணங்கள்.

க. ராஜனேகேளுமொருநாள் ராத்திரியிற்கண்ணனண்ண ன்
ராமனுடன்பிருந்தாவனம் நாட அங்கே
நாகரீககோகுலத்தின் ரேகைமயிலார்கள்கு ழ
நடுவினிலிருந்துவிளை யாட *
ஆசைதானேராமகிருஷ்ணள் மீதில்வைத்தகோபிமார்க ள்
அருகிலிருந்துசங்கீதம் பாட நல்ல
தந்தச்சங்கீதத்தினிலும் அச்சுதானந்தராகி ய
அவர்களுடகீர்த்தியைக்கொண் டாட *
ஸ்வர்ணலங்காரங் கூட
துய்யவஸதிரம் நீட
ஆசைச்சந்தனங்களப கஸ்தூரியணிந்துகமு கு
மாயமானமல்லிகைமுல்லையும் வனமாலிகைதரித் து
வளக்குஞ்சரக்குட்டி களுக்குஞ்சரிக்கட் டி
மங்கைமார்களொலலாஞ் சங்கீதவலையி ற் (சிக்கி)

௨. நல்லநிசிவேளையுமா காசநிர்மலமாகியு ம்
நக்ஷத்திரங்களௌங்கும்பிர காச மாக
ஞாலமெங்குமவெளுபபாகப் பூர்ணநிலவும்பரம் ப
நதியெமுனாதீரமபிருந்தை வாச *
மல்லிகைமதுகக்ளையு முண்டுவெண்டுன்மத்தங்கொண் டு
வரிசையாய்ச்செங்காரஞ்செய்யுல் லாச குமுத
மலர்களுடவாசனையை வாரிக்கொண்டுவந்துமங் த்கே
மந்தமாருதமொயிலாய் வீச *
மகிமைசேரி ராச
மன்னாமேல்விசு வாச
சொல்லுமிவ்வலங்கிருதஞ்சே ரிரவிற்சகலவுயிர்களின்னெ ஞ்
சுகருங்காதுக்குமங்கள மாகராமகிருஷ்ணரங் கே
ஸ்ரமண்டலவீணை வரிசையாகச்சேர்ந் து
கூட்டிக்கையாய்ச்சுதி மீட்டிவானேனாயு ஞ் (சிக்கி)

௩. இரண்டுபேரேககாலத்திற் சேர்ந்திரண்டுசரமண்டல ம்
இனைத்துப்பாடுவதும்அருமை பார தாகேள்
இந்தராமகிருஷ்ணர்தாமே யேககாலத்திலேமீட் டி
யிசைந்துபாடுந்தூரலும்யாழும் நேர *
அண்டியிதனைக்கேட்டுமங்கே கோபிமார்மோகித்துமூர்ச் சை
யடைந்திடையின்வெண்பட்டாடை சோரக் கூந்தல்
அவிழ்ந்துமாலைசரிந்துதேகம் பரவசராய்த்தனைமறந்து ம்
அற்புதசங்கீதபாரா வாரந் *
தன்னில்மனதுஞ் சேர
ஸாமிகிருபை கூர
எண்டிசையும்நாதப்பிர்ம மாய்நிறைந்தும்பிருந்தாவன ம்
ஏமுனாநதிகோவர்த்தன மலையுமுருகபபாடுமெதுா ம்

இடைச்சிமார்கட்குங் கிடைச்சுதையாவி ழைத
யென்னவென்றுநான வாணிக்கவுலக ஞ் (சிகசி)

## கண்ணன் சங்கசூடனை வதைத்தல்.

---

### விருத்தம்.

நீலாம்பர னும்பீதாம் பரனுமாயர்
    நேரிழைமா ருடனிவகை யிருக்குமந்தக்
கோலாகலத்தருணந் தனிலேவந்தான்
    குபேரனுடன் சேர்ந்தசங்க சூடனென்பான்
மாலாடும விளையாட்டை யறியாதேயுன்
    மத்தன்போல் மங்கையரை யிழுத்தானந்தக்
காலாடி யாமபரம தடியனுந்தேக
    கண்டகண்டான காலனுட குணங்கண்டானே.

### திபதை, இராகம்-புன்னாகவராளி, சாபுதாளம்.

### கண்ணிகள்.

௧. சங்கசூடனைச சங்கபாணியு ஞ்
    சங்கரித்தகதை கேளச் சொல்வேன
மங்கைமாாசூழ ராமகிருஷ்ண ர
    மகிழ்சுரபண்டலங கேளா *

௨. வாசிக்குமவேளை மீதிலங் கே
    மகிதலத்திலா சண்டலன அரனைப
பூஜிக்குமபல னுலுயாநதந ற
    பொன்னுலாகிய கண்டலன் *

௩. வெகுபணக்கார னுங்குபேரனு ம்
    வேந்தனுமவனைச சாந்தநாம் என்று
மகிமைகொண்டு காவமடைந் து
    வந்தானையாம தாநதனும *

௪. முட்டுப்பயித்தியந் தலைக்கொண டு
    மூடப்புத்தி படிநதானே யந்த
மடடித்தனத்தி னாலேதானவ ன
    மண்டைப்பூச்சி மடிநதானே *

௫. சங்கருஷணா வாஸுதேவரு ந
    தானிருக்கவந்தக கோவி மாருமல
அங்கிருக்கவுஞ சங்கையிலலாம ல
    ஆததுவந்தானையா பாவி *

௬. அநதப்பெணடுகளை யெல்லாம்வட க்
    கானதிக்கினவழிக் கொண்டு செல்ல
வநதடமபணணி யாாபபரித து
    வளைததிழுந்தானது கணடு *

௭. புலியினகைவச மாமபசுக்களை ப்
    போலவேகூவுந் துறையிட்டார் ராம

பலராமகிருஷ்ணு கிருஷ்ணுவெனறநத ப்
பெணடுகளெலலாம முறையிட்டார் *

௮. தஙகளைநாத னெனறுநமபி ன
தாரகுழலாருககோத திட்டார அநதச
சஙகருடனைகை சிககியந கு
தவிககுமபெணகளைபபாரத திட்டார் *

௯. முன்னமேயோட்டங காட்டினாரா ம
மூாததியுஙகிருஷண மூாததியும பின்னும
அனனமீரபயப படாதிரெனற ற
அபயமீநதவைதக கீாததியும் *

௧0. அபயமீநதார மராமரங்களபோ ல்
அஙகையரசசுதா னநதா அநத
உபபருஙகுயய காளதம னை
புறுககிவநதார சதா னநதா *

௧௧. காலனைபபோ லதட்டியேவரு ங்
கணணனராமனைக கணடிட்டான பிததன
போலியுநதன னுயிரபிழைததா . லே
போதுமெனறெணணங கொணடிட்டான *

௧௨. மாரனாவிட டியிரபிழைககலா ம
வாழலாமெனறு மோடினான் அல்லாற
பாதகமவனை விட்டதிலலை யே
பதுமநாபனு மோடினான் *

௧௩. கோவிநதரவன சிரோரததினத்தை க
கொணடுவநதிட வெணணினா பெண்கள
காவநதாகவே யிஙஙனேஸ ங்
கருஷணரருள பணணினா *

௧௪. சீஙகெஙகேசஙக ருடஙெட்ட ம்
எடுககினறுனென றாததினா ஐயா
அஙகஙகெலலா மெசோதைசேய ர
அதட்டிககொணடு துரததினா *

௧௫. துஷ்டனுகிய சஙகருட னை
ஸவாமிகிருஷண னுங கிட்டினா கையின
முஷ்டிபாததா லவனசிரஸ ஸை
மோதினா முட்டி தட்டினா *

௧௬. தலையுஞசூடா மணியானது ங்
தானேகொணாந் தணணா கையில்
நலகிதியாயக கொடுததாாந த
நநதனாமணி வணணனர் *

௧௭. சங்கசூடகனறன் ஜீவரத்தின ந
தனனையேகொணடா னநதகன இங்கும

அங்கவன்சிரோ ரத்தினந்த — னை
ஆய்ந்துகொண்டானே — நந்தகன் — *

௧௮. சூடாமணி யுடனேசங் — க
சூடனார்தலை — கண்டாரோ — மன்னு
ஏடார்குழற் கோவிமார்களு — ம
இசைந்தானந்தங் — கொண்டாரோ — *

௧௯. ஸௌரமண்டலத் திடையூருக — த்
தோன்றுஞ்சங்க — சூடனை — யரி
பரமண்டலம் பண்ணினார்காணு — ம்
பாரதாகுரு — நாடனை — *

௩௪-ம் அத்தியாயம் முற்றும்.
கண்ணன்திருவடிகளேசரணம்.

## ௩௫-ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

விருத்தம்.

வனமாலி யிரவினிலே யாயர்பாடி
மங்கையரைக் கூடுமவர் பகல்களெல்லாம்
வனமதனிற் செலவவரைப பிரிந்துஙகோவி
மார்களவர் விளையாட்டை மிகவர்ணித்துப்
பனிரண்டு ரெண்டுசுலோ கங்களாகப்
பனிரண்டு வகையாகப பலுக்கிக்கொண்டு
தினமானம் பகலைப்பின னிட்டதாமத்
தியாயந்தா னேழைந்தி னியாயந்தானே.

கோவியர் பகலிற் கண்ணனைப் பிரிந்ததால்வருந்தி யுரைத்தல்.

விருத்தம்.

வாருமையா பரிக்ஷித்தே யரிபிருந்தா
வனத்திலே சென்றபக லெல்லாமிங்கே
பாருமவ ருடனறங்கள் மனதுசெல்லப்
பரிந்துமவர் லீலைகளைக கீதம்பாடி
ஆருமந்தக கோவியர்கள் வெகுபிரயாஸத்
தாற்பகலைப பின்னிட்டா ரவாசுலோகச்
சீருமதன் பயனினவர் விரகதாபந்
தெரியலாம் அறிவதெவ ரறியலாமே.

தரு, இராகம்-நீலாம்பரி, ஆதிதாளம்.

பல்லவி.

அங்கமுகுந்தனைப பிரிந்து — நமா
இந்தவிரசத்தை யெபபடிச்சகிப் — போம்
ஆலிபரோ நல்ல கோவியரே.

அநுபல்லவி.

விந்தைசெய்கோ பாலர் வேணுகான லோலர்
நந்தர்க்குமே பாலர் நாதராதி மூலர் (அந்த)

சரணங்கள்.

இடதுகன்னத்தி லிடதுகையினை நாட்டிக் கொண்டும்
இருபுருவமுங் கூத்தாடும்வகை காட்டி *
அடியதரத்தில் வேணுவைவைத்து மீட்டிச் சாமி
யணியணியாக அங்குலிகளைச் சூட்டி *
இன்டயிடையேழு ஸ்வரங்களை நீடி
யிசைக்கின்றராந் திறங்களையே நாடி
இவைதும்விடும்து மாய்க்கொண் டாடி
யெங்கெங்குங்கானத்திற் கானஞ்செய்வ ரோடி (அந்த)

அந்தரத்தில்விமான மீதிற்சொண்டு சேரும் பதிக
ளாகியஸித்தருந் தெய்வபெண்டுகளெல் லோரும் *
வந்துசூழ்ந்துநின்றும் ஹரிவேணுகானச் சீரும் அதின்
மதுரமுமீறிந் தாச்சரியந்தனைச் சேருஞ் *
சிந்தையில்மிக்கவு நாணங்கொண்டு மார
தீரன்மலரம்புக குமனதை நேரப்
பைந்தொடியளகஞ் சோரவுடை சோரப்
பரவசமோக மடைதல்பார்த் தீரா (அந்த)

ஏழைகளேயிந்தத்துக்கத்தைநானினி யென்ன வென்று
எடுத்துரைசெய்வேன் விசித்திரங்களு மின்னந் *
தோழிமார்களேயிவர் திருநாமத்தைச் சொன்ன பேர்க்குஞ்
சுகந்தருமிரதநந்தன் குமாரன்பிர சன்ன *
ஆழியான்மார்பாரஞ் செய்யபிர காசம்
அற்புதமாய்வேணு வாத்தியவுல் லாசஞ்
சூழுந்தலைவணங்கி நன்மந்த சாசந்
துய்யநிலாவீசச் செய்யுமரிஷி கேச (அந்த)

அந்தப்பல்லொளிவு முத்துமாலையது போலும் அல்ல
தரிதிருமார்பின் ரமணகைபபது போலுஞ் *
சுந்தரஆரங்கள் தானேயிவாநகை போலும என்றுஞ்
சொல்லவேலக்ஷ்மி யகலாதமின்னற் போலும் *
கந்தாப்பகந்தர்ப்ப ராகியெங் கெங்கனே
கானம்பண்ணுகி றுரோவங் கங்கனே
இந்தக்கோகுலத்தின் மிருகங்க ளிங்கனே
யெல்லாமோகிபபதைச் சொல்கிறே னங்கனே (அந்த)

இவர்வேணுகானந் தனிலேமனதுல யித்து இந்த
இடம்பசுக்கள்மான் களுமொரு மித்துச் *
செவையாகவந்துகஞ்சக கணணன்ஸமு கத்துக் குள்ளே
திருந்தநின்றுகொண் டதுகளவாயகருட்செ லுத்துங் *

௨. அறியாமல்வந்தபோது மந்தரதமுந்தா னே
யாயர்பாடிக்குவந்து சேர வான
நெறியிற்சூரியன்றேறும் மேற்கடலைச்சேர்ந் து
நிலத்தில்மாலையும்வந்து நேர *

௩. அந்தக்கோகுலத்திலே யக்ரூரர்வரும்போது ம்
அரியடிகளும்நடந் திருக்கும் அதிற்
செந்தாமரையிரேகை தான்னியமங்குசரே கை
சிறந்தரேகைகள்பதிந் திருக்கும் *

௪. பூமிக்கலங்காரமா யிருக்குந்திருமாலடி ப்
பொடியெப்படிக்கொத்ததென் றுலோ சகல
காமியமோக்ஷங்களுந் தருமென்றுதேவர்கள்ற ங்
கனககிரீடங்களின் மேலோ *

௫. நிறைந்ததூளியுமது நிர்ம்மலமாயிருக்கு ம்
நேரக்கண்டுசந்தோஷம் வருக அன்பு
சிறந்துபூரித்துப்புள காங்கிதமாய்க்கொண் டு
திவ்வியவானந்தக்கண்ணீர் பெருக *

௬. தேரினின்றுங்குதித்து நமதுபிரபுவா ன
ஸ்ரீகிருஷ்ணன்பாததூளி யிதுவே யென்றங்
தாராவமுதன்பாத தூளிகளில்விழு ந்
தங்கப்பிரதக்ஷிணஞ்செய் ததுவே *

௭. கிருஷ்ணன்பாததூளிது கிடைக்குமாநமக்கிங் கே
கிடைத்ததேயற்புதமீ தெனவே யந்த
விஷ்ணுவையிப்படிக்கொண் டாடினாக்ருூரரு ம்
மெய்யன்பர்க்கெல்லாமத நினைவே *

௮. இப்படிக்கஞ்சனாலே யக்ரூரசாமியங் கே
யேவப்பட்டதிமுத லிந்தப் பாத
நற்பொடிதரிசனங்கண்டுமக்ருூரரு ம்
நண்புடனானந்தம டைந்த *

௯. இதுவரைக்கும்வர்ண்ணித்துத் தியானம்பண்ணுகின்ற வ
ரெவரோவவர்கள்தேக மெடுத்த தற்கும்
அதுதான்பலமதிலும் டம்பஞ்செய்வதைவிட் டு
அதிவிசுவாசமது தொடுத்த *

௧௦. தியானஞ்செய்பவருக்குக் கேட்கவேண்டியதென் ன
செப்பும்வெகுநாழிகை வரைக்கும் அந்த
மானுபாவராங்கிருஷ்ணன் பாததூளியிலே யா
மகிழ்ந்தங்கப்பிரதக்ஷிண முனைக்கும் *

௧௧. எழுந்திருந்துதிரும்பத் தேரேறியக்ரூரரு ம்
ராமகிருஷ்ணரானகோ பாலர் எங்கே
தழைந்திருக்கிறுரென்று கேட்டுக்கொண்டுசெல்கி ற
தருணத்திடையருட பாலர் *

கஉ. கொட்டிலிலங்கேயதோ யிருக்கிறொன்றுசொல்ல                    க்
கோவிந்தன்தரிசனஞ்                                    செயவே மகிழ்ந்து
இட்டமுடனேவந்தார் வரும்போதுராமகிருஷ்                          ண
ரிருவரையுங்கண்டவ                                     ருயவே       *

கங. பார்பசுக்கறந்துகொண் டிருக்கக்கண்டாரவரொ                    ப்
படியிருக்கிறொன்றால்                                  மன்னனே     வினை
தீர்ப்பவவதரித்த கிருஷ்ணன்சரிதைகேட்கு                         ம்
வேந்தனேநீயல்லவோ                                     தன்னியனே   *

அக்குரூரர் இராமகிருஷ்ணர்களைத் தரிசித்தல்.

---

கலித்துறை.

தொட்டி லுதைத்தவன் முன்னவனோடுந் தொடர்ந்துமங்கே
கொட்டிலிற்பாற்பசுக் கூட்டங்கறந்து கொண்டேயிருக்கும்
மெட்டிலிசைந்து கொண்டாரக்குரூரற்கு வேந்தரசே
கிட்டிலிதையென்ன சொல்வேனரிதன் கிருபைநன்றே.

திபதை, இராகம்-சேதாரிசவ்ளை, சாபுதாளம்.

கண்ணிகள்.

க. நீலாம்பரதராகிக்கொட்டிலிடை நின்றார்பலராம          சாமி     யங்கே
கோலாகலமாகப்பொன்னுடைகட்டியுங் கோவிந்தனின்றாரோ    நேமி     *

உ. சரற்காலத்தினிற்செந்தாமரைமலர் தன்னைநிகரான          நேத்திரர்   ஆயும்
விரத்திமன்னனேவாலிபாநீலசு வேதவண்ணரான              காத்திரர்   *

௩. லக்ஷுமிவாசராய்த்திண்புயர்களாகி யார்க்குஞ்சமுகர்மென்மேலே      யந்த
அச்சுதர்சங்கருஷணரழகாக ஆனைக்குட்டிகளைப்              போலே     *

௪. அதிபலவான்களாகியும்அங்கங்க ஆயர்பாடிமீது           தங்கள்    பாத
மதுகள்வைத்தூடப்பதாலங்சங்கே அங்குசம்வச்சிரத்துவ ஜங்கள்    *

ரு. பதுமங்களென்னும்ரேகைபடையாளம் பதியச்செய்துபிர        காசம்    எங்குந்
துதிமகான்களாய்ககிருபாமுதரசந் துளிகரும்பாரவையுல்        லாசம்    *

௬. மேலும்மந்தகாசத்துடனேசம் பீரவிளையாட்டுள்ள          வராகி     ரத்ன
மாலிகாபரணராகியுமேவன மாலிகாலங்கிரு                  தராகி     *

௭. சந்தனந்திமிர்ந்தமேனியாரபபோ தானீராடித்தூய்ய          வாடை     தரி
யந்தவாதிபுருஷர்ஜகன்னாதற்கு மாருளைப்பார்சொல்லுஞ்சி      லேடை     *

அ. பலகேசவரொன்றும்பூபாரந்தீர்ககவே பண்பாயந்தஅரி       தானே     யெண்ணி
சலவங்கிசையாற்றிருநாமங்கொண்டிந்த நாட்டிலவதரித்       தானே     *

௯. சொர்ணாலங்காரமரகதமலேபோலே சுவாமிகள்தன்றேக        காந்தி    யாலே
பன்னும்இருளைவிலக்கிபிரகாசம் பண்ணிகொண்டுவெகு       சாந்தி    *

க௦. காட்டிவிளங்கிறராமகிருஷ்ணர்களைக் கண்டுதேர்விட்டுக்குதித்து    வெகு
குட்டியதாகவேஅக்குரூரர்செஞ்சிற ரெடுத்துநல்லன்பு         பதித்து    *

௧௧. ராமகிருஷ்ணர்பாதாரவிந்தங்களிலே நானிதோ அக்குரூரன்றெண்டன் என்
தாமுனையாமலேஸ்வாமிகளைக்கண்ட சந்தோஷத்துள்மூழ்கித்தொண்டன் [று
௧௨. கண்டமெழும்பாமற்புளகிதரானந்தக் கண்ணீர்களாலே நிறைந்த சொர்ண
தண்டம்போலேவிழுந்தாபரவசராய்ச் சாமிவரவை யறிந்தார்

## இராமகிருஷ்ணர் அக்குரூரனை உபசரித்தல்.

### வெண்பா.

தண்டம்போ லேபணிந்தான் றம்மையக் குரூரனென்றுங்
கண்டன்போ டுந்தூக்கிக் கட்டியே—தொண்டன்பால்
நேயமது காட்டியருள் நீடிவினை யோட்டியுளை
வாய்மதுர மூட்டிநெடு மால்.

திபதை, இராகம்-ரீதிகவுளை, மிச்சிரதாளம்.

### கண்ணிகள்.

௧. செந்தாமரைக்கண்ண ரக்குரூரனைக்கண் டு
தீயனாங்கஞ்சன் விடுக்கும் இவர்
வந்தானென்றெண்ணியு மந்தத்துஷ்டனை
வஞ்சனைக்கஞ்சனை யடிக்கும் *

௨. ஆண்மையைக்காண்பிப்பார் போலந்தச்சக்க ர
வடையாளமாங்கைக ளாலே வெகு
தோண்மையதாகவே அக்குரனைக்கட்டித்
தூக்கியெடுத்தனர் மாலே *

௩. ஆலிங்கனஞ்செய்து வந்துமோந்தன்பருக்
கன்பனென்பதையே காட்டி மென்
மேலும்பிரீதியைக் காண்பித்தார்கிருஷ்ண ன்
விளையாட்டைகளுங் கூட்டி *

௪. கண்ணற்கண்ணனந்த அக்குரூர்கூபபி ன
கைகளைத்தானே பிடித்துக் கொண்டு
வெண்ணெயுண்டநம்பி யுடனேகூட வே
வீட்டிலழைத்தன்பு தடித்து *

௫. அக்குரூரனைப்பல ராமனுயர்ந்திடும்
ஆசனமீதிலே வைத்து நல்ல
அர்க்கியபாத்தியம் முறைப்படிதா னே
ஆசமனீயமுங்கொ டுத்து *

௬. மதுபர்க்கமுத லானதுங்கொடுத்து
வாருமய்யாவேநல் வரத்தா வென்றுங்
குதலைவார்த்தையால் க்ஷேமம்விசாரித்தார்
குணமையாயலக் கரத்தார் *

௭. ஆதரவுடனே வழியில்வந்த க
ளைதீரத்தேவாமுதம் போல் நல்ல

சாதம்பதார்த்தங்க ளுடனேபோஜன
தான்செய்துவைத்தாரிப்பதம் போல்

௮. சகலதர்ம்மங் களையுமறிந்திடு
சங்கருஷணரிப் படிக்கே
தகைமையக்குரூரனா பூஜித்துநாறு
சந்தனந்திமிர்ந்து துடிக்கே

௯. ஆரமாலராலலங் காரஞ்செய்துபி
அடைக்காய்வெளிலை கொடுத்து
நாராயணனன்னனுபசரிக்க
நந்தகோபர்சொல்வா ரெடுத்து

௧௦. ஆட்டுவாணிப னிடத்திலேஜீவன
ஆடுகள்செய்வதைப் போலே
ஈட்டாசகஞ்ச னிடத்திலேஜீவ
மெபபடிச்செய்வதும் மாலே

௧௧. அந்தத்தயவில்லாக் கஞ்சனுந்தங்கை
முந்தைகளைவெட்டி னானே
சொந்தத்தங்கை யவளழுதுபுத்தி
சோகபபடவுங்கண் டானே

௧௨. எவளவாகிலும் நெஞ்சினிலென்
யிரக்கமில்லாத கொடியன்
சவலைக்குழந்தை ரத்தத்திற்பிராணனை
தர்ப்பிததான்பரம தடியன்

௧௩. நாமப்படிக்கொத்த கஞ்சனிடஞ்சி
னம்பண்ணனுமுங்களை யென்ன
க்ஷேமம்விசாரிபப தென்றிப்படிக்கெல்லா
தேனுமொழிகொண்டு மன்ன

௧௪. ஆதரவுமன்பி னுடனேநந்தரு
அகருரானைநன்றாய் க்ஷேமங்
காதலையுங்கண்டுவழிநடந்
களையுந்தவிர்ந்துபிர ஞமம்

௧௫. சேர்ந்தகிருஷ்ணன் றரிசனந்தன்று
ஜனனமரணத்து ளலையுங்
தீரதக்குரூராககத் பாக்கியங்கிடைத்
ஸ்ரீபாகவதத்து கிலேயும்

௧அ-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன் திருவடிகளே சரணம்.



## ௩௯-ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

விருத்தம்.

அச்சுதரும்மதுபுரிக்கே யெழுந்தருளவவர்பிரிவை யாற்றிடாமல்
மச்சவிழிக்கோவியர்கள் புலம்பியதுங்காளிந்தி மடுவிலங்கே
உச்சிதமாம்பரமபத தரிசனமக்குரூரர்தமக் குறறவாறும்
இச்செயல்களைமூழந்து நான்கத்தியாயமிதி லிசையுந்தானே.

அக்குரூரைக் கண்ணன் க்ஷேமம் வினவல்.

கழிநெடில் விருத்தம்.

தடத்திலக்குரூரர் சிந்தித்தவகையே சங்கருஷணருமச் சுதருந்
தருமஞ்சமீது வைத்துபசரித்தார் ஜலஜமின்னுளமண வாளர்
வடத்திலேதுயிலு மரியவர்முன்னம் வரிலன்பர்க்கெதுகிடை யாது
மாலடியார்க ளெதையும்வேண்டார்தன் மயமதாயிருக்கினு மவர்க்குக்
கிடைத்திடுஞ்சகல போகமுத்திகளுங் கேளினித்தேவகி சுதாரங்
கிருஷ்ணனுமந்த வக்குரூரனாநங் கிளைசனுஞ்சுகமதோ வென்றும்
விடத்தைநேர்கஞ்ச னெண்ணிக்கைகளையும் வினவுவார்செங்கனி வாயார்
வேந்தனேதரணி காந்தனேயரிய சாந்தனேவிணைதவிர்ந் தவனே.

தரு, இராகம்-தோடி, ஆதிதாளம்.

பல்லவி.

வாருமையா அக்குரூரா நல்ல
வாரீர்சுகமாய்நல்வரத்தாய்வந்தீரா மங்களமுமக்குண்டாக.

அநுபல்லவி.

சூரராம்நமதுஞாதி சம்பந்திகளெல்லோருந்
துன்பமின்றிவ்யாதியின்றிச் சுகத்திலிருக்கின்றாரா (வா)

சரணங்கள்.

௧. நமக்கம்மானென்று பேரிட்டுமென் மேலே கஞ்சன்
நமதுகுலத்துக்கொரு வியாதியைப் போலே *
திமிர்ப்பதாய்வளரமறச் சனங்களினுடனே நம்மைச்
சேர்ந்தவர்க்குமென்னவென்று க்ஷேமம்விசாரிப்பே னும்மை (வா)

௨. நிரபராதிக ளானவென்றாய் தந்தைக் கென்றன்
நிமித்தம்புத்திரமரணத் துடன்விலங்கதும் வந்தே *
பரவுதுக்கசமுத்திரத்தில் மூழ்கிமூழ்கிக்கிளம்ப லாச்சு
பரிந்துபரிந்துக்ஷேமம் விசாரிப்பதுங்கென்ன பேச்சு (வா)

௩. சேவைசெய்யவும்மை யென்றுந் தேடுவேன் இந்தச்
செயலையெந்தவிதமென்று நானுறுதி நாடுவேன் *
தேவயத்தினமாகவுன்றன் றரிசனம்நான்கண்டேன் காணுந்
தேவரீர்வந்தகாரிய மின்னதென்றுசொல்ல வேணும் (வா)

## அக்குரூரர் கண்ணனிடங் கஞ்சன் அழைத்தமை யுரைத்தல்.

வெண்பா.

அக்குரூ ராவாரு மையா வெனவுரைத்த
சக்கரபா ணிக்கன்பாய்ச் சாற்றுவார்—மிக்க
துழாய்த்தாரா யம்ம துராபுரிக்குக் கஞ்சன்
அழைத்துவரச் சொன்னனையா.

தரு, இராகம்-சங்கராபரணம், சாபுதாளம்.

பல்லவி.

அழைத்துவரச்சொன்னனையா கிருஷ்ணய்யா
அழைத்துவரச்சொன்னனையா *

அநுபல்லவி.

மழைக்கார்நிறத்தழகா வுமையந்த வஞ்சன்
மாமனென்றுபேரிட்டுக் கொண்டிருக்குங் கஞ்சன் (அழை)

சரணங்கள்.

௧. எதுக்கனைவிரோதித்துச் செய்கிறானே டம்பம்
எண்ணிவசுதேவனை வதைக்கவென்று ரம்பம்
அதிமூடன்கஞ்சன்நம்மைச் சேர்ந்தவர்களே துன்பம்
அனேகமாய்ச்செய்கிறான் நேவரீர்ஹரி விம்பம் (அழை)

௨. தனுர்மகஞ்செய்கிறானு டந்தச்சிங் காரம்
தனைக்காணவும்மை வரவழைத்துமன் னேரம்
எனவோசாணூராதி களைக்கொண்டகங் காரம்
ஏதோசெய்வமென்றென்னை யேவினானின் னேரம் (அழை)

௩. பண்டுசொல்லியதல்லோ ஆகாச வாணி
பாரும்நாரதர்வந்தும் அதைச்சொன்னா ராணிக்
கொண்டுமைவசுதேவர் மைந்தனென்றுங் தோணிக்
கோகுலத்தில்மறைந் திருக்கிறீரென் றாணி (அழை)

## இராமகிருஷ்ணர்கள் மதுரைக்குப் பவனி யெழுவதை நந்தர் ஆயர்களுக்குரைத்தல்.

கலித்துறை.

பகைத்திடுங்கஞ்ச னினைப்பையக்குரூரர் பகர்ந்திடவும்
நகைத்துக்கொண்டேயந்த ராமனுங்கண்ணனும் நந்தனுக்கே
பகுத்துரைசெய்ய மதுராபுரிக்குப் பவனியென்று
தொகுத்தந்தக்கோகுலத் தாயர்க்கெல்லாம்நந்தர் சொல்லுவரே.

தரு, இராகம்-உசானி, ஆதிதாளம்.

பல்லவி.

ஆயரோ யறிவீர் கோகுலத்
தாயரோயறிவீர் *

அநுபல்லவி.

ஞாயமிதுபிருந்தா வனவாஸிக ளே
நேயரோவைகுண்ட வாஸிஜகந்நா த
மாயனைச்செங்கனி வாயனைநெஞ்சி ல்
மறவாமலன்பு துறவாதபோக ளே (ஆய)

சரணங்கள்.

௧. வாசந்தருமலர் மாலையணிமார்ப ன்
தேசம்புகழ்ந்திடு போஜகுலாதிப ன்
ராஜன்கஞ்சன்மது ராபுரிமேற்றனு ர்
யாகஞ்செய்கின்றனு ம்
ஆசையாய்க்கோகுலத் துள்ளோமும்வி சு
வாசமதாகவே காணிக்கைகளிட் டு ப்
பேசிக்கலந்ததினாலேவெகும தி
பிரபலமேஜன்ம சபலமேயி தை (ஆய)

௨. உக்கிரசேனன்பிள்ளை யாயுதபூஜைக் கு
விக்கிரமராமகிருஷ்ணாவரச்சொல் லி
அக்குரூரசாமியையனுப்பினவ ர்
அழைக்கவந்தா ரோ
நெய்க்குடம்பாற்குடந் தயிற்குடங்க ளை
மிக்கவேவண்டில்மே லேற்றிக்கொண்டோமு ஞ்
சிக்கெனச்சென்றந்த யாகசாலைகண் டு
தரிசிப்போஞ்சொர்ணம் வருஷிப்போமி தை (ஆய)

௩. நாளைநல்லபருவ காலமதிற்பெரி ய
வானையெல்லாமங்கே வரவழைத்துந ல்
வேளையென்றேமகா ராஜன்கஞ்சனும்வி ல்
வேள்விசெய்கின்றனு ம்
நீளுமந்தத் தேசங்களிலிருந் து
கேளும்வெகுஜனம் வருமவர்பா த
தூளிகளுக்காளா யானந்தவெள்ளத்தி ற்
சுழிக்கவேபேரி முழக்கவேயி தை (ஆய)

இராமகிருஷ்ணர்கள் செல்வதினாற் கோபியர்கள் வருந்தி யுரைத்தல்.

---

விருத்தம்.

பலமருந்து கொடுத்துந்தீ ராதநோய்க்குப்
பண்டிதரி ரதங்கொடுத்துத் தீர்ப்பார்போலக்
குலநோயாங் கஞ்சனையே நந்தரங்கே
கோரஸங்கொண் டெடுப்பதுபோ லாயர்க்கிந்த
நலமுரைத்துங் கோகுலத்தில் முழங்கும்பேரி
நாதமத னாற்கண்ணன் மதுரைசெல்லும்

புலமறிந்து கோவியர்கள் விரகதாபம்
பூணுவார் மனதுருகல் காணுவாரே.

திபதை, இராகம்-பைரவி, ஆதிதாளம்.

கண்ணிகள்.

௧. கண்ணன்மதுரைக்குச்செல்லுஞ் சேதியைப்பேரிமுழக்க ங்
காட்டவறிந்தார்களையா கோபிமார்கள் நீல
வண்ணரவர்மீதிலாசை வைத்துமோகமீறுகின் ற
மங்கையர்க்கரசியான கோபிமார்கள் *

௨. கோவிந்தனையண்ணனுடன் மதுரைக்கழைக்கவேய க்
குரூரர்வந்ததையுமறிந்தார் கோபிமார்கள் அந்தோ
ஆவிந்தவகைக்கென்செய்வோ மெனமனம்புழுங்கிப்பெருமூ ச்
சறைந்துமுககமலம்வாடிக் கோபிமார்கள் *

௩. வெண்கலையுஞ்சோர்ந்துவளை நெகிழ்ந்துசொருக்கவிழ்ந்துதா மே
விரகதாபமீறினார்கள் கோபிமார்கள் அவர்
கண்களாலொன்றையும்பாரார் கைளால்வேலைசெய்யா தே
சாதசவிந்திரியங்களுங் கோபிமார்கள் *

௪. முகுந்தனிடத்தேலயித்து மெய்மறந்துபரவசரா ய்
முக்தர்போலானார்கள் ஐயா கோபிமார்கள் பின்னும்
பகர்ந்திடுஞ்சவுரியாசை கொடுக்குமந்தநகைகடைக்க ண்
பார்வைகளையெண்ணியெண்ணிக் கோபிமார்கள் *

௫. நித்தியச்செல்வராங்கிருஷ்ணன் மதுரமொழிகளையுமங் கே
நினைந்துநினைந்துருகியந்தக் கோபிமார்கள் கேளுஞ்
சித்திரப்பிரதிமைபோலே யசைவில்லாதிருந்தாரை யா
சிற்றிடைச்சிமார்களென்னுங் கோபிமார்கள் *

௬. எதுபதிநடையழகுந்திரு விளையாட்டுகளையுந்தா ன்
எண்ணியெண்ணிப்பின்னுமந்தக் கோபிமார்கள் தங்கள்
கதியானகிருஷ்ணனைப்பிரிந் தெப்படிவிரகஞ்சகிப்போமென் று
கண்கள்முத்தாரஞ்சொரிந்தார் கோபிமார்கள் *

கண்ணன் பிரிவாற்றாது கோவியர்கள் பிரமனை நிந்தித்தல்.

---

வெண்பா.

அரிவாஸுதேவர்பிரி வாற்றாது நெஞ்சந்
திரிவார்கள் வேதன் செயலைப்—பரியாஸம்
இட்டதனைச் செப்புவதி லெத்தனைதுக் கத்தைவைத்த
வட்டமுலைச் சிற்றிடைச்சி மார்.

தரு, இராகம்-மணிரங்கு, சாபுதாளம்.

பல்லவி.

இந்தக்காரியமெல்லாம் நிந்தைக்கிடமாச்சு தே
யென்னையாபிரம்மதே வா.

அநுபல்லவி.

நந்தநந்தனன் அரவிந்தலோசனனையின் ன்
ஞட்டிலெங்களுடனே கூட்டிப்பிரித்துவிட்டீர் ர் (இங்)

சரணங்கள்.

௧. வங்கணவிசவாசங் களினாலுமெங்களை நீ ர்
மாதவருடன் கூட்டி
அங்கச்சுகத்தைப்பூரணமாய்மருவுமுன் னே
யதற்குவிக்கினங் காட்டி
இங்கேபிரித்துவிட்டீருமதுவிளையாட்டெல்லா ம்
ஏச்சுச்கிடம்பா ராட்டி
சங்கையில்லாதசிறு பிள்ளைவிளையாட்டாய் வி
தாதாவேசெய்தவும்மை வேதாவென்றுசொல்வா ரோ (இங்)

௨. கருங்குழற்கற்றைசூழ்ந்து முன்னதமாயிருக்கு ங்
கபோலமெனுங்கண் ணாடி
ஒருங்கேசோகங்கள் தீர்க்கும் வெண்ணிலாமந்தகாஸ ம்
உயரழகுடன் கூடி
வருங்கண்ணன்முகத்தையெங் களுக்குக்காண்பிவித்திப்போ
மறைத்தீரேமறை பாடி
பெருங்காரியமோநல்ல திருங்காணும்பெண்ணென்று ற்
பேயுமிரங்குமனி யாயமிதுவல்ல வோ (இங்)

௩. எடுத்திடுங்குரூரராம் நீரேயக்குரூரரொன்று ம்
இங்கேபோகொண்டு வந்தே
படைத்துமுன்னெங்களுக்குக் கொடுத்தகண்ணையிப்போதீர்
பறித்துக்கொண்டீர கந்தை
கொடுத்ததைப்பறித்திடும் மூடன்போலபகீர்த் தி
கொண்டீர்மண்பொதுத் தந்தை
தடுத்துச்சொல்லவுமக்கு வாயிருக்குதாசொல்லு ஞ்
சதியேசெய்ததல்லாமல் விதியேவேறென்றுமில் லை (இங்)

௪. முன்கொடுத்தகண்களால் நாங்களுங்கிருஷ்ணசா மி
முகமுதலான தாலே
அங்குன்படைப்புகளின் விசித்திரங்களையெல்லா ம்
அறிந்தோமதற்கு மேலே
இங்கேநம்மதிகார மர்ம்மங்களெல்லாங்கண் டா
ரென்றபொறாமை யாலே
எங்கள்முன்போமாறுடிக் கண்ணனைப்பிரித்துக்க ண்
ணில்லாராக்கினீரையா கல்லாக்கலைகற்றீ ரோ (இங்)

கண்ணன்பிரிவாற்றாது கோபியர்கள் வருந்தியுரைத்தல்.

---

கலித்துறை.

பதிகளைமைந்தரை வீட்டைநெய்வெண்ணெயைப் பால்தயிரை
நிதிகளையாவு மொழிந்தேயின்னில நிறத்தனையே

கதியென்றுநம்பி யடைந்தோமிக்கண்ணன் கருத்திற்கொஞ்சம்
பதிவானதுண்டென்று சொல்லவும்வாயுண்டோ பைங்கொடியே.

தரு, இராகம்-செஞ்சுருட்டி, மிச்சிரதாளம்.

பல்லவி.

இந்தநந்தநந்தனன் றெந்தனந்தனையி னி
யெந்தவிதந்தெளிவோம் வனிதைமார்க ளா.

அநுபல்லவி.

விந்தைவிந்தையாய்மந்த காஸமும்பாராட்டிக் கடைக்கண்பார்வையின்
அந்தங்களினாலேயும் நமக்காசை காட்டி யவர்க்காசையுண்டோ
அச்சுதன்கொல் நிச்சயமெப்ப டி (இந்த)

சரணங்கள்.

௧. வீடுபந்துக்கள்பதி புத்திரரெல்லாம விட்டு அவர்மேலாசையாய்
நாடிப்பிரத்தியக்ஷமா யவர்க்கடிமைப் பட்டு வந்தடைந்தோமே
நம்மையவ ருண்மையாய்ப்பார்த்தா ரா (இந்த)

௨. மதுராபட்டணமங்கையர்களின் மீது ராத்திரிப்போது
அதுநல்லபொழுது விடிந்ததுதப் பாது நமதுதுக்கத்தை
அன்னங்களா வென்னவென்றுசொல்வோ ம் (இந்த)

௩. கோகுலநாதரான கிருஷ்ணன்மந்த காஸங் கடைக்கண்பார்வைசேர்
மேகவண்ணன்முகத் தழகாந்தேனையுல்லாஸம் ஆகப்பானஞ்செய்வார்
மின்னாரவரல்லோ தன்னியரடிபெண்கா ள் (இந்த)

௪. அங்கனேயவர் தமக்குக்கிடைத்த வாசீர் வாதமதனை
இங்கனேயுண்மையாய்க் கண்டோமிதுவாசி யெதுபுரிநாடி
மீதோபார்மதுசூதனர்செல்வ ர் (இந்த)

இதுவுமது.

வெண்பா.

தூவியன்ன நேர்நடைய சோதைமைந்தன் மீதினிலே
கோவியரோ நாமாசை கொண்டோமே—கூவியென்ன
ஞாயநதைச் சித்திக்க நாம்மதுரை மின்னார்கள்
மாயத்திற் சிக்கிக்கொள வார.

தரு, இராகம்-சங்கராபரணம், ஆதிதாளம்.

பல்லவி.

மாயத்திற்சிக்கிக்கொள்வார் வனமாலியந்தமதுராபுரிமங்கையர்
மாயத்திற்சிக்கிக்கொள்வார் *

அநுபல்லவி.

காயக்கவெக்கத்தைக்கூட்டிக் கண்மிரட்டிநகைகாட்டி ச்
சாயக்கொண்டைக்கிருஷ்ண னையவர்தாங்கை வ
சஞ்செய்தங்கே கொஞ்சும்அப ரஞ்சியான வஞ்சிமார்க ள் (மாய)

சரணங்கள்.

௧. தந்தைதாய்க்கடங்கியிங்கே வாராரா அந்தச்
சதிகாரிகள்கைவசத்திற் சேராரா *
பந்துக்களாமயனாத்தாம் பாராரா நம்மைப்
பார்க்கவேணுமென்றுவரப் போராரா *
அந்தப்பட்டணப்பெண்டீர்க ளாசையங்கேயிழுக்கு மே
இந்தவிதம்நா டோடிகள்நம் மை
யெப்படிநினைப்பதாய்வ ரப்போராரி டப்பெண்ணு சே (மாய)

௨. கண்ணன்மதுரைக்குச்செல்லும் வழியுமே பார்ப்பார்
கண்களானந்தம்பொங்கிப் பொழியுமே *
எண்ணுவீர்தாசாருசர்துன்ப மொழியுமே போஜர்
எதுவிருஷ்ணிகள்விழிகளல்லோவிழியுமே *
அண்ணல்லக்ஷ்மிநாயகராம் அனந்தகல்யாணகுணரா ம்
பண்ணுறைதேவகி நந்தனன்றரிசன ம்
பண்ணுறபேர் கண்ணுளபேர் புண்ணியரோ யொண்ணுதலா ர் (மாய)

௩. ஜீவனுக்குமதிகமாம் பிரியத்திலே யிருக்குஞ்
செல்லக்கிருஷ்ணனைவெகு தூரத்திலே *
சேவகமாய்வந்துதீ வரத்திலே யழைத்துச்
செல்லவுங்கொடியன்வந் திடத்திலே *
ஆவிவருந்துநமக்கோ ராறுதற்செய்யவுங்காணோ ம்
பூவுக்குள்ளேயிவன் குரூரனல்லோ டி
போரவேயக் குரூரனென்ற பேரிதென்ன காரிய மோ (மாய)

இதுவுமது.

இடையானமின்னற் கொடியாயர்பாடியி னேந்திழையீர்
தடையானதொன்றுஞ் சொல்லாதக்ரூரன் றனிரதத்தின்
இடையேபவனிக் கெழுந்தருளின்றனடி யிதையத்திலே
கிடையாததீரமதெவ்வளவாகிலுங் கிருஷ்ணனுக்கே.

தரு, இராகம்-பைரவி, ஆதிதாளம்.

பல்லவி.

கிருஷ்ணனுக்குநெஞ்சில் எவ்வளவெனுமீரங்
கிடையாதடிமின்னிடையா ரே.

அநுபல்லவி.

இஷ்டமாகஅக்ரூரன் கொண்டுவந்ததேர்மேலு ம்
எழுந்தருளச்சந்தோஷந் தழைந்திருக்கிறானிந் த (கிரு)

சரணங்கள்.

௧. கொடியராமிடையரும் வண்டியின்மேல்நெய்தயிர்பா ல்
குடம்பலவுமேற்றல் போதாதா
நெடியகிழங்களெல்லாம் பார்த்துக்கொண்டிருக்கு தே
நேர்ந்திடைபூறென்றும் வராதா

இடியென்பதெங்கேபோச்சத் தெய்வங்கள்நமக்கொரு
இஷ்டத்தைச்சிந்தித்தாலாகாதா
மடிபிடித்திழுப்போமெ சோதைமகனையிங்கே
வாருங்கோடிதெருவைப் பாருங்கோடிவிநோத (இரு)

௨. தெருவிலிழுத்தால்நம்மை யிடையருங்கிழங்களுஞ்
செய்வதென்னகிடக்கிப்போதே
அரிவைமாரேகிருஷ்ணனைப் பிரிந்திருக்கநமக்கு
அனிமிஷமுங்கூடத்தாங்காதே
கருதுந்தெய்வமிப்படிக் கொடுவந்துவிட்டுநம்மைக்
கலங்கஅடித்ததடிமாதே
பருவமினிமேலென்ன ஏமனுக்குங்கூடப்பயப்
படவேண்டியதில்லையே தடையதொன்றுஞ்சொல்லாதே (இரு)

௩. மாலிங்கிதவார்த்தையுங் கடைக்கண்பார்வையுடனே
மந்தகாஸமுந்தான்மென்மேலே
ஆலிங்கனங்களாலும் ராஸக்கிரீடாசபையில்
அனேகமிரவைக்ஷணம்போலே
சாலவும்நீக்கினோமே யந்தக்கண்ணன்பிரிந்தாற்
சகிக்கக்கூடுமோடிநம்மாலே
ஜாலங்கள்செய்திப்படி நம்மையிவ்விரகவே
தனைக்குள்ளாக்கினார்நெஞ்சம் நினைக்குதேயொருக்காலே (இரு)

௪. பாங்கரானவிடையர் சூழமாலைநேரத்திற்
பசுக்களையோட்டிவரும்போது
தாங்கோதூளிகள்வந்து படியுமேயிவருடமீது
சாயக்கொண்டைமாலையின்மீது
வாங்காமல்வேணுகானஞ் செய்துங்கடைக்கண்பார்வை
மந்தநகையாலுந்தப்பாது
ஈங்குநம்மனங்களை யிழுக்குமவரைப்பிரிந்
தெப்படிப்பிழைப்பது செப்பவும்வகையேது (இரு)

இதுவுமது.

கலித்துறை,

மாலிந்தையுள்ள வனமாலிமீது மனத்தைவைத்துத்
தாவந்தமீறி விரகாக்கினியைச் சகிப்பதின்றி
ஓவிந்திடைச்சியர் வெட்கத்தைநீக்கி யுரோதனத்துங்
கோவிந்ததாமோ தரமாதவாவென்று கூவினரே.

இராமகிருஷ்ணர்கள் மதுரைக்கெழுந்தருளல்.

---

விருத்தம்.

மெல்லியலா ரிவ்வாறு யங்கனேகோ
விந்ததா மோதரமா தவனேயென்று
சொல்லியுரோ தனஞ்செய்தா ரதையெண்ணுமற்
றுதரா யக்குரூரர் தேர்நடத்தத்

துல்லியராம் பலசாலி ராமனோடுந்
தொடர்ந்துபரி க்ஷித்துமன்னு சொல்லக்கேளாய்
கல்லிசைகொண் டோட்டம்வைத்து முரலியின்கா
னஞ்செய்தார் மதுரைவிஜ யஞ்செய்தாரே.

தரு. இராகம்-உசானி, ஆதிதாளம்.

பல்லவி.

விஜயஞ்செய்தார் மதுரைக்கு
விஜயஞ்செய்தார்

அநுபல்லவி.

விஜயஞ்செயதார் விஜயகோபால ர்
விஜயஸாரதி விசையதாக் , வே (விஜ)

சரணங்கள்.

க. கொடியனுங்கஞ்சனுடகாரியங்க ள்
முடியவேயக குரூராசொல்லககேட்டு த்
தடமுலைககோவி மாரமனோரதங்க ட்
கிடமாஞ்சிங்காரத் தோட்டமாயிருக்கு ம்
எழிற்சஞ்சரி கஞ்சாரி
பழகக வாரி முராரி
பண்ணார்மொழிககோவி மாரகள்தவிபப தை
யெணணுதிரவி யுதையகாலததி லே
அணணனுடன்கூட நித்தியகர்மங்களை ப்
பணணிகொண்டுமங்கே யக்குரூராதேருரு ம
பாக ளுக மோக காகர ர
பச்சைநிறத் தச்சுதர்செக் கச்செவலைக் கைச்சரண ர் (விஜ)

உ. அந்தமுகுந்த ரொழுந்ததேரின்பின் னே
நநதனைமுதலாம் ஆயர்களெல்லோரு ஞ்
செந்தயிரொநெய்பாற் குடம்பலவுஞ்ச க
டந்தனிலேற்றிகொண டங்கனேபின்செல் ல
ஆணிப் பொன்னார் மின்னன்னார்
தோணிசசொன்னா முன்னன்னார்
தூயவராங்கோவி மார்களதன்ஜீ வ
நாயககிருஷ்ணா பிரிவைச்சகிககாம ல்
மாயன்றேரின்பின்னே சென்றவாசெங்க ளி
வாயனமலாச்சியைப பாாபபமென்றுநிற க
வாம பூம காம சேமனு ம்
மங்களவ லங்கிருத துங்ககர பங்கயனு ம் (விஜ)

௩. மடக்கொடிகோபி மார்வந்துநிற்பதை க்
கடைக்கண்ணாற்பார்த்தா ளாயாகிருஷ்ணஸா மி
இடைச்சிமாக்குச்சிற் றுணர்ந்தமாகிபபி ன்
னடப்பதையெண்ணித் தவிக்கின்றாரென்று ம்

ராஜ கோபர் ஸல்லாபர்
வாஸுதேவர் பிரதாபர்

மாதனையெல்லாஞ் சமாதானமாய்ச்சி ல
தூதனைக்கொண்டுநாம் வருகிறோமென்று ம்
ஆதரவாய்ச்சொல்லித் தேனைநடத்தினு ர்
ஸ்ரீதரராம ஸகோதரனுக்கங் கே

தேரக் குரூர ரூர நாரண ர்
திருப்பாற்கட லிருப்பகற்கொரு விருப்பாஅல்ல வெறுப்பாசொல்லு (விஜ)

ச. கொண்டல்வண்ணன்செல்லுந் தேரொந்தமட்டேக்குங்
கண்டுநடப்ப ததுவனைக்குமின்ன ம்
வண்டிக்காற்றூளி யெழுவததுவ ரை
ஒண்டொடியார்கண் ணிமையாடாமற்பார்த்து ம்

உலக நாதன் விநோதன்
ஜலஜபாதன் அபேதன்

தத்துவமாயரி யிடந்தங்கள்ம னோ
புத்திகளசெல்லச் சரீரமசைவின்றி ச்
சித்திரம்போலவே கோபிமார்நிற்க வி
சித்திரக்கிருஷ்ணனந்தச் சிங்காரத்தேனை ச்

செல்லச் சொல்லி யெல்லாம் வல்லவர்
சிக்கவெண்ணெ யைக்களவி டக்கருது சக்கரபா ணி (விஜ)

ரு. கண்ணன்றேர்நடந்த பின்பந்தக்கோவிமா ர்
எண்ணியக்கோவிந்தர் முன்னேஸமாதான ம்
பண்ணினதாற்றங்கள் வீட்டிற்றிரும்பவு ம்
நண்ணிக்கொண்டாசையுடன் சோகந்தீர்ந்திட் ட

நாத பிராண கல்யாண
வேதபுராண நாரணர்

வேடிக்கையாந்திரு விளையாட்டுகளை ப்
பாடிக்கொண்டுநாட் களைத்தள்ளினாராய ர்
பாடிக்கோவிமார்கள் பாக்கியத்தையென்னென் று
நாடிச்சொல்வேனென்ற னையாபரிக்ஷித் து

ராஜ வாச வாச ரோஜமி ன்
ஞான்பும ஞான்கிருபை யாளன்கதிர் நீளம்பர ன் (விஜ)

## அக்குரூரர் காளிந்திநதியில் நீராடல்.

---

### கலித்துறை.

விருப்பலவென்று தள்ளாமலும்நெஞ்சில் விருப்பமின்றி
யிருப்பரவனை யறிவோருலகி லெவர்கள்மன்னு
ஒருப்படுமன்பரக் குரூரர்மகிழ்ச்சி யுடனிரதந்
திருப்பலனேடுமக் கண்ணனுக்காகச் செலுத்தினரே.

திபதை, இராகம்-ஸவுராஷ்ட்ரம், ஏகதாளம்.

கண்ணிகள்.

| | | | |
|---|---|---|---|
| ௧. | அக்குரூரரும்வாயுவேகமா யந்தரதங் | கடத்த | அங்கே |
| | செக்கச்செந்தாமரைக்கண்ணனுஞ் சேஷ்டருட | னடத்த | * |
| ௨. | எந்தவினைகளையுந்தீர்க்கும் எமுநாநதி | நலத்தே | சேர்ந்து |
| | இந்திரநீலமணிபோலவே யிருக்குமந்தச் | சலத்தே | * |
| ௩. | எதிரேகண்டுரதந்தீரத்தி லிறங்கியதைத் | தூவிக் | கொண்டும் |
| | எதுநாயகராசமன மிசைந்துசெய்ய | மேவி | * |
| ௪. | காளிந்திநீர்பருகியந்தக் கரையோரத்தி | லிருக்கும் | நிழல் |
| | நீளுஞ்சோலைமீதேதேரை நிறுத்தியன்பு | பெருக்கும் | * |
| ௫. | ராமகிருஷ்ணரிருவரையும் ரதத்தின்மீது | வைத்துப் | போட்டு |
| | மாமகிமைக்காளிந்தியின் மடுவில்மகிழ் | வுற்று | * |
| ௬. | பாங்காகஅக்குரூரர்முறைப் படியங்கே நீ | ராடி | யவர் |
| | ஈங்கேராமகிருஷ்ணரிடம் இதையஞ்செல்லக் | கூடி | * |
| ௭. | இங்கேசத்துருக்கள்வந்து மெங்கேநேர்கின் | றாரோ | வென்னுஞ் |
| | சங்கைகொண்டுமக்குரூரருந் தாமாடினார் | நீரோ | * |
| ௮. | வேந்தேயந்தஜலத்துக்குள்ளே வேதமந்திரத்தி | யானஞ் | செய்தார் |
| | ஆய்ந்தகல்வியக்குரூரர்க்கு மாரையாஸ | மானம் | * |
| ௯. | தியானஞ்செய்துமிருந்தார்மடுத் தெண்ணீரிலவ் | வேளை | யங்கே |
| | தானபதியக்குரூரருந் தாம்ராமகிருஷ் | ணரை | * |
| ௧௦. | காவலனேகண்டாரையா கண்களுக்கு | நேரே | வசு |
| | தேவர்மைந்தர்கள்தாமேயங்கே தேரிலிருந் | தாரே | * |
| ௧௧. | இங்குவந்ததற்கென்னகாரண மென்றேகரை | மேலே | யேறி |
| | எங்கேயென்றுபார்க்கும்போதும் எப்போதையும் | போலே | * |
| ௧௨. | விஜயராமகிருஷ்ணர்தேரில் வீற்றிருக்கக் | கண்டார் | பின்னுந் |
| | திசைப்பூண்டுமிதித்தாற்போலே தியக்கமங்கே | கொண்டார் | * |
| ௧௩. | கண்டோமுன்னேமடுவுக்குள்ளே கண்டதது | பொய்யா | அங்கே |
| | உண்டோபலமுளபாலர்கள் ஊணியுரை | செய்ய | * |
| ௧௪. | இவர்தாந்தேரிலிருக்கின்றாரோ யின்னமிந்த | மடுவிற் | பார்ப்போம் |
| | அவராரொன்றுமறிவோமென்றும் அந்தச்சல | நடுவில் | * |
| ௧௫. | நீராடித்தியானஞ்செய்யும் நேரமங்கே | தானே | நல்ல |
| | சீராய்விசுவரூபந் தரிசித்தல்சொல்லு | வேனே | * |

## கண்ணன் அக்குரூருக்கு விசுவரூபதரிசனங் காண்பிவித்தல்.

---

விருத்தம்.

தவமுனிவருமறி யவரியபொருளது சவுரியினுருவமதே
அவனைமதுரைசெல யவிரதம்விடுவ ரவர்மனையெனசொல்வேன்

பவவினையகலவை பவபரமபதசு பவனுபவமிதெனவே
துவரிதழுரியரு ளுவரொமுனையினில்வி சுவரூபதரிசனமே.

தரு, இராகம்-கேதாரிகௌவுளை, மிச்சிரதாளம்.

பல்லவி.

விசுவரூபங்காண்பித்தார் அக்ருரர்க்கு — ஸாமி
விஷ்ணுபரமபுருஷகிருஷ்ணன் கிருஷ்ணமேவில் நேமி.

அநுபல்லவி.

விசுவரூபத்தியூனிகட்கு வினைதவிருந்தப் — பாதே
அசுராநாகாஸித்தபுருஷ ரடிபணிபணி — மீதே (விசுவ)

சரணங்கள்.

க. ஆயிரந்தலையாயிரம்பட மதன்கிரீடங்க — ளாலே
தூயஜோதியாய்நீலவாடையுஞ் சுற்றிக்கொண்டொருக் — காலே
ஆயிரங்கொடுமுடியுள்ளகயி லாஸமலை — போலே
ஆயும்வெளளைவண்ணரான ஆதிசேஷன் — மேலே (விசுவ)

உ. நீலமேகவண்ணராகிய பீதாம்பர — தாரி
நாலுதிருக்கையுள்ளசாந்த மூர்த்திகிருபை — வாரி
கோலமிகுசெந்தாமரைமலர் போலுங்கண்ணன்மு — ராரி
மாலுமவரோபிரஸன்னதிருமுக மண்டலமுங்கொண்டா — ரி (விசுவ)

௩. மந்தகாஸங்கடைக்கண்பார்வை சிங்காணிவிற் — புருவம்
அந்தமாகவுயாநதமூசகும் அதைநிகரொதின் — பருவஞ்
சுந்தரத்திருச்செவிகளுங் கபோலங்கணுமடிச் — சொருவம்
இந்தவங்கையுஞ்செவந்ததர முடனின்னஞ்சொல்லி — வருவம் (விசுவ)

ச. புயமலைகளும்முயாந்ததோள்களும் ஆஜானுபாகு — துங்கஞ்
ஜயலக்ஷ்மிவாஸமாபுஙகாதரந திருவலம்புரிச் — சங்கம்
நயதிருவுநதிசசுழறசுழியை நானென்செய்வேன்பிர — ஸங்கஞ்
சுயவரைமூன்றுகூடும்அரசந் தளிருதரங் — சங்கம் (விசுவ)

ரு. பெருத்தபின்றட்டுமெதயானைத்துதிக் கைத்தொடைமுழங்கா — லுந்
திருத்தமானசெணடைக்காலுடன் உயர்ந்திடுகணைக — காலும்
விரத்திமன்னனேசெவந்திருககிற நகம்பிரபைதா — மேலும்
விரல்களுடனேகூடும்பாதார விந்தராய்த்திரு — மாலும் (விசுவ)

௬. உத்தமமானரத்தினமிழைத்த கிரீடங்தோள்வளை — மின்ன
அஸ்தகடையமஅரைஞாணபொன்னூல் முத்தாரமு — மின்ன
சுத்தவயிரகுண்டலமபாதச் சிலம்புமுதலாய்ச் — சொன்ன
சித்திரஆரங்களும்பிரகாசிககத் திருவைகுண்டபதிபிர — ஸன்ன (விசுவ)

எ. சங்கசக்கரகதைமுதலாகத் தரித்தகரார — விந்த
புங்கமானகவுஸ்துபமணி திருமறுமாரப — ணிந்த
மஙகளவனமாலிகாபர ணராய்த்திருவை — குந்த
பங்கஜாக்ஷரவரோபரம பதத்திலிருககும்படியே — யந்த (விசுவ)

அ. நந்தஸநந்தர்ஸநகஸநந்தர் இந்திராதி — தேவர்
அந்தணாஉருத்திரர்மரீசி யாதிரிஷிக — ளாவர்

மூன்றும்பாகவதர்பிரகலாதர் நாரதர்வசு மூவர்
எந்தன்ஸ்வாமிபரப்பிர்ம்மபரந் தெய்வமென்னும்வானவ- தேவர் (விசுவ)

௯. செந்திருபூமிநீளையும்ஹரி செந்தாள்வருடித்தி யானம்
வந்தனஞ்செயவாணிகாந்தி சந்தோஷம்புகழ் ஞானஞ்
சுந்தரமுள்ளசக்திதான னந்தம்பேரும்வி தானம்
மூன்றுமாயையுஞ்சேவிக்கவீற்றிருந்தும் பரமபதநி தானம் (விசுவ)

அக்குரூரர் கண்ணனைத் துதித்தல்.

விருத்தம்.

ஆதிசேஷன்மீதில் விராட்டுரூப
மானபக வனையக்கு ரூரர்கண்டு
மாதிறமாம் அன்பர்புளகாங்கராகி
மனங்களித்தா னந்தக்கண் ணீர்சொரிந்தும்
ஓதுகண்ட மெழும்பாமற் குளறுகின்ற
உரையர்தயி ரியங்கொண்டு பலதண்டஞ்செய்
போதிலஞ் சலிக்கைகொண்டு துதிக்குஞ்சொல்லின்
பொருளைப்பார் கண்ணனுடை யருளைப்பாரே.

௩௯-ம் அத்தியாயம் முற்றும்.
கண்ணன் திருவடிகளே சரணம்.

---

## ௪௦-ம் அத்தியாயம்.

அவதாரிகை.

விருத்தம்.

இந்தநாற் பதிலக்கு ரூரர்தாமே
யெதுபதியை யீசுவரோ சுவரராயெண்ணி
வந்தனைகள் பலசெய்தும் ஹரியையங்கே
வருசகல நிஷ்களராய்த் துதித்தமார்க்கஞ்
சுந்தரராஞ் சுகமுனிவர் பரிக்ஷித்துக்கே
சொன்னவகை ஸ்ரீதரர்தன் னுரையைக்கொண்டே
செந்தமிழ்க்கீர்த் தனைகளுடன் பாவினங்கள்
சேர்வதா மிதைப்படிப்ப தேர்வதாமே.

அக்குரூர் கண்ணனைப் பரப்பிர்மமாகக்கண்டு துதித்தல்.

தரு, இராகம்-ஆனந்தபைரவி, ஆதிதாளம்.

பல்லவி.

ஸ்வாமிகிருஷ்ணவுன்றன் றிருவடித்தாமரைக்கு த்
தொண்டன்றெண்டனை யா.

அநுபல்லவி.

பூமியிலுமக்குநான் சிறியதந்தையென்று
பொருட்டாய்வைத்திந்தமாயை யிருட்டால்மறைத்துநின்ற (ஸ்வாமி)

சரணங்கள்.

க. அகிலலோகங்களையும் படைக்குங்காரணங்கட்கு ம்
ஆதிகாரணர்தேவ ரீரே
மகிமைநாராயண ராதிபரம்புரு ஷ
மாதவாவழிவில்லா தாரோ
விகிதமாயுமமுடைய திருவுந்திக்கமலத்தி ல்
விளங்கும்பிர்மருண்டாகி னோ
திகிரிக்கையானேயந்தப் பிரமரிவ்வுலகங்க ள்
சேரவுந்தானுண்டாக்கி னோ (ஸ்வாமி)

உ. பிரதிவிஅப்புதேயு வாயுவாகாசமென்னு ம்
பெரிதானபஞ்சபூதா காரம்
வருகர்மேந்திரியங்கள் ஞானேந்திரியங்களு ம்
மனம்புத்திசித்தமகங் காரம்
வரிசையாந்தத்துவங்கள் தேவர்களுமெம்பெ ரு
மானேயும்முடையச ரீரம்
இருடீகேசனேயுன்றன் மாயையினலேயுண் டா
யிருப்பதிதுகளெல்லாந் திருப்பாவையதி காரம் (ஸ்வாமி)

௩. ஒருவனிடத்திற்பிறந் திருக்குமுன்மாயையா லே
உலகமுண்டாக்கினதெப் படியா
கருணாகரனேயுன்றன் மாயைநிஜந்தானதை க்
காணஒருவருக்கும் முடியா
பிரமாதிதேவருமுன் மாயாபந்தத்துக்குள்ளாய் ப்
பிரித்துஞ்சொரூபமின்ன படியா
யிருக்குதென்றறியாமல் மயங்கியலைகின்ற ரே
யெவர்தானறிவாரையா புவனநாத நெடியா (ஸ்வாமி)

ச. வேதன்முதற்றேவர்க ளவரவரொவ்வொ ரு
விதமானதரிசனங் கண்டுஞ்
சோதியுன்முக்குணத்தின் மாயையுடனேசேர்ந் த
சொரூபந்தனையறிந்து கொண்டும்
ஈதேநிச்சயமென்றுந் துதித்துத்தியானிக்கின்ற ர்
இதுவல்லாமல்மற்றென்ன வுண்டு
ஆதலால்நிஜரூபம் பிர்மாதிகள்கூடவு ம்
அறியவில்லையேமூட ரறிவுக்கெப்படி யுண்டும் (ஸ்வாமி)

ரு. ஆதிபுருஷனென்றும் ஆத்மஸ்வரூபமென்று ம்
ஆதிதெய்வமாதி பூதம்
நீதிசகலலோக ஸாக்ஷியீசராயெங்கு ம்
நிறைந்திருப்பதுவேபிரக்கி யாதம்
சோதில்வேதஸ்வரூபம இந்திரவருணவா யு
குபேரனென்றிடுநாம பேதம்
ஓதும்யோகியர்நல்லோர் பிரமாதிதேவர்ம றை
யோர்களுந்தியானஞ்செய்கு வாருன்றன்செம்பொற்பாதம் (ஸ்வாமி)

௪. ஞானிகள்கர்மமெல்லாந் தவிர்ந்துசாந்தியடைந் து
ஞானநிஷ்டையைத்தானே பொருந்தி
ஞானமூர்த்தியென்றும்மைத் தியானிக்கின்றார்கள்பாஞ் ச
ராத்திராகமத்தினில் வருந்தி
ஆனவாசதேவப்பிரத் தியும்மனசங்கருஷ ண
அனிருத்தனென்றும்மைத் திருந்தி
தானேபூஜிக்கின்றார்கள் குருபரம்பரையா லே
சகலவைணவரும் புகழ்கதாமு தருந்தி (ஸ்வாமி)

௫. அவனிதனிலேயின்னம் பாசுபதமுதற் சை
வாகமவிதிகளைத் தொடுத்து
அவரவர்களுமொரு குருபரம்பரையிலு ல்
அனேகசிவமூர்த்தியென் றெடுத்து
சிவரூபராயிருக்கு மும்மைப்பூஜிப்பார்சை வ
தீக்ஷாபரருமன்பா யடுத்து
தவறுதின்னமவெவ்வேறு தேவபக்தர்களென்பா ர்
சருவதேவமயர்நீர் உறுதியதுகொடுத் து (ஸ்வாமி)

இ து வு ம து.

விருத்தம்.

உலகிலொரு வந்சொருவர் வாதுபேசி
யுன்றெய்வ மென்றெய்வ மென்றுகொண்டு
கலகமிகுந திடுபேதங் களையெல்லாம்நீ
கண்டிருந்தும் பூஜிப்ப தெனையேயென்றுஞ்
சொலுவதெந்த விதமென்றால் வாசுதேவ
சுந்தரா கிருபாநிதியே நெடியமாலே
ஜலஜலோ சனஅனந்த சயனசித்தாங்
தங்கேளீ ரடியன்விண்ணப பங்கேளீரோ.

தரு, இராகம்-பைரவி, ஆதிதாளம்.

ப ல் ல வி.

மனதுபேதமல்லால் வஸ்துபேதமில் லே
வாசுதேவனாவ தேவமய னே.

அ நு ப ல் ல வி.

நினைவிலாராரொந்தவிதம் நினைத்துப்பூஜித்திட்டாலும்
நினதிடம்வந்துசேரும் நிலவரமிது மேலும (மனது)

ச ர ண ங் க ள்.

௧. மலையருவிபெருகி மழைவருஷிக்க நீடும்
மண்டலத்திலனேக நதிகளாகவே யோடும்
அலைகடற்சேர்வதுபோ லெந்ததெய்வத்தை நாடும்
ஆராராராதனைசெய் தாலுமும்மிடங் கூடும் (மனது)

௨. எந்தத்தெய்வரூபமா யெவரெவர்தியானித் தாலும்
யாகங்கள்பூஜைகளை யெப்படிச்செய்திட் டாலும்

அந்தவகைளெல்லா மும்மையடைவ　　தாலும்
ஹரிநின்னையன்றியனு வசையாதுநீரோ　　மாலும் (மனது)

௩. பரமபுருஷாவுன்றன் மாயைக்குள்ளாய்மென்　　மேலே
பரவுஞ்சாத்துவிக ராஜஸதாமஸங்க　　ளாலே
பிரமன்முதற்சரா சரங்களுமொருக்　　காலே
பிறந்திறந்தலைந்தும்மைச் சேருமென்திரு　　மாலே (மனது)

௪. சாமியும்மைத்தவிர வேறில்லையையா　　நீரோ
ஸர்வதேவமயூரொன் றுலென்னசொல்லு　　வீரோ
நாமுமந்தமாயாபந் தத்தொருவனென்　　பீரோ
நமதிடத்தில்விசேஷ மென்னவென்றிடு　　வீரே (மனது)

௫. சகலசராசரத்தின் னடத்தைநீர்காணுங்　　காக்ஷி
ஸர்வஜீவரூபர்நீர் சகலபுத்திக்குஞ்　　சாக்ஷி
சகலதேவமானிட மிருகாதியிட　　மாக்ஷி
தருமுன்மாயாகுணப் பிரவாகம்பரவுஞ்　　சூக்ஷி (மனது)

௬. ஆதலால்நீரோமகா னென்னும்விசேஷங்　　கண்டேன்
அப்படிக்கொத்தவுன்றன் பாதமென்றலைக்கொண்டேன்
மாதவாநின்னையல்லால் வஸ்துவேறென்ப　　தண்டேன்
வனமாலியுன்றன்கதா முதத்தைச்செவியா　　லுண்டேன் (மனது)

இ து வு ம து.

வெண்பா.

நத்தந் திகிரியொடு நந்தகமும் விற்றண்டம்
வைத்தமலர்க் கையா மணிவண்ணா—பத்த
சனமான தத்திலுறை சாமீ யுலகம்
வனமாலி யுன்றனுரு வம்.

தரு, இராகம்-அடாணா, மிச்சிரதாளம்.

ப ல் ல வி.

ஹரிஹரியுன்றன்சொரூப மூலகமே　மாதவனேகரு
ணும்புதியேநல்லெதுகுல　திலகமே

அ நு ப ல் ல வி.

அருளாளனேவை குந்தபுரத்தனே
இருடீகேசனே சங்கக　கரத்தனே
கருடவாகனீ யட்டக் கரத்தனே
வரஸரோருக நன்னேத் திரத்தனே　　(ஹரி)

ச ர ண ங் க ள்.

௧. தேவரீருட திருமுக　　மண்டலம்　　அங்கிபதித
பாவனவுன்றன் றிருவடிபூ　　மண்டலந்
தேவதேவாகண் சூரியப்பிர　　காசம்
பூவுந்திச்சுழி யதுவேயா　　காசம்
கோவிந்தாதிருச் செவிகளுல்　　லாஸம்
மேவுபாதாளந் திக்குவி　　லாஸம்　　(ஹரி)

உ. கேசவாவுன்றன் சிரசுசுவர்க்க லோகங் கைகளென்பது
வாசவன்முத லானதேவர்கள் யோகம் *

வாசுதேவவு தரம்பயோ ததி
பேசுபிராண பலன்வாயு ரீதி
தேசுடம்பு மயிர்கள்மரச் சாதி
மாசிலாமணி மாலேபரஞ் சோதி (ஹரி)

௩. தலைமயிர்களே மேகங்களென்று விளம்புந் திருமணாளனே
மலைகளென்பது நகங்களோடு மெலும்பும் *

அலும்பகலுநின் னிமைக்கொட்டல் சாமி
சொலுமநுமுத லானவரு நேமி
வலவனேயுன்ற னுன்குறிதான் பூமி
நிலமணவாள நீளாதேவி காமி (ஹரி)

௪. வள்ளலேமழைக ளென்பதுமுன்வீரி யங்கள் இனம்பிரபஞ்சத்தில்
உள்ளதெல்லாஞ்சாமியும்முடையசொரூபங்கள் *

உள்ளபடிக்கிந்தப் பிரபஞ்சவி காரம்
எள்ளளவுமுமக் குண்டோஅகங் காரம்
தெள்ளியதேவரீ ரேயகண்டா காரம்
வெள்ளைநீலவண்ண னுனீர்நிரா காரம் (ஹரி)

ரு. ஜீவகோடிகளுடன் கூடியவுல கங்களும் அதுகளையெல்லாங்
காவல்புரிகின்ற வுலகபாலர்ஸமு கங்களுந் *

தேவரீரிடத் துண்டானது நாரண
கோவிந்தஆதி யந்தமில்லாப் பூரண
தேவாதிதேவ ஜயஜகத் காரண
பூவுந்திமார்ப புராணால் லாரண (ஹரி)

௬. அத்திப்பழத்தில் மசகமுயிர்ப்பது போலே ஜலஜந்துக்கள்ஜ
லத்திலுண்டாய்ச்சஞ் சரிக்குமதுகளைப்போலே *

கர்த்தனேயனேக கோடிபிர்மாண் டங்க
ளுத்தமருமிடத் துண்டாகிவி ளங்க
வைத்ததிஷ்டாந்த மிதுவேபிர சங்க
நித்தியானந்தனே திருவுக்கந்த ரங்க (ஹரி)

இ து வு ம து.

விருத்தம்.

அற்புதமிப் படிக்கொத்த வுமதுரூபம்
அறியக்கூ டாமையினல் லல்லோரெல்லாங்
கற்பனையாய்த் தேவரீ ரவதாரத்தின்
கதாமுதத்தைப் பருகிரு ரயமுகுந்த
பற்பலவாம் விளையாட்டி னிமித்தமாகப்
பரிந்தெந்த ரூபமதை யெடுக்கின்றீரோ
சொற்பொருளின் சுவைபெறவே பெரியோரெல்லாந்
துதிக்கின்று ருன்கீர்த்தி பதிக்கின்றுரோ.

தரு, இராகம்-சுருட்டி, ஜம்பைதாளம்.
பல்லவி.
முகுந்தனே ஹரிவரத மூர்த்தியேயுன் சரணம்
மூலப்பொருளேயுன் சரணம்.
அநுபல்லவி.
மிகுந்தபூபாரந்தவிர்க்க மகிழ்ந்துதேவர்களுந் துதிக்க
விதுகுலசூடாமணியா யெதுகுலத்திலவ தரித்த (முகு)

சரணங்கள்.
௧. மகத்தானபிரளயமாஞ் சமுத்திரத்திற்சஞ்சரிக்கு ம்
மச்ஸியாவதாரரான வுமக்குச் சரணம்
அகிருத்தியங்கள்செய்தய து கயிடவனைச்சங்கரித் த
அயக்கிரீவமூர்த்தியான வுமக்குச் சரணங்
குகைமிகுந்தமந்தரமாம பருவதத்தைத்தாங்கிநின் ற
கூர்மாவதாரரான வுமக்குச் சரணந்
தொகுத்துமுன்னைசமுத்திரத்தி னின்றும்பூமியையுயர த்
தூக்கியவராகரூப ஸ்வாமி சரணம் பால (முகு)

௨. நல்லவர்கள்பயந்தீர்த்து ஹிரண்யகசிபனைவதைத் த
நரசிங்கமூர்த்தியான வுமக்குச் சரணம்
வல்லவரோமூவுலகு மளக்கவவதரித்துவந் த
வாமனவதாரரான வுமக்குச் சரணம்
பல்லவராய்க்கருவமிகும க்ஷத்திரியவனமழித் த
பரசுராமமூர்த்தியான வுமக்குச் சரணம்
எல்லவர்க்குங்கண்டகனு மிலங்கைராக்ஷதனு ன
இராவணனைவென்றரகு ராமா சரணம் பால(முகு)

௩. பரவாஸுதேவர்நீரே சங்கருஷணருமாகி ப்
பலராமமூர்த்தியான வுமக்குச் சரணந்
தரணிதனிற்பிரத்தியுமன அனிருத்தரூபரா ன
சகலலோகநாயகரா யுமக்குச் சரணம்
பரவுமசுரனைமோகஞ் செய்யவவதரிக்குஞ்சுத்த ப்
பவுத்தாவதாரரான வுமக்குச் சரணங்
கரவடமிலேச்சநெறி மன்னவனைச்சங்கரிக்கு ங்
கற்கிரூபராகிவரு முமக்குச் சரணம் பால(முகு)

இதுவுமது.
கலித்துறை.
உவமானந்தன்னோ டுபமேயமானது மொன்றுமில்லா
தவனிதநியானந்தன் பூபாரந்தீர்க்க வவதரித்தான்
இவனென்றறிந்தக் குரூரருமிப்படி யேதுதித்துப்
பவபந்தம்நீங்கும் படிகடைப்பிரார்த்தனை பண்ணுவரோ.

தரு, இராகம்-பந்துவராளி, ஆதிதாளம்.
பல்லவி.
அகண்டபரிபூரணராய் நிறைந்திருக்குமும்மைநான்
அறியவில்லையேகிருஷ்ண ஸ்வாமி

அநுபல்லவி.

விதண்டாவாதக்காரரைக் கூடியுலை கின்றேனே
மெய்யானவும்மைவிட்டுப் பொய்யிலலை கின்றேனே (அக)

சரணங்கள்.

க. தேகமேநானென்றும் பெண்டுபிள்ளைகள்வீ டு
திரவியம்பந்துக்களை யென தென்றும்
மோகங்கொண்டுகனவு போலாமிதுகளை யே
மூடனுகியநானும் நிலை யென்றுஞ்
சோகந்தருமனித்திய மானகர்மபவத்தைத்
தொடுத்துமிதுவேநித்திய மென்றும்
ராகத்துவேஷங்களினுல் மயங்கியலைகின்றே னே
ஞானனந்தமூர்த்தியே நயனநளின வென்றும் (அக)

உ. மிக்கஅனுத்மாவாக விருக்குந்தேகாதிக ளை
விளங்குமாத்மாவென் றெண்ணம் நாடித்
துக்கரூபங்களான கிரகதாரக்ஷேத்திரங்களைச்
சுகமென்றுவிபரீதம் நீடிச்
சிக்கிக்கொண்டிந்தவகை சுகதுக்கமென்றுசொல்லு ஞ்
சிங்காரத்தோப்பில் விளை யாடி
அச்ஞியானவிருள்மூடி யாத்மாவுக்குப்பிரிய ம்
ஆகவிருக்குமும்மை யறியவில்லையே தேடி (அக)

௩. அறிந்தஜலத்தைவிட்டுப் பசுவானதுபுல்லுக் க
ளால்மூடியிருக்குஞ்சா ணலையே
நிறைந்தஜலமென்றோடு மதுபோலேபிரபஞ்சத் தை
நிஜமென்றலையு மென்ற னிலையே
உறைந்துமாயையினுலே மறைத்துக்கொண்டிருக்கின் ற
உம்மைநானறியவு மிலையே
நறுந்திருத்துழாய்மாலை யணியும்மார்பனேஹ ரி
நாராயணனேஜகந் நாதஅருள் மலையே (அக)

இதுவுமது.

விருத்தம்.

விடையவாதனையுடன் கூடுமனதுள்ளயான் மிருகாமகர்ம்மங்களால்
மெலிவுற்றுமிவ்விஷய மேற்சென்றுமிந்திரிய விவரங்களுடனேகூடித்
தடைபடாமனதினைக் கட்டுதற்கெவளவுஞ் சத்தியிலையடியனுக்கே
தகுமிந்தவகைவிஷய வாதனையுடன்சேர்ந்து தான்சுழலுகின்றயானே
மடமைசேர்பொல்லாத மூடாக்குலபியாத மகிமைசேர்தேவரீர்தன்
மலரடித்தாமரை யடைந்தவனுமாகினேன் வருமதைப்பார்க்குமளவிற்
றிடமானதேவரீ ரனுக்கிரகமின்றியே செயபவேறில்லையென்று
சிந்திக்கிறேனும்மை வந்திக்கிறேனன்பர் சிந்தைக்குளானமணியே.

இதுவுமது.

விருத்தம்.

வருகலவுபாஸனையி னுலுயிர்க்குச்சனன மரணங்களென்றபந்தம்
வரையறத்தீர்ந்துமது கிருபையால்மோக்ஷமது வருவதுனிடதநிலையா

டைசெய்வதொன்றதுவு மப்படியிருக்கயா தொருவுபாசனையுமின்றி
உம்முடையபாதங்கி டைத்ததடியேற்கதுவு மும்மதனுக்கிரகமாமே
பரவுஞானனந்த மூர்த்தியாயெங்கினும் பரிபூர்ணமாய்நிறைந்த
பரப்பிரம்மரூபமே ஞானகாரணனுநீர் பரவுசுகதுக்கங்களைத்
தருகாலகர்ம்மச் சுபாவங்களென்பதுஞ் சாமிநீருண்டாக்கினீர்
சத்திகளனந்தமுள நித்தனேகர்த்தனே சரணமையாசரணமே.

இ து வு ம து.

விருத்தம்.

ஸ்ரீதரனே யாவருடை யிதையமீதுஞ்
சிறந்திருக்கும் பரவாஸு தேவனீயே
ஆதார மாய்ச்சகல பூதங்கட்கும்
அனையவிந்தி ரியங்களேயே யேவுகின்ற
நீதானே யிருடிகே சனுமாய்நின்றாய்
நிலைசங்க ருஷணப்பிரத்தி யும்மனனென்றுந்
தாதாவே யனிருத்த ரூபனேவந்
தனமையா யிரக்ஷிக்குங் கனமெய்யாவே.

சo-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன்திருவடிகளேசரணம்.

---

சஙு-ம் அத்தியாயம்.

அவதாரிகை.

விருத்தம்.

அண்ணனும்பல ராமர்கூடவு மாயர்சூழவும் நந்தரோ
டச்சுதன்மது ராபுரிக்கோ ரலங்கிருதங்கொள மேவியே
கண்ணனங்கொரு துஷ்டனானவே காலியாகும்வ ணன்றலைக்
காயினைத்தளி வாயகர்க்குயர் கருணைசெய்துவ ரங்கொடுத்
தெண்ணிலாமலர் மாலைகட்டியெ னுஞ்சுதாமனி டத்திலே
யிசைவரங்கள் கொடுத்ததாலுமி ராஜகஞ்சனே டங்குள
அண்ணலாகிய அக்குரூரனா யகமகிழ்ந்தன னென்பதும்
அன்பதுக்குரு மொன்பதின்றிய வத்தியாயமி தறையுமே.

அக்குரூரர் அதிசயமுற்றுவந்ததைக் கண்ணன்

யாதென்றுவினவ அவருரைத்தல்.

திபதை, இராகம்-அடாணு, மிச்சிர தாளம்.

கண்ணிகள்.

க. தனதுமனையைப் பார்க்கவென் று
தயவுமிகுந் திருந்த அந்தப்
பனகசயன பகவான்சக ல
பாக்கியங்களு நிறைந்த *

௨. ராஜதானி யாகியம து
ராபுரியலங் கார மதை
வாசுதேவ கிருஷ்ணன்காணு ம்
மகிமையடைந்த தே. *

௩. அறியுமிவ்வகை துதித்துவந்தன ம்
அக்ரூருஞ் செய்ய நல்ல
வெறிமலர்சூழ மெமுனைமடுவி ல்
விசுவரூபத்தை யைய *

௪. மாயனிப்படிக் காட்டித்திரும் ப
மறைத்துமெப்போதும் போலே வேறு
காயகரான கண்ணனை வே
காண்பிவித்தனர் மாலே *

௫. வேஷம்போட்டு மாடித்திரும் ப
வேஷங்களையுங் கலைத்து வரும்
வேஷதாரிபோலவே நீ ல
மேனிக்கண்ணனாய் நிலைத்து *

௬. இருக்கவுங்கண்டு மந்தஅக்ரூர ர்
எமுனைமடுவுக் குள்ளே காட்டிச்
சுருக்கும்பகவான் சொரூபத்தைக்கண் டு
தொடர்ந்ததைமனங் கொள்ளே *

௭. எமுனைமடுவி னின்றுகரை மே
லேறிசித்திய கருமங் களைச்
சமரஸஞானி யக்ரூரரு ந்
தான்செய்தார்கேளு மருமம் *

௮. மந்தகாஸத் துடனேவந் து
மாலிருக்கின்ற ரதத்தில் ஏற
அந்தவேளையில் ரிஷிகேசன்சொல்வா ர்
ஆச்சரியமெய் விதத்தில் *

௯. கண்டிங்கேநகை கொண்டுமேவி ய
காரணமென்ன ஆனும் அதை
விண்டுரைசெய்யு மக்ரூராவென்றே ல்
வினவலாச்சுது காணும *

௧௦. பூமியாகாச ஜலநதிலேயென் ன
புதுமைகண்டீர் மகானே சொல்ல
லாமேயற்புதங் கண்டதாயும் மை
யக்ரூராபார்க்கின் றேனே *

௧௧. எனவுமிப்படி வினவுஞ்சாமிக் கு
இயம்புவார்பூமி வானஞ் சலந்
தனிலேயற்புத மெவ்வளவுண் டோ
தானதெல்லாமுமி தானம் *

கஉ. சகலவுலகும்நிறைந் திருக்கின் ற
சாமியும்முடை யிடத்திற் றுனே
அகிலவற்புதங் களையுங்கண்டிடு ம்
அடியேற்கின்னமோ ரிடத்தில் *

கங. இன்னமற்புதங் காணவேண்டி ய
தென்னவிருப்ப தையா யிப்போ
சொன்னவற்புத மெல்லாங்கண்டே னே
ஸ்வாமியும்முட மெய்யா *

கச. மடுவைவிட்டும திடத்தூக்கிங்க னே
வருமுன்னேநகை காட்டிக் கொண்டு
அடியேன்வந்தாற் பூமிஜலத் தோ
டாகாசத்தையுஞ் சூட்டி *

கரு. ஆச்சரியங்க ளைதைக்கண்டதென் றும்
ஆக்ஷேபித்திரோ ஸாமி திரு
மாச்சக்கரக்கை போனேகாயாம் பூ
வண்ணனேஜலம் பூமி *

கசு. ஆகாசத்திலே யெவ்வளவுண் டோ
அற்புதங்களவ் வளவும் அருள்
மாகாளமுகி லுன்னிடங்கண் ட
வகைக்குமேலென்ன வுளவும் *

கஎ. இருப்பதும்பிர்ம்ம ஸ்வரூபரோஸா மி
யிருடிகேசனென் றிதத்தைச் சொல்லி
விருப்பமாயக்ரூ காந்தினிசுத ர்
விளம்பியேயின்றும் ரதத்தை *

கஅ. நடத்திவந்தந்தச் சாயங்காலத்தி ல்
ராமகிருஷ்ணனை மதுரா புரி
யிடத்தைநாடிக்கொண் டவர்வந்தானை யா
இனஞ்சொல்வேன்ஞான சதுரா *

கண்ணனைத்தரிசித்த ஜனங்கள் வியப்படைதல்.

---

விருத்தம்.

மதுரைக்குப் பவனிகொண்டு கண்ணன்செல்லும்
மார்க்கத்தூர் களிலுள்ள ஜனங்களெல்லாம்
எதிருற்றுக் கும்பல்கும்ப லாகக்கூடி
யிராமகிருஷ்ணர் களைப்பார்த்தா னந்தமான
ததிகத்தா லவர்கள்மேல் வைத்தகண்க
ளதனையே மாறாமற் பார்த்தார்ஞான
சதுரர்க்குள் முதலெண்ணும் படியதான
தார்வேந்தா பாகவதம் பார்வேந்தாவே.

## அக்குரூரருக்குக் கண்ணன் விடைதரல்.

### விருத்தம்.

ராமகிருஷ்ண ரக்குரூர ருடன்பின்செல்ல
நந்தகோ பனாமுதலா மாயரெல்லாந்
தாமதுரா பட்டணத்தைக் குறுகிவந்து
சமீபத்தி லிருக்குஞ்சிங் காரத்தோட்டம்
மாமகிமை யுடன்சேர்ந்து கண்ணனண்ணன்
வரும்வழிபார்த் திருக்கக்கண் டங்குசெல்லுந்
தாமனாத்தா னனும்மந்த காலங்கொண்டி
தஞ்சொல்வா ரக்குரூரர்க் குஞ்சொல்வாரே.

தரு. இராகம்-காம்போதி, ஏகதாளம்.

### பல்லவி.

உம்மைப்பார்த்துநா னென்னசொல்லலா ம்
ஓயக்குரூரா கம்பீரா ஞானதீரா.

### அநுபல்லவி.

உம்மைப்பார்த்துநா னென்னசொல்லலா ம்
நன்மதுரையி லுமதுவீட்டுக் கு
உண்மையாயிந்த ரதத்துடன்கூடி ச்
செம்மையாகநீர் முன்னேசெல்லலா ம் (உம்மை)

### சரணங்கள்.

௧. நேர்த்தியாமிந்த ராத்திரியிங் கே
வீற்றிருக்கிளப் பாற்றிநாங்களு ஞ்
சேர்த்தியாய்வரப் பார்த்திடுமி ள
மார்த்தாண்டன்றேரும் ஏர்த்திடுமங் கே (உம்மை)

௨. பாரகாவியச் சொல்லாமறி ந்
தோரேயக்குரூர ரேகம்பீர ர்
நீரேமுன்செலலு வீரோஇன்னி லை
யாரோயென்சொல்லு நேரோயறிவீ ர் (உம்மை)

௩. சிலனேமூன்று காலமும றி
வாலேயறிவீர் மேலுஞ்சொல்கிறே ன்
ஞாலமீதில்வி சாலகல்வியி ன்
சோலைமேலுறை வாலகோகில ம் (உம்மை)

## அக்குரூரர் கண்ணனைத் தன்வீட்டுக் கழைத்தல்.

### கலித்துறை.

அண்டருமாமுனி வோரும்மறைகளு மாங்கறியாக்
கொண்டல்வண்ணன்றிரு வாய்மொழிகேட்டுமக் குரூரர்பின்னும்
விண்டதுகேளுமை விட்டுப்பிரிந்திட வேசகியேன்
அண்டினனேயெனைத் தள்ளாதையுமென்ற தானந்தமே.

தரு, இராகம்-ஆனந்தபைரவி, ஆதிதாளம்.

பல்லவி.

தேவரீர்திருவுள்ள மிரங்கியென்கிரகத்திலு ஞ்
செம்பொன்னடியைச்சாத்த வேணு ம.

அநுபல்லவி.

பூவுந்தியானேஹரி கோவிந்தனேபர ம
புருஷனேநீரெங்கள்சங் கருஷணாக்குத்துணையா ந (தேவ)

சரணங்கள்.

௧. புருஷோத்தமருங்களை விட்டுமுன்னேமது ரா
புரிக்குநானசெலவேணுமேயிப போது
சுருதிகாணுதநீரோ தொண்டாமேற்பிரீதியுள்ளா ா
தொண்டனுமதுகுநான்றப பாது
அருளாளனேயிப்படி யென்னைத்தள்ளிவிடப்போ மோ
அணுவுடனேயக லாது
வரிசையாயருங்கூட இஷ்டஜனங்களெல்லா ம
வரத்தகத்தாயமதுரா புரத்திலெனவீட்டின் மீது (தேவ)

௨. நாதனில்லாவெங்கட்கு நாதனுகினீரஜக ந
நாதரோபந்துக்களின் மேலே
ஓதுமன்புள்ளநீரோ சச்சிதானந்தரூப ா
உமதுபாததீர்த்தத்தி னுலே
ஆதியங்கியேமுதற் றேவரும்பிதிர்க்களு ம
அடைகிறார்திருத்தியென மேலே
போதனேயென்வீட்டுக்கு மந்தபுரத்துக்குமு ன
பொன்னடித்துளிகிடைத்தால மின்னுஞ்சுத்தமாம் மாலே (தேவ)

௩. எண்ணியொருவராலு மறியக்கூடாதவுன்ற ன்
இணையடித்தீர்த்தமானை கிடைத்துப
புண்ணியகீர்த்திபெற்று ஒருநாளுமழியாவ ற்.
புதவயிசுவரியம படைத்து
திண்ணியமனீர்பரமே சாதிகளுக்கருளு ம
சித்தியசூரியபதந தொடுத்துத்
திண்ணமாயமகாபலிச் சக்கரவாத்திதானென் று ஞ்
சிரஞ்சீவிப்பட்டம்பெற்றுன் சிரஞ்சனுவென னிடத்துங் (தேவ)

௪. உலகமூன்றையுமபரி சுத்தஞ்செய்துபூமியி ல்
உயர்ந்திருப்பதுனபாத கங்கை
ஜலஜநயனுவந்தக கங்கையைச்சருவரு ந
தலையிற்றரித்தாரென்ன சங்கை
சொலுஞ்சுகரகுமார ரறுபதினுயிரரு ஞ்
சுவர்க்கமடைந்தவகை யெங்கே
நலந்தக்கங்கைதந்த துன்றன்சேவடிதா னே
நாரணுவுன்பாதத்தில நமஸ்காரஞ்செய்தே னிங்கே (தேவ)

௫. கண்ணனேதேவதேவ ஜகந்நாதனேயுன்னு ட
கதையைக்கீர்த்தனம்பண்ணுமு பேர்க்கும

சொர்ணக்கதவுடன் பசும்பொன்னாற்செய் த *
தோரணங்களுட செகப்பும் மிக
வன்னங்களாகிய தாம்பிரத்தாற்செய் த *
வாகாமசுவசாலை யுகப்பும் அதில்
மின்னும்பசுக்கள் கட்டுங்கொட்டிலுட னே *
வெகுதானியங்களின் றொகுப்புஞ் சேர்பண்
டகசாலைகளின் வகுப்பும் பல
வகையினஞ்சொல்வேன் மிகப்பும் பெற்ற (மது)

ஒருவருந்காண்ட வொண்ணாவக ழி *
யுடனேயுஞ்சிங்காரத் தோட்டம் வாசம்
பரவுநந்தவனங்களுடனேயு ம் *
பட்டணமெங்குங்கொண் டாட்டம் உயர்
திரவியக்காரர் சொர்ணகலசங்க ள் *
சிறந்துப்பரிகை மீட்டம் உள்ள
தெருவும்வீடுகளின்புறக்கடையி ல் *
சிங்காரமாமலர்த் தோட்டம் எங்கும்
வங்காரமாமதிள் நாட்டம் ஓர்சிற்
பன்கைவேலையிந்தக் கூட்டம் பெற்ற (மது)

மிஞ்சியரஞ்சித சபையனே க *
விதங்களாம்வீடுமென் மேலே படிகம்
மஞ்சள்மரகத வொளிமிகுந் த *
வயிரரத்தினங்க ளாலே யிழைத்
துஞ்செய்கொடுங்கைகள் திண்ணைகள்மீது ம் *
உயர்ந்தசாளரத்தின் பாலே மேவுஞ்
செஞ்சொல்மணிப்புறா மாடப்புறாமயி ல் *
சேர்ந்ததொனியொருக் காலே யங்கே
வாய்ந்ததென்னசொல்வேன் மாலே லக்ஷ்மீ
காந்தன்செலுத்துஞ்செங் கோலே பெற்ற (மது)

மிக்கவுஞ்சந்தனத் தாலேமெழுகின் ற *
வீதிகடைத்தெரு ராச வீதி
புக்கவும்நாற்சந்தி மீதுமிறைக்கின் ற *
புஷ்பங்கள்மாலையுல் லாச மொன்றும்
பொய்க்காதரும்பு பொரிதண்டுலங்களு ம் *
பூர்ணகும்பங்களும் நேச யாக
வைக்கின்றசந்தனந் தயிர்நிறைத்து ம் *
மலருடன்தீபப்பிர காச மெங்கும்
இலகவேவிசு வாச மாக
உலகமெங்கினும் பேசப் பெற்ற (மது)

சூழவிளந்தளிர்த் தோரணம்பூங்கொத்து த் *
துலங்கக்கட்டியும் மீட்டும் நல்ல
வாழைகள்தாறுடன் பாக்குக்குலைக ள் *
வரிசைவரிசையாய் நாட்டும் இன்னம்

| | | | |
|---|---|---|---|
| | ஏழுலகுஞ்சொல்ல வெங்குந்துசங்கட் | டி | * |
| | யேற்கவேமேற்கட்டி | யீட்டும் | ஆரும் |
| | வாழியென்றேபட்டுப் பட்டாவளிகளா | ல் | * |
| | வஸ்திரக்கொட்டகை | போட்டும் | வீதி |
| | சுற்றியலங்கிருதங் | காட்டும் | ஹரி |
| | பக்தியுள்ளோர்சொல்லும் | பாட்டும் | பெற்ற (மது) |
| ௬. | அச்சுதற்கேற்கவே வீடுகள்தோறு | ம் | * |
| | அழகாய்முகப்பிரு | புறத்துக் | துய்ய |
| | பச்சையரிசி பரப்பியதன்மேலி | ற் | * |
| | பாங்காய்ப்பூர்ணகும்பம் | நிறைத்தும் | அந்த |
| | உச்சிதக்கும்பத்தைப் புஷ்பங்கள்தம்மா | லே | * |
| | யுள்ளபடியாக | மறைத்தும் | ஆருங் |
| | கச்சைக்கட்டிக்கும்பக் கழுத்திற்சாதரா | க் | * |
| | கட்டியதன்பேரி | லுறைத்தும் | வெகு |
| | சட்டமாய்மாந்தளிர் | நிறைத்தும் | தீபம் |
| | இட்டுப்பொற்புஷ்பங்க | ளிறைத்தும் | பெற்ற (மது) |
| ௭. | கும்பத்தின்சந்நிதி வாழைகமு | கு | * |
| | கொடிகளுங்கட்டிய | சாக்ஷி | பூமி |
| | அம்பரஞ்சொர்க்கமுஞ் சொல்லும்மது | ரை | * |
| | யலங்கிருதத்தைச்சர்வ | ஸாக்ஷி | யான |
| | நம்பரம்புருஷர் வாஸுதேவனொன்று | ம் | * |
| | ராமகிருஷ்ணருங்க | டாக்ஷித் | தாயர் |
| | கும்பலெனுந்தோழ மார்களுடன்கூடி | க் | * |
| | கொண்டுவந்தார்கேளுஞ் | சுசாக்ஷி | ஹரிவை |
| | குண்டபதிக்கென்ன | தாக்ஷி | யெது |
| | மண்டலமேலா | சாக்ஷி | பெற்ற (மது) |

கண்ணனைப் பார்க்கவரும் மாதர்களின் தன்மை யுரைத்தல்.

விருத்தம்.

வேளெனுமன் மதனுக்கும் அப்பனுங்கோ
விந்தனும்ரா மன்கூட ராஜவீதி
கேளிகளாய்த் தோழருமா மாயர்சூழ்ந்து
கீர்த்திக்க மூர்த்திகர மாகவந்த
நாளதனில் மதுராபட் டணத்திலுள்ள
நங்கைகளெல் லாமுப்ப ரிகைமேலேறிச்
சாளரவா சற்களினும் பார்க்கவந்த
சமயங்கேள் ஹரிகாளி தலையன்கேளே.

திபதை, இராகம்-ஆனந்தபைரவி, ஏகதாளம்.

கண்ணிகள்.

| | | | |
|---|---|---|---|
| ௧. | முலைமேற்றுகிலை யிடையிற் | புனைகுவார் | இடையிற்கலையை |
| | முலைமேலணிந்தும் ஹரியை | நினைகுவார் | * |

உ. இலகுகுண்டல மொருசெவிக் கிடுவார் ஒருசெவிக்குக்குண்
டலமிடாமலும் மறதிபுக் கிடுவார் *

௩. பசும்பொற்கடையந் தரிப்ப தொருகைக்கே யொருகைக்கணியார்
நிசங்கரநியைக் காண வருகைக்கே *

௪. இசைந்தகைக்கடை யமதைக் காலிலே காலிற்சிலம்பை
யசைந்திடுங்கையி லணிவர் மாலிலே *

௫. ஒருகண்ணுக்குமையெழுதிப் பழுதிலார் மயங்கிமின்னார்கள்
ஒருகண்ணுக்குமையதனை யெழுதிலார் *

௬. உருசைப்பாலனம்பாதி யுண்ணுவார் தங்கக்கிண்ணத்தில்
ஒருபாதியன முண்ணுமு னண்ணுவார் *

௭. சந்தனுதிதயிலக் காப்பிட்டு நீராடாமலே
வந்தவாறைச்சொலவோ கூப்பிட்டு *

அ. விந்தைச்சகிமார்பணிவிடையைப் பாரார் வாஸுதேவனைச்
சிந்தையிலெண்ணிவேறெனறையும் நேரார் *

௯. கோலாகலமாய்ம தாைவீதியிற் கண்ணன்வரவே
பாலார்மொழியார்கித் திணைப்பாதியில் *

௧௦. மேலாமஞ்சத்தைநீக்கி யோடுவார் நித்திரைக்கலக்கத்
தாலேகண்கள்சிவப்பு நீடுவார் *

௧௧. ஏர்த்தவெள்ளித்தங்கச் செம்பிலே சொண்டுவந்த
தீர்த்தஞ்சாப்பிடாம லன்பிலே *

௧௨. பார்த்துமுகத்தைக்குழந்தைகளுக் கங்கே முலைப்பால்வயிறு
பூர்த்தியாகுமுன்னோடிவர விங்கே *

௧௩. பச்சைப்பாலனைத்தள்ளி விட்டுமே ஹரியைக்காண்பதே
யிச்சையாயோடிவருசல் தொட்டுமே *

௧௪. அச்சுதருஞ்சங்கருஷணருங் கண்டு அவர்கள்வரவை
உச்சிதமாகமிகச்சந்தோஷங் கொண்டு *

௧௫. கம்பீரவிளையாட்டி ஞலேயும் மந்தகாஸம்
அம்புககடைக்கண்பார்வை யாலேயும் *

௧௬. சம்பிரமமாகமயலை விளைத்தனர் பார்க்கவந்த
கும்பமுலையார்மனதை வளைத்தனர் *

இதுவுமது.

விருத்தம்.

மதயானைப் பராக்கிரம முள்ளகண்ணன்
மலர்மகள்சேர் திருமார்பி னுடனேகூடும்
அதிரூப மதனுற்பார்க இன்றகண்கட்
கானந்தம் கொடுத்துக்கொண் டிவகையந்த
மதுராம்ன்னர் வீதியிலே பவனிவந்தார்
மானார்முன் கண்ணன்றிரு விளையாட்டத்தின்

விதமதனைக் கேட்டிருந்த படியேதங்கள்
விழியுற்றார் கரும்பென்னு மொழியுற்றாரே.

தரு, இராகம்-சாரங்கா, சாபுதாளம்.

பல்லவி.

மதுரைவீதியிற் கண்ணன்பவனியை நோக்கினார் மங்கையர்
மனதாலிங்கனஞ் செய்துவிரகத்தை நீக்கினார் *

அநுபல்லவி.

விதுகுலதிலகர் திவ்வியமங்க ள
விக்கிரகமாநெஞ்சில் நினைந்திட்டார்
அதிகமந்தகாஸங் கடைக்கண்பார்வையா ம்
அமிர்தமழையினால் நனைந்திட்டார் (மதுரை)

சரணங்கள்.

௧. கேளுஞ்சிங்கார ரஸத்திலாசையில் லாதவா அந்தக
கிருஷ்ணலீலையின் மகிமைதனையின்னம் ஓதவா *
வாளைநிகர்விழி ராஜராணிகள் மாதவா உயர்
மாளிகையின்மேற் கவாக்ஷவாசலின் மீதவா *
நீளக்கண்ணனைக்கண் டானந்தத்தி லே
நேரிழைமார்செந்தா மரைமலரைப் போலே
ஆளுமுகமலர்ந் தவர்கள்மென் மேலே
ஆனந்தமாய்மலர் சொரிந்தாரதி மேலே (மதுரை)

௨. அங்கங்கனேகும்பற் கூடிக்கொண்டுவேத விம்பங்கள் ஆன
அந்தணர்கள்தயி ரக்ஷதைகள்பூர்ண கும்பங்கள் *
மங்களகரமாம்புஷ்ப மாலிகைகள் ஜம்பங்கள் ஆக
வாசச்சந்தனங்கள் கந்தமூலபல வின்பங்கள் *
புங்கமுடனிந்த வகைமுன்னிட்டுக் கொண்டு
பூஜித்தார்கள்ராம கிருஷ்ணர்களைக் கண்டு
பொங்குமானந்த வமிர்தந்தனை யுண்டு
பூசுரர்களெல்லாம் புகழவந்தார் விண்டு (மதுரை)

௩. இந்தமனித ருலகத்துக்குத்தவ மூர்த்தியாய் வரும்
ராமகிருஷ்ணர்களை மதுரைப்பெண்டுகளா பார்த்தையா *
நந்தகோகுலத்தி லுள்ளகோவியர்கள் சேர்த்தியாய்க்கொண்டு
நாளுந்தரிசனஞ் செய்துவருகின்றார் கீர்த்தியாய் *
அந்தவிடைச்சிமார் செய்ததவ மென்ன
ஆச்சரியமதை யென்னவென்று பன்ன
நந்தநந்தனரிங் கெழுந்தருள முன்ன
நாமுஞ்செய்ததவ மென்னவென்று மன்ன (மதுரை)

கண்ணன் ஏகாஸியை வதைத்தல்.

---

விருத்தம்.

சுதைப்பாகவதங்கேட்கும் பரிக்ஷித்தேவ
ஸ்ரீதேவகுமா ரர்மதுரை ராஜவீதி

அதைப்பாவ னஞ்செய்து வரவேபுண்ணி
யாண்மாக்க ளெல்லாமிவ் வாறுசெய்தார்
பதைப்பாகி யங்குமொரு மூடன்வந்தான்
பாழ்வயிற்றுக் கிரைதேடி யலையும்பேரில்
உதைப்பானுக் குவெளுப்பான் ஜாதிவண்ணான்
ஒருத்தன்று னவன்சரிதை விருத்தந்தானே.

திபதை, இராகம்-ரீதிகவுளை, திச்சிரதாளம்.

கண்ணிகள்.

தேசங்களெங்கும் புகழ்மதுராபுரி மீது ஜய
ராஜவீதியிற் கண்ணன்பவனிவரும் போது *

நாடியங்கேயொரு வண்ணான்வந்தானிந்த ஞாயங் கேளும்
ஆடைவெளுத்து மூயிர்ந்தசிவப்பான சாயம் *

ஏற்றுமவன்கஞ்ச ராஜர்க்குயோக்கிய மான வெகு
நேத்தியதாம்வஸ்திர மூட்டைகட்டியுநி தானம் *

ஆகக்கிருஷ்ணன்முன் வரக்கண்டாரேகதா பாணி யவர்
யோகமாயைதனை யறிவதார்சொல்லு மூணி *

முன்னேவரக்கண்ட வண்ணானையேவன் மாலி அட
நின்னில்லுபோகாதே ரஜகனேநீயே காலி *

நல்லவெளுப்பா யுயர்ந்தவுடுப்புகள் போட்டுக் கொள்ளச்
சொல்லிநமக்குச் சிலதுகொடென்றங்கே கேட்டு *

பின்னுஞ்சொல்வார்யோக்கிய ராகவிருக்கின்ற வெங்க ளுக்கு
மன்னும்வெகுநேத்தி யாகுமங்கவஸ்தி ரங்கள் *

ஈந்தாலுன்றனுக்கு மிகவுண்டாகுமே நன்மை விலை
தாழ்ந்ததில்லாம லுயர்ந்ததெடுப்பதே செம்மை *

சத்திரத்துக்குள்ளே போகவொட்டாணமென் மேலே இரட்டைப்
பத்திக்கூடத்திற் பெரியவிலையென்பார் போலே *

எல்லாநிறைந்த பரிபூர்ணரெம்பெரு மானே யிச்சை
சொல்லிவஸ்திரமா சகங்கேட்டாரேவண் ணானை *

அச்சுதர்வார்த்தையை யெண்ணாமற்கஞ்சனுக் கடுமை யான
துர்ச்சனவண்ணா னதிகோபமாகிய கொடுமை *

என்னசொல்வேன்கண்ணன் சொல்லுக்கங்கனேயா க்ஷேபஞ் செய்து
சொன்னதவன்றலை மண்ணுண்டதேயொரு லாபம் *

இப்படிக்கொத்தபட் டாடைதரித்திடும் பாக்கியந் தானே
அற்புதராஜாதி ராஜர்க்குச்சேர்வதேசி லாக்கியங் *

காடுமலையிற் சஞ்சரித்திருப்பது வெளியே நீங்கள்
ஆடுமாடுமேய்ப்பீ ருங்களுக்காடைகம் புளியே *

அல்லாமலிந்தவி ராஜயோக்கியமாம்பட் டாடை கட்டக்
குல்லாப்பஞ்சையுங் களுக்குவருமோயிவ் வாடை *

கக. அனைப்பணத்துக் குதிரையஞ்சபணைப் புல்லுத் தின்ன
விருப்பமுற்றது போலேயிருக்குதுன் சொல்லு *

கஎ. ஆடையில்லாமல்நீ வண்ணானுடுப்பினை வேண்டி னாலும்
காடோடிபோலவே கேளாமற்காட்டுமு ரண்டி *

கஅ. வீணாசைப்பட்டிந்த வேஷ்டிகளைகேட்க லாமா யாருங்
காணூரோராஜன் சேவகரிதைகேட்கப போமா *

கக. இங்கிப்படிக்கேட்கா தீர்சிறுபிள்ளைகள் நீங்கள் ஆரும்
உங்களுயிர்பிழைக்க வேணுமோவோடிப் போங்கள் *

உ0. மெத்தவுந்துஷ்டர்கள் கஞ்சராஜனுட தூதர் இந்த
வர்த்தமானமறிந் தாலுங்களையகத வீதர் *

உக. கட்டியிழுத்து மடிப்பார்கள்நீரிப்போ மேலே போட்டுக்
கட்டுந்துணிகளையும்வலுவந்தத்தி லே *

உஉ. பறித்துக்கொள்வாரோ யுங்கட்கதுதெரி யாதா வென்று
குறித்தகிருஷ்ணனை நிந்தனையாய்விஷ்ணு ராதா *

உ௩. வண்ணானுரைத்ததைக் கேட்டந்ததேவகி மைந்த ருட
கண்ணைதுசிவப் பதிற்சிவந்தாரகோ விந்தர் *

உச. சுந்தரக்கைவிரல் முனையினலங்க மெய்யா கிருஷ்ணன்
அந்தவண்ணான்றலை யைவிழத்தள்ளின ரையா *

உரு. ஆட்டுத்தலைக்கு வண்ணான்பறப்பது மறந்தான் இந்த
நாட்டுவண்ணானறலைக கெமனுமங்கே பறந்தான *

உசு. முன்னேவந்தவ காலிதலைவீழ்ந்ததைக் கண்டு கூடப்
பின்னேவந்தவண்ணா ரெல்லாருமேபயங் கொண்டு *

உஎ. வஸ்திரமூட்டைகளையெல்லாங்கீழே யெறிந்து போட்டுக்
கத்திக்கொண்டுதிக் காலுககுத்திககாலாய் முறிந்து *

உஅ. ஓடிப்போய்விட்டார்க ளந்தவஸ்திரங்களை யெல்லாம் ராமன்
கூடவச்சுதருமெடுத்துக்கொண்டதோர சொல்லாம் *

உக. உயர்ந்தவஸ்திரங் களிற்சிலதா முடுத்தாரே பின்னும்
சயந்துமாயர் கட்கெலலாஞ்சில கொடுத்தாரே *

௩0. எம்மான்மறறவஸ் திரங்களைக்கீழிட்டார் தூளி யாக
அம்மானுடைமைக்கு மருமானல்லோகாத் தாளி *

கண்ணன் தையற்காரனுக்கு வாமளித்தல்.

---

கலித்துறை.

மூடவண்ணான்றலை தள்ளியிவவாறு முகுந்தர்செய்யும்
நாடகங்கணடுதை யறகாரனொருத்தன முன்னடிவந்து
நீடியவனபுடன் நாராயணனொன்று நெஞ்சிலெண்ணி
வேடமுமபோடடு வரம்பெறறதேயொரு வேடிக்கையே.

தரு, இராகம்-ஆனந்தபைரவி, சாபுதாளம்.

பல்லவி.

வரங்கொடுத்தாராயா வாயகனுனதந் து
வாயிற்கும துணாயி லே.

அநுபல்லவி.

ஈரனென்றெண்ணுமலரி நாராயணரென் றெண்ணி
ஸ்திரமாயன்புவைத்தான் ஜயகிருஷ்ணன்கிருபை பண்ணி (வரங்)

சரணங்கள்.

௧. சீராய்நாலுவர்ண வஸ்திரங்களி லுலேயுந்
திவ்யபூஷணமாக வேயன்பி லுலேயும்
ஸ்ரீராமகிருஷ்ணர்க்கிதோ ரலங்காரம் போலேயுஞ்
செய்தான்சாத்துப்படியாஞ் செழிபபொருக் காலேயுந்
தேரோடுந்திருநாளிற் றனேயலங்க ரிக்குஞ்
காரானைக்குட்டிவெள்ளை யானைக்குட்டிநி கர்க்கும்
பேராம்வேஷப்பலிப்பா யனந்தருடனு திக்கும்
நாரணனவர்கிருபை செய்தாராதந்துவா யாகரும் (வரங்)

௨. வாகாயிப்படியன்பா யலங்காரஞ்செய்யு மந்த
வாயகனுக்குப்பகவான் பிரசன்னரா யிந்த
தேகத்துடனனேக வருஷமிருந்து யர்ந்த
செலவம்நிறைந்ததிக காந்திபலம்பொ ருந்த
ஏகமாய்ச்சகலசாஸ் திரப்பொருளையுந் தேர்ந்து
யோகஞானநிஷ்டையிந் திரியநிக்கிரகத்தி லார்ந்து
மேகடைசியிலுந்தன் பரமபதத்திற் சார்ந்து
மோகனத்தன்வடிவாய் விளங்கவேயருள் கூர்ந்து (வரங்)

௩. ஞானிக்குத்தெருப்பிரித் திருக்குசோவதைக் காட்டும்
நரஜீன்மங்கோடியிலே யொருவனுண்டென்று நாட்டுந்
தானிகுவலையத்தி லெந்தச்சாதிபா ராட்டுந்
தானேசிற்பிபக்திபண்ணி னதைக்கேட்டரோ மீட்டுஞ்
சேனைத்தலைவனுகி யிருந்தாலதிலு லென்ன
தானத்துடனேபூஜை தியானஞ்செய்தென்ன பன்ன
வானத்தமரரெல்லாந் துதிக்கும்ஹரிபிர லன்ன
மானத்தணிகராஞ் சாமியிப்படிச் சொன்ன (வரங்)

கண்ணனை மாலைக்காரன் அலங்கரித்தல்.

---

வெண்பா.

சிற்பியனுக் கிவ்வாறு சீதரன்வ ரங்கொடுத்து
மெய்ப்பாக வேமதுரா வீதியிலே—யற்புதமாய்
ராமனுடன் சேர்ந்து நடக்கும்போ தங்கொருசு
தாமன்மலர் மாலிகைதந் தான்.

தரு. இராகம்-தோடி, சாபுதாளம்.

பல்லவி.

மாலிகைகொடுத்தானே வனமாலிக்குமாலைகட்டி
மாலிகைகொடுத்தானே

அநுபல்லவி.

[ஏ] காலிவதமுந்தையற் காரன்வரத்தாற்பாக்கி ய
சாலிபரமபதச் சாரூபம்பெறகண் டு. (மாலி)

சரணங்கள்.

க. மதுராவீதியின்மேவி ராம கிருஷ்ணர்கள்
வரவோர்மாலைகட்டிச்சு தாம னவன்
பதிமேலெழுந்தருளிப பூமா துகருப்
பதியெதுபதிபரந் தாமா வர
இதனைக்கண்டர்தமாலை கட்டியெழுந்தி ருந்து
எதிர்கொண்டுஸாஷ்டாங்க தண்டன்பண்ணிப்பொ ருந்து
விதிமுறையாஸனங்கள கொடுத்துமின்னந்தி ருந்து
யிருந்தன்பாயர்க்கியபாத்தியா சமனீயங்களுந் தந்து (மாலி)

உ. கூடவந்திருக்கும்நல் லுரித்து க்களாங்
கோபாலாமேலுமன்பை விரித்து மேகொண
டாடிமல்லிகைமுல்லை தரித்து பபுஷ்ப
ஆரங்களிலலங் கரித்து த்திவ்ய
வாடையுள்ளசந்தனங் களபகஸ் தூரி
வகைபன்னீர்புனுகு ஜவ்வாதலங் காரிப்
போடுகற்பூரதாம் பூலங்களும பாரி
யுடன்கொடுத்துமிகவு மயர்ந்துப சாரி (மாலி)

ங. அகோஸ்வாமிகளேதேவ ரீர்கள் இங்கே
யடியேன்குடிசைசருவந் தீரகள் மிக
மகாகிருபைசெய்தருளி னீரகள என்ஜன்
மமீடேறவந்தருளி னீர்கள் நல
இகபரம்பெற்றுந்தன்னிய னானேன்கிரு தார்த்தன்
எங்கள்பிதிருக்களகனா யேறினா பார்தரன்
சுகமாயெனகுலதெய்வக குறைகளுந் தீர்த்தன்
துயரிஷிகளானநதங் கொண்டாமொன்றுந் தீரதன் (மாலி)

கண்ணனை மாலைக்காரன் துதித்தல்.

---

கலித்துறை.

கல்லித்துறைகளை தாயபபேசிமானிடர் காசகளைக்
கெலலிவயிறு வளாப்பதிறைபலன் கிட்டுவதோ
முல்லைநிலததிடை யாயனாககூடும முகுந்தனையே
நலலசுதாமனின னர்துதித்தானதை நாடுவனே.

திபதை, இராகம்-காம்போதி, சாபுதாளம்.

## கண்ணிகள்.

௧. அகிலஜகத்துக்குங்கா ரணராயிருக்கும்நீங்க ள்
அங்கிசத்திலைவ தரித்துக் கிருஷ்ணை
விகிதமாய்த்துஷ்டநிக்கி ரகஞ்செய்துசிஷ்டர்க ளை
யிருந்தபாலனத்தார்சஞ் சரித்து *

௨. ராமகிருஷ்ணருமாகி விளையாடுகிறீர்நீங்க ள்
நீாட்டிலதெங்கேயென்று லரியே கிருஷ்ணை
மாமதுராபுரியா மிந்தநகரிலிப் போ
மநுக்கள்கண்கண்டதுவுஞ் சரியே *

௩. ஈசுரனென்றுங்களை மதியாமற்கொரே மா
யிருக்கும்பார்வைபார்த்ததி ருலே கிருஷ்ணை
வாசுதேவனேயிந்த வண்ணான்றலைவிழுந் த
வகையேசாக்ஷியானது மாலே *

௪. இந்தவாயகனை மாபக்திமானுங்க ளை
யீசுவரனென்றும்பிரீதி பண்ணினான் கிருஷ்ணை
வந்தனஞ்செய்தர்ச்சித்து மாடையாபரணங்க ள்
மகிழ்ந்துசாத்தியும்நெஞ்சிலெண்ணினான் *

௫. சேருஞ்செல்வங்களெல்லா மடைந்துங்கடைசியி லே
தேவரீர்பரம பதத்திலே கிருஷ்ணை
ஸாரூபம்பெறும்படி யானவரமும்பெற்று ன்
தையற்காரனுமிந் திடத்திலே *

௬. எல்லாவுலகத்துக்கு மான்மஸ்வரூபமாயு ம்
இஷ்டமுள்ளவுங்கட்கெப் போதுங் கிருஷ்ணை
நல்லவர்பொல்லாதவ ரென்றகொரேப்பார் வை
காட்டிச்சொல்லவுங்கிடை யாது *

௭. ஆற்றசகலபூதங் களுஞ்செய்யும்பாவபுண்ணிய ம்
அதுக்குத்தக்கதாகும் பலனைக் கிருஷ்ணை
தானேகொடுக்காநின்ற சமயமுந்தேவரீரா ஞ்
சர்வவியாபகர்நீரே நலனே *

௮. இங்கேயுங்களைநம்பி யடிமையாயிருக்கின் ற
என்னையனுக்கிரகிக்க வேணும் கிருஷ்ணை
எங்குநிறைந்திருக்கு முங்களுக்கடிமைநா னை
என்னசெய்யத்தக்கது காணும் *

௯. மனிதராய்ப்பிறந்தவர் களுக்குளனுக்கிர க
வாழ்வுகிடைக்கின்றதே காரியங் கிருஷ்ணை
இனியெப்படிநேமிக்கின் றீரோவதற்குநான்கா த்
திருக்கின்றதெனதயி சூரியம் *

## கண்ணன் மாலைக்காரனுக்கு வரமளித்தல்.

விருத்தம்.

சுதாமனைவ னிப்படிக்கே ராமகிருஷ்ண
ஸ்வாமிதன்னை யன்பாகத் துதித்தமார்க்கம்
இதாமவன்சாத் தியபுஷ்ப மாலையாலும்
இன்சொல்மல ராலுமலங் கிருதருமாகி
னதாமரைக்கண் ணர்களவனை யடியார்களுள்ளே
நாட்டிவரங் கொடுத்ததுகே ளரிபொற்பாதஞ்
சதாமனதில் வைக்கின்ற நீயேஞான
ஸம்பனு விந்திரிய தம்பனுவே.

தரு, இராகம்-எதுகுலகாம்போதி, ஆதிதாளம்.

பல்லவி.

மாலைக்காரனைசுதாமா வுக்கு
வரமீந்தாரரிபரந் தாமா *

அநுபல்லவி.

வேலைசூழுநிஞ் ஞாலமதனை யி
ஞலேசோபித மேலிம்மதனை யி
னீலவணவன மாலியருள னு
கூலமிசைந்துகோ பாலவடிவா கி (மாலை)

சரணங்கள்.

க. ஆராவமுதர்நீங்கள் காணும் உம்மை
யடியேன்புகழ்தற்கென்ன தோணும் *
மாராமகிருஷ்ணரு ஞுறும் நின்மேல்
மாருதபக்திவர வேணும் *
ஆராலறிந்துங்கள் பெருமை நீலக்
காராருதிருமேனி யருமை *
நாராயணரி ரணடு பேராசவுருக சொன்டு *
நேராய்வரவுங் கண்டு தீராவினையென் றுண்டு என்று
சீலனுகிய மாலைக்காரனு ங
கோலமாமலர் மாலிசைத ர
லீலையாடுகோ பாலாதேவ கி
பாலராமாதி மூலரானவ ர் (மாலை)

உ. அப்படிக்குஹரிபக்தி செயவும் இன்னம்
ஹரிபகதர்மீதனபாகி யுயவும *
மெய்ப்புடன்ஜீவகோடிமேற் றயவும் பெற்று
விளங்கியிருக்குங்குண நயவும் *
இப்படிவங்கிசபாரம் பரியம் ஆகச்
செப்புமழியாதவயிசு வரியம் *
அற்புதங் காந்தி யொப்பிலாதபலஞ் சாந்தி *
விற்பனந்தீர்க்காயுஞ்சேர்ந்திக் கற்பனையாய்ச்சங்க மேந்தி திருக

கரபங்கையரிந்த　　வரமதுகள்கொடு　　த்
தருளிராமனுடன்　　பரவியம்மது　　ரா
புரிமன்னர்வீதியிற்　　றிருவிளையாடிக்கொண்
டொருவுமையாகவெழுந் தருளினேகிருஷ்ணன்　　(மாலை)

ரு. ஏகாலிதலைக்காயை　　யெடுத்தும்　பின்னும்
எழிற்சிப்பியற்குவரங்　　கொடுத்தும்　*
வாகாய்த்தொண்டர்வினையைத்　தடுத்தும்　இந்த
மாலைக்காரற்கருளைத்　　தொடுத்தும்　*
நாகசயனகிருஷ்ண　　சாமி　ஜகந்
மோகனுகரரான　　நேமி　*
பாசார்மொழியெ　சோதை　யேகாதலனை　தாதை　*
யோகாநந்தரும்　மாதை　யாகக்கொண்டார்பூ　மாதை முன்னம்
ஆனைகாத்தவெம்　　மானேமதுரையி　　ற்
கூனியொருத்தியைக்　　கூனல்நிமிர்த்தது　　ஞ்
சேனைபலர்சூழ்வ　　தானவில்லினை　　த்
தாஞெடித்ததும்　　யானுமைப்பேண்மே லே　　(மாலை)

சக-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன் திருவடிகளேசரணம்.

---

## சஉ-ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

---

விருத்தம்.

எண்ணைந்தி லிரண்டுவரை யத்தியாயத்தில்
　எழில்மிகவே கூனியைக்கூ னிமிர்த்துமந்த
வண்ணமகள் மனந்தேற்றி மகத்தின்சாலை
　வைத்ததனு வுடன்வளைந்தோர் தனுவைமாற்றி
விண்ணவு பொழில்விடுதி யதனிற்கண்ணன்
　விளங்கினு ரவ்விரவிற் கஞ்சராஜன்
றுண்ணெனச்சொற பனங்கண்டு மல்லரங்கிற்
　றுலங்கினு னென்பதைச்சொல் நலங்கள்தானே.

கண்ணனுக்குக்கூனி சந்தனந்தல்.

---

விருத்தம்.

மிக்கவலங் கிருதங்க ளானராஜ
　வீதியிலே ராமர்கண்ணர் வரும்போதங்கே
சொற்களப சந்தனந்திவ் வியமாய்ச்சேர்த்துஞ்
　சுந்தரக்கஞ் சனுக்கேற்க நடக்குந்தாஸி
பக்குவமின் னுள்நிறைந்த மதிமுகத்தாள்
　பாக்கிரங்க ளெடுத்துஞ்சொற் பகட்டுக்காரி

முக்கோண லாகியொரு கூனிவந்த
முறைகேளாய் பேர்திரிவக் கிரைகேளாயே.

தரு, இராகம்-நாதநாமக்கிரியை, ஆதிதாளம்.

பல்லவி.

திரிவக்கிரையெனும் நாமக்கூனித்
தெரிலவயொருதிவந்தாளே யா.

அநுபல்லவி.

திரிவிக்கிரம னெனும்நாம னேமி
ஜயகிருஷ்ணஹரி கோபால ஸாமி
மருமலர்சேர்மறு மார்பனும் மாலே
வருமதுராபுரி வீதியின் மேலே (திருவ)

சரணங்கள்.

க. மருங்கிலொருகோணல் கழுத்திலொருகோண ல்
மாா்பிலொரு கோணல்
ஒருங்கதாகவே மூன்றிடந்தன்னிலு ம்
உள்ளதுமூன்று கோணல்
உயர்மதிமண்டல முகம்வெகுபிர ஸன்னம்
நயகுணயௌவன வடிவுசு வா்ன்னம்
யோக்கியசந்தனத் தும்வாசனை கொடுத்துஞ்
சிலாககியமானபாத் திரங்களி லெடுத்தும்
ஒச்சலில்லாமலே நாச்சங்கூச்சமின்றி ப்
பேச்சைவிற்றுத்தானே காச்சிகதுடிகசிஙறவ ள் (திருவ)

உ. குந்தமலர்வெண்ணகைக் கூனிவரவுஞ்சுக ங்
கொடுக்குங்கண்ண னிடையே
மந்தகாஸத்துடன் சொலுவரகோபெண் ணே
வாராய்நல்ல இடையே
வந்தவாரறிய லாருநீ கூறாய்
சந்தனமெவா்க்குக கொண்டுநீ போறாய்
மங்களாலங்கிருத சந்தனம் பூச
எங்களுக்குக்கொடுத் தால்விசு வாச
மானேசீக்கிரத்திற் றனேசந்தோஷமு ங்
தேனேயுண்டாமென்றெம் மானேசொல்லும்ப டி (திருவ)

ங. அதிசுந்தரனை கஞ்சராஜனு ட
அரமனைககிசை தாஸி
அதிலுமாதப்புரத்தி லக்கஞ்சனுக்குநா னா
அதிகவிசு வாஸி
ஆக்குந்திரிவக்கிரை யென்பேரிந்தச் சந்தஞ்
சோககுங்காரியமீ தாகுமெனக்குச் சொந்தம்
அற்புதச்சந்தனமிது கஞ்சனுக்கு யோக்கியம்
இப்படிக்கொத்ததைப்பூசிக் கொள்ளுகிற பாக்கியம்

அங்கவர்க்குமிங்கே யுங்களுக்குமல்லா ல்
எங்கெவர்க்குங்கிடைக் குங்கண்ணுவென வே (திருவ)

௪. மாயனுடையதிரு மேனியழகுஞ்சு கு
மாரமும்ரஸி கதையுங்
தூயநகையோடரி கடைக்கண்பார்வையு ஞ்
சொலினிங்கித மதையுஞ்
சுரிகுழல்கண்டங்கே மோகத்து ளோங்கி
ஸ்ரீராமகிருஷ்ணருக் குயர்சந்த ணுங்கி
சூட்டிக்கொள்ளச்சாத் துப்படியைக் கொடுத்தாள்
கேட்டீரோவுத்தம ஜனனத்தை யெடுத்தாள்
தொண்டர்மேற்கருணை கொண்டுலாவிவ ரு
கொண்டலாரிமகிமை கண்டதார்சொல்லை யா (திருவ)

இராமகிருஷ்ணர்கள் சந்தனந்தரித்து விளங்கல்.

விருத்தம்.

கூனிதருஞ் சந்தனத்தை வாங்கிராம
கோவிந்த ருந்திமுதற் கண்டமட்டுந்
தானிறையச் சாத்திவிளங் கினதெவ்வாறு
சாமியிரு வரும்வெள்ளை நீலவர்ணம்
நானமிசை சந்தனமோ சொர்ணவர்ணம்
நாடியிதை யவரறிய லாலேஜோதி
மேனியிலே படிந்துசந்த மழகதாச்சவ்
விதத்தைக்கேள் பாகவதா முதத்தைக்கேளே.

கண்ணன் கூனியைக் கூனல் நிமிர்த்தல்.

விருத்தம்.

ஆபரணம் பலவிதமா யுலகந்தன்னை
யழகதுசெய் திட்டாலும் ராமபத்ம
நாபர்திரு மேனியிலே படிந்ததற்கோர்
நல்லவழ கிடுவதுபோ லிதற்குமாச்சு
பூபதியே சந்தன லங்கிருதத்தாற்
புண்ணியனுங் கண்ணனும் பிரஸன்னராகி
மாபலத்தைத் தருமவரோ கூனிகூனல்
மாற்றினார் நலவுருவ மேற்றினாரே.

தரு, இராகம்-சுருட்டி, ஜம்பைதாளம்.
பல்லவி.

• கூனியைக்கூனல்நிமிர்த்தார் கோவிந்தன்
கூனியைக்கூனல்நிமிர்த்தார் *

அநுபல்லவி.

மானிலத்தில் மாதவரு ம்
மயங்கவேமுக கோணலுள்ள (கூனி)

சரணங்கள்.

௧. அந்தத்திரிவக்கிரையா மவளபுறங்காலிரண்டி லூத்து
எந்தையரிசரண முனையிரண்டினை வைத்து
பிந்தியுந்தாழ்வாய்க்கட்டைப் பிசகாமலேயொரு மித்துப்
பெருமான்கைவிர லிரண்டாற்பிடித்தி ழுத்து (கூனி)

௨. சொலும்வக்கிரம்மூன்று தீர்த்துத் தொடர்ந்தகூனிப்பெயர் நீக்கி
நலரூபமுள்ளவானம ஞானதேக மாக்கி
இலகுமின்னற்கொடிபோலே யெழிலையவள்மேற் றேக்கி
மலைசிகராந்தனங்க ளுக்கும்வணக்கம் போக்கி (கூனி)

௩. பெருத்தபின்தட்டுகளும்முன்னிற் பின்னழகும்பெருகி நல்ல
திருத்தமுள்ளபெண்கட் கெல்லாதிலக்மாயுஞ் சொல்ல
உருத்தனிலேயழகுருணம் உதாரலக்ஷசம்பத்து மெல்லாப்
பொருத்தங்களுமிசைந்து கருப்புவில்லவிளை வெல்ல (கூனி)

கண்ணனைக் கூனி தனது வீட்டுக்கழைத்தல்.

---

கலித்துறை.

உத்தமரூப வதியாகித்தாசிக் குளுச்சிதமாம்
சித்திலவெண்ணகை யாளயில்வேலினும் நீண்டவிழி
முத்தமிழின்சுவை நேர்மொழியாளெம் முகுந்தனுட
உத்தரியத்தைப பிடித்திழுத்தேயி துரைத்தனளே.

தரு, இராகம்-ஆனந்தபைரவி, திச்சிரதாளம்.

பல்லவி.

வீரபிரதாபா கிருஷ்ணவென்றன்
வீட்டுக்குவாரும் ஸா மி.

அநுபல்லவி.

மாரப்பிரதாபன்கணை பாயுதுநானு ம்
மைவிட்டுச்சகிக்க மாட்டேன்பத்மநாபா (வீரப்)

சரணங்கள்.

௧. உம்மாலேயிந்த விரகங்கொண்டேனுன்ற ன்
உத்தரியத்தைவிடு வேனென்றெண்ணாதீ ர் (வீரப்)

௨. எங்கும்புகழ்புரு ஷோத்தமரானநீ ர்
ஏதனிடத்திற்கிரு பாகடாக்ஷஞ்செய்யு ம் (வீரப)

௩. திருவுள்ளஞ்செய்தென் கோணலெல்லாந்தீர்த்தீ ர்
சிந்தைகோணலுமக் குண்டோசொல்லுஞ்சொல்லு ம் (வீரப்)

கண்ணன் கூனிக்குப் பின்பு வருவதா யருளல்.

---

விருத்தம்.

புருடசிகா மணியான கண்ணன்றன்னைப்
புணரவென்று மனதிலெண்ணி மாலாய்மாலே

அருடருவீ ரென்வீட்டில் வாருமென்று
அந்தப்பெண் ணரசியா சிக்கவெண்ணெய்
திருடியண்ணன் முகத்துடனே கூடவந்து
சேர்ந்துநிற்குந் தோழர்முகங் களையும்பார்த்துந்
திருநகைகொண் டொசெய்சிங் காரப்பேச்சின்
றெளிவைப்பா ரரியருளின் றளிவைப்பாரே.

தரு, இராகம்-எமுனுகல்யாணி, ரூபகதாளம்.

பல்லவி.

உன்றன்வீட்டுக்கு நாம்வருகிறோம்
ஒண்ணுத　　　　லே.

அநுபல்லவி.

வந்தகாரிய　　முந்தவேயிக்க　　ஞ்
சந்தனைவெல்வோஞ்　சந்தனந்தந்　　த (உன்றன்)

சரணங்கள்.

க. வீடில்லாமல்　நாடெங்கிலு　ந்
தேடியலைக்　தோடேவர்க்கு　ம்
விந்தைவிந்தையா　யாதிபகலு　ம்
வந்திருக்கவுஞ்　சொந்தமா　ன (உன்றன்)

உ. பெண்டாட்டியு　முண்டாகாமா　ற்
றிண்டாட்டமுங்　கொண்டவர்க்கு　ப்
பேசிக்கொள்ளவும்　பூசிகொள்ளவு　ம்
ஆசைதீர்க்கவுந்　தாசியாகி　ய (உன்றன்)

ங. அன்னநடை　மின்னர　சே
உன்னையினி　யென்னசொ　ல
அடைவாய்வழி　நடைகாரர்க்கு　ந்
திடமேவிய　இடமாகி　ய (உன்றன்)

கண்ணன் யாகசாலையிற்சென்று வில்லையொடித்தல்.

---

விருத்தம்.

மதுரவார்த்தையினு லிவ்வகையந்த மாயனுந்தாசியை யனுப்பி
மதுரைமாநகர மதின்கடைவீதி மார்க்கமாய்வருகின்ற பொழுது
எதிர்கொண்டுசெட்டி வர்த்தகர்முதலோர் யாவருஞ்சந்தன களபம்
எழின்மலர்மாலை தாம்பூலவகைக ளென்பதெல்லாஞ்சமர்ப் பித்தும்
பதியன்புபொன்பூ காணிக்கையிடவும் பார்க்குமின்னார்மத வாளி
பாய்ந்துடல்மறைந்து கலைவளையளக பாரங்கள்சோர்ந்துசித் திரம்போல்
எதிர்நிற்கவச்சு தரும்யாகசாலை யிங்கெவடத்திலே ஜனங்காள்
எங்கெனவினவி யங்கனேசென்று மெடுத்துவில்லொடித்தன ரியே.

தரு, இராகம்-தோடி, ஆதிதாளம்.

பல்லவி.

வில்லையொடித்தா னோ சோ
விந்தன்வைகுந்தன்முகுந்தன்அந்த ப
வில்லையொடித்தா னோ.

அநுபல்லவி.

நல்லமதுரையிற்கிருஷ்ண ன்
செல்லப்பிள்ளைவிளையாட்டாய்ச் ச்
சொல்லவும்பலத்தவிந்தி ர
வில்லும்போலிருக்குங்கஞ்ச ன் (வில்லை)

சரணங்கள்.

க. இங்கனேபட்டணத்துச் ச
னங்களீர்தனுர்யாகசா லை
யெங்கேயென்றுகேட்டுக்கொண்டும்
அங்கனேசென்றரிகிருஷ்ண ன் (வில்லை)

உ. அத்தனுர்யாகசாலையி ற்
சுத்தவீரர்வெகுபேர்க ள்
கத்திசுழற்றிக்கொண்டெங்கு ஞ்
சுற்றிக்காவல்நிற்கக்கண்டு ம் (வில்லை)

ங. சேனைகாவலர்தகைக வ
தானதுக்குமுட்படாம ற்
றானேநகைத்துக்கொண்டி து
தானும்வில்லென்றுமெடுத்து ம் (வில்லை)

௪. முளைக்குமுளையானென் ன
விளைத்துமிடதுகையா ற்
களைக்காதெடுத்தும வை
வளைத்துநிமிஷத்தி லே (வில்லை)

ரு. அரும்பாலகனென்றெங்கு ந்
திரும்பாதெவரும்பார்க் க
விரும்பிமதயானையு ங்
கரும்பைமுறித்தாற்போ லே (வில்லை)

சா. மாசிலாப்பரீக்ஷித்த னே
ஆசைகளெங்கெங்குமந் த
ஓசைகள்நிறைந்துகஞ் ச
ராஜனும்பயந்திட வே (வில்லை)

கண்ணன் மகசாலைச்சேவகரை வதைத்தல்.

கலித்துறை.

ஒடிதனிலிந்த மகசாலைவந்து நுழைந்தசிறு
பொடியனொருத்த னிவனுர்சொலாயுத பூஜையிலே

துடியாகவைத்த விலையெடுத்தேயொடித் தான்றுரத்திப்
பிடியடிகட்டெனா வீரரெல்லாமுரம் பேசவரோ.

திபதை, இராகம்-சங்கராபரணம், ரூபகதாளம்.

கண்ணிகள்.

க. அந்தவில்லைச்சுற்றிக் காவலதாயிரு ந்
தசுத்தவீரர்க ளெல்லாங் கிட்டி
வந்ததிகோபத் துடன்பரபரப்பா ய்
வளைந்தவர்மனங் கல்லாம் *

உ. இந்தவில்லையொ டித்தவிவனார் பி
டியுங்கள்கட்டுங்களென் பாரோ யந்தச்
சுந்தரராமகிருஷ் ணர்களைப்பிடிக்க த்
துராசைகொண்டாரவர் நேரோ *

௩. கிட்டிவந்தவீரப் படைகளைரா ம
கிருஷ்ணஸ்வாமிகளுங் கண்டு ஒடித்
திட்டவில்முறிசலைப் பேருக்கொன்றுயெடு த்
திட்டங்கனேகோபங் கொண்டு *

௪. தனுர்மகசாலையிற் கஞ்சனுக்கேவலா ந்
தானையெல்லா மடித்தாரோ யந்த
கனுக்குத்தூதர்க ளாகுவீரொன்றுதெ க்
கணங்காட்டி விடுத்தாரோ *

௫. இப்படிராமகிருஷ்ண ரந்தக்கஞ்சனு ல்
ஏவற்படையைச் சங்காரஞ் செய்தும்
அப்படித்தானேதி ரும்பவும்பார்த்தா ரோ
யந்தப்பட்டணச் சிங்காரம் *

௬. அதையுமங்கேக டாக்ஷித்துஞ்சஞ்சரி த்
தானாயாநாமினி மேலே நாளை
யுதையத்துக்குவரு வோமென்றேதி ரு
வுள்ளங்கொண்டார்நெடு மாலே *

௭. விடுதியைநோக்கிச் சென்டேராமகிருஷ்ண ர்
வீதியிலேவரும் போது அந்த
வடமதுரைப்பட்ட ணத்துள்ளோர்கண் ட
வரிசைசொல்வேன்தப் பாது *

௮. அச்சுதானந்தர் திருமேனிச்சுந்தர ம்
அற்புதமகிமை வீரியம் எல்லாம்
மெச்சியிவர்மனித ரல்லவுத்த ம
விண்ணேரொன்பதுவே காரியம் *

௯. தடையில்லையென்று மெண்ணவுமிப்படி த்
தன்னிச்சையாகச்சஞ் சரித்தார் பின்னும்
இடையர்சூழச் சகடங்கள்முன் னே
யிறங்குமிடத்திலே தரித்தார் *

கO. அந்தச்சமையத்தில் மேலேக்கட லை
யடைந்தனனேயனே ஆதித்தன் முன்னே
இந்தமுகுந்தனுங் கோகுலத்தினின்று ம்
இங்கெழுந்தாரதைப் போதித்தன் *

கக. கோகுலத்திலுள்ள கோவியர்விரக க்
கூறுசகிக்காமற் சொல்கிறார் அந்த
யாகுலந்தன்னுற் புலம்புகிறத்திலு ம்
இக்கிருஷ்ணன்மதுரை செல்கிறார் *

கஉ. நாட்டில்மதுரையிற் பெண்டுகளுக்கி னி
நல்லபொழுதாய் விடிந்தது தெய்வங்
கூட்டியவர்க்குக் கிடைத்தஆசீர்வாத க்
கொள்கைபலித்து முடிந்து *

கங. நீலவண்ணரிவ ரழகெல்லாமவ ர்
நேத்திரானந்தமாய்க் காணவே தவஞ்
சாலப்பலித்ததென்று சொல்லிக்கொண்டா ரே
தானதுகிச்சயந் தோணவே *

கச. திருமடந்தையாந் தேவிபிரமா தி
தேவர்களேயெல்லாம் விட்டுமே நல்ல
அருளாளர்புருஷ பூஷணரா ன
ஹரியைச்சேர்ந்ததைத் தொட்டுமே *

கரு. எங்கும்பிரகாசிப்ப தெப்படியோவத ற்
கேற்கவேயிவ்வுல கத்திலே திவ்விய
மங்களமூர்த்தியாங் கண்ணனுடதி ரு
வடிவின்காந்தியி டத்திலே *

கசு. சேர்ந்துமதுரா புரியென்னும்பெண்ண ர
சிககழகதிக மாச்சுது கேளும்
வேர்ந்தனே கிருஷ்ண சதாமுதபானமு ம்
மென்மேலுமக்கல்லோ வாச்சுது *

கஎ. நாராயணரூப ராமந்தராமகிரு ஷ்
ணரும்நந்தகோப ராதியாம் அந்தச்
சீராளரெல்லா மிருக்குமிடம்வந் து
சேர்ந்ததுவுமெங்குங்கி யாதியாம் *

கஅ. திருவடிகள்விளக் கிக்கொண்டுபின்னு ஞ்
சேர்த்தியில்மேவியும் பாலனங் கொண்டார்
கருணையாளர்க ளன்பனையென்றுரு ங்
கண்டுசெய்வார்பரி பாலனம் *

ககூ. இந்தக்கஞ்சன்மன மின்னமுமென்ன வா
யிருக்குதென்றறி வோமென ஸாமி
அந்தவிரவு மவிடத்திருந்தா ரே
ஹரிராமகிருஷ்ண வாமனர் *

## கஞ்சராஜன் துசசொபபனஙகாணல்.

---

விருததம.

விளையாட்டாயரிராமா மதுரைமூதூா
　　வீதிவநது பலமுளள விலலொடித்தும
வளைகினற சேனையெலலாம மடிததிநத
　　வகையெலலா மறிநதுகஞசன மிகவுமஞசி
எளிகிராம நிதநிரைய தனறியவவி
　　யூாமுழுதும நினைவுகள விளிலுஙகண்ட
துளகால தூதரொனறுந துனனிமிததம
　　ஊணிகளே நெஞசினிலே தோணிககேளே.

தரு, இராகம-சஙகராபரணம, ஆதிதாளம.

பலலவி

தூணிமிததஙகணடானேபோஜன கஞசமகாராஜன
தூமதியசுராவிசு　　வாஸன　　*

அநுபலலவி

நிாணயமாயககணணுடிதண ணீாநிழலைபபாாககும போது
மனனனுடலதலையிலலாமற கணடானவனறப　　பாது　　(தூா)

சரணஙகள.

௧. தனதுகணணிரணடிலொரு கணணிலலாறுபநிழலிற　　கணடான
　　சநதிரனொனறையிரணடு சநதிரனாகவுங　　கணடான
　இனனுமொருதீபநதனனை யிரணடுதீபமாகக　　கணடான
　　இருகையினவிரலகளெலலா மிலலாதவனாகக　　கணடான (தூா)

௨. தனனிழலிறசரீரமெலலாஞ சலடைககணணுயததுளைகள　　கணடான்
　　சகலபிராணிகளுடநாதத தவசசொலலாகககேளவி　　கணடான
　சொனனமயிஙகளாகவே மரஙகளெஙகுநதுலஙகக　　கணடான
　　தூளிகளசேறுகளிலே தனகாலடிதோணுது　　கணடான (தூர்)

௩. சுழலுமிநதவகையாக விழிபபிலேதூணிமிததங　　கணடான்
　　சொபபனததிறபிணஙகளையா லிஙகனஞசெயயவே　　கணடான்
　கழுதையினமேலேறியநதக கஞசனவீதிவரக　　கணடான
　　காவலாதாமனாககிழங கைபபுசிககககணடான　　கணடான (தூா)

௪. எணணெயததலையாயிருநதுந திகமபரனுயததனனைக்　　கணடான
　　இசைநதுசெமபருததிமலா மாலையாகததரிககக　　கணடான
　திணணமாயககனவிலேயு மிநதவகையனேகங　　கணடான
　　தோநதுபாாததுமரணககுறியெதென றுகொணடேபலவுங்கணடான (தூர்)

## கஞசராஜன் மலலரஙகத்துககு வரல்.

---

விருததம.

விரிவான துனனிமிதத மிவகைககஞசன
　　விழிபபுடனே சொபபனததுங கணடுநெஞ்சங்

திரிவாகி மரணவர வறிந்துதாப
சிந்தையனாய்த் தவிப்பதிலுந் தபனன்சேர்வுந்
தெரியாதா சாணூரா திகளையேவித்
திரும்பவுநதா னங்குமல்லர் விளையாட்டென்னும்
பெரிதான வுத்ஸவத்தை யாரம்பிக்கும்
பேரிதாம் மல்லரங்கப் பேரிதாமே.

தரு, இராகம்-அடாணா ஆதிதாளம்.

பல்லவி.

மல்லரங்கத்திலே ராஜமஞ்சத்திலே
வந்திருந்தானேகஞ்சன்.

அநுபல்லவி.

வல்லவராம்மன்னரெல்லாம் மஞ்சங்களிலிருக்கவே
சொல்லுமந்திரிகளென்னுந் துஷ்டாசூழ்ந்து நெருக்கவே (மல்ல)

சரணங்கள்.

௧. இரத்தினமிழைத்ததூண்க ளூயர்மல்லரங்கத்திலே
சுத்துமன்னரிருககுமஞ்சஞ் சோடித்தஅங்கத்திலே
எத்திசையுமல்லர்வாத்திய மிசைபிரஸங்கத்திலே
வத்திரதோரணங்கொடிகள கட்டுஞ்சிங்காரத்திலே (மல்ல)

௨. இவகைபந்தமதனைதனி லுள்ளஜனங்களுமிக்காஞ்
சுவையுடன்வெளியூர்களின் ஜனங்களும்வந்தொருமிக்காந்
தவமிகுமந்தணரொடு க்ஷத்திரியனாமுன்னிடுதற்காம்
எவரொவரொவ்வுலாஸமாக விருக்கவேணுமப்படிக்காம் (மல்ல)

௩. ராஜர்கள்நடுவிலேரா ஜாதிராஜகஞ்சனும்
போஜனவன்மிகவுந்துய ரடைந்திருக்குநெஞ்சனும்
பேசுமல்லர்கைகொட்டிக் கொண்டுயர்சத்தமிஞ்சனுந்
தேசமெங்குஞ்செயிப்பதென்றே கருவிக்கக்கண்டஞ்சானும் (மல்ல)

௪. சாணூரன்முஷ்டிகன்கூடன் சலனதோசலனுங்கூடக்
காணுமல்லாசாரியர்க ளிவர்களென்னும்மிர்மூடர்
பூணுமலங்கிருதத்துடன் புறப்பட்டாரேகுடிகேடர்
வேணுவாத்தியம்பிடித்துத்தூரியம் முழக்கக்கண்டதோர்விசேடம் (மல்ல)

௫. நந்தர்முதலாயனைக்கஞ் சனழைத்தும்வாச்சொல்ல
வந்தவர்கள்கைகாணிக்கை யிடடுக்கண்டதென்சொல்ல
அந்தவிடத்தின்மஞ்சங்கள் மீதுமிருந்தார்மெல்லச்
சுந்தரகோபாலகிருஷ்ணன் மகிமையாருமறிவுதல்ல (மல்ல)

௪உ-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன் திருவடிகளே சரணம்.

# ௪௩-ம் அத்தியாயம்.

## அவதாரிகை.

விருத்தம்.

எட்டிலைந்து மூன்றுஞ்சேர்ந் திடுமெத்தியாயம்
 ஈதிலே ராமர்கண்ணா ரரங்கமேவித்
துட்டமாம் மாதங்கந் தனையும்வென்று
 தொடர்ந்துவந்த அம்பஷ்டன் றனையுங்கொன்று
அட்டியில்லா மல்லரங்கத் துட்புகுந்து
 அனைவர்க்குந் தசவிதமாம் ரூபங்காட்டி
முட்டிகசா ணூரனுட வீரவாத
 மொழிகொண்டா ரதற்கிசைந்த வழிகண்டாரே.

## கஞ்சராஜன் ராமகிருஷ்ணர்களை மல்லரால் வதைக்க நினைத்தல்.

விருத்தம்.

தனுற்பங்க முதற்கருமந் தன்னால்முன்னந்
 தங்கள்மகி மையைக்கஞ்சற் கறியவைத்துந்
தொனிப்பாக அவன்மரணக் குறிகளான
 துர்ணிமித்தம் பலவாகக் கண்டிருந்தும்
மனப்பாலே யேகுடித்து ராமகிருஷ்ணர்
 மாதாபி தாக்களையும் விடாமலின்னம்
நினைப்பிலே யரிகளையுங் கொலலாமென்றே
 நேரிட்டான் மலலர்களாற போரிட்டானே.

## கண்ணன் குவலையாபீடமென்னும் யானையை வதைத்தல்.

விருத்தம்.

மல்லரங்கத்தில் வந்தவனிருந்து மல்லரைச்சட்டமுங் கட்டி
 மல்லயுத்தத்தை யேதொடுத்தங்கு மல்லராற்பேரிகள் முழக்கும்
எல்லையிற்சத்த மெப்படியென்னி லிராமகிருஷ்ணர்களிடம் யாதும்
 இல்லையேகுற்றம் மாதுலனான விக்கஞ்சவதைதோஷ மில்லை
நல்லதேயென்று முழங்கலைக்கேட்டு ரவியுதையத்திலே நியமம்
 நாடியுஞ்செய்து நிரபராதிகளா ரங்கலீலைகளையுங் காணச்
சொல்லுமம்மதுரா பட்டணம்புகுந்து துடிமல்லர்சபையின்வா சலிலே
 தும்பியையடித்த வெம்பிரான்கதைய தும்பிரதாபமுங் கேளே.

தரு, இராகம்-ஸாவேரி, ஆதிதாளம்.

பல்லவி.

குவலையாபீடமாங்க றுவலையாதவகுஞ்சரச்
சிவலையாங்கண்ணன்வென்றார் குவலயவேந்தே.

அநுபல்லவி.

அவலைக்கொண்டுங்குசேலர் கவலையெல்லாந்தீர்த்தருள்
திவலைகொடுத்தார்துழாய் மவலையணிந்தாதன்மா

யவலைபூட்டியெசோதை சவலையென்றுங்கோவியர் க்
குவலையத்தோள்கொடுத்தா ரவலைகடற்றுயின்று ர்
அணிமணியுரரொரு கணிகையினுடல்வ ளை
வெணிமிர்தரவருள் பணிலமிலகுகர ர் (குவலை)

சரணங்கள்.

க. மல்லரங்கவாசலிலே வழிமறித்துக்கொண்டிடுங் கு
வலையாபீடமென்னும்மா தங்கம்
வல்லமையாய்நிற்கவதின் மேலிருந்துமேவிக்கொண் டு
மாவுத்தன் அம்பஷ்டன்வெகு துங்கஞ்
செல்லவுஞ்செலுத்திக்கொண்டு இருப்பதையுங்கண்டுமெங்க ள்
செங்கனிவாயராம்நர சிங்கம்
கொல்லுதற்கேயுத்தகோலங் கொண்டிடுப்பையிழுத்துக்கட்டிக்
கொண்டையையிறுக்கினதோ ரங்கம்
கொண்டுகோடையிடி போலே மாவுத்தனைத்
தண்டுளவமாலை மாலே கம்பீரமாய்க்
கூறுவாரம்பஷ்டா அம் பஷ்டா எங்கட்குவழி
மாறிவிடடாதுஷ்டா துஷ்டா இல்லாவிடிலே
குஞ்சரத்துடனேநீயுஞ் செல்வதெம ஹரடா
என்சொல்லுக்கிரண்டில்லை யிதனையூணிப் பாரடா
பஞ்சையேநீயெங்களுடன் செய்வதென்ன போரடா
துஞ்சவேளைவந்ததென்று தோணிநெஞ்சிற் சேரடா
சொலுமெதிர்முகமுடன் நிலுனதினிருபு ய
வலுமைகளொடுமுயிர் நிலையறிகுவமென க் (குவலை)

உ. மாலானவர்வீரம்பேசி யதட்டும்போதந்தஅம்பஷ்ட ன்
வலுமைகாட்டிச்சினத்தை மேவினன்
காலாந்தகவெமனைப்போலும் யானையைக்கோபஞ்செய்வித்து க்
கடுகிக்கண்ணன்மீதி லேவினன்
ஸ்தூலாகாரமாயானையும் வாசுதேவனைத்துரத்தி த்
துதிக்கையால்வளைக்கவுந்திப பூவினன்
லீலாமானிடனுமங்க தின்றுதிக்கைநின்றும்நழு வி
யெழுந்துகிட்டிவந்துபினனுந் தாவினன்
இறுக்கிமுஷ்டிபந்தத் தாலே காலிலிடித்துஞ்
சுறுக்கிலேமறைந்தார் மாலே தந்தியுயினா
இழப்பதையெண்ணுமல் நகந்து நகந்துகொண்டு
புழைக்கையாலங்கங்கே முகந்து தேடிவரவும்
இன்னமுங்கேசவன்வெளிப் பட்டதிபலத்தி னாலே
மன்னவனேயந்தயானைப் பின்புறத்துநின்றும் வாலை
என்னசொல்வேன்பின்னுக் கிழுத்தனதெபபடிப் போலே
பன்னகத்தைவால்பிடித் திழுக்குங்கருடனைப் போலே
படவரவதின்முனம் நடனமதிடும்ஹ ரி
யிடமனதுறைநல திடமுளமனவ னே (குவலை)

௩. இருபத்தைந்துவிற்கடைதூர மந்தயானையைப்பின்னுக்
கிழுத்தானெனப்பதையுந்தந்தி கண்டது
குருபத்தினனவனேகேளாய் வாற்புறத்திற்பவனாக
குஞ்சரம்பிடிக்கமனங் கொண்டது
மருமத்தையறியின்னன் மிடசாரியாக்க ரி
வந்தாலறிவல்சாரியாயவர வெருண்டது
நிருபகஞ்சனேவுங்கைமா மருதஞ்சாய்த்தானைப்பிடிக்க வ
னேகாந்தரமங்கனே சுழன்றது

நிலத்திலொருசிறு பாலன் கன்றினவாலப்பற்றிப
பிலத்திழுக்குநோக்கோ பாலன் வாலவயதில
நிசமாயாவினகன்றின் வாலைக் கையாறபிடித்து
விசைகொண்டிழுத்ததுபோலே யிழுத்திழுத்து

நெய்யையுண்டானெதிர்வந்தும் வாரணத்தைச் சுத்தினார்
கையினாலடித்தடித்த தடிக்கடி தூரத்தினா
ஐயத்தளித்தள்ளிக்கீழ் விழும்படிக் ஓரத்தினா
மெய்யாயவஞ்சனையடிய தாயத்துரத்தி யெத்தினா

விகளிதமாமலா முகபத்கரவி ழி
யுகாவித்துகுலமணி மகிமையெவரறிவா ர (குவலை)

௪. வஞ்சனைவிளையாட்டினால யானையைத்துரத்தும்போ து
மாயனுங்கீழேவிழுந்துங் காட்டினா
குஞ்சரஞ்சினந்துவந்துங் கண்ணனமேற்கொம்பாலிடிக்கு ங
கூறறிந்ததினமுன்மே தாட்டினார்
அஞ்சனவண்ணருமங்கே யெச்சரிக்கையாயெழுந்து ம
அந்தக்கொம்பிடிப்புவிக்கு ளீட்டினா
நெஞ்சுநொந்துமாகளிற்றின் றந்தம்பூமியைப்பிளக்க க
னோட்டுக்கோபக்கனலை மூட்டினா

சிராமயனெனறனபாபொருந்தத் துதிகண்ணனமேற
போருமைமிஞ்சமேலேயிருந்த மாவுத்தனொல்லாம
னேரிடமுறுதியா யேவ வெகுண்டுதுமபி
வீரிடமெஹரிமீது சாவக குறுகிவந்து

கேமிகையாலயானைத்துதிக்கை பிடித்திழுத்தாரே
பூமிமேலடித்தத்தனமே லேறியுந்துவைத்தாரே
சாமிநரசிங்கமூர்த்தி யென்னவேமிதித்தாரே
மாமதப்புழைக்கையானைக் கொம்பினைப்பறித்தாரே

மறலியின்றரமனை யுறவதுமதக ரி
பெறவுதவினாரரி நறைகமழ்துளவின ர (குவலை)

கண்ணன் யானைப்பாகரை யடித்து மல்லரங்கஞ்சேரல்.

---

விருத்தம்.

பறித்திட்ட யானைக்கொம்பத்தாலத்திப
பாகரையெல்லாமடித்து முன்னேமாக்கம்

மறித்திட்ட கரிகரியாச் சென்றுவிட்டு
மல்லரங்கத் துட்புகுந்தார் மாயனங்கே
உறித்திட்ட மானவெண்ணெய் தயிர்பாலாடை
யுண்டகுழ வணப்பிள்ளை யவர்க்குட்வேதாப்
பொறித்திட்ட பொறிப்போல வீரவேஷம்
பூண்பாராம் யாவர்களுங் காண்பாராமே.

## கண்ணன் மல்லரங்கிலுள்ளவர்களுக்குப் பத்துவித சேவைதரல்.

விருத்தம்.

யானைக்கொம் பிணைத்தரித்த தோளுமந்த
யானைமத மிரத்தவிந்து நிறைந்திலங்கும்
மேனியுடன் முகாரவிந்த வியாவைமுத்தும்
விளங்கவே வீரவிலக் குமியைக்கூடி
மானிலத்தி லிடையர்களுஞ் சூழ்ந்துநிற்க
மல்லரங்க பதியிலண்ண னுடனேகூடத்
தானந்த வனமாலி தசரஸத்தைத்
தந்திட்டார் கஞ்சன்முன்னே வந்திட்டாரே.

தரு. இராகம்-ஆனந்தபைரவி, ஆதிதாளம்.

பல்லவி.

தசரஸங்காட்டினாையா மெய்யாகவே
தசரஸங்காட்டினாையா *

அநுபல்லவி.

வசுதேவதேவகிகு மாரகம்பீர தீர
பசுபாலகிருஷ்ணனந்தப் பலபத்திரருடனே சேர (தச)

சரணங்கள்.

க. சாணூரமல்லருக் கிடியைப் போலே யந்த
வேணுகோபால ரானநெடு மாலே *
தோணும்ரவுத்திர ரஸத்தைமென் மேலே சக்கர
பாணியன்பருககருள் தோணியங்கொருக் காலே * (தச)

உ. உத்தமபுருஷ ராகவே பூமி தனில்
மத்தமனிதாக்கும் யாதவ ஸாமி *
மெத்தவற்புதரஸங் காட்டினார் நேமி யவர்
வித்தையெவரறிவார் ஸத்தியஸ்வரூபர் தாமித் * (தச)

ங. மங்கைமார்கட்கு முருவஞ் சூட்டி வரும்
ஐங்கணைமாரன்போலும் மையல் பூட்டிச் *
சிங்காரரஸத்தையு மங்கே காட்டி மல்ல
ரங்கநாதராய்நின்று மெங்கள்வினையை யோட்டித் * (தச)

ச. ஆயர்தங்களுக்கெல்லாங் கிட்டின பந்து வாகி
மாயன்நகைப்புரஸ மங்கனே தந்து *

| | | | | |
|---|---|---|---|---|
| | காயாம்பூவண்ண னவதரித்து | வந்து | நல்ல | |
| | வேயர்வாயரரவப பாயாரரிய | சைந்து | * | (தச) |
| ௫. | மண்டலமீது துஷ்ட மன்னருக் | கெல்லாங் | கிருஷ்ணன | |
| | தண்டநாயகராகி யெங்கினுஞ் | சொல்லாம | * | |
| | மண்மேவீரரஸதனதைக காண்பித்தா | வல்லா | மைமயை | |
| | அண்டாமுனிவரொவா கண்டாரரயாந்தறி | யலாத | * | (தச) |
| ௬. | தந்தைதாய்களுக்குக குழந்தை | நேராய | அர | |
| | விந்தநயனஹரி யவா | பாராய | * | |
| | ஸந்ததமுங்கருணை ரஸம | நாராய | ணா | |
| | தநதுமவாசெயத விந்தைசொல்கிறேன் | வாராய் | * | (தச) |
| ௭. | கஞ்சராஜனுகரு முன்னேநேருங | காலன் | போலே | |
| | மிஞ்சுமபயரஸத தைககோ | பாலன | * | |
| | அஞ்சாதுநின்று ஜயலக்ஷ்மி | லோலன | நீல | |
| | மஞ்சாருமேனிஹரி பஞ்சாயுதவி | சாலன | * | (தச) |
| ௮. | மகிமையறியாதவா களுககுவி | ராட்டு | ரூப | |
| | ஸகிதராகபயங கரரஸதனதக | காட்டு | * | |
| | சிகிபிஞ்சமௌலி யரிவைகுந்த | நாட்டு | பபதி | |
| | அகிசாயியவாசெயத விகிதமேவிளை | யாட்டு | * | (தச) |
| ௯. | யோகிகளுககெல்லாம பரதததுவ | மென்னுஞ் | சாந்தி | |
| | யாகியரஸஙசொரிந்த தாரையா | மினனும | * | |
| | ஏகபரதேவதா ரூபமென் | றுனனும | ஹரி | |
| | பாகவிருஷ்ணிகளுககே மோகபக்திதந் | தெனனுந | * | (தச) |

இராமகிருஷ்ணாகள கஞ்சராஜன் அசசமுறுமபடி விளங்கல்.

விருததம.

இநதவகை தசரூப தசரஸஙகள
இசையவஙகே காட்டியே யண்ணன்கூட
அநதமலல ரஙகிலரி விளஙகினரா
அவனிபதி யேகேள்கு வலையாபீடத்
தநதியடி பட்வொருவ ராலுமவெலலத
தகாதவராயப பயமினறி நிறபவசசம
முநதுதை ரியசாலி கஞ்சனகூட
மூடினன மனதுமிக வாடினனே.

திபதை, இராகம்-அடாணா, ஆதிதாளம்.

கண்ணிகள.

| | | | |
|---|---|---|---|
| ௧. | அந்தரஙகததிலதிற கினற | ராமகிருஷ்ணரே | மிகவு |
| | யாநதபராககிரம சாலி | ராமகிருஷ்ணரே | * |
| ௨. | பலவிதவேஷஙக ளாகி | ராமகிருஷ்ணரே | பூவில |
| | விலையிலாபரணந தரிததும | ராமகிருஷ்ணரே | * |

ரு. மாலைவஸ்திரந்தரித்தும் ராமகிருஷ்ணரோ நல்ல
" கோலக்கூத்தாடிபோலவே ராமகிருஷ்ணரோ "
சு. பார்க்கின்றபேர்மன துகளை ராமகிருஷ்ணரோ யிழுத்துச்
சேர்க்குங்காந்தியால் விளங்கும் ராமகிருஷ்ணரோ "
௭. அச்சமின்றியச்சுதராம் ராமகிருஷ்ணரோ நிற்கும்
உச்சிதபுருஷாக ளாம ராமகிருஷ்ணரோ "

இராமகிருஷ்ணர்களைக்கண்டு ஜனங்கள் மகிழ்தல்.

விருத்தம்.

மல்லர்சபை மீதுமஞ்சங் களிலிருந்த
மன்னருடன் பட்டணத்துச சனங்களாசூழ
எல்லவருங் கணடுமிகுங் களிபபிறைகண
ணிமையாடா மறபாாதது மிராமகிருஷ்ணா
முல்லைநகை முகத்தழகைக கண்களாலே
முற்றவுமபா னஞ்செய்து மாநருராகி
எல்லையிலா வாசைமிகுந ததையுஞசொல்வேன்
இனியெனபார் சுகபபிரம முனியெனபாரே.

இதுவுமது.

கலித்துறை.

நண்பாநயனங்க ளாலேபருகியும் நாவதினால்
உணபாகள்போலவு முகருகளா லு முவநதறிஞ்சிப
பணபாயககரங்களி ைறகடடுவாரெனனும பானமைசெய்தாா
திணபாாபுகழபரி கூஷிததேகணைனயிச செலவநனறே.

இராமகிருஷ்ணாகளை ஜனஙகள் புகழ்ந்துரைத்தல்.

வெணபா.

பலபத் திரருடனே பைங்கொணடல் வண்ணன்
நிலையை மலரரஙகில் நின்ற—வுடகோா
கருதிக் கருதிவெகு காதலுட னங்கோா
ஒருவாக கொருவ ருரைககும.

தரு, இராகம-சங்கராபரணம, சாபுதாளம.

பல்லவி.

ஜனங்களே ராமகிருஷ்ணரிவரோ
ஜனஙகளே

அநுபல்லவி.

மனங்கலங்கா தீரீங்கள் மாயாமனிதரிவ
கனங்கொண்டமகிமையைக கணடுஞ்சநதேகமென ன (ஜனங்க)

சரணஙகள.

க. இப்போதுநம்முடகண் காண கிருஷ்ணன
வெய்பபாய்விலலொடித்ததுந தோண

இப்பாலுமோகுவலை யாபீடமென்னும் யானை
தப்பாமலடிபடத் தான்கண்டபின்சொல் வானே (ஜன)

ஆனைக்கொம்பிதோ கிருஷ்ணன்றேன் மேலே கண்டீர்
மானுபாவரிவ ரோநெடு மாலே *

ஏனைச்சவுரியங்களி யாவுங்குணங்க ளெல்லாந்
தானேயறியலாச்சே சமத்தையென்ன சொல்லலாம் (ஜன)

ங. நோக்குந்திருமேனியுல் லாஸமும் கண்ணன்
வாக்குமதுரமந்த காஸமும் *

ஏர்க்குந்தைரியமும் இசைந்திங்கனே காட்டுதே
ஆர்க்குங்கேட்டிருந்ததை யதெல்லாம்பினைப் பூட்டுதே

ச. அந்தநாரணன்றனை நாட்டிலே தானே
இந்தவஸுதேவர்தன் வீட்டிலே *

வந்தவதரித்ததும் இந்தரெண்டுபே ரொன்று
சந்தேகமில்லாமலே சிந்தைதனி லெண்ணுவீர் (ஜன)

ரு. பைந்தொடிதேவகிபாற் பிறந்தார் உடனே
தந்தைவஸுதேவரால் மறைந்தார் *

அந்தநாள்முதலாக நந்தகோபர்வீட்டி ல
மாந்தும்வளர்ந்திருந்தா ரிந்தகிருஷ்ணனைப்பாரு ம் (ஜன)

சு. மூழக்கயாய்ப்பூதனையை யடித்தார் பின்னுஞ்
சுழற்காற்றசுரனையும் மடித்தார் *

மழைக்கார்நிறத்தரிவர் மருதிரண்டும்வேரோ டே
விழத்தள்ளிரைன்பதை மெய்யென்றுநம்பலா மே (ஜன)

எ. தேனுகனுடன்கேசி தனையும் நந்த
ஸூநுமிவர்சங்கசூ டனையும் *

மானிலத்தில்மலைப்பாம் பானவசு ரனையும்
வானிலேத்தியுங்கொக்கின் வாயைக்கிழித் ததுமிவர் (ஜன)

அ. காட்டுத்தீயையுமங்கே பக்ஷித்தார் பசுக்
கூட்டத்தோடும்ஆயரை ரக்ஷித்தார் *

ஆட்டிவைக்குமிவரோ குட்டிக்கையாய்ப் பணிமேல்
நாட்டியஞ்செய்தாரென்று கேட்டிருந்தது மெய்யே (ஜன)

கூ. தேவராஜன்மழையைத் தடுத்துக் கையாற்
கோவர்த்தனமலையை யெடுத்துப் *

பூவிலேழுநாட்குடை யேவிழாமற் பிடித்தும்
ஆவிலடயுனைககாகருந் கோவிந்தனிவ ராகும் (ஜன)

இதுவுமது.

விருத்தம்.

வரிசையாய் நித்தியஞ்சந் தோஷமீறி
மந்தகா ஸங்கடைக்கண பார்வையுள்ள

ஹரியந்த மகிமையுள்ள விந்தக்கண்ணன்
அலங்காரத் திருமுகமண் டலத்தைதானும்
தரிசனஞ்செய் தார்கோவி மார்கள்முன்னே
சிலவாடி யிருக்குமுகங் கண்டபோதுந்
தரிவையரோ யானந்தஞ் செயுதேயென்று
செப்புவார்க் குமயலையெ ழுப்புவாரோ.

இ து வு ம து.

விருத்தம்.

ஆனந்தநமக்கெல்லாங் கொடுத்தாலுங்கண்ணன்வத னரவிந்த
மானந்தவிழிக்கோவி மார்களிதைக்காணில்மனம் வாடுவார்க
ளானந்தசுதன்முகத்தி னழகுண்டுருசிகண்டா ரெவர்சகிப்பார்
யானந்தவகையையுனா செய்வேனென்றெழிலீடனே யிசைக்கின்றாரோ.

இ து வு ம து.

கலித்துறை,

பைந்தொடியீர்வெகு கீர்த்திமகிமையும் பாக்கியமும்
வந்துமுயர்ந்த தெதுகுலந்தானுஞ் சிவந்தகண்மு
குந்தனிரக்ஷக ராமிவரோவருங் கொள்கையினால்
அந்தவிவருக்கு முன்னேன்பலனு மதிசயமே.

## இராமகிருஷ்ணர்களைச் சாணூரமல்லன் யுத்தஞ்செய அழைத்தல்.

---

வி ரு த் த ம்.

கண்ணனுக்கண்ண ரிவர்பாக்கியசாலி காண்பிரலம்பனை யடித்துங்
கன்றுருவான தேனுகனுடன்ப காசுரனதியா மவனை
விண்ணினிலவிடுத்தா ரென்றுபல்விதங்கோ விந்தராலடியுண்ட வனையும்
விபரீதமாக நிச்சயமின்றி வெகுஜனவாக்கியங் களினால்
எண்ணிலாவகைக ளிராமன்மேற்சொலினு மேதேனுங்குறறமொன் றில்லை
இரண்டுருவாகி யொருவரோவந்த தென்பதற்கையமொன் றுளதோ
நண்ணியமல்லர் கூடமேலவ்வி ராமகேசவாகளை நோக்கி
நாவடங்காது கூவுவான்கேளமன் னுவவன்சாணூர மலனே.

திபதை, இராகம்-மோகனம், சாபுதாளம்.

க ண் ணி க ள்.

க. இக்குவலயத்திலே யுங்களிருவரைபபோல்
இலலைபராக்கிரம சாலி யென்றுங்
கைக்குத்துச்சண்டையிலே மிகவுஞ்சமர்த்தரென்றுங்
கஞ்சராஜனுங்களைக் கோவி *

உ. பார்க்கவேண்டியுங்களை யிவிடத்திலழைப்பிக்கும்
படியாசகிப்பாரிலுள்ள ஜனங்கள் ளெல்லாஞ்
சேர்க்குமன்னர்க்குப்பிரியம் வரத்தக்ககாரியங்கள்
செய்துமகிமைபெற்றுற் கணங்கள் *

௩. தருமனதினாலேதான் காரியங்களாலேதா ன்
ஸரஸவாக்குகள்தான்வீண் போமோ ஏதும்
அருமையறியாரிடங் காரியங்களைக்காட் ட
அதெப்படிவிபரீத மாமோ *

௪. பசுக்கள்மேய்க்குமிடைய ரிடத்திலுங்கன் றுமேய்க்கு ம்
பசுகளிடத்தினிலு முங்கள் உடைய
நீசமானசமத்தைககாண் பித்துமவர்சந்தோஷ ம்
நிறைந்தாரென்பதேபிரகா சங்கள் *

௫. வனங்களிற்பசுக்களை மேய்த்துக்கொண்டுநீங்களு ம்
மாடுமேய்க்கிகளுடன் கூட வெகு
கனங்கொண்டமல்லயுத்தஞ் செய்தீரவைகளெல்லா ங்
காரியமல்லதள்ளிப போட *

௬. இங்கேயிந்தக்கஞ்சனும் மகாராஜன்சபையி லே
ராஜாகளுக்கெல்லாஞ்சந் தோஷம் வர
எங்களுடனேநீங்கள் மல்லயுத்தஞ்செய்தால்வரு ம்
ராஜவெகுமதிவி சேஷம *

௭. தேசமனிதரெல்லாம் மகிழ்வார்ஜனங்களுக் க
திபதிராஜனல்லால்வே றிலேயே . யிந்த
ராஜசபையிலுங்கள சமத்தைக்காண்பிக்கலா மே
நல்லசமையமிது இலேயே *

கண்ணன் சாணூரமல்லனைப் பார்த்துரைத்தல்.

---

விருத்தம்.

தேசகாலங்களுக்கு இதமதாகச்
செபபுமந்தச் சாணூர மல்லர்வாக்கை
வாசுதே வனுங்கேட்டு மனமகிழ்ந்து
மல்லயுத்தங் கிடைத்ததென்று வந்துமங்கே
பேசிநிற்குஞ் சாணூர மலனைநோக்கிப்
பினுமங்கு வெண்ணெயுண்ட வாய்திறந்து
கூசாது சொல்வதைக்கே ளபிமன்றந்த
குமாரனீ பாகவத மாரனீயே.

தரு, இராகம்-கல்யாணி, ஆதிதாளம்.

பல்லவி,

மல்லாவிது தருமமல்ல சாணூரமல்ல
மல்லாவிது தருமமல்ல *

அநுபல்லவி.

வல்லாமையுள்ளநீங்க ளெல்லோருங்கூடிப்பல ம்
இல்லாதபேருடனே மல்லயுத்தஞ்செய்வ து (மல்லா)

சரணங்கள்.

௧. போஜபதியாகுமிந்தக் கஞ்சமகாராஜ னுக்குப்
பூமேலுளளோர்பிரியஞ்செய் வதுந்தெரியுமென்ற னுக்கு

ஊசிநுழையாதகாட்டிற் றிரிகுவோம்நாங்களு மிந்த
ராஜசஞ்சன்மனதுக்கேற்க நடக்கவேணுமே முந்த (மல்லா)

௨. எங்களுக்குநீசொன்னது தெரியாமல்முன்னம் போச்சுது
இப்போதனைச்சொன்னதேநல் லவுபதேச மாச்சுது
உங்களைப்போலெங்களுக்கென் னதெரியுஞ்சிறு பாலர்
எங்களொத்தபசகளுடன் ஆடுமனு கூலர் (மல்லா)

௩. மலையடிவாரத்திலும்பிருந் தாவனத்திலுமெந் நாளும்
மாடுமேய்க்குமிடையருடன் விளையாடுவோம்நாங்கள்தோளும்
வலுமைமிகுமிந்தமல்ல ரங்கத்திலேமல்லர் கட்குத்
தலைவருடன்கூடவேயுத் தத்துக்கழைப்பது மக்கு (மல்லா)

கண்ணனிடஞ் சாணூரமல்ல னுரைத்தல்.

---

விருத்தம்.

வேணுகோ பாலனிவை யுரைக்கவங்கே
மீட்டுமந்தச் சாணூரன் மொழிவான்கேளுங்
காணுநீ குழந்தையன்று பாலனன்று
கருதுபல பத்திரனு மதிகவீரன்
ஊணியா யிரம்யானை பலத்தைத்தானே
யுள்ளகுவ லையாபீட மென்னும்யானை
பாணிவிளை யாட்டினல் நீயேவென்றாய்
பார்க்கின்றோ முன்னையிங்கே யேற்கின்றோமே.

இதுவுமது.

விருத்தம்.

இவிடத்தி லுங்களுடன் கூடயுத்தம்
ஏற்பதற்குப் பலசாலி யிங்கார்சொல்லு
கவடத்தாற் சொல்லவில்லை நிச்சயந்தான்
கண்ணனே யென்னுடனே நீபோராடு
குவடுநிகர் பலசாலி ராமனோடுங்
குறுகிமுஷ்டி கனமாசெய் யட்டுமுன்னைத்
தவிடாய்த்தெள கிறேனென்ன வீரவாதந்
தான்சொனான் சாணூர னேன்சொன்னானே.

சங-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன்திருவடிகளேசரணம்.

## ௪௪-ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

---

விருத்தம்.

முட்டிகசாணூரனுடன் மல்லர்பாடு
முடியவே கஞ்சனையும் வதைத்துப்பின்னுங்
கட்டிகட்டி யாயழும் மாமியென்னுங்
காரிகையைத் தேற்றியன்னை பிதாவைக்கண்டு
மட்டிலா விளையாட லிராமகிருஷ்ணர்
வகையிந்த நாற்பத்து நான்கிலென்றும்
ஒட்டிவரு ஸ்ரீதர்வி யாக்கியானம்
உரைகின்றார் தமிழனந்தம் விளக்கின்றாரே.

### இராமகிருஷ்ணர்கள் மல்லயுத்தஞ்செயல்.

---

விருத்தம்.

நினைத்தபடி நிறைவேற்றுங் கண்ணனங்கு
நேரிட்ட சாணூர மல்லனென்பான்
தனைத்தொடர்ந்தா ருரோகிணிகு மாரனொன்னுஞ்
சங்கருஷ ணருமுஷ்டி கனைவளைத்தார்
சனத்திரளினுடன்கூடி மன்னர்சூழ்ந்த
சபையிலே கஞ்சனிருந் ததனைப்பார்க்க
அனர்த்தமதை விளைத்துமல்ல யுத்தங்கொண்டே
யாடினார் பணித்தலைமே லாடினாரே.

தரு, இராகம்-சங்கராபரணம், ஆதிதாளம்.

பல்லவி.

மல்லயுத்தஞ்செய்தாரோ ராமகிருஷ்ணர்
மல்லயுத்தஞ்செய்தாரோ

அநுபல்லவி.

மல்லயுத்தஞ்செய்தாரோ வல்லாமைகூறினா ரோ
பொல்லாமட்டமுஷ்டிகனோடிராமனு ங்
கல்லாதவச்சாணூர னொடுமோமனு ம் (மல்ல)

சரணங்கள்.

௧. கைகளினாற்கைகளைக் கட்டிக் கால்களினாலே
காலகளையும்பின்னியே கிட்டி யொவ்வொருத்தராய்ச்
செய்கிறோம்நாஞ்செயமென் றெட்டி யிழுத்திழுத்துந்
திண்மையதாய்ச்செக்கலி கொட்டி யிரண்டுகையின்
கனிஷ்டிகைவிரற்களை நீக்கி மற்றவிரற்களைம டக்கிச்
சினத்துமுழங்கைகளைத் தூக்கிக் கொண்டடித்துஞ்சிவக்க நோக்கிக்
கனத்தமுழங்கால்களிற் றாக்கி வலுத்துக்கெணடைக்காலை நோக்கி
அனர்த்தமதைமிகவுண் டாக்கி யிரக்கமென்பதையும் நீக்கிக்
கலந்திடித்துத்தலையொடுதலை முட்டி மார்பொடுமார்பிடித்து
மலைந்துகண்ணனுஞ்சாணூரனைய தட்டிக் கையொடுகைகோத்து

வலந்திரும்பியுமிடந்திரும்பியுமி ரட்டித்தள்ளிச்சுற்றிமல்லுக்கட்டி
நிலங்குலுங்கவுந்தூக்கிப்போட்டுப்புரட்டி யுயரவெடுத்துப்பின்னுங்

கன்னேரினவே சொல்வதை நாட்டியும்
முன்னேபின்னே நடந்து காட்டியும்
என்னேயென்னே யென்பது கோட்டியுஞ்
சொன்னேனின்னஞ் சொல்வேன் சூட்டியும் (மல்ல)

௨. காட்டியேவளைந்த மட்டாகப் பாதங்கள்முழங்
கால்களையுங்குண்டுக் கட்டாகக் கட்டியேபின்னும்
மாட்டியவனைக்கீ ழிட்டார்கள் உயரத்தூக்கி
மற்றொருகையிலேந் திட்டார்கள் சுழன்றுசுற்றிக்

களைந்தவர்கால்களைப் பிடித்துத் தூக்கிவாதங்களைப் படித்து
நுழைந்துகைகால்களை மடித்துக் கட்டிப்பறகளையுங் கடித்து
சுழன்றங்கேயிருவருந் துடித்துத் தொடுத்துமல்லயுத்தமுந் தடித்துப்
பிளந்திடுவோமென்று பிடித்துப் பேசியுறுக்கியு மடித்துக்

கண்ணனுடனிப்படியந்தச்சா ணூரன் பூசலையிடவெள்ளை
வண்ணமுள்ளபலராமனுனுஞ் சூர னுடன்முஷ்டிகன்பொருத
ஒண்ணுதலார்மடவார்சளெலாஞ் சேர நின்றங்கனேதிகைத்தும்
அண்ணலாங்கிருஷ்ணனுவதிசுகு மாரன் சிறுமதலேயேயென்றுங்

கருதிச்சாணூரனும் பல வானே
ஒருவன்சிறுபாலக னிவன் றனே
இருவர்சோடுகட்டினதென் சொல் வேனே
அரிவைமாரொனவே யெம்பெரு மானே (மல்ல)

௩. தண்டநாயகன்சஞ்சன் மட்டி பலவானுடன்
சவலைப்பிள்ளையைச்சோடு கட்டி வேடிக்கைபார்க்கச்
சண்டைமூட்டிவிட்டானே யொட்டி மற்றும்ராஜருஞ்
சனங்களும்பார்ப்பதல்லோ கெட்டி யென்றதைக்கண்டு

சகிக்காமலரிகிருஷ்ணன் மேலே யிரக்கங்கொண்டுதய வாலே
வகுப்புவகுப்பாய்ப்பரி வாலே மாதர்நின்றுஞ்சொல்வ திலே
ஜகத்தினில்ராஜ்சபை போலே யிந்தமன்னர்சபைக்கித் தாலே
மகத்தானவனியாய நூலே யடடாயிந்தக்குழந்தை மேலே

தடிப்பயலேயேவியேசண்டை மூட்டி ராஜனும்பார்க்கின்றனே
படிக்கும்ராஜனுமாளுலல்லோ கேட்டீ நீதைவேண்டாமென்பானே
தடுத்திதைச்சொல்லாமலும்பா ராட்டி வேடிக்கைபார்க்கின்றனே
தொடுத்துமற்றராஜருஞ்சனக் கோட்டி யுடனிதைப்பார்க்கிறனே

தருமமோவிதைப் பாரும்மின் ணோ
மருமஞ்சொல்லுவேன் கேளும்பொன் ணோ
கருமமென்னவி தென்றவர் நேரோ
பிரமஸ்வரூப விராஜமன் ணோ (மல்ல)

## இராமகிருஷ்ணர்கள் மல்லயுத்தஞ் செய்வதைக்கண்ட மங்கையர் இரங்கல்.

### விருத்தம்.

பங்கே ருகக்கண்ணர் மல்லயுத்தம
பார்த்துநின்ற மின்னார்கள பகர்வாரினன்ம
அங்கேசென றலமலேநே ருடனுமவசகி
ரமபோலு மசையாத வஙகமுள்ளார்
இஙகேயிம மலலரொஙகே மெதுவாநதேகா
இன்னமயெள வனமவரா விருகுழநதை
எஙகேயிந தசசபைககி தனனியாயம
எனபாதாமெ பெணகளெனனு மனபர்தாமே.

சிந்தை, இராகம்-மத்தியமாவதி, சாபுதாளம்.

### கண்ணிகள்.

க. இபபடிககொத்த அதாமமநடககு ம
இடததிலிருககலா காது என்று
செபபுமுலைமாதா சிலாசொன்னாினன ஞ
சிலாசொலவாாகளப போது *

உ. அறிவுளளபோி ராஜசபையென் ப
தஙகனேசெலலமாட் டார்கள் அதன
நெறியதெனனென்றற சொல்லுகிறேஙகேளு ம
நேரிழைமாாகளே நீஙகள *

ந. ராஜசபைகூடு மிடத்திலெனனென்று ல்
நலலதுமபொலலாதும நடககும அஙகே
பேசியபொலலாது நடபபதறிந்தா ற
பெரியோாகளதை யடககும *

ச. ஆகாதகாரியந தடுத்துசசொலலாம ல
அடபபடிசசொனனாலி ராஜன் மனம
நோகுமவிபரீத மாகுமெனறென்று ம
நுவலாதிருபபரோ மோசன் *

௫. சென்றுமநதசசபை தன்னிலவிபரீத ஞ்
செபபுவாாகளகாணு சிலபோ மேலும
ஒனறுநதெரியாமல மூடராயிருபபா ா
உமமனுழனஞியாயச சிலபோ் *

சு. அபபடிககொதத சபையிலேநல்ல பே
ரானவாசெலலபப டாதே யெனறு
பறபலசொலலியும பாாததிாகளாலை லு
பககமுநதானேதப பாதே *

எ. தடடாமலையாடிசக றறுகிறாள்கிருஷ்ண ன்
சததுருவானசா ணூரனும இஙகே

௫௪

வட்டமிட்டேச்சுற்று கிறான்பாருங்கோ டி
மல்லனுங்கோபகு மாரனும் *

௮. மெல்லியலார்களே கண்ணன்முகத்தி லே
வேர்வைசொரிவது பாருமே யிது
நல்லதாமரை யரும்பில்முத்துமுத்தா ய்
நாடுஞ்சலங்களை நேருமே *

௯. குழந்தைமல்லயுத்தஞ் செய்தாவிளைப்பி ற்
கொட்டாதோவியர்வைகள் பெண்டுகாள் நாமுங்
கழுந்துபோல்நின்று பார்க்கின்றமேயிதை க்
கண்களென்னுஞ்சொல்லும் வண்டுகாள் *

௧௦. இராமனுடைய முகத்தைநீங்கள்பார்க் க
வில்லையாமுஷ்டிக னுடனே யிந்த
நிராமயன்சண்டையிட் டிங்கேபொருமையா ய்
நேர்ந்ததிகோபத்தி னுடனே *

௧௧. நயனங்கள்சிவந்துங் கோபாவேசத்தா ல்
நகைக்கின்றநகை காணலாம் இந்த
வயனங்களென்ன வென்றுனைப்போமென்று ர்
மாதர்சொல்வதின்னம் ஊணலாம் *

௧௨. இனமதொன்றுதி புருஷபகவ ன்
இவரோதானவ தரித்துப் பூவில்
மனிதத்தேகத்தால் மறைந்துகொண்டியே ர்
வனமாலைகளைத் தரித்து *

௧௩. பலராமனுடன் பசுக்களைமேய்த்து ம்
பண்பாடியங் குதித்தாரோ மானே
தலமெங்கும்புகழ் கோகுலத்திற்பா த
சாரியாய்ச்சஞ் சரித்தாரோ *

௧௪. மலைவாஸருங்க மலையுமர்ச்சிக்கு ம்
மலரடிசேர்வை பவனை நித்தந்
குலவிமங்கள கரமாகவக் த
கோகுலத்தாரெல்லா மிவனை *

௧௫. மனதன்பாய்த்தரி சனஞ்செய்தாரோ ய
வர்கள்வெகுபுண்ணிய வான்கள் அந்த
வனமயிலாராங் கோவியார்மகி மை
மகிமையாமவர் மான்கள் *

௧௬. சேர்த்தியாயிங் கிவனைவருத்தந்தா னே
செய்கிறாரோசும்மா போமா வினைப்
பார்த்திராவிந்தச் சபையார்பேரில்கொரு ப்
பைவாரிக்கொட்டவேண் டாமா *

௧௭. நானுவிதவருத்த வேளையிற்கிருஷ் ண
ணைத்தரிசிக்கின்றோம் நேரோ பாரும்

ஆறுலோநாமிங்கே பண்ணியபுண்ணிய ம்
அற்பபுண்ணியம்மாத ராரோ

மதுரைமங்கையர் கண்ணனைப்புகழ்தல்.

விருத்தம்.

அப்படிக்குக் கோவியர்செய் தவமதென்னோ
அருமைதான் வடிக்கட்டு மழகதாகி
ஒப்புமையோ டிகங்கள் சொல்வதற்கும்
ஓரிடத்து மில்லையே நகைகள்பூட்டிச்
செப்பமா யழகுசெய்ய வேண்டுமோடி
தெரிவையரோ கண்களாற் பார்க்கப்பார்க்கச்
சொற்புதிது புதிதாகக் காணுதம்மா
தோணுவீர் நன்றாக வூணுவீரோ.

மதுரைமங்கையர் கோபிமார்களைப் புகழ்தல்.

விருத்தம்.

இந்தவகை யானபுகழ் செல்வங்கட்கும்
ஏகாந்த ஸதலமென்னு மீசுரோசன்
சுந்தரமா மமுதத்தைக் கணகளாலே
சூழ்ந்தனுதி னமும்பானஞ் செய்வதற்கும்
எந்தவகை கிடைக்குமடி பாருங்கோடி
யென்னபுது மையைச்சொல்வோ மிப்பூமிதில்
நந்தகோ குலத்தவாக்குக் கிடைத்ததந்த
நயனந்தான நயனநல்ல வயனந்தானே.

தரு, இராகம்-ஸவுராஷ்ட்ரம், திச்சிரதாளம்.

பல்லவி.

ஆராலறியலாம் ஆய்ச்சியர்தவத் தை
அதிகபுண்ணிய வதிகளவ ரோ.

அநுபல்லவி.

நாராயணரிவர் நந்தகோகுலத்தி ல்
ராமனுடனக லாமேயனுதின ஞ்
சீராடிககூடி விளையாடிககண டு
ஸேவைசெய்யுமந்தக் கோவிகளையெல்லா ம் (ஆரா)

சரணங்கள்.

க. கோவிமார்கள்பசுக் கறக்கும்போதினு ங்
குடத்தண்ணீர்நிறைந் தெடுக்கும்போதினு ம்
மேவுதானியத் தேவிமைச்சுமக்கு ம்
வேளையிலுமெந்த நாளையிலுந்தா னே
ஆவின்நெய்பால்தயி ரவைகளையெல்லா ம்
அனுதினமெடுத்து விற்கும்போதினு ம்
கூவிக்கூவியிந்தக் கோவிந்தனுமத்தை க்
கொண்டாடிவாரந்தப் பெண்டுகளெல்லோரு ம் (ஆரா)

உ. ததிகடைந்துபால் கொதியிடும்போது ந்
தாஷ்டீகமாய்ப்பசு மாட்டைககட்டும்போது ந்
துதிசெய்வாரொது பதியாகுமந ல
சுந்தரரீந்தர விந்தநயனனை ப்
பதிகளுக்கான பணிகளைமிக ப்
பரிவாய்சசெய்போது மொருமையாக வே
அதிதிபூஜையின் மீதிலுந்தியானிபபா ர்
அஞ்சனுகஷிகளே செஞ்சொல்வாய்ச்சிக ளோ (ஆரா)

ஙு. செங்கையாய்ச்சிமாருந் தங்கள்பாலர்களை ச்
சீராட்டித்தொட்டில்மேற ருராட்டும்போதிலு ம்
மங்கைமாரகளங்கு முல்லாஸமாக, வே
மஞ்சஙகள்மீதி ருந்தாடியபோதிலு ம்
பெணகள்நன்மனையை யங்கங்கேநனுய் ப்
பெருக்கிமெழுகும் போதிலுந்திவ்வி ய
மங்களவிக்கிரக ரிஙகிவளைநல் ல
மாநஸபூஜையில் தியானிக்கின்றுர்க ளே (ஆரா)

இ து வு ம து.

விருத்தம்.

ஆசையுட னிவருடைய லீலையெல்லாம்
அநுதினம்பா டிபபலுககு வதிலானந்தம்
மீசுரமாய்க கண்டமது தழதழதது
மிகக்கண்ணீர வரத்தரிவிக கிரமனுகிப்
பாசமிலா னிக்கண்ணன் றனேயேகானம
பணணுமிந்தக கோவியாபுண ணியர்களென்றும்
பேசினுர் கஞசனமல் லரங்கத்துறற
பேதையார் மதுரைநகாக கோதையாரே.

இராமகிருஷ்ணர்கள் மல்லர்களை வதைத்தல்.

வி ரு த் த ம்.

கும்பல்கும்ப லாய்க்கூடிக் கொண்டுபெண்டீர்
கூட்டங்கள் பயந்திதெலாங் கூறவஙகே
உம்பர்பிரா னெலாமறிந்தும் பயதமைதநீாகக
யோகீச ரீசரரி கணணனென்னும
வம்பவிழுந் துளபத்தான மலனையங்கே
வமைதப்பதற்குந் திருவுளமா யரங்கத்துள்ளே
பம்பரஞ்சுற றுவதைபபோற் சுறறிவந்த
பாஙகுதான் சொல்வதினி யீங்குதானே.

திபதை, இராகம்-பூரிகல்யாணி, சாபுதாளம்.

க ண் ணி க ள்.

க. சாணூரனைச்சுற்றி மல்ல யுத்
தஞ்செய்யும்போதங்கே நல்ல *

வாணுதலார்களுஞ் சொல்லக் கேட்டு
மகிமையுள்ளோராஞ் செல்லச் *

உ. செங்கண்ணன்றாய்தந்தை யாவர் எங்கள்
தேவகியும்வசு தேவர் *
அங்கும்புத்திரவாஞ்சை சேர்வர் மன
ததிகதுன்பத்தை நேர்வர் *

ங. அவதாரஞ்செய்துந் பவித்தார் மகிமை
யறியாதுமிகத் தவித்தார் *
அவர்மல்லவிதிப் படியே கிருஷ்ணன்
அஞ்சாமலேதானிப் படியே *

ச. சாணூரனுடன்போ ராடினார் எசோ
தைவீட்டிடும்மிகச்சீ ராடினார் *
ஊணிமுஷ்டிகனோ டணனே பாரில்
ஊடாடச்சங்கரு ஷணனே *

ரு. முகுந்தர்கைக்குத்துக்கா லுதை தலை
முட்டல்முழங்காலிடி யதைப் *
பகர்ந்ததாதிக ளாலேயே யிடி
பட்டுச்சாணூரனைப் பாலேயே *

சா. வச்சிராயுதத்தாலடி பட்டாற் போலே
மல்லனைலும்புபொடி பட்டான *
அச்சாணூரனுமடிக் கடி வாட்டம்
ஆகினதுங்கிருஷ்ணன்கை யிடி *

எ. பருந்துபோல்வட்ட மிட்டானே இரண்டு
பாணியும்முஷ்டிகொண் டிட்டானே *
வருந்தோடிவந்து சார்பிலே மல்லன்
வாசுதேவனுட மார்பிலே *

அ. இடித்தானேயந்த இடிக்கு ஹரி
யேதுஞ்சலியாமற் படிக்கு *
எடுத்துநின்றதைப் படியா மாலே
யின்னடியானைக்கோ ரடியா *

கூ. அடிபட்டதா லுறைக்குமா ஹரி
யல்லவென்றுதான் மறைக்குமா *
கடிகிச்சாணூரன் கையிரண்டுங் கிருஷ்ணன்
கைகளினாற்பிடித்துக் கொண்டும் *

க0. கிறுகிறென்றங்கே சுற்றினா ரோதுக்
கிப்பூமிமேலடித் தெற்றினார் *
குறுகிகூற்றனூர் கண்டானே மல்லன்
கூடிந்தப்பூமிமண் ணுண்டானே *

கக. இந்திரத்துவஜம் விழுந்தாற் போல
வேசாணூரமல்லன் விழுந்தான் *

அந்தவகைக்குவ மானமே சொல்வ
தாகுமொன்றிங்குறி தானமே *

௧௨. மாட்டுமந்தையி னடுவிலே செய்யும்
மங்களமானொன் றடவிலே *
கேட்டதுண்டேயொரு தூணிலே யிடைக்
கியந்தோரணங்கள் பூணிலே *

௧௩. அலங்காரமாயொரு புருடா கிருதி
யங்குண்டுசொல்கிறேன் பொருடாள் *
துலங்குமிந்திரத்து வஜந்தான் என்று
சொல்லுமதன்பெயர் கிஜந்தான் *

௧௪. அதுவிழுந்ததோ தோரணவே சாணூ
ரன்பிரோதத்தையுங் காணவே *
இலைதகிகராய்முன் னாலே பல
ராமனைமுஷ்டிகன் மேலே *

௧௫. இடித்ததென்பது மொன்றுமே யவ்வி
ராமனுஞ்சற்றங்கு நின்றுமே *
தொடுத்தசலிபபுச் சலிபான் ராம
ஸ்வாமியென்னுமிக வலியான் *

௧௬. முட்டிகனையுள்ளங் கையினால் அந்த
முசலிகொடுத்தவ றையினால் *
கொட்டிக்கொணடுரத்தம் வாயினாற் கூற்றூர்க்
குச்சென்றதேசெல்வ தாயினான் *

௧௭. காற்றிலடிபட்ட மரம்போல் முஷ்டி
கப்பிரோதம்வீழ்ந்ததுத் தரம்போல் *
ஏற்றுவந்தான்மற்றோர் மூடன் கூட
னென்னுமல்லனவன் கூட *

௧௮. அடிக்கும்போரில்முன் னமன் எல்லாம்
அறிந்தவன்பல ராமன் *
இடக்கையால்விலா யாட்டான் கூடன்
எமன்கைககுள்ளாகப் போட்டான் *

௧௯. அப்படியேசல னென்றான் றன்னை
யச்சுதராலெமன் றின்றான் *
எப்படியென்றாலோ காலால் உதை
யேகொடுததார்திரு மாலார் *

௨0. சலன்றலைதள்ளி வளர்ந்தார் பின்னுஞ்
சலகனென்பானைப் பிளந்தார் *
கலந்திவ்வாறுசா ணூரன் முஷ்டி
கன்கூடன்சலனுங் கோரன் *

௨௧ சலகனென்றைந்து வல்லர் வீழத்
தாங்கண்டுமற்றுள்ள மல்லர் *

சிலகுலைந்தோடிப் போனார் ஆவி
நேர்மைகருப்புட்டி யானார்

## இராமகிருஷ்ணர்களை ஜனங்கள் துதித்தல்.

விருத்தம்.

மாயனந்த மல்லருடன் கூடிக்கொண்டு
மல்லர்களை வதைக்கமற்றோ ரோடக்கண்டங்
காயர்களி னொத்தவய துள்ளபேரை
யழைக்கவவர் தூரியவாத் தியமுழக்க
நாயகமால் சதங்கையொலி மீறவங்கே
நல்லவிஜைச யுடன்பாடி யாடக்கண்டு
நேயமொடு ஜனங்கள்கஞ்ச னொருவனங்கே
நீங்கலாய்த் துதிமற்ற தோங்கலாயே.

## கஞ்சராஜன் தூதரைப்பார்த்துரைத்தல்.

விருத்தம்.

நாட்டிலுள்ள வேதியர்கள் முதலுதாஞ்ச
னங்களெல்லாங் களிகூர்ந்து நல்லதென்று
கூட்டமாய்க் கொண்டாடக் கஞ்சன்கண்டு
கொண்டுதூ ரியமுழக்கு மிடையாதன்னைச்
சூட்டியதட் டியுநிறுத்தி யந்தப்போஜன்
றூதாகளைப் பார்த்துரைக்குஞ் செயலையிங்கே
காட்டிமொழி வதுகேள்மன் னவனேயென்று
கதைசொல்வார் பாகவதச் சுதைசொல்வாரே.

தரு, இராகம்—சாரங்கா, சாபுதாளம்.

பல்லவி.

சொன்னேன்சொன்னேனடா தூதரே யதி
சுறுக்கிலிப்படிச்செய்ய னீதரே *

அநுபல்லவி.

என்னவோவென் றெண்ணுதீர்
யார்பரவை பண்ணுதீர் (சொன்)

சரணங்கள்.

௧. வசுதேவன்பிள்ளையிரண்டுந் துடுக்கடா விந்த
மதுரைப்பட்டணம்விட்டு முடுக்கடா *
பசுபர்காசக்கொழுப்பைத் தடுக்கடா விவர்
பணங்காசெல்லாங்கொள்ளையிட் டடுக்கடா * (சொன்)

௨. தூர்ப்புத்திநந்தனையுங் கட்டுங்கள் சொன்னேன்
தொடுத்திவ்வஸுதேவனை வெட்டுங்கள் *
அபபஜுககிரசேனனைத் தட்டுங்கள் ஆங்கே
யவன்றலைவெட்டிரத்தங் கொட்டுங்கள் * (சொன்)

௯. உக்கிரசேனன்றந்தையா சொல்லுங்கள் என்சத்
துருபக்ஷத்திருக்கிறான் கொல்லுங்கள் *
மிக்கவனைச்சேர்ந்தாரைக் கல்லுங்கள் நீங்கள்
விரைந்தென்காரியங்களை வெல்லுங்கள் * (சொன்)

## கண்ணன் கஞ்சராஜனை வதஞ்செயல்.

### விருத்தம்.

பஞ்சவர்கள் தஞ்சமென அஞ்சலெனு மின்சொலுளா
பஞ்சபடை ரஞ்சிதகரன்
கஞ்சசர ணன்செய்பிர பஞ்சமிதெ னுஞ்சொலுசு
கன்சமதை யென்சொலுவதே
வஞ்சனைசெய் கொஞ்சமதி நெஞ்சகடி னன்செயல
வன்சுரர்க ளஞ்சும்வினைசேர்
கஞ்சனைவ தஞ்செய்திடு மஞ்சனவ ணன்சதம
கன்சொலனு ஜன்சரிதையே.

### தரு, இராகம்-சங்கராபரணம், ரூபகதாளம்.

#### பல்லவி.

கஞ்சனைவ தஞ்செய்தாரையா
கஞ்சனையருள் கஞ்சசக்கரத்தர்.

#### அநுபல்லவி.

மிஞ்சியவன்சொ லுஞ்சொலைக்கேட்
டுஞ்சினமாய் முன்செய்போரிற்
கொஞ்சமாகி லுஞ்சளைப்பில்லா
நெஞ்சமுகுந்தன் வஞ்சகனை (கஞ்ச)

#### சரணங்கள்.

௧. உத்துங்கமாயிருக்குங்கஞ்ச னுடமஞ்சமேற் றாவிக்கிருஷ்ணன்
உயரப்பாய்ந்துலாகவத்தா லேறக்கண்டந்தக் கோவி *
இத்தனையென்கண்ணனைத்தன் னெமனென்றெண்ண மேவி விரைந்
தெழுந்திருந்துதப்பிக்க லாமென்னுமவ னாவி *
கத்திகேடயமிரு கையிலுந்தானெ
டுத்துகொண்டுமிட சாரிவலசாரி
சுத்திக்குண்டுச்சட்டி யிற்குதிரையோட்டும்
வித்தைகாட்டுஞ்சிசு கத்திகாரனை (கஞ்ச)

௨. ஆகாசத்திற்பருந்துவட்ட மிடுவதுபோற் றிம்பைக் காட்டி
அங்குகத்திசுழறறிவருங் கஞ்சனுட வீம்பை *
மாகாந்தியோடுமொரரலுஞ் சகிக்கக்கூடாதான் தாம்பை முன்னே
வயிற்றிற்கொண்டகோபால னேகருடன்வந்து பாம்பை *
வேகமாய்ப்பிடித் ததுபோற் போஜனை
வெற்றிகொண்டேபிடித் தஸ்ரீநி வாஸனை
மேகவண்ணனைச் சுயம்பிர காசனை
மேலானவராரையா சொலவீ ராஜனே (கஞ்ச)

௩. உள்ளிட்டகொண்டையைப்பிடிக்க வுங்கிரீடங் குலுங்கப் பின்னும்
உயர்ந்திருக்கும்மஞ்சமீது மிருந்துநகீழே நலுங்கத் *
தளளிவிடடுங்கிருஷ்ணன்பத சதங்கைகிலு கிலுங்க அக்கஞ்
சனையுருட்டிமேற்குதித்தார் சாமியெங்குந் துலங்க *
வளாளலவரோயு லகம்பதி ஞலும்
வயிற்றில்வைக்கும்வி ராட்டானவர் மேலும்
விள்ளுஞ்சுதந்திரர் கர்வங்கொணடப் பாலும்
மேலேகுதித்தாவி வாங்கிஞரோ மாலுங் (கஞ்ச)

௪. கஞ்சன்பிணம்நாற்றிசையுங் காணப்பூமி மேலே யானைக்
களேபரத்தைச்சிங்கமான திழுப்பதனைப் போலே *
அஞ்சனமேனியனிழுத்தா ரதைக்கண்டுமென் மேலே மிக
ஆஹாகாரமாய்க்கூவவு மாச்சுஜனத் தாலே *
என்சொல்லுவேனவன் வினையெல்லா மற்ருன்
ஆர்க்குங்கிடையாத நல்லகதி யுற்ருன்
மிஞ்சியபுண்ணியர் சொல்லைவிளக் கித்தான்
விஷ்ணுஸாரூப பதத்தையவன் பெற்ருன (கஞ்ச)

௫. அனுதினமும் அருண்டருண்டு பானம்பண்ணும் போதுங் கஞ்சன்
அவன்புசிக்கும்போதும் நடக்கும்பொழுது மேதும் *
முனிவிலனேதுயில்பொழுது மெதிலுமக லாதும் பெரு
மூச்செறிந்துந்திடுக்கிட்டஞ்சித் தன்கருத்தின் மீதுஞ் *
சனதங்கொண்டுமந் தச்செக தீசனே
சககரங்கொடுவரு மென்பதே யோசனே
தனதுநினைப்பிருந்த தாற் போஜனே
ஸாரூபம்பெற்ற னையாமகா ராஜனே (கஞ்ச)

பலராமன் கஞ்சராஜன் ஸகோதரர்களை வதஞ்செயல்.

---

விருத்தம்.

நிலத்திலந்தக் கஞ்சனுக்குத் துணைவரான
நியக்குரோ தனைமுதலா மெட்டுப்பேர்கை
துலக்கிவந்தும் அண்ணனுக்குத் துரோகமின்றித்
தொடருவோ மென்றெதிர்க்கப் பரிகத்தாலே
பலத்தசிங்கந் தான்பசுவை யடிக்கும்போலே
பலராம னடிக்கவவர் மடியக்கண்டே
இலக்கமில்லா தமராமலர் மழைசொரிந்தும்
ஏற்றிஞர் யாவர்களும் போற்றிஞரே.

கஞ்சராஜன் முதலியோர் மனைவிகள் புலம்பல்.

---

விருத்தம்.

அந்தரதுந் துபிமுழக்கி மலர்சொரிந்தும்
அப்னுடனே யீசன்முத லானதேவர்

சிந்தைகளி கூர்ந்து துதி செய்யவங்கே
தேவரம்பை நாட்டியங்க ளாடக்கஞ்சன்
சுந்தரமா லுருவம்பெற் றிடவுமெட்டுத்
துணைவர்களும் பொன்றினது கேட்டுமங்கே
அந்தவொன்ப திமர்மனைவி தலைமாட்டின்மீ
தறையிட்டா ரலறிவந்து முறையிட்டாரே.

திபதை, இராகம்-நீலாம்பரி, திரிபுடைதாளம்.

கண்ணிகள்.

க. பஞ்சசயனத்திலே படுக்கைவிட்டிங்கேயிந்த ப்
படுகளத்தோசயனம் பதியே பதியே
ரஞ்சிதனேயென்பிராண நாதாவென்பிரிய னே
ராஜராஜனேபோஜ பதியே பதியே

உ. அறிந்தோனேதர்மமெல்லாங் கருணையுள்ளோனேயென்ற ன்
ஆசைக்கிடமாகிய பதியே பதியே
இறந்துபோனவுன்றலே நீசைப்பிடித்தவளு ம்
இறக்கவுமாச்சேயென்றன் பதியே பதியே

௩. துணையுன்னையிழந்துநா ளெல்லங்கிருதங்களில்லாம ற்
சோபிதமில்லாதுபோற் பதியே பதியே
இணையிந்தவகைமது ராபுரியென்பவளு ம்
இப்போவிளங்கவில்லை பதியே பதியே

ச. நல்லோர்பெரியோர்களை நீங்கள்துன்பஞ்செய்தது ம்
நாடெங்குந்தெரியுமே பதியே பதியே
சொல்லுநல்லோர்களுக்கு மகிமைசெய்யாதுநாளு ந்
துரோகம்பண்ணினீர்களே பதியே பதியே

ரு. இப்படித்துரோகங்கள் செய்தால்நல்லபல னை
யெவாகளடைவார்போஜ பதியே பதியே
அப்படித்துன்பஞ்செய்தீ ரந்தப்பலனடைந்தீ ர்
ஆர்மேற்குற்றஞ்சொல்லலாம் பதியே பதியே

சு. சகலபூதங்களையு முண்டாக்கிரக்ஷிப்பது ஞ்
சங்கரிப்பதுமெல்லாம் பதியே பதியே
மகிமைசேரிந்தக்கண்ண னிவர்பகைகொண்டாற்சுக ம்
வருமென்றெப்படிச்சொல்வேன் பதியே பதியே

இராமகிருஷ்ணர்கள் மாதாபிதாவைத் தரிசித்தல்.

---

விருத்தம்.

போஜபதி மனைவியிந்த வகைபுலம்பப
புகலெட்டுப் பெயர்மனைவி யரும்புலம்ப
வாஸுதே வன்றனே தேற்றியுஞ்ச
மாதானஞ் செய்தொன்ப தம்மானுக்கும்

மாசைதீர்ந் திடவுலக வழக்கமாங்கர்
　　மங்களையுஞ் செய்தரியுந் தந்தைதாயின்
பாசபந்த மெனுமவிலங்கை நீக்கிப்பாதம்
　　பரிசித்தா ராங்கவரைத் தரிசித்தாரே.

தரு. இராகம்-காம்போதி, ஏகதாளம்.

பல்லவி.

தரிசனஞ்செய்தாரோ தேவகிவஸுதேவரொன்னு　　ஞ்
செல்வத்தந்தைதாயனைத்　　*　　(தரி)

அநுபல்லவி.

விரிகடல்மீது வரியரவி　　லே
பிரியமாய்த்துயில் புரிவானெழுந்து　　(தரி)

சரணங்கள்.

௧. பந்தனத்தை　　நீக்கி　　யவர்கள்மனதிற்
பரமசுகந்　　தேக்கி　　*

அந்தமாதாபி தாக்கள்பாதா　　ர
விந்தங்களிலே ராமகிருஷ்ணரு　　ஞ்
சுந்தரமாகத் தலைகளைவைத்　　து
முந்துஸாஷ்டாங்க வந்தனஞ்செய்　　து　　(தரி)

௨. ஜகதீசனொன்றே　　யெண்ணி　　வஸுதேவருடன்
தேவகிமனம்　　நண்ணி　　*

அகமதிலேபுத் திரனொன்றுன்னு　　தே
தகவேயாலிங் கனமுஞ்செய்யாம　　லே
மகிழ்கைக்கூப்பிக்கொண் டவர்கள்நிற்கவு　　ம்
பகவனபரம புருஷர்களதா　　மே　　(தரி)

௩. யானையையும்　　மடித்தும்　　மல்லர்விளையாட்டால்
ஐந்துமல்லரை　　யடித்துந்　　*

தானேபயந் திருந்தகஞ்ச　　னை
வானிலேறறிச் சாரூபங்கொடு　　த்
தானேயுலகை யளந்தவெம்பெ　　ரு
மானேபலபத் திரருடன்சேர்ந்　　து　　(தரி)

௪௪-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன்திருவடிகளேசரணம்.

## சரு-ம் அத்தியாயம்.
### அவதாரிகை.

விருத்தம்.

கருமுகில்மே னியனிந்த நாற்பத்தைந்திற்
கருணைசெய்து தன்மாதா பிதாக்களுக்கும்
வருநந்த கோபனுக்கு மனதைத்தேற்றி
மகிழ்ந்துக்கிர சேனனுக்கு மகுடஞ்சூட்டி
விரவுபுக ழெதுகுலத்து விதுவாய்முன்னும்
மேதினியிற் கோகுலத்தில் வஹித்துவந்தார்
குருகுலவா ஸஞ்செய்து மதுரைவந்து
கூடினு ரென்பதுவும் பாடினாரே.

கண்ணன்தேவகி வசுதேவர்களை யுபசரித்தல்.

விருத்தம்.

தங்களையே யீசனென்று மெண்ணிஞானந்
தழைத்தமா தாபிதாக் களையும்பார்த்தும்
இங்குமிந்த ஞானம்வேண் டாதுநாமே
யிருக்கிறேம் கண்முன்னே யிவர்க்கதென்ன
மங்காதில் லறசுகத்தைக் கண்டுதம்மை
மைந்தனென்றே காதல்செய்ய மாயையூட்டி
அங்காத ரவாயம்ம வையவென்றும்
அழைக்குவா ருலகமெங்கும் நிறைகுவாரே.

தரு, இராகம்-எதுகுலகாம்போதி, ஆதிதாளம்.

பல்லவி.

தாதாவேமாதாவே ஏதானுமுங்கட்கு ப
சரிக்கபெற்றிலோம் நாங்கள்தா மே.

அநுபல்லவி.

கோதாட்டிச்சீராட்டி முன்னீரொங்களைக் காணக்
கொடுத்துவைக்கவுமில்லை தொடுத்தென்னசொல்வோந்தோணத் (தாதா)

சரணங்கள்.

க. உங்கட்குமெங்கள்மேலும் ஆசையான தகத்தே
ஒருநாளாகிலும்நீங்கள் கண்டீராமுன்னே முகத்தை
எங்கள்வாலகுமாரத்தின் விளையாட்டதின் சுகத்தை
யெவ்வளவுமனுபவித்தீ ராசொல்வீர்வா சகத்தை (தாதா)

உ. மங்கலில்லாவிதிவசம் மண்ணிலார்தான் வெல்லவோ
மைந்தாநாங்களுங்களிடம் வஸிக்கலேயே மெல்லவோ
எங்குந்தந்தைதாயிடத்திற பிள்ளைவளருஞ் சொல்லவோ
எங்களுககுமதுகிடை யாமற்போச்சுதே யல்லவோ (தாதா)

ங. இதமாயெல்லாப்பொருட்கு மிடமதுடம்பென் றேலும்
இசைமனிதனைப்பெற்று வளர்த்தபேருக்கப் பாலுஞ்
சதவருஷமிருந்து மைந்தருபசரித் தாலுந்
தந்தைதாய்கடன்றீராதே தாமென்சொல்வது மேலுந் (தாதா)

ச. சிந்தைகூர்ந்தன்னையயனைத் தேடிக்கைகால் பிடிப்பாரோ
தேகத்தாலுந்திரவியத் தாலும்ரக்ஷை படிப்பாரோ
தந்தைதாய்பரிபாலனந் தன்னைவிட்டோர் துடிப்பாரோ
தனசதையைத்தின்னச்சொல்லிச் சமன்றூத ரடிப்பாரோ (தாதா)

ரு. காயந்தளர்தந்தைதாயைக் கற்புள்ளமனைவி தன்னைத்
கருதுங்குழந்தையென்றே கண்டதனமக்களைப் பின்னைத்
தூயகுருவேதியனைச் சூழ்ந்துதன்னையனடந் தேனைத்
தொடுத்துக்காவாதானமூச்சு விடுமபிணமாகுஞ்சொன்னேன் (தாதா)

சு. அஞ்சியுஞ்சிக்கஞ்சனாலே யகங்குழைந்தோ பண்டு
அவனிமேலனுதைபோல அலமலப்பது கொண்டு
மிஞ்சியெங்களினமேலாசை வீணேநாட்செல்லக் கண்டு
மெயபபூஜைசெய்திலோமே வீரமிங்கென்ன வுண்டு (தாதா)

எ. தூர்ப்புத்திக்காரக்கஞ்சன் பயத்தாலேவாடி னேமே
சுதந்திரமில்லாமலே பரதந்திரமா னேமே
செபபமாயுங்கள்பணியைச செய்யாமலேபோ னேமே
சிந்தைகூாந்ததனைபபொறுப பதுமுங்களகட னேமே (தாதா)

இராமகிருஷ்ணர்களைத் தேவகிவசுதேவர்கள் மகிழ்தல்.

---

விருத்தம்.

ஹரிமாயா மனிதர்விராட டானகண்ணன்
அன்னைபிதா வுககிதனை யுரைக்கக்கேட்டும்
விரிகின்ற மாயையினால் மயங்கியககோ
விந்தனையும் அண்ணனையும மடிமேல்வைத்துப்
பரிவுடனே கட்டிககொண டாசையென்னும
பாசத்துள ளாய்ககணடந் தழதழத்துஞ்
சொரிகின்ற கண்ணீராட் டினதல்லாதோா
சொல்லிலா தீவினையாம் அல்லிலாரோ.

கண்ணன் உக்கிரசேனருக்குப் பட்டாபிஷேகஞ் செயல்.

விருத்தம்.

அண்ணனுடன் சேர்ந்துமடி மீதிருந்தும்
ஐயரன்னை யிருவரையுந தேறறல்செய்தப்
பண்ணனைய மொழிமடவாள் தேவகிககுப்
பாலகோ பாலபரி பாலமூாத்தி
எண்ணமெலாந் தருமவரோ விராடரூபர்
எதுகுலத்து மன்னனென்றே யியல்பாய்ச்செய்து
கண்ணன்மா தாமகனுக கிரசேனருக்குக்
கனந்தந்தார் மணிச்சிங்கா சனந்தந்தாரோ.

தரு, இராகம்-சுருட்டி, ரூபகதாளம்.

பல்லவி.

ஜகத்தின்மீதிலே தேவகிமைந்தராம் நேமி உக்கிர
ஸேனனைச்சிங்காசனத்தில் வைத்தார்கிருஷ்ண ஸாமி

அநுபல்லவி.

மகத்ததாகிய மதுரைமாநக ர்
மகிட்சியானது வளர்ந்துசூழ்க வே
இகத்திலேயெது குலத்தினுதிக்க ம்
மிகுத்துநல்லோருஞ் சுகத்தில்வாழ்க வே (ஜகத்தி)

சரணங்கள்.

க. மகராஜனேயென்மாதா மகாஉக்கிர சேனு இந்த
மண்டலமீதெது மரபைரக்ஷிபிர தானு *
சகலமானபி ராணிகளுடைடநி தான அருள்
தங்தெங்கள்பணிவிடையுஞ் சேரிந்திரச மான *
சாபமெயாதியாற் கனந்தான் எது
பூபர்க்கேதுசிங்கா சனாதான் எல்லாம்
நீபரிபாலிக்க மனந்தான் மன்னர்
நீபாநீயெங்கட்கு மினநதான் *
தேட்டமென்னவெங்கள் பாட்டனுநீர்தா மே
நாட்டினில்மற்றாைக் காட்டுவீரநான்வி ளை
யாட்டுப்பிள்ளையென்று கூட்டித்தள்ளாதேயு ந்
தாட்டிகமகுடஞ் சூட்டிக்குமென்றீந் த (ஜகத்தி)

உ. உமக்குமெதுசம்பந்த மிருந்திட்ட போதுந் தோஷம்
ஒன்றுமிலலைபாரு மென்னுமாயோதவ ருதுஞ் *
சுமப்பதற்குப்பல னில்லையென்றுநீ ரோதும் நானே
தொண்டனுமகுப்பணி செய்குவேனகலாதுஞ் *
சுத்தும்மைத்தேவருந் தாங்குவார் நீர்கொ
பித்தஅவிர்ப்பாகம் வாங்குவார் இச்ச
சுத்துமன்னரெங்கே நீங்குவார் என்று
ளைத்தார்பக்தர்ககரு ளோங்குவார் *
காரணராஞ்சகத் காரணரோப ரி
பூரணசின்மய ராரணாகையினி ல்
வாரணரம்பிகைக் காரணர்நன்மணி த்
தாரணராயிரம் பேரணலரீந் த (ஜகத்தி)

ங. உக்கிரசேனற்குரைத்தும் அருள்மாரி தூவிக் கிருஷ்ணன்
உடனேமாருதரா ஜனையங்களே கூவிச் *
சக்கரன்சுதன்மைச் சபைகொடுவந்து புவி மீது
சத்திரபதியுக்கிர சேனறகருளென்றும் ஏவி *
ஸதாகதிசென்று செப்பினன் அந்த
நிதானஞ்சபைய னுபபினன் கிருஷ்ணன்
பிரதாபமறிந்தங் கொபபினன் இந்திர
பதாதிக்கத்தின்சி றப்பினன் *
பட்டாபிஷேகமி தட்டாளதேசத்து ள்
ளிட்டாரறிந்தங்கே கட்டாகிவந்தி ட
மட்டாருந்துளவத் தட்டாக்ஷரபபிர பு
கிட்டாபரரான கிடடாள்பணிய கி (ஜகத்தி)

௪. முன்னாளிற்கஞ்சனுபத்திரவத்சாற்பய   சேர்ந்தார்   தேச
முற்றிலுமோடியொளித்தாரிளைபபது சார்ந்தார்   *
மன்னன துவிட்டினி யந்தகாபயந்   தீர்ந்தார   இன்னம்
மதுதாசாருகர்குகு ரரும்வநது   சேர்ந்தார   *
வாசுதேவறகிவர்   ஞாதியார்   இன்னம்
நேசர்சம்பந்திகள்   நீதியார   மீதுள
லாவள்ஜகத்திறபிரக்கி   யாதியார்   மகா
ரர்ஜகுலத்தினு   ளாதியார்   *
ஞானமிருந்தவ   ரானவனைச்ச   மா
தானஞ்செய்துகஞ்சன்   றுனபகரித்   த
மானிதியமெலலாந்   தானேகொடுத்தகி   ரு
பானிதியாகிய   வானவாசோனிந்   த (ஜகத்தி)

௫. சகலராஜர்கள் சகலதேசர்   மோசம்   ஆகச்
சகலபாககியமும் நிறைதிருக்கும்வை   போகஞ்   *
சகமதிற்புண்ணியதீர்த் தங்களானத   னேகம   உக்கிர
சேனமகாராஜனுக்கு மகுடாபி   ஷேகஞ்   *
செய்துசிங்காசனத்   தேற்ற   அங்கே
யெய்திமன்னரெல்லாம்   போற்ற   விழி
செய்தலாமங்கலஞ்   சாற்ற   ரமபை
தெய்தெய்யென்றாடலுந்   தோற்ற   *
தேவதுந்துபிப   ராவிபொலிக்கவு   ம
பூவில்மனுநீதி   மேவிச்செழிக்கவு   ம
பூவந்தவுந்தியன்   மாவிந்தையாள   னே
கோவிந்தராமபக்த   ராவிவாசுதேவ   ன் (ஜகத்தி)

இராமகிருஷ்ணர்கள் மதுரையில் மகிழ்ந்திருத்தல்.

---

விருத்தம்.

மதுரைநக ரதுச்சிங்கா சனத்திலிந்த
வாறுசகிர சேனனுக்கு மகுடஞ்சூட்டி
மதுதாசா ருகருடனே யெதுகுலததன
மன்னாகளை யவரவாக ளிடததிறசேர்த்து
மதுசூத னனிராம னிருவா ரங்கள்
வலிமையினு லிரக்ஷிக்க மகிழ்ந்தங்கேத
மதுமனதின் குறைதீாநது தாபயநீங்கி
வாழ்கினறார் நவநிதயுஞ சூழகினறுரே.

கண்ணன் நந்தகோபனை யுபசரித்து அனுப்பல்.

---

விருத்தம்.

அருள்நிறைந்து மந்தநகை கடைககண்பாாவை
யாலுமா னந்தகர மாய்விளங்கி

வருமுகுந்தன் வதனம்பு யாமுதத்தை
மன்னுமெதுக் கூட்டத்தின் கேள்வர்கண்ணுற்
பருகியதாற் கார்த்திகளும் பலமுமீறிப்
பகரும்யௌ வனராகிக் களித்திருந்தார்
நரபதியே ராமனுடன் சேர்ந்துளைப்பார்
நந்தன்று னறியவுங்கோ விந்தன்றனே.

தரு, இராகம்-பைரவி, ஆதிதாளம்.

பல்லவி,

நந்தய்யாவெம்மய்யா நந்தனர்களாகி ய
நாங்களுமக்குச்சொல்வ தென்னை யா.

அநுபல்லவி.

சொந்தமைந்தனைப்போலே யெந்தம்மைப்பரிவாலே
தொட்டிற்குழந்தைநானைத் தொட்டுமிதுவனைக்கு ந்
தொட்டுத்தொட்டுவளர்த்துங் கட்டிமுத்தமிட்டீ ரோ (நந்த)

சரணங்கள்.

௧. தன்னுடதேகத்திலு மதிகப்பிரீதி காட்டித்
தான்பெற்றபிள்ளைகளிடத் திலுண்டேயதைச் சூட்டி
என்றெமெண்ணனை ரக்ஷித்துமிகவுஞ்சீ ராட்டி
யெடுத்துவளர்த்ததைநான் சொல்லுவதென்னபாராட்டி
அன்னைதந்தையிலுமெத்த வாசையையெங்கள்மேல்வைத் த
ஆச்சரியங்களிந்தப் பூச்சக்கரங்கள்சொல்லு ம்
ஆச்சியெசோதைக்கென்ன பேச்சைச்சொல்லுவேனை யா (நந்த)

௨. எங்கேயாகிலும்பச்சைப்பாலனையுறமுறை நீத்தும்
எடுத்துவளர்ப்பதின்றியே ழைகளாகினதைப் பார்த்துந்
தங்கள்பிள்ளைகளைப்போலே யெண்ணியெவர்காப் பாற்றுந்
தரணியிலவாகளேதாய் தந்தையென்றுலகஞ் சாற்றுஞ்
சங்கருஷணனுநானு மெங்கள்சேயதற்கேதானு ஞ்
சந்தேகமில்லையையா வுந்தன்றயவினால் வ
ளர்ந்ததேகமிதுவே சொந்தமுமககேசொன்னே ன் (நந்த)

௩. தேவகிவசுதேவர் மைந்தரென்றெங்களை யெண்ணுதீர்
சேயரிருவருநா மெங்கட்குயோசனை பண்ணுதீர்
கோவருடனேநீருங்கோ குலத்துக்கிப்போவே போதீர்
கூடிபபிரிந்ததுயராய ராய்ச்சியாகவெல்லாம் நீர்தீர்
பூவிலங்குள்ளார்தொடுத்தும் பொருந்துஞ்சுகந்தனைக்கொடுத்து ம்
புண்ணியராயர்பாடி நண்ணுமவனைக்கா ண
எண்ணுகிறேன்றயவு பண்ணுவீரென்றன்மீ து (நந்த)

## சுரு - ம் அத்தியாயம். 

### நந்தகோபர் கோகுலமடைதல்.

---

விருத்தம்.

கூடிவரு மாயருட னந்தநந்த
கோபனையிப் படித்தேற்றி மேன்மையுள்ள
ஆடையா பரணங்கள் வெகுமானஞ்செய்
தன்மேல்வெண் கலவகைக ளானபாத்திர
சோட்ணையு மிகக்கொடுத்தா லிங்கஞ்செய்தார்
சொரிகண்ணீ ருடன்முல்லை நிலத்துவேந்தன்
நாடிமது சூதன்விடை தரவுமிந்த
நலங்கண்டார் தமதுகோ குலங்கண்டாரே.

### வசுதேவர் இராமகிருஷ்ணர்களுக்கு உபநயநஞ்செய்வித்தல்.

---

விருத்தம்.

தர்க்காதி சாஸ்திரங்கள் படித்துமென்ன
சாரங்க பாணிபதம் பரவவேணுஞ்
சொர்க்காதி வாசருக்கு மரிதாகின்ற
சோரூபனையும் வசுதேவர் தன்சேயென்று
கர்க்காசா ரியருடனே வேதர்சூழ்ந்து
கனநியம வுபநயன கல்யாணஞ்ச
கற்கார ணவிராம கிருஷ்ணருக்குங்
காட்டினு ரன்பினைப்பா ராட்டினுரே.

தரு, இராகம்-புன்னுகவராளி, ஆதிதாளம்.

பல்லவி.

அனந்தகல்யாண குணர்க்குபந
யனஞ்செய்தாராயாவசுதேவர்,

அநுபல்லவி.

அனந்தகல்யாண குணர்க்குபநயநம்
அனந்தரூபபல ராமனுக்குஞ்சயநம் (அனந்த)

சரணங்கள்.

| | | |
|---|---|---|
| க. குலபுரோகிதகர்க்கா | சாரி | யர்க்கும் |
| நலமிகுவேதர்க்கும்பொன் | மாரி | பொழிந் |
| துலகுவேதநெறியி | னேரி | ட்டங்கும் |
| உபநயனவிதியிற் | பூரி | * |
| உத்தமிதேவகிபபி | ராட்டி | யுடன் |
| சித்தமகிழ்ந்துமன்பு | பூட்டி | க்கல்யா |
| ணத்திலெங்கெங்கும்வேத | கோட்டி | சேர |
| எத்திசையுள்ளோர்கலி | யோட்டி | * |
| ராஜராஜர் | தேசவாச | ர் |
| தேசுல்லாசர் | பேசப்பேச | ப |

பேரிதுந் துபியோசை வாரியொலிம றைக்க
நாரியர்நடனத்திற் றேவரம்பையபிர மிக்கப்
பூரிபபதாயுக்கிர சேனன்மனங்க ளிக்கப
பொன்னூல்தரித்துராம கிருஷ்ணர்மாவயசி றகக (அனந்த)

உ. ராமானுஜன்பிறந்த போதே தன்மா
னதத்தாற்செய்தனதையும்வி டாதே யையா
தாமேபசுக்களதின் மீதே பொன்னின்
சரமலர்மாலைதவ ருதே *
தவளநிறப்பட்டாடை பூட்டிப் பசு
அவளவின்கன்றுகளுங் கூட்டி யந்த
அவனிசுரர்க்குமாலை சூட்டிக் கொடுத்
தாரோபரிக்ஷித்தையா கேட்டி *
அன்னஞ்சொன்ன வின்னமென்ன
வன்னவன்னப் பன்னப் பன்ன

ஆதிமூலமாம்பரஞ் சோதிதிருவை குந்தர்
சோதைதிருமுலைப்பா லுணடசெவ்வாய்மு குந்தர்
வேதியரானுனையா கேளுமச்சுதா நந்தர்
விசித்திரமின்னங்கேளு மவரோயரிகோ விந்தா (அனந்த)

ங. எல்லாவித்தைக்கும்ஹரி குருவே கிருஷ்ணன்
எல்லாமறிந்தஞான உருவே சொல்லும்
எல்லாவுலகிசனுந திருவே பணி
யிருபாதனவனிடத் தெருவே *
இரண்டுருபமாய்பபாத சாரி யாக
விரைந்துநடந்தஅவ தாரி யன்பு
புரிந்துமிங்கனேகர்ககா சாரி கையாற்
பொன்னூலதரிக்சபிர்ம சாரி *
போலேகோலேர் வாலேமாலே ,
வேலேமேலே யாலேபா லே

பரிந்துகாயத்திரி விரதம் பிடித்தாரோ
தெரிந்தவேதங்களையும் பின்னும் படித்தாரோ
விரிந்தமணிதலீலை மிகவுந் தடித்தாரோ
விஜயஸாரதியிந்த வகையாக நடித்தாரோ (அனந்த)

## இராமகிருஷ்ணர்கள் குருகுலவாஸஞ்செயல்.

---

### விருத்தம்.

கஞ்சனால் முன்னமப கரித்திடுஞ்ச
கலபாக்கிய மூந்திரும்பப் பெற்றுக்கொண்டே,,
அஞ்சனு காரனுக்கு மிராமனுக்கும்
வசுதேவ ருபாயனஞ் செய்யவங்கே
அஞ்சனைக்ஷி தேவகிதன் மைந்தனுந்தன்
னண்ணனுடன் காசிமீ தவந்திபபார்ப்பன்

என்சொல்வேன் சாந்திபனி குருவென்றெண்ணம்
ஏற்கின்றார் கலைகள்கற்றுஞ் சோக்கின்றாரே.

தரு, இராகம்-நாதநாமக்கிரியை, ஆதிதாளம்.
பல்லவி.

குருகுலவாஸஞ்செய்தாகளையா ராமகிருஷ்ணர்கள்
குருகுலவாஸஞ்செய்தாகளையா *

அநுபல்லவி.

தரணியிலெங்கும புகழும் காசி
தன்னிலவந்தி யெனுமபுர வாசி
அருமறையோனசாந்திபனியைப் பூசித்
தகிலகலையுங்கற்றா புண்ணிய ராசி (குரு)

சரணங்கள்.

க. ஆதிபுருஷராம்மு ராரி
மேதினிமேல்நராவ தாரி
வேதியர்நித்யபிரம சாரி
நீதிகாட்டிஞரருள் மாரி
ஓதினாநாலவேத வாரி முப்பத்திரண்டும்
ஆதலுபநிட சாரி மெனமேலுநதனுர்
வேதமாந்திரஙகளவி சாரி ததனபாகமநு
நீதிவிஞ்ஞானமஅ பாரி தருமநூலின்
நீதிராஜநீதிநாககமவாதிசள்கு டோரி வியாகரணஞ்
கோதிலாதமீமாஙகநெறிகளையும் பூரி வேதாநதஞ்சொல...
போதமதுகளையுமபடிததனையாகஞ சாரி ஏதுகுலதது...
மீதுமதியெனவேவிளங்கநமுகுநதராமஅ காரி குருமுகததில
ஓதுமபொழுதிலெலலாஙகேடடதுமஒரேயொரு சாரி திருமபவிதற்
கேதுவகையதெனறுகேடடதுமிலலைசககர தாரி யவரேசுயஞ
சோதிகவுஸதுவாபரணாபீதாமபர தாரி யிபபடிவேத
நீதிசாஸதிரஙகளபடித்தாருடனகலபபை தாரி யெல்லாம்வல்லவர்
மேதினியிலவந்திடைச் சேரிச
சோதைமைநதராயுமவந தாரிப
பூதலததிலராஜமன ஞரிப
புகழ்பெறுஙகோவாத்தன தாரி (குரு)

உ. அறுபததுநாலுகலை ஞானம
நெறிசொலகிறேன்கேளந்த ஞானம
உறுதிமுன்னேசஙகீத ஞானம
முறையாய்மேளவரிசையின ஞானம்
திறமையாமநாததவகை ஞானம நாட்டியவித்தை
அறிவுடனேயெழுதுவதோர் ஞானம் விசேடகசேததியம
நிறையரிசிமலாபலிவகை ஞானம் புஷ்பாஸதரணந்
துறைபலலாடையஙகராக ஞானம மணிபூமிகாகாம
நிறைசயனரசனமுதகவாததிய ஞானம் உதககாதந்
குறைவில்லாமலேவருசித்திரயோக ஞானம மாலைகட்டுதல்

பிறவுஞ்சேகராபீடயோஜனமாகும் ஞானம் நைபத்தியயோகஞ்
சிறந்தகரணபத்திரபங்கங்கந்தயுக்தி ஞானம் பூஷணயோஜனம்
மறைவுசெய்துவருமிந்திரஜாலமென்னும் ஞானம் கௌசுமாரயோகம்
இறைவகேளும்அஸ்தலாகவமென்னுமொரு ஞானம் சித்திரசாகாபூபம்
பெறுமதிலேபக்ஷியவிகாரக்கிரியை ஞானம் பானகரஸம்
உறவரும்ராகாஸவயோஜனமென்னும் ஞானஞ் சுராபானகர்ம

நெறிஸூசிபானகர்ம ஞானம்
விறற்பெறுஸூத்திரக்கிரீடா ஞானம்
பறைவீணைடமருகவாத்திய ஞானம்
பிறகேளிகப்பிரதிமாலியாஞானஞானம் (குரு)

௩. தொடுத்ததுர்வஞ்சக யோகம்
எடுத்தஏடுபடிக்கும்வி வேகம்
நடத்துநாடகவகைஜக மோகம்
அடுத்தஸமஸ்யாபூரணகவி பாகம்

படர்பட்டிகாவேத்திரபாணவகைய னேகந் தர்க்ககாரியம்
நெடியதக்ஷணம்வாஸ்துவித்தையதினிரு வாகம்ரூபிரத்தினபரிக்ஷை
அடவாந்தாதுவாதத்துடனேமணி ராக ஞானமுமின்னம்
உடனேயாகரஞானமதறிவுச ராகம் விருக்ஷாயுர்வேத
திடவாதயோகமுடன்மேஷகுக்குடலா வுக யுத்தவிதியும்
நடைசுகசாரிகைபிரலாபனப்பிர வாகம் முச்சாதனமுந்
தொடர்கேசமார்ச்சனகவுசலமதுமனு ராகம் இவையல்லாமல்
தடையிலக்ஷரமுஷ்டிகாகதனம் லோகம் எங்குஞ்சொல்லுந்
தொடருமிலேச்சிததர்க்கவிகற்பக ஞகந் தேசபாஷைஞானம்
அடர்வதாகியயுத்தபுஷ்பசக டிகா நிமித்தஞானம்
நெடியயந்திரதாரணையுடன்மாத்தி ரகா தாரணைகளும்
வடிவாமாத்ரகாசம்வாச்சியமான சிகா வியக்கிரியைகளின்

ஒடுமபிதானகோசர வேகம்
மடிமையில்லாச்சந்தோஞான யூகம்
நெடுகனங்கிரியைஞானம திகம்
உடையவருங்கற்றதுவேசு லோகங் (குரு)

௪. கற்பஞ்சலிதக யோகவி சாலம்
அற்புதவஸ்திர கோபன சாலம்
அப்படிசூதுவி சேஷகு ஜாலம்
மெய்ப்பாகருஷணககிரீடைய னேலந்

தப்பாதவைநாயகியெனும்ஞான சீலம் வையாஜயிதஞானம்
ஒப்பிலாதஅவர்கனமானிடக் கோலங் கொண்டிந்தவகையே
கற்பாராறுபத்துநான்குகலையனு கூலஞ் சாந்திபனியிடத்தில்
இப்பான்மையதாய்ப்படித்தார்வெள்ளையொடு நீலங்கொண்டவண்ணர்கள்
அப்பாபரிக்ஷித்தேராமனுக்கோகொடி தாலங் கண்ணன்கொடிமேல்
வைப்பார்கருடனையவாசெயலிந்திர ஜாலம் அதையாரறிவார்
செப்புங்கல்விக்கடலுல்லோலகல் லோலம் ஆகவும்விளையாடி
அப்பார்ப்பனிடம்பணிவிடைசெய்துகீ லாலம் முதலுதவிச்

சொற்பிரமசாரிவிரதங்கொண்டுமிஞ் ஞாலம் மீதேம்ர்யைப
ரப்பிலீலைசெயுமவர்கட்கிடமொரு ஆலம் அவர்களடி
வைப்பினைக்கொண்டதுகோகுலத்துக்குநல்ல காலம் அவருடனே
கட்டுக்கொண்டதாயர்பாடியாபாலகோ பாலம் என்னசொல்லலாம்
அப்படிக்கண்ணுடியென்றக போலம்
மெய்ப்பொருளாமவரேயாதி மூலம்
விப்பிரசாந்திபனிமுனி பாலன்
பொப்பவும்நாடியவந்தியின் மேலாங் (குரு)

இராமகிருஷ்ணர்கள் குருவை தக்ஷிணைவிதிக்க வினவல்.

விருத்தம்.

எட்டெட்டு ராத்திரிக்குட் கலைஞானங்கள்
எட்டெட்டுங் கற்றனரோ யிராமகிருஷ்ணர்
திட்டமதா யஸ்திரவித் தைகளுங்கற்றுர்
செப்பியவே தங்களே முன்படிததார்
இட்டமுள்ள குருசாந்தி பனியைவந்தித்
தின்னதென்று தக்ஷிணையை விதப்பீரென்ற
மட்டிலே குருவுமவர் மனைவிகூட
மந்திரா லோசனைசெய் தந்திராவே.

இராமகிருஷ்ணர்கள் குருதக்ஷிணையாக முன்னிறந்த
மகவை யளித்தல்.

விருத்தம்.

மகிமைகளைக் கண்டந்த ராமமாத
வனாமனிதப் பிறப்பென்னு மெண்ணம்நீங்கி
அகமகிழ்ந்து சாந்திபனி சீடராகும்
அங்கவரைப் பிரபாஸ தீர்த்தசங்க
முகமதிலே சமுத்திரத்தி னலைகொண்டேகி
முன்னுளில் மரித்தபிள்ளை பிழைத்துமென்ச
முகமதிலே வரக்கொணர்ந்து தருவீரென்ற
மொழிகொண்டா ரதற்கிசைந்த் வழிகண்டாரே.

தரு, இராகம்-பைரவி, ஆதிதாளம்.

பல்லவி.

பக்ஷமுடனேநல்ல தக்ஷிணையாகக்கு ரு
பாலனைத்தந்தாரே கோபாலன்.

அநுபல்லவி.

அக்ஷரமெல்லாஞ்சொல்லிக் கக்ஷிசேர்கலைஞா ன
லக்ஷணஞ்சாந்திபனி சிக்ஷைசொன்னதற்காக ப் (பக்ஷ)

சரணங்கள்.

க. தேரினிலேறிக்கொண்டு வாரிதியிற்பிரபா ஸ
தீர்த்தக்கரையைச்சென் றடைந்தாரோ

வாரிதிராஜனங்கே ராமகிருஷ்ணனாக்கண் டு
வந்தானெதிர்கொண்டது வந்தாரோ
பாரும்நவரத்தினங் களினாலேயுந்நிறைந் த
பாதபூஜையுங்கொண் டிசைந்தாரோ
ஆரணரூபஜக தீசரிவரொன்றெண்ணு ம்
அப்புராயனுக்குரை தந்தாரோ

அலைகளொனுமுன் கைகள் கொண்டே
கலைநிறைநங்குருமகனைக் கண்டே
கொலைசெய்ததென் பதுநீயே பணடே
இலையென்றுசொல்வதிற் குற்றம தூண்டே

எந்தவகையிலும் அந்தப்பால னை
எந்தம்முன்கொடு வந்துவிடுகனு ம்
இதுதருணமதென மதுரிபுசொலந தி
பதியெதிரமொழியுரை யதைநிஜமென ஹரி (பக்ஷ)

உ. தேவதேவகேசவன் றிருவாய்மலர்ச்சிகண் டு
சிந்துராயன்வணங்கிச் சொல்வானே
மாவல்லமையுடையன் அசுரன்பஞ்சஜன நா
மதேயனென்னைக்கூடவும் வெல்வானே
தாவிச்சலத்துக்குளளே சங்கரூபமாக வே
சஞ்சரிபபானமைந்தனைக கொல்வானே
சேவகருள்ளவனை யாரும்பிடிக்கொண்ணா து
தேவரீரேயவனைக் கொல்வானே

ஸ்ரீதரனேசர ணென்றும் நின்றான்
மாதவனுஞ் சலத்துட் சென்றான்
காதகபஞ்சஜ னனையுங் கொன்றான்
ஓதவன்வயிற்றைப் பிளந்திடு கின்றான்

உள்ளேயிலையந்தப் பிள்ளையினியென் ன
வெள்ளைநிறமிக வுள்ளசங்கமொன் று
ஒலிசெயநலமென விலகியவனைத னை
மூலைநிலமகாகொடு மலைசிகரருள ரி (பக்ஷ)

ங. பாஞ்சஜன்னியங்கைக்கொண் டனந்தருடனேகூட ப்
பங்கயக்கண்ணனுந்தே மீதினர்
சாஞ்சல்லியமில்லாதார் தருமனிடமதா ன
சம்யமனீயபுரியிற் போதினர்
தாஞ்சநார்த்தனமொன்று சகலருமறிய வே
சங்கைச்செங்கனிவாய்வைத் தூதினர்
காஞ்சனம்பரன்சங்க வொலிகேட்டுத்தென்றிசைக்கோன்
கணத்தில்வந்துபூஜைசெய் தோதினர்

கண்ணனேலீலா மனிதவி நோதா
புண்ணியவுதார அரவிந்தப் போதா
பண்ணுவதுன்பணி விடைதனை நீதா
பண்ணவனேஹரி ஹரிஜகந் நாதா

பாந்தசகலபூ தாந்தக்கரண னே
நாந்தான்செயும்பணி யீந்தாள்குவையென ப்
பதியெதுபதிரகு பதிதிருப்பதியண்ட ர்
பதிதிருவைகுந்த பதிபிதிர்பதித ர (பல்லவி)

௪. நிஜகர்மத்துக்குள்ளான நங்குருபுத்திர னை
நீரிங்கழைப்பித்தீரே மகராஜன்
இஸ்சவாகவிப்போதென்றுன் கொண்டுவந்துவிடுவீ ர்
ஏதுந்தோஷமில்லென்றார் ஜகராஜன்
திசையெங்குமறியவே நாமேசொல்கிறோமிங் கே
சீக்கிரங்கொண்டாவென்றா ககராஜன்
துஜமெனக்கொண்டாரிவை சொல்லக்குருமைந்தனை ச்
சுறுக்காய்விடுத்தானேயந் தகராஜன்

தோந்தரியெனநடம் பணிமே விட்டார்
தாந்தமையனுடனுந் தேரது விட்டார்
சாந்திபனியாங்குரு விடம்வந். திட்டார்
போந்தமகனைக்கொணர்ந் தேதந் திட்டார்

பெறையுள்ளகுருவின் குறைதீர்ந்ததாவின் ன
முறையேவேண்டுவதுமிறைவேற்றுவனென் ன
முரரிபுசொலவுயர் தரணியிலுனமிக ர்
ஒருவருமிலைமிகு குருவிதிதரவெ ன (பல்லவி)

## இராமகிருஷ்ணர்கள் மதுரைக்கெழுந்தருளல்.

### விருத்தம்.

கோணுது குருவிதியம் பெற்றேன்நீங்கள்
கூடியுங்க ளிடஞ்சேர்ந்து புகழதோங்கி
வாணுராணுவிரா மாவென்றேவ
வாயுவேகத்துடனே மனமுவந்தாற்போற்
சேணுறு கொண்டுமவர் மதுரைமூதூர்
சேர்ந்திடக்கண் டங்குள்ள மனிதரெல்லாங்
காணுத பொருள்கிடைத்தாப போலேவந்து
கண்டிட்டா ரானந்தங் கொண்டிட்டாரே.

சரு - ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன்திருவடிகளேசரணம்.

## சகூ-ம் அத்தியாயம்.

### அவதாரிகை.

விருத்தம்.

கலையெல்லாங் குருவிடமா யறிந்துகொண்டுங்
காமனடத் தையைவிட்டும் பிரமசாரி
நிலையிலே நிற்குமவர் தமக்குமிக்க
நேயராம் உத்தவனை யாயர்பாடித்
தலையிலே வசிக்குமந்த யெசோதாநந்தர்
சகலருடன் கோவியர்க்குஞ் சமாதானத்தைச்
சொலையிலே முக்கியராய் வைத்தகாதை
தொடர்வதாம் நாற்பத்தா றடர்வதாமே.

### கண்ணன் உத்தவனைக் கோகுலத்திற் கனுப்பல்.

விருத்தம்.

விட்டினிக்குள் முன்னவர்மந் திரியுமாவர்
வியாழபக வான்சிஷ ரவாபோல்யூகி
இட்டமுள்ளார் கண்ணனிட மினுமவற்கே
யேகாந்த பக்தனையா வவனைக்கூவிச்
சிட்டரோ யுத்தவரோ யென்றெம்மானே
சீர்த்தொண்ட ரார்த்திகளைத் தீர்ப்பான்றனே
கட்டளையிட் டவர்நெஞ்சை மிகவுமங்கே
கனைக்கின்றார் திருமொழியை யுனைக்கின்றாரோ.

தரு, இராகம்-பியாகடை, ரூபகதாளம்.

பல்லவி.

உத்தவரோயன்பர் உம்மைப்போலேயுண்டோ யோகஸாதகரே
உறுதிநீர்தானே யறிவீர்மா னே *

அநுபல்லவி.

வித்துவச்சனர் புகழ்கோகுலத்தி ல்
விளங்குமென் றந்தை தாயர்க்கு ம்
புத்திரராமகிருஷ்ணர் மறவாரென்று ம்
போற்றுவீர் துய ராற்றுவீரை யா (உத்த)

சரணங்கள்.

க. என்னைப்பிரிந்த விரகதாபத்தா ல்
மின்னிடைச்சிமார் தவிக்கிறாரை யா
அன்னவருக்குநீ ரகஸிய ம்
நன்னயமாய்ச் சொல்லு ம்
என்னிமித்தியம்பதி புத்திராளென் ப
தன்னையாவையுந் தானேயொழிந்தா ரோ சொன்னேன்
உற்றவரோ மிகக் கற்றவ ரோ யதி
நற்றவரோ ஐயக் சொற்றவரோ வாரும் (உத்த)

௨. கோவிமாரெல்லாம் மனதென்மேல்வைத்து ம்
ஆவிநாயகனென்றுமென்னையெண் ணி
பாவியற்கண்ணுறு லகத் ரு
மங்களையொழிந்தா ரோ
பூவுலகத்தி லின்பமுஞ்சுவர்க் க
போகமென்பதைப் பரவைபண்ணிலா ர் மாவிற்
பன்னரோ ஸம் பன்னரோ துய்யபிர
ஸன்னரோசொல்வது முன்னரோ காணலாம் (உத்த)

௩. இந்தமதுரை நாளிருக்கிறே ன்
அந்தக்கோகுலத் தவரிருக்கிறா ர்
எநதன்மேலதி மோகமாய் ச்
சிந்தைவாடுகின்றா ரோ
பைந்தொடிமார்கள் குலப்பெண்டீரவ ர்
பரவசமாகி விரகங்கொண்டா ரோ மந்திரம்
வல்லவரோ வெகு நல்லவரோ நுதல்
வில்லவரோ யின்னஞ் சொல்லவறேனிதோ (உத்த)

௪. கோகுலம்விட்டு நான்வரும்போது ம்
பாருமொழிய ரவர்க்கெலாமங் கு
மாகுளுமையாய்ச் சீக்கிரமா க
வருகின்றேனென்ற துண் டே
ஆகையாலந்தத் தூதர்மொழியா ற்
றேகைமாஜீவன் றரித்திருக்கிறா ர் யோகஸல்
லாபரோ பிர தாபரோ ஞான
தீபரோ விட்டினி பூபரோநீர் சொலலும் (உத்த)

உத்தவர் கோகுலத்தைக் காணல்.

---

விருத்தம்.

கோகுலத்திற் சென்றிவகை யென்றந்தை தாயுடனே கோபிமார்கள்
யாகுலத்தைத் தீருமென ஹரியுரைக்க வுத்தவரு மிரதமேறி
மாகுலத்த ராய்ப்பாடி செலுமபொழுது மிரவிகுட வாரிசேர்ந்தான்
வாகுலத்தி ரியுத்தனைதன் மைந்தகே ளெனச்சுகத்த வன்சொல்வானே.

இதுவுமது.
விருத்தம்.

நந்தருடன் பேசுவதை யாயர்பாடி
நங்கைமா ரறியாத வகைமறைப்ப
தந்தவகை யாய்ப்பசுக்க ளதின்குளம்பின்
அடித்தூள்க ளெழும்பிரத மதைமறைக்க
வந்தனரோ யுத்தவரும் மாலைநேரம்
மாலைநே ரவர்கண்ட வண்மையெல்லாம்
இந்தவகை யென்றெடுத்து முரைப்பன்யானே
யிங்குதா னென்பாமுனியாங்குதானே.

ருள

தரு, இராகம்-பைரவி, ஆதிதாளம்

பல்லவி.

கோடிசனனாநந்த கோபரிருக்குமாய ர்
பாடியுத்தவர்கண்டார் பாரு ம்.

அநுபல்லவி.

கோடிபுண்ணியராசி நீடிநிதமும்வாசி க்
குதிரைநடத்திவைப்பார் மதுராதனிலிருப்பா ர்
கோவிந்தஜகந்நாதா மாவிந்தையாளர்தூத ர் (கோடி)

சரணங்கள்.

க. மதம்பிடித்தகாளைகளொன்றையொன்றுபோரா டி
வருபுஷ்பவதியாக்கள மேலே
கதம்பிடித்தேயெங்கெங்கும் தாவித்தாவிவலி மை
காட்டுநாதங்களொருக் காலே
மிதமில்லாதபாறகட்டி லேபலபசுக்க ள்
மீறியததின்கன்றின் பாலே
இதமாய்மனதைவைத்துக் கூவுவதுகன்றுக ளெ
எதிர்கூவும்நாதமோமென் மேலே
அதிகவெளுப்பாகிய அலங்காரககன்றி னீடடம்
அங்கங்கேதாவித்தாவிக குதிபபிளுக்கென்ன வாட்டம
விதவிதமாய்பபசுக்கள பேரைச்சொ ...கொண் டாட்டம்
மேவியிடையரெல்லாம் வேணுகாருஙகண் டாட்டம் (கோடி)

உ. விடுவிடங்கேகொண்டுபோ விங்கேகொண்டுவாதாரா ய்
மேவிபபிடிப்பிடியென் றூர்த்து
நெடிகிலும்வேணுகானத் தாலேசொல்லிக்கொண்டே யா
னின்கன்றைவிடுப்பசி தீர்த்து
குடநிறைபால்கறந்து பசுவைத்தாமணிதும்பை க்
கொண்டுகட்டுவராய சேர்த்து
படியிலாடிக்கறக்கும் மாட்டையாடிக்கறந்து ம்
பாடிக்கறப்பதையும் பார்த்து
படருமிசையினுலே பாடிப்பாடிக் கறக்கும்
பண்ணுக்கிசைந்தவேணு கானமெங்குஞ் சிறக்குந்
தொடரும்பசுகன்றுகட் கானந்தமே பிறகருஞ்
சூழ்ந்துகொட்டில்கமளங்குமோசைமிக நிறைகருங் (கோடி)

ங. மங்களகரமாக ராமகிருஷ்ணாலீலை யை
வரிசையாய்க்கோவிமார்கள் பாட
எங்களமுதமேயென் றுயரெல்லாமங்கங் கே
யிருடிகேசன்புகழ்சொண் டாட
அங்கிசூரியனுடன் அதிதிபசுக்கள்வே தி
யர்களும்பிதிர்தேவர்க்குங் கூட
எங்கும்பூஜனைசெய்துந் தூபதீபயாலேக ளா
இடையர்வீடுகளெல்லாம் நீட

எண்டிசைகளும்புஷ்ப வனங்கள்மிகுந்த — வாடை
யிசைந்துபக்ஷிவண்டுகள நிறைந்திடும்ஆடை — தோடை
மண்டனங்கள்காரண்டம் நிறைந்ததாமரை — யோடை
வரிசைகளைக்கவிஞ ரொன்னசொல்லுவாரி — லேடை (கோடு)

நந்தகோபர் உத்தவரை க்ஷேமம் வினவல்.

---

விருத்தம்.

மரீலிங்கி தப்பிரிய ரானவுத்த
வரின்வரவு கேட்டுநந்த ரன்புகூர்ந்தே
ஆலிங்க னஞ்செய்து வாசுதேவர்
அவரொன்றே யருச்சனைசெய் தன்னம்நல்ல
பாலிங்கி தபடிய ஸ்ஞ்சிறந்த
பதார்த்தமொடு போஜனமுஞ் செய்துவைத்துக்
காலிங்கி தத்துடனே பிடித்துமவநந்த
கனைதீர்ப்பார வினவியவா தனைதீர்ப்பாரே.

தரு, இராகம்-மத்தியமாவதி, ஆதிதாளம்.

பல்லவி.

சூரநந்தனா சுகமா உத்தவரே
சூரநந்தனா சுகமா

அநுபல்லவி.

பாரிலநீரே மெய்யா
பாக்கியசாலியெனையயா (சூர)

சரணங்கள்.

க. மைநதராதிகளான பந்துஜனங்கள்சூழ — ச்
சந்தோஷமானதுநி றைந்துமிருக்கிற — ரோ
முந்தியவாகளைபபி ரிந்திருந்ததுயா — த
விரந்துட்டதுனையிரசி தந்துவளர்ந்தருளு — ஞ் (சூர)

உ. கஞ்சனுனபாவிய வனசெய்தபாவத்தா — லே
தஞ்சனங்களுடன தஞ்செய்ததெய்வாதீன — ம்
எனசொல்லுவேன்ஸாதுக்கள் மிஞ்சுதருமசீல — ர்
வஞ்சமிலலெதுபபகை கொஞ்சததில்விட்டதில் — லை (சூர)

ஙு. கண்ணனெங்கள்நினைவு பண்ணுகின்றாராதா — யை
யெண்ணுகின்றாரவரா கணணனதேசமருட — ன்
நண்ணுங்கோபாகோகுலம் புணணியபசுககளெ — வ்
வண்ணமோவென்றுசிந்தை யொண்ணுமோசொல்லுஞ்சொல்லு — ம் (சூர)

நந்தகோபர் உத்தவரைக் கண்ணன்
வருவாராவென்று வினவல்.

---

வெண்பா.

மன்னும் பிருந்தா வனத்தைக்கோ வர்த்தனத்தை
உன்னும் வகையதுதா னுணடோமால்—பின்னும்

வருவாரா காண்குவோ மாதரிச னந்தான்
தருவாரா சொல்லுத் தவா.

தரு, இராகம்-சங்கராபரணம், சாபுதாளம்.

பல்லவி.

ஸாமிவருவாரா சொல்லும்உத்தவகிருஷ்ண
ஸாமிவருவாரா

அநுபல்லவி.

பூமிமேல் வந்த நேமியேயநந்த்
தோமிலானந்த ராமகோவிந்த (ஸாமி)

சரணங்கள்.

க. மந்தகாஸங்கடைக்கண் பார்வை நன்ஞளிகைகி
றந்தமுகமண்டலச் சேர்வை தந்துமிங்குள்ள
பந்துக்களையோர்தரம் பார்வை செய்வாராஅர
விந்தச்சரணரவாக் கோர்வை யெவனாச்சொல்ல
இந்தவாயர் சேரிக் கந்தவருள் மாரி
மூந்துமுப காரி தந்தைதாய ரரி (ஸாமி)

உ. காட்டுத்தீதனைப் பக்ஷித்தாரோ யிடையர்பசுக்
கூட்டங்களையும ரக்ஷித்தாரோ மலைகுடையாய்
மீட்டுமிந்திரனைச் சிக்ஷித்தாரோ காற்றுமழையை
விலக்கியெம்மைம கக்ஷித்தாரோ யிடபனுடன்
கேட்டீரோமலைப் பாம்பை வீட்டினாரோ தீம்பை
வாட்டிக்காலன் வீம்பை யோட்டினாரோ காணபை . (ஸாமி)

ங. சகலகர்மங்களையும் விட்டு க்கண்ணன்வீரமே
பகலிரவுமறிவினைப்ப திட்டு நல்விளையாட்டு
நகைகடைககண பார்வைவெ ருட்டு மதுரமொழி
அகலாதுமெணணுவதைத் தொட்டு அனுதினமும்
முகத்துமுன் னிறகுதே அகத்துமி ருக்குதே
சகிக்குமா எற்கிதே வருபபனு மக்கிதே (ஸாமி)

ச. கோவர்த்தனமெமுனு தீரம் பிருந்தாவனமும்
மேவிவிளையாடுஞ்சிங் காரம் பொனனடியாலு
லாவித்திரிந்ததலங் சாரந் தனைமநோ
பாவனைசெய்வதற்கா தாரங் கிருஷ்ணவதாரங்
கூவிக்கூவி யென்ன மாவிற்பன்ன பனன
சேவிக்கவே யினனம் நீவைப்பையா மன்ன (ஸாமி)

ரு. விண்ணவர்க்குவிண்ணோரா வாரோ ராமனுடனே
கணணனுய்வந்தருளி னாரோ தேவருடனே
திண்ணமநம்மைககாக்கவந் தாரோ யிப்படியென்று
புணணியகாக்கருநசொன் னாரோ யதுகிஜமே
கண்ணுமுன்திஷ்டாந்தம்நண்ணினீரோ காந்த
வண்ணமதாய்ப் பாந்தம் ஓணணவேகேள்போந்த (ஸாமி)

௬. பதினாயிரம்யானைவலி சேட வீரக்கஞ்சனை
அதிசூரமல்லருடன் கூட வதைத்தானாயா
அதின்முன்னேகுவலயா பீட மதையடித்த
கதியானதற்குவமை போட ச்சிங்கம்பசுநேர்
விதங்கண்டநாங்காணும் இதைவிடவென்னவேணும்
புதிதுபுதிதாய்த்தோணும் அதிகசுந்தரம் பூணும் (ஸாமி)

௭. திரும்பச்சொல்லுவதென்ன மேலே மூன்றுபனைநேர்
வருீம்பெரியவில்லிக்கை யாலே கண்ணன்முறித்தார்
கரும்பையானைமுறித்தாப் போலே கண்டோமேயின்னம்
அரும்பிறங்கும்நாளொருக் காலே ஏழுவயதில்
ஒருகையால்மலை தூக்கி வருமேழுநாட் போக்கிச்
சொரியுமழையை நீக்கி யருளுஞ்சருவ சாக்கி (ஸாமி)

௮. பிரலம்பனென்பவனை வதையே செய்துபகனை
யிருபிளவாகப்பிளந் ததையே யரிஷ்டனுடன்
திரணாவிருத்தவதக் கதையே யாருமறிவர்
ஒருதேனுகாசுரக்க ழுதையே பட்டதிவராற்
சுரராலுஞ்செயிக்கொண்ணா வுரதயித்தியர் மண்ணாய்த்
தனாமீதில்விழ விண்ணோர்சொரியும்பூமழைகண்ணார் (ஸாமி)

ஏசோதை கண்ணனை நினைந்து வருந்தல்.

விருத்தம்.

நினைத்துநினைத் திவ்வாறு நந்தரந்த
நீலவண்ண னிடத்திலே மனதைவைத்துச்
சொனத்தையெல்லாஞ் சொலிக்கண்ட நழதழத்துச்
சொரிகண்ணீ ருடனிருந்தா ரிதெலாங்கேட்டுக்
கனத்தபுக ழேசோதைமைந்தன் சரிதையெல்லாங்
கண்டனுப வித்தவளா கையினலிங்கே
தனத்தினின்றும் பால்பெருகி விழிநீர்சோர்ந்து
தவிக்கின்றாள் கருத்தவர்பாற் குவிக்கின்றாளே.

உத்தவர் ஏசோதைக்கும் நந்தருக்குங் கண்ணன் மகிமைகளை
யுரைத்துத்தேற்றல்.

விருத்தம்.

சுத்தநிரு மலனான பகவன்மீதே
தொடுத்தந்த வகைபுத்திர வாஞ்சைதன்னை
வைத்தயசோ தாநந்த ரன்புகண்டு
மதுசூத னிடத்திருந்து வந்ததூதர்
உத்தவரு மானந்த மாகியங்கே
யுரைப்பதுகே ளென்றுசுக முனிவனிங்கே
உத்தரைகு மாரன்பாற சொல்வதென்ற
துணைமைதான் பாகவத வணைமைதானே.

தரு, இராகம்-அஸாவேரி, சாபுதாளம்.

பல்லவி.

நித்தியாநந்தரே யெசோதாநந்த  ரே
நீங்கள்மான்களே புண்ணியவான்க  ளே.

அநுபல்லவி.

சித்தமகிலகுரு ஜயநாராயணனிட  ம்
வைத்துமிப்படிக்கொத்த பக்திவந்ததுங்கட்கு  (நித்தியா)

சரணங்கள்.

க. நாமரூபப்பிரபஞ்ச  வித்துக்  கண்டீர்
ராமமுகுந்தருஙகள்  முத்துத்  *
தாமேபுருஷரொரு  மித்து  வந்த
தாமேசகதிமிகப்பெரு  றுத்துப்  *
பூமிமுதலாம்  பூதம் நேமகம்நாநா  பேதம்
ஆமனுக்களாம் போதஞ் சாமியவர்வி  நோதம் (நித்தியா)

உ. ஜீவகோடிகட்கீச  ஞதி  யெங்கும்
மேவியிருப்பதேபிரக்கி  யாதி  *
மாவல்லவர்களசுயஞ்  சோதி  கண்ணன்
யாவார்க்குந்தந்தையென்னும்  நீதி  *
கோவிந்தராமர்  மீது நீவிர்நெஞ்சக  லாது
லாவுன்னன்புசெய்போது தீவரபக்தி  யீது (நித்தியா)

ந. காணவுனைப்பதின்னஞ்  சனந்தான்  தம்பி
ராணன்போகுங்காலத்திற்  கனந்தான்  *
ஆணவாதியைச்சின்ன  பினந்தான்  செய்து
ஊணிச்சொரூபஞான  மனந்தான்  *
தோணிச்சத்துவ  ரூபம் பூணித்தியானப்பிர  தாபம்
பாணிப்பரம  லாபங் காணிக்கதிசேர்  தீபம் (நித்தியா)

ச. அனையபிரபஞ்சத்துக்குங்  காரணர்  ஆட்சிப்
பினையாதபொதுவினு  லாரணர்  *
மனிதவுருவாய்வந்த  பூரணர  அந்த
வனமாலிஹரிகிருஷ்ண  நாரணர்  *
பனகசாயிபாற்  பக்தி கனமாமுங்களின் புத்திக்
கெனகுறையுங்கள்கிருத்தியனிறைவாச்சுதே முத்தி  (நித்தியா)

இதுவுமது.

விருத்தம்.

எதுபதியாங் கண்ணனுங்கள் கோகுலத்துக்
கெழுந்தருள்வார் தாய்தந்தை நீங்கள்காண்பீர்
அதிசீக்கிரம்பிரியந் தருவாரந்த
அச்சுதராம் பகவன்முன்ன மதுரைசென்று
மதியில்லாக் கஞ்சனையும் வதைத்துபின்பால்
வசனமெது சொல்லியிங்கே யனுப்பினரே

விதியதனை நிறைவேற்று வாரென்றேசொல்
விடுகின்றார் விதனமொழிந் திடுகென்றாரே.

தரு, இராகம்-புன்னாகவராளி, சாபுதாளம்.

பல்லவி

அகோயெசோதா நந்தரேவருவாரிங்கே
ஹரியச்சுதா நந்தரே *

அநுபல்லவி.

மகாபாக்கியசாலிநீங்கள் மாதவனைக் காணலாம்
அகிலமெங்குநிறைந்தஹரி யென்றெண்ணத் தோணலாம் (அகோ)

சரணங்கள்.

க. இட்டமாய்ப்பக்திசெய்த பேர் களின்முன்னே
கிட்டிஹரியும்வரு வார் எப்படியென்றால்
கட்டைகளுக்குள்ளாகக் கனலிருப்பது போலே
சட்டமாய்ப்பூதங்கட்குத் தானிருப்பது மாலே (அகோ)

உ. அரணிகடைந்தால் வெளியே காணலாமெங்கும்
பரவும்நெருப்பா யொளியே யதுபோலே
கருதியன்புசெய்பவர் களேயவர் பரிசனம்
அருண்மாகடலானவர் அவர்தருந் தரிசனம் (அகோ)

ங. மதுரையின்வசு தேவர் தேவகியென்னும்
இதத்தந்தைதாயு மாவர் மற்றங்குமுள்ள
அதிகவிஷ்டமுள்ளானொன் பதைநாடிக்கண்ணன்சென்றால்
எதுக்கூட்டங்களைவிட்டிங் கெப்படிவருவா ரொன்றால் (அகோ)

ச. பிரியனென்பது மில்லையே கிருஷ்ணனுக்குமப்
பிரியனென்பது மில்லையே உத்தமனில்லை
தரமாயதமனில்லை ஸமானனஸம னில்லை
ஹரியவரில்லாததி யாதொன்றெங்கிலு மில்லை (அகோ)

ரு. மாதாவென்பதுவு மில்லை தந்தையுமில்லை
ஏதுமனைவிசெய் தொல்லை ஆண்பெண்
ஜாதியொன்றென்பதில்லை தனவன்வேற்றவ னில்லை
ஸ்ரீதரர்க்குத்தேகமுஞ் சன்மகர்மமு மில்லை (அகோ)

இதுவுமது.

விருத்தம்.

இத்தரையிற் சன்மகர்ம மில்லாதாராம்
எம்பெருமான் விளையாடல் நிமித்தமாக
நத்திருக்குங் கையரிவர் தேவமச்ச
நரசிங்க மாதியாம் யோநிபேதம்
ஸத்தஸத்தா முக்குணத்தி லவதரித்துச்
சார்ந்தநல்லோர் களையிரக்ஷிக கின்றார்காணும்
இத்தையெவ ராலறிய லாகுஞ்சொல்லும்
எசோதையா துயகந்த எசோதையாரே.

## இ து வு ம து.

### விருத்தம்.

நிர்க்குணராம் ஹரிதானே மாயையென்ற
நிலையினாற் குணராகிப் பிரபஞ்சத்தைச்
சொர்க்கமத்திய பாதாளச் சீவகோடி
தொடுத்தெல்லா முண்டாக்கிக் காத்தழித்து
நிற்கிறா ரதுமாயா விநோதமல்லால்
நேரிட்டு மவற்குவினை யாட்டதுண்டோ
சொற்குளொரு திஷ்டாந்தங் கேளுநந்த
சோதையா ரேபகவத் கீதையாரே.

தரு, இராகம்-அஸாவேரி, சாபுதாளம்.

### ப ல் ல வி.

பரப்பிர்ம்மரூபன்கிருட்டின னே எசோதாநந்தர்
ஒருப்பட்டிதனைகேளுஞ் சொன்னேனே *

### அ நு ப ல் ல வி.

கருப்பைக்குள்ளாமுட்டைக்குங் கல்லுக்குள்ளாந்தே ரைக்கும்
விருப்புற்றமுதளிக்கும் மெய்யனென்பதறி விக்கும் (பர)

### ச ர ண ங் க ள்.

க. சொல்கிறேன்திஷ்டாந்தமொன்று தட்டா மாலை யாடிச்
சுற்றுமவன்கண்களுக்குக் கடற் சேலை *
நல்லதாயுதித்தும்பூமி சுழல் போலே காணும்
ராட்டணச்சுற்றும்பிரப்ஞ்ச மாயையின் வேலை *
எல்லாமாயையின்வினை யாட்டாகவே யிருக்க
இதனில்மனதுசிக்கி நாளுமொன்றும் பெருக்கக்
கல்லாதுலசம்அலை வதுமாவணம் நெருக்கக்
கண்டீரதுபோலவே யலைமனதைச் சுருக்கப் (பர)

உ. ஹரியுங்களுக்குத்தானே பிள்ளை சொல்லவோ எல்லா
ஆன்மகோடிகளுக்கு மைந்த ரலலவோ *
வரிசைச்சீவகோடியு மவ ரல்லவோ உலக
மாதாபிதாவீசுவர ரெனல் மெல்லவோ *
தெரிவீர்காணப்பட்டதுங் கேட்கப்பட் டதுகளுஞ்
செல்காலவருகால நிகழ்கால மதுகளுஞ்
சரமும்அசரம்அற்ப மகத்தெல்லாம் பொதுகளுந்
தானச்சுதரில்லாத பொருளில்லை யெதுகளும் (பர)

ங. அகண்டாகாரச்சொரூபர்க்கென்ன வாட்டம் நம்மை
யாட்டிவைக்கிறாரையா பொம்ம லாட்டம் *
விகண்டாவாதப்பேச்சுகட் கென்ன வோட்டம் எந்த
வேளையுமுங்கட்குக்கண்ணன் மேலே தேட்டம் *
அகன்றதுவினையெல்லாம் ஆருங்களுக்கு நிகர்
ஹரியுங்களிடத்தில்லை யாவதனையும் பகர்

மகிழ்ந்துநித்தியானந்த வாரிதிச்சங்க முகர்
மகிமையுள்ளவர்நீங்கள் பாகவதர ஸிகர் (பர)

கோவியர் ததிகடைதல்.

விருத்தம்.

மதியூகி மாயனுட னூதருத்த
வருநந்த னெசோதைதனைச் சமாதானஞ்செய்
ததில்விடிந்த தங்கவர்க்கு மிரவுநீங்க
அருணவுதை யத்தினிலே யாயர்பாடிப்
பதியிலுள கோவியர்க ளெழுந்தாற்றி
யங்களா லலங்கரித்துப் பரிசுத்தஞ்செய்
ததியிலவர் ததிகடைப்பு மோசைதானு
ததிமுழக்க மாகியபத் ததியைச்சேரே.

தரு, இராகம்-பிலகரி, ரூபகதாளம்.

பல்லவி.

பைந்தார்கோவிமார்ததிக
டைந்தாரங்க னே.

அநுபல்லவி.

[அர] விந்தலோசனனை யு
யர்ந்துகீர்த்தனஞ்செய்வா ர் (பைந்)

சரணங்கள்.

௧. தருணிகளாங்கோவிமார் அருணவுதையத்தி லே
இருணீக்குந்தீபாவலித் திருநாள்போலேவிளங்க ப் (பைந்)
௨. நாடுதேகளிமுதல் வீடுகளைமெழுகி க்
கூடுகோலங்களிட்டுந் தோடுசேர்செவிமின்னு ர் (பைந்)
௩. அணைநூல்மாலைதோள்வளை மிளையிரத்தினச்சோ தி
பரவுதீபங்கள்போலே பிரகாசிக்கவேயங் கே (பைந்)
௪. கோலக்கண்ணாடிநேர்க போலத்திலேபிரகாச ஞ்
சாலச்செவிக்குண்டல லோலஞ்சொலித்துமின் ன (பைந்)
௫. செங்கைகளுமருங்குங் கொங்கைகளுங்குலுங் க
மங்கையர்மார்பிணமுத்தா ரங்களுமசைய வே (பைந்)
௬. மானனையார்களவ ரானனத்திற்சிறந் த
தானகுங்குமர்திமிர்ந் தேனுசரீகமா க (பைந்)
௭. கயிறதிழுத்திழுத்துந் தயிராக்கடையும்போ து
மயிலார்கிருஷ்ணலீலையை ஒயிலாய்ப்பாடிக்கொண்டா டி (பைந்)

கோவியர் உத்தவர் ரதத்தைக்காணல்.

விருத்தம்.

தாமரைக்கண் ணனையச்சு தனையனந்த
சயனனையே யுயர்ந்தகுர லாகக்கூவி

நாமஸங்கீர்த் தனவொலியா லமங்களத்தை
நாற்றிசையும் நிற்கவொட்டா தோட்டியந்தப்
பூமகள்நேர் கோவிமார் ததிகடைந்த
போதிரவி யுதையமது செய்யவங்கும்
ஏமமணி நெடுந்தேரை வாசல்மீதி
னிற்கண்டார் கற்கண்டாஞ் சொற்கண்டாரே.

## கோவியர் உத்தவர் ரதத்தைக்கண்டு ஒருவர்க் கொருவர் உரைத்தல்.

### வெண்பா.

இந்த விரதந்தான் யாருதென வேகூடி
வந்தனைய கோவியரு மாசினமே—முந்த
ஒருதிக் கொருதிசொலு முத்தரத்தைக் கேளும்
நிருபா பரிக்ஷித்த னே.

### தரு, இராகம்-சுருட்டி, ஆதிதாளம்.

### பல்லவி.

தேரடி கொண்டுவந் த
தாரடி பாரடிய டி.

### அநுபல்லவி.

தீரவேலி சாரிகோ வி
மாரோநீவி ராரதோ வி (தேரடி)

### சரணங்கள்.

க, வஞ்சனையாய்முன்னையர் பாடி விட்டு
மதுரைக்குக்கிருஷ்ணனைக்கொண் டோடி *
கஞ்சன்வினைமுடித்தா னேடி வீரங்
காட்டியக்குரூரனவந்தா ேனடி *
செஞ்சொல்லாய்ச்சி மாரே ராச்சி
யஞ்சொல்பேச்சி கொவ்வை வாய்ச்சி (தேரடி)

உ. என்னகாரியத்தைச்சா திக்கவோ நம்மை
யெல்லாம்மதுரைக்குள்ள ழைக்கவோ *
பின்னமாய்நம்மைந றுக்கவோ கஞ்சப்
பிரேதற்குப்பிண்டங்கொ டுக்கவோ *
பொன்னனாரே பூவை மாரே
உன்னிநீரோ யுரைசெய் வீரே (தேரடி)

ங. சமத்தனவனேயக் குரூரனே நல்ல
ஸாமிகாரியம்பார்க்குந் தீரனே *
நிமித்தமென்னவோவந்த தேரனே யென்றன்
நெஞ்சுதெளியச்சொல்லு வீரனே *
கமுக்கமோடி பாருங் கோடி
ஆயர்பாடி யாரோ வாடி (தேரடி)

கோவியர் உத்தவரைக்காணல்.

விருத்தம்.

பரியாஸ வார்த்தைகளிவ் வகையாயாயர்
பாடிமின்னுர் சொல்லிக்கொண் டிருக்கும்போதே
ஹரியான கண்ணனுட தூதர்காலே
யநுஷ்டானு திகள்முடித்துக் கொண்டுமென்பு
பிரியாத நேயருரைப் படிக்கேகண்டு
பேசமின்னு ரைக்காண வந்தார்மாலைச்
சரியாகச் சொல்லுமுத்த வரையுங்கண்டார்
தையலரர் கண்ணனிடம் மையலாரே.

சசு-ம் அத்தியாயம் முற்றும்.

கண்ணன்திருவடிகளேசரணம்.

---

## சஎ-ம் அத்தியாயம்.

அவதாரிகை.

வெண்பா.

மாலேவ லாலுத்த வன்றத் துவமோதிப்
பாலோ மொழியாயா பைந்தொடிமா—ராலே
விடைபெற்ற பின்மதுரை மேவினு ரொன்ற
நடைநாற்பத் தேழெனவே நாடு.

கோவியர் உத்தவரை யுபசரித்தல்.

தரு. இராகம்-கல்யாணி, சாபுதாளம்.

பல்லவி.

நாராயணனுக்கு நேராகியதிரு
நற்றவர்உத்தவர் வந்தாரையா.

அநுபல்லவி.

சீராயர்பாடியின் வாரார்முலைக்கோவி
மாரானவரெல்லாம் ஆராரெனவெண்ணை (நாரா)

சரணங்கள்.

௧. செம்பதுமகண்களுடன்பிரலம்பவாகு
வும்புயமாலையும்பொன்னம்பரமும்விளங்கச்
செம்பொன்மகரகுண்டலம்பிரகாசிக்கஇந்து
விம்பமுககாரவிந்தவெம்பெருமானேஹரி (நாரா)

௨. சுந்தரதரிசனந்தந்துமிங்கனேவந்தார்
அந்தவச்சுதர்சேர்ந்திறைந்தவேஷாலங்காரர்
இந்தவகையாமற்புதந்தானெவரோவென்றும்
பைந்தொடிமாரெல்லவாம்ளைந்துகொள்ளவுமங்கே (நாரா)

௩. வாசுதேவன்பாதத்தை யாசரித்தவுத்த வ
ராசயோகியைவிசு வாசமதாகக்கண் டு
பேசுதற்குவெட்கமாய்க் கூசிமினுர்கள்மந் த
காசங்கடைக்கண்பார்வை மாசில்லாமலேசெய் ய (நாரா)

௪. ஒடுக்கவணக்கத்துடன் அடுத்தேயந்தரங்கத்தி ற்
கொடுக்குமாஸனமீதுந் தடுக்காதிருந்தானை யா
தொடுத்தூரமாநாயகர் விடுக்குந்தூதனைச்சொல்லி ன்
முடிக்குங்கோவிமாரங்கே படிக்கும்வகையறி ய (நாரா)

கோவியர் கண்ணன் வாராதகுறையை உத்தவரிட
முரைத்து வருந்தல்.

விருத்தம்.

எதுபதியின் சேவகரோ வவரைப்போலும்
இருக்கிறீ ரும்மையுமந்நன் ருயறிந்தோம்
இதுவரையில வந்ததில்லை நீருமிங்கே
யெஜமானன் அன்னைபிதா பிரியந்தேடி
மதுரமொழி சொல்லியும்மை யனுப்பினுரோ
மற்றுமிந்தக் கோகுலத்தி லவர்நினைப்ப
தேதுவுண்டு வேறிலையே யென்றசொலலை
யெடுக்கின்ருர் கோவிமார் தொடுக்கின்ருரோ.

தரு, இராகம்-பிலகரி, ஆதிதாளம்.

பல்லவி.

ஆசையுறவின்மேலென்ன அன்னியராலென் ன.

அநுபல்லவி.

வாசுதேவன் சொன் ஞரோ
மாதாபிதா பாலவந் தீரோ (ஆசை)

சரணங்கள்.

௧. சுற்றத்தார்மேல காது தொடர்ந்தன்புபூமி மீது
முற்றத்துறந்திட்ட போது முனிவருக்குந்தள்ளொண் ணுது (ஆசை)

௨. ஆடவர்க்குப்பெண்கள் பாலே யாசைகொண்டுபரி வாலே
கூடிககாரியமானுல் மேலே குணம்வேருகுமொருக் காலே (ஆசை)

௩. மலரின்மீதிற்றேனை யுண்டு மற்றதைவிட்டோடும் வண்டு
உலகவழக்கமாய்க கொண்டு உரைப்பதென்னவிண்டு விண்டு (ஆசை)

இதுவுமது.

விருத்தம்.

தன்னுறவின் முறையான தந்தைதாயர்
சகோதரா திகளைப்போல் நேசமார்க்கும்
அன்னியர்மேல் வாராது வந்ததானுல்
அதுவுமொரு காரியத்தி னுலுண்டாகும்

பின்னுமந்தக் காரியம தானுலென்ன
பேச்சிருப்ப ததற்குவமை பேசக்கேளும்
நன்னயமோ யென்றுயர் பாடியின்மின்
ளுர்சொல்வா ரவர்களைப்போ லார்சொல்வாரோ.

தரு, இராகம்-ஆனந்தபைரவி, ஆதிதாளம்.

பல்லவி.

அன்னியர்நேசங்களெல்லாங் காரிய வசம் ஐயா
ஸ்ரீகிருஷ்ணர்க்கன்பர்நீரேசொல்லுவீர் நிசம்

அநுபல்லவி.

மன்னியர்புகழ்மதுரை வாசுதேவன்வர விட்ட
வின்னையுமுன்னெஜமானன் றன்னையுமாமறிந் திட்டம் (அன்)

சரணங்கள்.

க. வேசியுறவு காசுகொடுக்கு மட்டும் பின்னே
வீட்டுவழிவாராமல் விட்டுவெ ருட்டும் *
ராஜன்மெலிந்தாற் கப்பங்குடியேன் கட்டும் வித்தை
நன்றுய்வந்தாற்குருவைப் பிள்ளையேன் கிட்டும் * (அன்)

உ. யாகத்திற்றக்ஷிணை கொடுத்த ஸொத்துக்கள் வந்தால்
எஜமானைவிட்டிடு வாரந்த ருத்துக்கள் *
ஏகத்திற்கனியென்ற ததின் ஸத்துக்கள் போனல்
ஏதுமரங்களிலே பக்ஷிச் சத்துக்கள் * (அன்)

௩. அன்னம்புஜிக்கு முன்னேகூட்ட மிடுமே கொண்டால்
அதிதிகளந்தவீட்டை விட்டு விடுமே *
சொன்னேனெரிந்தகாட்டி லேனுட் படுமே மிருகந்
தொடர்ந்துவேறுசொல்லுண்டோஎங்கேயெடுமே * (அன்)

ச. கள்ளப்புருஷனொருபெண்ணை நாடி வந்து
கலந்துகாரியமாறு லச்சங்கொண் டாடி *
மெள்ளஙழுவியங்கே நின்றவ ளோடிப் போகும்
விதமாயனேகமுண்டு சொல்லலாங் கோடி * (அன்)

இதுவுமது.

விருத்தம்.

மனதுவாக்குடனே காயங்களென்ற வகையெலாங்கோவிந்தன் மீது
வைத்தந்தவாயர் பாடிமின்னுர்கள் வருமவர்வீட்டுவே லைகளை
இனதுகளென்ப தெண்ணமுமின்றி யேதெனுட்வெட்கம தின்றி
யிஷ்டநாயகரா கியகண்ணன்றன்வா லிபலீலைகள்சோர லீலை
அனையதுமந்த வுத்தவர்முன்னம் அணியணியாகவே பாடி
அன்னிளைப்பதறு லிலச்சைலபநீக்கி யழுகணீராறெனவோடச்
சொனசொனவகையே யெனவெனச்சொலுவதுமனசிரோமணி கேளாய்
சொலைகிராமுதா ருலைலமகளிர் துடியிடையவர்புகழ் பெரிதே.

## பிரமரகீதை.

### கோவியா வண்டைவியாஜம் வைத்து உத்தவனைப் பார்த்துரைத்தல்.

---

விருத்தம்.

பண்டொருநா ளதரரஸந் தந்துமகிழ்கோ
பாலனம துராபுரியிற் சென்றிருந்து
கொண்டநேமமை யணுகிலா னெனவேயெண்ணிக்
கோவிமார் புலம்பும்போ தங்கேவந்த
விண்டுவிற்ப பிரமரந்தா னொருத்திகாலின்
மேவவதைக் கண்டுமந்தத் தையலங்கே
வண்டொருவி யாஜமதாய் வைத்துமுத்த
வனைசசொலவாள தனமனதது யனைச்சொல்வாளே.

தரு, இராகம்-பூரிகல்யாணி, ஆதிதாளம்.

பல்லவி.

மதுபாநீ கிட்டவராதே காலைத்தொடாதே
மதுபாநீ கிட்டவராதே (ம)

அநுபல்லவி.

மதுபாநீ பாட்டாளி மாலவிளை யாட்டாளி
துதிகோநாளுட்டாளி தூாததனுக்குக கூட்டாளி (மது)

சரணங்கள்.

௧. அந்தசசக்களத்தியன பாலே கட்டி
யணைகக அவளகொங்கைகள் மேலே (ம)
கொந்தாாகுங்குமங்களமென மேலே பற்றக
கோவிந்தனமாாயினவன மாலே (ம)
கொண்டாாசிவப்பேபசை கண்டாயதி லாசை
யுண்டாயுன் மீசை வண்டாசெவந தாசை (மது)

௨. இந்தப்பரியாஸங்கள நீயே அந்த
யாதவககூட்டததிற்செய் வாயே (ம)
பைந்தொடிமாாகள தய வாயே மது
பதிகிருஷ்ணனைசசோவார்கள போயே (ம)
பாருன்விளை யாட்டு ஊராருககுக் காட்டு
நேராயாங்க வீட்டுக் காரோடேதான்கூட்டு (மது)

௩. தேனைமுனகொடுத்திடும பூவைப பின்னே
திருமபிபாராச்சமத்த ஞவை (ம)
நானேசொல்லுன்பாலவாங்கும் பூவை யிங்கே
நாடாதுனனிசுலைசபபடி போவை (ம)
காறறமோ வீசுதே தோற்றமும் பேசுதே
யேறறமு மாகிதே புாமூலுங் கூசுதே (மது)

இது வுமது.
விருத்தம்.

ஒருக்சாற்றன் னிதழமுதா மூலகமோக னத்னத
யொண்டொடியா ருடனெனக்குத் தான்கொடுத்து யிங்கே
இருக்காம லோடினவக் கண்ணனைப்போல் நீயும்
எழின்மலரின் வாய்வைத்து மேருகின்ற வஞ்சக்
கருக்காரா எவன்விடுவா னென்னையுன்னை யொத்த
கரியவனை யல்லாம லானையினிச் சொலலாம்
அரிக்கார னியலவோ ஊரியவற்கு மதுபா
அடடாயென் காலைவிட்டு விடடாமீ சையனே.

இதுவுமது.
விருத்தம்.

மதுபதியின் பொய்வசனங் களில்மனது சிக்கி
மதிமயக்க மாகியந்த லக்ஷ்மிப்பெண ணவரே
கதியெனவே கால்பிடித்தும் பணிவிடைசெய் கின்ற
கதையதுதா னெவவிதயோ கண்டறியோம் யாமப்
பதுமையைப்போ லலஎண்டா பூரடுகிறுய் வண்டா
பண்ணுடனே யெதுபதியைப் பலுக்குவதுண் டானால்
மதுரையிற்செல் விடமுணடு சொலுவதுகே ளென்றே
மாவினையக் காரியொரு கோவிசொல்வாள் மனனே.

தரு, இராகம்-சங்கராபரணம், ஆதிதாளம்.
பல்லவி.

அறுகாலே உன்னையவர் அறுகாலேபூஜிப்பார்
அங்கேயிந்தச் சங்கீதம்பா டு.

அநுபல்லவி.

வெறியாவுன்றன்முகத் தை
முறியாதவரிடஞ்செ ல் (அறு)

சரணங்கள்.

௧. இங்கென்னடாகிருஷ்ணன்சங் கீதம் இதும்
அங்கேயாதவர்பாறசொல் வேதம் *
உங்கோன்விஜயநேயர் மீதன் புள்ளார்
கொங்கைநோயில்லாதவர்க் சங்கேயிதுபிரக்கி யாதம் * (அறு)

௨. சுவர்க்கம்பூமியொடுபா தாளம் அண்டச்
சுவர்க்குள்ளாம்பெண்களாம்பிர வாளம் *
எவர்க்குத்தான்காமமாம்வே தாளஞ் சற்று
தவர்க்குள்ளேநாங்களென்ன ஒருகசாக் கூளம் * (அறு)

௩. ஊணிக்கவடநகைக் குறிப்பு டன்சிறு
சாணிவில்லுப்புருவ நெறிப்பு *
காணில்நீலயாம்வெய்யி லெறிப்பு சக்கர
பாணிகிருஷ்ணனுக்காசைப்படாதார்சொல்லு வெறுப்பு * (அறு)

௪. எதுபதிதிருவடிப் பொடியா னதிற்
பதுமைமக்காசைசொல்லவும் முடியா *
நிதியில்லாவேழையெம்முன் படியா தேபோ
மதுரூதன்பாட்டைப்பாடுவாயடா குடியா * (அறு)

இதுவுமது.
விருத்தம்.

எங்காலிற் சிரசைவைத்து வீழ்ந்திடநீ வேண்டாம்
எழில்முகுந்த னிடத்திருந்து நீபடித்த வண்டா
மங்கையர்பாற் றூதுசெல்ல மிகச்சமர்த்த னீயே
வாய்ப்பந்தம் போடுவதுன் னெஜமானன் சரிதை
அங்கிதுபோ லுன்மொழியும் விசுவஸியோம் யாங்கள்
அனைவோரும் மருணருடன் மைந்தரையுந் தள்ளி
நங்குலதர் மங்களினால் வருமுலகம் நீக்கி
நம்பினமே கணையிதோ வெம்பினமே மனமே.

இதுவுமது.
கலித்துறை.

காமேகொடுத்தவர் பின்புவிட்டாரட கண்ணன்சரித்
திரமேமுனஞ்செயுந் தீம்பையெல்லாமெண்ணித் தேர்ந்தனமுத்
தாமேதிருப்ப தவரனியாயச் சரிதைபிர
மாமேயுனக்குரை செய்வதுகேளொரு வாசகமே.

தரு, இராகம்-சுருட்டி, ஆதிதாளம்.
பல்லவி.

அந்தநீலன்மொழியை விட்டு வீசு இனி
அன்னியவசனமுண்டோ பேசுபேசு *

அநுபல்லவி.

அந்தரங்கமாஞ்சொல்லை நானறி வேண்டா நல்ல
தாகட்டும்போதும்போதும் ஹரிஅரிக்காரா வண்டா * (அந்த)

சரணங்கள்.

௧. வேடனைப்போற்குரங் கைமுன் னொறுத்தானே தன்னை
நாடிவந்தபெண் செவியுமூக் கறுத்தானே *
தேடியோர்பெண்வலையிற சிக்கிக் கறுத்தானே கூடிக்
கூடித்தாசரதியாம் வேஷமும் பொறுத்தானே * (அந்த)

௨. பலியைச்சுற்றுஞ்சாகம் போற்பலிமுன் னுள்ளன் வந்து
வலியமூவடிகேட்டு வாங்கிய கள்ளன் *
புலியைக்கூட்டிலடைத்தாப் போலடைத் துள்ளன் எங்கும்
ஒலிசெய்யமேல்கிழாக்கி நின்றசித்திரக் குளளன் * (அந்த)

௩. மீனவேடன்கதையைச் சொல்ல வாராய் ஆமை
யானசரித்திரத்தைக கூறப் போராய் *
ஞானறிவேனிதெல்லாந தானே பூராய மாய்
நீனல்லஉன்னெஜமானன் சேதிவிட்டிலையா பாராய் * (அந்த)

௪ சாமளமேனியன்கதை கானமுதமே யந்த
மாமகிமைமிகத்தெறிந்த பெருஞானதமே *
காமக்குரோதாதியை நீக்குமதுசதமே யென்று
கோமணமுமின்றித்திரிவதுநல்லஅறபுதமே * (அந்த)

௫ ஏழையானபெண்டு பிள்ளையுடன்வீட்டை யந்த
நாழிகையேவிட்டு விட்டுச்சுற்றிநாட்டைச் *
சூழும்பக்ஷிபறப்பதுபோலலைத்துக்கூட்டை வெளிப்
டாழிலலைக்கின்றாரோ சிலர்பாட்டை * (அந்த)

௬. அச்சுதானந்தன சரிதைசோந்திடுஞ்சொல்லைப் பாடப்
பிசகையகப்படு மதிறசந்தேகமில்லை *
லெச்சையைவிட்டுயாந்த குறநகூவிடும்எல்லை யாரும்
மெச்சிக்கொள்வாரநாணிலிவனீசெல்வாய்செல்வாயுலகில் * (அந்த)

௭. செம்பிலேசெயிறு கட்டிக்கொண்டுகூடிக் கையில்
தம்புருமீட்டிக்கொண்டரிகதையைப்பாடி *
கும்பலுக்குள்நடிக்கிறார் பாகவதர்கோடி யந்தச்
சம்பிரமறிவேனிதுதானோநீடிநீடி * (அந்த)

இதுவுமது.

விருத்தம்.

அவதூதராயத்திரிகின்றார்களில்லேரா
ஐயமெடுத்துண்கின்றார் சிலரோரிந்த
அவனிதனிலிப்படிக்கேநம்பினோனா
ஆண்டருளும் அரிகதையைப் பாடிக்கொண்டும்
அவாதூதராகிவரும்மதுபாகோம்பர
அனவரதகட்டம்பரநீயவனோவிம்பா
இவையிருக்க அக்கண்ணன்மேல யாங்கள்கொண்ட
இச்சைகேளென்சொல்விலச்சைகேளோ

தரு, இராகம்-காம்போதி, ஆதிதாளம்

பல்லவி.

சொல்லுவதென்ன இனியிந்தவெட்கத்தைஹரி
தூதாவேறுசொல்லுண்டோ தொடுத்துவிடுத்துநான.

அநுபல்லவி.

வெல்லப்பேச்சினாலுஞ்செங்கண
வெருட்டினாலுமவேறுகான ப
பல்லவத்துமயக்கி யே
பாடுங்கண்ணனிதான ஞ (சொல)

சரணங்கள்

௧. நடபிக்கையாகநாங்கள நாதங்கேட்கத்து வக்கி
நாராயணனகாதலாம வாராவலையிற சிக்கி
வம்புக்காரனகங்கள வலுத்தகாயத்தால வெட்கி
மதனவியாதிக்குள்ளாய மறுகலாச்சேய டக்கி (சொல)

உ. கலைமான்குரல்போல்வேடன் காட்டுங்கீதத்தில் மூடக்
கருத்தமான்பேடுகளுங் கண்ணிவலைப்பட் டாட.
வில்லைவளைத்துநாண்பூட்டி வேடன்கூரம்பு போட
மெய்மறந்தாதமான்கள் வீழ்வதைநேராய்க் கூட (சொல்)

௩. எங்களாலேபூஜிப்ப தேற்கும்பிரிய னீயே
எஜமான்பின்னுமுன்றனை யேவவிங்கேவந் தாயே
செங்கமலையைமார்பிற சேர்த்திருப்பதறி வாயே
தெளியவைத்தேயெங்களைச் சோப்பதைப்படிப் பாயே (சொல்)

௪. செழிக்குமதுரையிலே சிறந்ததந்தை மனையுஞ்
சோந்தபந்துக்களவீடுஞ் சிந்திப்பாரோ பினையும
புழுக்கச்சியாமெங்களை நினைப்பதுண்டோ தினையும
புயத்தகிலவாஸந்தலை பொறுத்தெப்படி புனையும் (சொல்)

பிரமாகீதை முற்றும்.

---

## உத்தவர் கோவியரைச் சமாதானஞ்செயல்.

### விருத்தம்.

மதுபதியாங் கண்ணனுடை தர்சனத்தை
வாஞ்சியா நிற்குங்கோ வியரிவ்வாறு
பொதுவசன மாகவண்டை வியாஜம்வைத்துப்
புகன்றதெல்லாம் உத்தவர்கேட் டிருந்துதாது
விதமதினாலாய்ப்பாடி மினார்தம்மை
வியந்துஸமா தானமது செய்தாரந்த
முதுமொழியைச் சுகமுனிவர் பரீக்ஷித்துக்கே
மொழிகின்றா ராளர்தம் பொழிகின்றாரே.

கலிவெண்பா, இராகம்-ஆரபி.

௧. உலகமெல்லார்பூஜிப்ப துங்களையேநீங்க ள்
ஜலஜவிழிமயிலீர் தன்னியாள திலகநுதல்
௨. மின்னாரசிமாரே விளங்குதேயுங்கள்மன ந்
தன்னிலேநிச்சயமாய்த் தான்வந்த தென்னவெனில்
௩. வாசுதேவன்பகவன் மாதவனுங்கண்ணனிட ம்
மீசுரமாம்பக்தி விளைந்ததே காசினிமேல்
௪. தானங்கள்செய்வார் தவஞ்செய்வார்யோகநெ றி
தானங்குசெய்வார்கள் தக்கபடி மோனச்
௫. சிவஞ்செய்வார்வேதத்தைச் சிந்திப்பார்மிக் க
பவந்தப்புராணம் படிப்பார் உவந்து
௬. விதவிதங்களான விதிகளினைச்செய்து ம்
எதையடைவாரோவதெல்லா மெய்தும் பொதுவாகக்
௭. கண்ணனிடம்பக்திவரக் கண்டாலதின்பல னை
யெண்ணத்தொலையுமோ வேந்திழையீர் புண்ணியமோ

௮. உத்தமச்சுலோக ருயர்ந்தபகவன்மீ து
சுத்தபக்தியுங்களிடந் தோன்றிற்றே சிற்றிடையீர்

௯. புத்திரனைவிட்டும் புருஷர்களைநீக்கி ச்
சித்தமதிலெண்ணுமற் றேகத்தை மெத்தவுள்ள

௧௦. பந்துஜனத்தைப் பரிகரித்துப்பாக்கியஞ்சே ர்
சொந்தமுள்ளவீட்டின் றொடர்ச்சிவிட்டுக் கந்தரநேர்

௧௧. வண்ணமலர்க்கண்ணனென வையத்தவதரித்து க்
கண்ணனெனப்பெயர் தரித்த கற்பகத்தை விண்ணவர்க்கும்

௧௨. ஆதிப்பரம்புருஷர் அங்கவனை நீங்களுங்க ள்
காதல்மருணனென்று கண்டீரோ மேதிமேல்

௧௩. எல்லாம்ஹரியுருவா யென்ணினீரிந்தவ கை.
சொல்லுமுனிவருக்குந் தோணுமோ நல்ல

௧௪. அதோக்ஷஜனையெண்ணி யகிலாத்துமபா வ
விநோதப்பவமாமுங்கள் விரகம் இதோகண்டேன்

௧௫. நீங்களிங்கேகலுட நிலையதனையென் றனுக்கு ம்
பாங்காயுபதேசம் பண்ணினீர் ஆங்கிருந்து

௧௬. வேதாகரனுங்கள் மெய்ப்பிரியன்சொல்வாங்கி த்
தூதாகிவந்தவகை சொல்லுவேன் காதா

௧௭. மங்கைமாரேகேளு மாதவன்சொல்லுங்களுக் கு
மங்கலந்தைமென்மேல் வருவிக்கும் வங்கணமாய்

௧௮. அந்தரங்கஞ்சொன்னவகை யத்தனையுங்கேட்டருளு ம்
அந்தரங்கநாயகர்சொல லன்பாக வந்தவிதம்

௧௯. உங்களிடம்விட்டு மொருக்காலும்நான்பிரிந் த
தெங்குமில்லைநீங்களுந்தா னென்னைவிட்டு நங்கையரே

௨௦. ஆரும்பிரிந்ததில்லை யாகாசவாயுவங் கி
நீருடனேபூமியென்று நிச்சயமாய்ப் பேருனாக்கும்

௨௧. பஞ்சமகாபூதம் பரவிச்சராசரத்தி ல்
அஞ்சுகங்களேபிரியா தவ்வாறும் இன்சொலீர்

௨௨. பேசுமனது பிராணபுத்தியிந்திரி ய
ராசிகுணத்தையொட்டி நானிருக்க வாசமாய்

௨௩. அந்தவகைநீங்கள்மன மாதியாங்காரியத்தா ல்
எந்தனிடம்பிரியா தேயிருக்க விந்தவகை

௨௪. கிட்டேரஞ்சொல்லி நிலத்தவனைப்போல்வதுவு ம்
விட்டுவிடுமென்றே விளம்பினுர் கட்டழகர்

௨௫. ஆன்மாவிடத்திலே யான்மாவினுலேயா ன்
ஆன்மாவையாக்கிக்காத் தங்கழிப்பேன் ஆன்மாநான்

௨௬. பூதேந்திரியகுணப் பொற்பாகுமான்மாத ப்
பாதேமாயானுபவத் தாலென் றேதேனுஞ்

உஎ. சுத்தரொன்றுமான்மாலைச் சொல்லுவார்ஞானமய ர்
நித்தபரிபூரணராம் நிரக்குணரோ சித்தாஞ்

உஅ. சுழுத்தியென்பதோரவஸ்தை சொற்பனமொன்றென்று ம்
வழுத்துவதுஜாக்கிரா வஸ்தை தழைத்ததிலை

உகூ. மூன்றவஸ்தையான்மாவில் மூடிமாயாவிருந் தி
தோன்றுமிதலெல்லாஞ் சுழலுவது போன்றிருக்குந்

௩௦. தானேவிசுவனென்றுந் தைசதனபிராக்ஞனெ ன
மானேர்விழியீ ரவஸ்தைகடருள் னானபர

௩௧. மான்மாவின்பேர்மூன் றதையறிவீர்மாயைய்யு ட
மான்மியத்தைதயென்னசொல்ல வாய்திறந்து கான்மயிலீர்

௩௨. மாயையகலும் மனதடங்கிநிற்பவர்க்கு ப்
பேயாயலைபவர்க்கென பேசுவது வாயாத்து

௩௩. தூங்குமொருவனவன் சொப்பனத்திற்கண்டதெல்லா ம்
ஆங்குவிழிக்கவும்பொய் யாவதுபோல் மாங்குயிலீர

௩௪. இந்திரியவியாபார மெல்லாம்பொய்யென்றுதெளி ந்
தந்தமனதை யடக்கிஞல் மந்திரத்தால்

௩௫. வாங்காமல்வாங்கியந்த வாசித்நியையெழுப்பி த்
தூங்காமற்றூங்கிச் சுகம்பெறலாம் ஏங்காதீர்

௩௬. அலையுமனத்தை யடக்குதல்வேதாந் த
நிலையுமதுவே நிலையே சொலுவதினம்

௩௭. ஆதியெனும்வேதமது அஷ்டாங்கயோகம து
நீதில்லாச்சாங்கியமாய்ச் செப்புவதுங் கோதையரோ

௩௮. மேலான்மாஞன்மாவி வேகமெனுஞ்சாங்கியமு ஞ்
சேலாரநயனிகளே தேர்ந்திடிலோ சால

௩௯. மனதடக்கமாமதொன்றே வாய்த்திடுஞ்சன்று ச
மனதடக்கமாஞ்சுதர்ம மற்றும் மனதடக்கம்

௪௦. இந்திரியக்கட்டிஞெல் மேறறதவங்களின்ன ம்
எந்தவகையாலும் யாவருக்குஞ் சிந்தையினை

௪௧. ஏகாக்கிரமா யிருக்கியொருவழியா ய்
யோகாபயியாஸ முறுதியே வாகான

௪௨. அந்தமனைதமுதலா யாரும்பலவழியு ஞ்
சிந்தையடங்கலொன்றிற் சேருமே ஏந்த

௪௩. நதியுஞ்சமுத்திரத்தை நாடுமதைப்போ ற்
பதியுமிதைமனதிற் பாங்காம் விதியிதுவாய்ச்

௪௪. சொன்ஞர்பலராமன் சோதரராய்வந்தருளு ம்
அன்ஞரிராஜமன்ஞ ராய்ப்பாடி மின்ஞரோ

௪௫. அன்னியனைப்போல்நாங்க ளான்மஞானமத னை
யின்னவகையென்று சொலு மென்றுமோ வுன்னைச்

௪௬. சருவசுதந்தரத்தாற் சகலகுணத்தா ற்
பெருகுமலங்கிருதப பெம்மான விரகஞ்

௪௭. சகிப்பதில்லையென்றுசொல்வீர் தானதற்குஞ்சொல்வே ன்
முகிற்குலம்போல்மேனி முகுந்தன் வகுத்தபடி
௪௮. நேராயெனைக்காண நெஞ்சிலெண்ணுமுங்களுக்கு த்
தூரவிருக்கிறேன் றேன்றமற் பாரீர்
௪௯. நினைப்பதனிலென்றனையே நீங்காமல்நீங்க ள்
நினைப்பதனைக்காணவென்ற னெஞ்சில் நினைப்பாயும்
௫௦. உங்கள்மனமதனை யூணியிழுக்கவும்மா ன்
இங்குவெகுதூரத் திருக்கிறேன் மங்களரோ
௫௧. சொல்லுமிஷ்டநாயகர்தாந் தூரத்திருக்கிலங் கே
செல்லுமனது தெரிவையரோ நல்லார்
௫௨. அல்லும்பகலு மகலாதிருந்திடி லோ
நில்லுநில்லுமென்பார் நிலைவரமே வல்லியரோ
௫௩. வீடுமுதல்யாவும் வெறுத்துவிரக்திகொண் டு
நாடுகின்றீர்சிந்தையிலே நம்மையே தேடுகின்றீர்
௫௪. தாமதமில்லாமலும்மைச் சார்ந்திடுவேனென்றார்மா ல்
மாமதுரவார்த்தையது யாத்திரமா கோமளரோ
௫௫. கண்டுபண்டுமோரிரவிற் கல்யாணிநீங்களும்மை க்
கொண்டபுருஷர்களங் கோவிருக்க வண்டலம்பும்
௫௬. வாசபபிருந்தா வனத்தில்வந்துமென்னுட னே
ராசக்கிரீடை நடத்தியே பேசலையோ
௫௭. மைப்படிக்கண்ணரோநாம் வந்தணைவோமென்றுசொன்ன ர்
சொற்படிக்கேசொன்னேனென்றான் றூதுமொழி யிப்புவியிற்
௫௮. றூதிதுவல்லாதுமற்றத் தூதுமென்னதூததனை த்
தூ தூவென்றேயாருந் துப்புங்கள மாதரசே
௫௯. காதலென்றலோகாதந் காண்கோவியர்காத ற்
பேதைமற்றக்காதலெல்லாம் பேய்க்காதல் பூதலத்தில்
௬௦. மெய்த்தவர்களெல்லாம் விரும்புகின்றபாகவ த
முத்தமிழிற்சேர்ந்ததனால் முத்தமிழே புத்தவருங்
௬௧. கோவியர்க்குத்தூதுசொன்ன கூறிதனைக்கேட்டருளு ங்
காவியப்பாவாணர் கலந்து ௵.

## கோவியர் உத்தவரிடங் கண்ணன் க்ஷேமத்தை வினவல்.

---

### விருத்தம்.

ஆசைநாயகன் றூது வசனமெல்லாம்
அந்தவுத் தவர்சொல்லக் கேட்டுமிக்க
பூஜைசெய்து மனமகிழ்ந்து மாயர்பாடிப்
பொன்னனையார் மதிமயக்கந் தீர்ந்துமங்கே
பேசையிலே மதுரமழை பொழிந்தாரிதைப்
பேசுகிறேன் பரிக்ஷித்து மன்னுவென்று

மாசையெல்லாந் துடைத்தசுக முனிவர்கூறும்
வசனந்தா னிதுமிஜத மிசனந்தானே.

தரு, இராகம்-கல்யாணி, சாபுதாளம்.

பல்லவி.

மதுராபுரிநம் மதுரைக்கிருஷ்ணன் சுகமா.

அநுபல்லவி.

எதுராஜருக்கே எதிராய்த்துன்பஞ்செய்
ததுரான்மகஞ்சனை முதிராமலடித் த (மது)

சரணங்கள்.

க. தரியாதோடிய பிரியரொலாம யி
சரியங்கிடைத்துப் பரிவாயிருக்கவு ம் (மது)

உ. வச்சகைதயெடுக்கும் நிச்சயம்போல வே
இச்சையெல்லாங்கிடைத் தச்சுதப்பிரபுவெனு ம் (மது)

ந. சுத்தவாசகஞ்சொல் மெய்த்தவர்கவியா ம்
அத்தவரானநீர் உத்தவருத்தவ ரோ (மது)

கண்ணன் மதுரைமின்றிடம் பிரீதி யுள்ளவரொன்று
கோவியருரைத்தல்.

---

கலித்துறை.

பாதாரவிந்தம் நினைப்பவர்பாலன்றிப் பாமரர்பால்
போதாரரியைப் புகழ்ந்தாரிவையிவை பொன்னனையார்
காதாரக்கேட்குமவ் வுத்தவர்பாலைய காவலனே
சூதாரிளமுலை யாளங்கொருத்தியுஞ் சொல்லுவளே.

தரு, இராகம்-பிலகரி, ஆதிதாளம்.

பல்லவி.

அந்தமங்கைமார்மேல்பி ரேமை
ஹரிக்குண் டாமே.

அநுபல்லவி.

ஸந்ததமும் பிரீதி யங்கே
தாரணிமேல் நாங்க ளெங்கே (அந்த)

சரணங்கள்.

க. நாட்டிற்பட்டணமின் றோ
நாணிக்கொண்டுமாசை நேரோ
காட்டிப்புன்னகைசெய் வாரோ
கடைக்கண்களாலழைச்சிப் பாரோ (அந்த)

உ. அந்தவகையென்ன கண்டோம்
அச்சுதனுக்காசைப் பெண்டோ
இந்தக்காட்டில்வாசங் கொண்டோம்
எங்கள்மேற்காதலு முண்டோ (அந்த)

௩. ஊருக்குளென்னவி சேடம்
ஒன்றுமறியாத மூடம்
மோரோவென்றுகூவும பாடம
மூகுந்தற்கெமமேலென்சந் தோடம (அந்த)

இ து வு ம து.
வெண்பா

காவியொடு காயாம்பூ காரிகரு மேனியனை
மேவிப பிரிந்திருக்கும மெலலியலாள—ஒவியநேர்
கோவியொருத்தியிவை கூறவுமே யஙகொருத்தி
மாவினைய மாயுனாசெய வாள

தரு, இராகம்-புன்னாகவராளி, ஆதிதாளம்.
ப ல ல வி.
எப்படிக்கட்டுப பட்டார ஹரியவர
எப்படிக்கட்டுப பட்டார *

அ நு ப ல ல வி.
[மது] மைப்பட்டணத்துள்ளே நட்பாயவருமாந்த ச
செப்புமுலையாரசைப புஙசண்டாலங கே (எப்படி)

ச ர ண ங் க ள்
க. கலவித்தொழிலகளில நலவிறபனராந்த த்
தலைவிமாராகமடைக்கண வலையைவீசுவ ரோ (எப்படி)
உ. கருமபுநேரனுமபாலும விருமபுஞ்சொலலுடைய
அருமபுமுலையிடைத துருமபாமவரிட ம (எப்படி)
௩. பலுக்குஞ்சொலலுமுத்துக குலுக்குமவரு ட
பிலுக்குஙகண்டாலமேனி சிலுக்குஙகண்ணனுக கு (எப்படி)

கோவியா கண்ணனுக்கு எஙகள ஞாபகமுண்டாவென்று
உததவனை வினவல.

---

க லி த் து றை.
வேட்டியிலேயந்த மின்னாகளமஞசள் மினுமினுபபைக
காட்டிக்கொண்டேயந்தக கோவிந்தனகாதலசெய காரிகையார..
கோட்டியிலேதஙகள பேசசுக்குளளாகவ கோவுத்தவா
நாட்டியேதாகிலு முண்டோயெமவாரததை நடுவினிலே.

தரு, இராகம-பூரிகலயாணி, சாபுதாளம.
ப ல் ல வி.
அந்தநிசிகளை யுன்னு வாரோ
சிந்தையிறகிருஷ்ணன சேதியென்னபண்ணு *

அ நு ப ல ல வி.
அந்தமதுரையைக சாணி யாட்சி
யாக்கக்கொண்டசக்கர பாணி *

உந்தனெஜமான்சொல் லாணி வந்த
உத்தவனேசொல்லக் கேணி * (அந்த)

சரணங்கள்.

க. செங்கழுநீருடன் குந்த மலர்
சேர்ந்திடுமோடைப ரந்த *
திங்கள்நிலவுங்க லந்த நல்ல
திவ்யபிருந்தாவன முந்த *
சேலெனிகர்விழி மங்கை மார்கள்
செய்யபதத்தின்ச தங்கை *
மாலையொலிககவும் அங்கை யடி
வைப்பக்குலுங்கவுந் தொங்கை *
மாயனபிநயங் கட்டி யாடி
மல்லிகைமுல்லைத்தார் சூட்டி *
நேயமிகவும்பா ராட்டிச் செய்த
நேத்தியதாம்ராஸக் கோட்டி *
நீடிக்கைராத்திரிக் கூடிக்கைகோர்வைகொ ண்
டாடிக்கொண்டேயிசை பாடிக்கொண்டோமந் த
வேடிக்கைமென்மேலாய்க் கோடிக்குமேலுண் டு
வாடிக்கையானதை நாடிக்கருத்தினி ல் (அந்த)

உ. மரஞ்செடியெல்லாம் வெந்து போன
வனத்தையிந்திரன் வந்து *
நிரஞ்சனவருள தந்து மழை
நீளாமேகத்தாற்சொ ரிந்து *
நிலத்திலவ்வனந் திரும்பத் தழை
நெருங்கிமாமல ரரும்ப *
பலத்தவுதவி தரும்ப ரிசைப்
பெறவுமெங்களை விரும்பப் *
பேசிக்கண்ணன்கூடி நடிக்கக் காமப்
பேயெங்களைவந்து பிடிக்க *
ஆசைக்கனல்தானே தடிக்க அதி
ஞலகம்வெந்ததென் படிக்க *
ஆவிதருவாரா கோவிந்தராம்பக் த
ராவியிங்கேவந்து மேவிக்கையாற்றெட் ட
ளாவிமிகவுங்கு லாவிவிளையாடி ச்
சேவிப்போமாசொல்லு மாவிளையப ர (அந்த)

ரு. எந்தனிமித்தமாய் நாரா யணர்
இங்கெழுந்தருளப் போறார் *
அந்தவிடம்பகை யாரார் கஞ்சன்
அதமாய்பபோனதும் பாரார் *
ஆதிக்கராச்சியவை போகங் கைக்குள்
ளாய்வந்ததேகன யோகங் *

காதற்பெண்களங்க னேகம் ராஜ
கன்னிமார்களைவி வாகங் *
கனவரிசையாய்க் கொண்டு மெத்தக்
களிப்புடன்வாழ்வ துண்டு *
எனசொல்வதினம விண்டு ஏழை
யெங்களையறிவார் பண்டு *
இடைச்சிமார்மெத்த மடைச்சிதானுங்க ள்
படைக்கின்றபொருள் கிடைக்காரோஅன் ன
நடைச்சியார்களப்ட டுடைச்சியனை க
ரிடைச்செவ்வேலெனுங் துடைகதலிபா ல் (அந்த)

இதுவுமது.

விருத்தம்.

வனவாஸி யாகியவெங் களினுலென்ன
மதுராமின்று ரவராலு மாவதென்ன
கனதீர வனமாலி தருமனுளர்
கருத்திலிச்சை கொள்வதென்ன வெலாம்நின்ற ந்தார
நினைவிலதை யெண்ணியெண்ணி வருவதென்ன
நிராசையது பரமசுக மலலோவிந்த
வினையமது வில்லாத ருஞ்சொல்வாரோ
வித்தகா வதனையறி வித்தகாவே.

கோவியர் கண்ணனை மறக்க முடியாமையை யுரைத்தல்.

விருத்தம்.

நிராசையது பரமசுக மென்றுசொல்லும்
நேர்மையெங்க ளறிவினிலே விளங்கினாலும்
நராவதா ரஞ்செய்து வந்தாநந்த
நந்தனன்மே லாசைதனை மறப்பமென்றால்
வராதுமன மென்செய்வோம் ஹரியேகாந்த
வார்த்தையதை நம்பிமலர மகளுங்கூட
முராரிமார் பினிலிருக்க வெங்களுக்கு
முடியுமா மறப்பதுமெப் படியுமாமே.

திபதை, இராகம்-பந்துவராளி, ஆதிதாளம்.

கண்ணிகள்.

க. காளிந்திநதிக்கரையுங் கா னுத்தவரோ யின்னங்
கேளுமையாகோவர்த்தன கிரி யுத்தவரோ *
௨. வாசமலர்நிறைபிருந்தாவன முத்தவரோ யந்தக்
கேசவன்விளையாடிடங்கே ளுத்தவரோ *
௩. இங்கெல்லாம்பசுக்கள்மேய்த்தாரோ யுத்தவரோ ஸாமி
சங்கருஷணருடனேதா னுத்தவரோ *

